# சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்

மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.,) பட்டத்திற்காக

அளிக்கப்படும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**ச.க. விக்னேஸ்வரன்**

**பதிவு எண் : P4303**

**நெறியாளர்**

**முனைவர் உ.கருப்பத்தேவன்**






ஒப்பிலக்கியத்துறை

தமிழியற்புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை – 625 021


ஜனவரி, 2020

**முனைவர் உ.கருப்பத்தேவன்,**

*உதவிப் பேராசிரியர் & தலைவர் (பொ),*

*ஒப்பிலக்கியத்துறை, தமிழியற்புலம்,*

*மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,*

*மதுரை – 625 021.*

## நெறியாளர் சான்றிதழ்

***"சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்"*** *என்னும் தலைப்பில் மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.,) பட்டத்திற்காக திரு ச.க.விக்னேஸ்வரன் அவர்கள் செய்துள்ள இவ்ஆய்வேடு எனது மேற்பார்வையின் கீழ் ஆய்வாளரது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இவ்ஆய்வின்மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.*

*இடம்: மதுரை* — *நெறியாளர் கையொப்பம்*

*நாள்:* — ***(உ.கருப்பத்தேவன்)***

**திரு ச.க.விக்னேஸ்வரன்**
**பதிவு எண்:** P4303
*முனைவர் பட்ட ஆய்வாளர்,*
*ஒப்பிலக்கியத்துறை, தமிழியற்புலம்,*
*மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,*
*மதுரை – 625 021.*

# ஆய்வாளர் உறுதிமொழி

*“**சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்**” என்னும் பொருண்மையிலான இவ்ஆய்வேடு மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புலத்தில் முனைவர் பட்டத்திற்காக எனது சொந்த முயற்சியால் உருவானது ஆகும். இதற்குமுன் இவ்ஆய்வேட்டையோ, இதன் பகுதியையோ எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் அளிக்கப்படவில்லை என உறுதியளிக்கிறேன்.*

*இடம்: மதுரை* *ஆய்வாளர் கையொப்பம்*

*நாள் :* *(ச.க.விக்னேஸ்வரன்)*

*நெறியாளர் உறுதிக் கையொப்பம்*

**முனைவர் உ.கருப்பத்தேவன்,**
*உதவிப் பேராசிரியர் & தலைவர் (பொ),*
*ஒப்பிலக்கியத்துறை, தமிழியற்புலம்,*
*மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,*
*மதுரை – 625 021.*

# நன்றியுரை

*மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற்புலத்தில் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள வாய்ப்பளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழக ஆட்சிக்குழுவிற்கும் துணைவேந்தர் மற்றும் பதிவாளருக்கும் தமிழியற்புலத்தின் மேனாள் புலத்தலைவர் பேராசிரியர் செ.சாரதாம்பாள் அவர்களுக்கும், புலத்தலைவர் பேராசிரியர் வை.இராமராஜபாண்டியன் அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.*

*எனது ஆய்விற்கு பல்வேறு நூல்களையும் ஆலோசனைகளையும் அவ்வப்போது வழங்கியும் என்னை ஆற்றுப்படுத்தி ஆய்வுப்பணி மேற்கொள்ள உற்றுழி உதவியாகவும் ஆய்வேட்டைச் செம்மைப்படுத்தியும் தந்துதவிய மேனாள் தமிழியற்புலத் தலைவர் பேராசிரியர் மு.மணிவேல் அவர்களுக்கு என் பணிவான அன்புகலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.*

*எனக்கு நெறியாளராக மட்டுமில்லாமல் ஒரு முன்மாதிரியாய் இருந்து என் சரிவுகளையெல்லாம் சாதனைகளாக்கும் எனது ஆசிரியர் மதுரை காமராசர் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறைப் பேராசிரியர் முனைவர் உ.கருப்பத்தேவன் அய்யா அவர்களுக்கும், அவரது துணைவியார் பேராசிரியர் முனைவர் கற்பகவள்ளி கருப்பத்தேவன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகளை உரித்தாக்கி மகிழ்கின்றேன்.*

*நான் ஆய்வு செய்யும் காலத்தில் பல்லாற்றானும் ஆலோசனைகள் வழங்கிய தமிழியற்புலப் பேராசிரியப் பெருமக்கள் அனைவருக்கும், என்னுடன் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொண்ட ஆய்வாளர்களுக்கும் எனது நன்றியினை உரித்தாக்கிக்கொள்கிறேன்.*

*எனது ஆய்விற்குத் தேவையான போதெல்லாம் நூல்களைத் தந்துதவி ஆய்வு நன்முறையில் அமைந்திட உதவி செய்த மதுரை காமராசர் பல்கலைக்கழக தமிழியற்புல நூலகர் ஹரிமுருகன் அவர்களுக்கும், செந்தமிழ் கல்லூரி நூலகர் பிருந்தா அவர்களுக்கும், புத்தகத் தாத்தா முருகேசன் அவர்களுக்கும் எனது நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறேன்.*

என் வாழ்க்கைப் பாதையின் முட்களைப் பூக்களாக்கும் எனது தாயார் திருமதி மு.பாக்கியம் அவர்களுக்கும், எனது தந்தையார் திரு. ச.கருப்பையா அவர்களுக்கும், அல்லும் பகலும் அருகிருந்து எனது வாழ்வை அழகாக்கும் எனது துணைவியார் திருமதி கா.வினோதினி அவர்களுக்கும், எனது அன்பு மகள் வி. நிறைநிலாவிற்கும் எனது மனமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

மேலும் இவ்வாய்வேட்டினை சிறந்த முறையில் கணினித் தட்டச்சுச் செய்து கொடுத்த திரு. பி.கி.இராம்குமார் (ஜெயஸ்ரீ கிராபிக்ஸ்) அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றியுடன்

**ச.க.விக்னேஸ்வரன்**

முனைவர்பட்ட ஆய்வாளர்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | – | அகத்திணையியல் |
| அகம். | – | அகநானூறு |
| இளம். | – | இளம்பூரணர் |
| உரை.ஆ. | – | உரையாசிரியர் |
| உ.வே.சா. | – | உ.வே.சாமிநாதையர் |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| ஐங்குறு. | – | ஐங்குறுநூறு |
| கற்பு. | – | கற்பியல் |
| களவு. | – | களவியல் |
| கழகம் | – | திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை |
| கலி. | – | கலித்தொகை |
| கலித். | – | கலித்தொகை, பாலைக்கலி |
| குறள். | – | திருக்குறள் |
| குறிஞ்சிப். | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | – | குறுந்தொகை |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| சேனா. | – | சேனாவரையர் |
| தொல். | – | தொல்காப்பியம் |
| திருமுருகு. | – | திருமுருகாற்றுப்படை |
| தொகு.ஆ | – | தொகுப்பாசிரியர் |
| நச்சி. | – | நச்சினார்க்கினியர் |
| நற். | – | நற்றிணை. |
| நூற். | – | நூற்பா, நூற்பாக்கள் |

| | | |
|---|---|---|
| நெடுநல். | – | நெடுநல்வாடை. |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பதி.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பரி. | – | பரிபாடல் |
| பட்டினப். | – | பட்டினப்பாலை. |
| பா.எண். | – | பாடல் எண்/ பாடல் எண்கள். |
| புறத். | – | புறத்திணையியல் |
| புறம். | – | புறநானூறு |
| பெரும்பாண். | – | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | – | பொருநராற்றுப்படை |
| பொருள் | – | பொருளதிகாரம் |
| மதுரைக். | – | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | – | மலைபடுகடாம் |
| மு.நூ. | – | முந்து நூல், முன்னர்க் குறிப்பிட்ட நூல் |
| மேலது. | – | மேலே சுட்டிக்காட்டிய நூல் |
| மொ.பெ.ஆ. | – | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| Edrs. | - | Editor / Editors |
| Eds. | - | Edition |
| p. | - | page |
| Pp. | - | pages |
| Ibid. | - | Ibideum |
| Vol. | - | Volume |
| Vols. | - | Volumes |

# பொருளடக்கம்

# இயல்: 1

# ஆய்வு அறிமுகம்

**முன்னுரை**

*சமூக வாழ்க்கைத் தளத்தைக் கட்டமைத்து நிலைப்படுத்திப் பயன்கொள்வதற்காக மனிதன் தனக்குத்தானே சில வாழ்வியல் நெறிகளைப் பண்பாடுகளோடு இயைந்த சட்டதிட்டங்களாகவும் விதிமுறைகளாகவும் ஏற்படுத்திக் கொண்டான். அத்துடன் வாழ்வியல் தொடர்பான சில நம்பிக்கை களையும் பழக்கவழக்கங்களையும் தோற்றுவித்து அதனைத் தன் வாழ்வியலோடு இணைத்து உறவாடப் பயன்படுத்திக் கொண்டான். குடும்பம், இனம், தொழில் வாணிகம் எனப் பன்முகத் தன்மையோடு சமூகம் கட்டமைக்கப்பட்டது. மக்கள் குடும்பம் மற்றும் சமூக வாழ்வியலில் கொண்டிருக்கும் நம்பிக்கைகளும், அந் நம்பிக்கைகளின் வழிப்பட்ட பழக்கவழக்கங்களும் வாழ்வியல் செயற்பாடுகளாகிய அவையே மக்களின் பொதுவாழ்வியல் நெறிகள் ஆயின. இவ் அடிப்படையில் பாலைநில மக்களின் வாழ்வியல் கூறுகளின் தனித்தன்மைகளையும், அவர்களது பண்பாட்டியல் கூறுகளின் சிறப்புத் தன்மைகளையும் ஆராய்ந்து வெளிப்படுத்தும் நோக்கத்தில் இவ்ஆய்வுரையின் தலைப்பு "சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்" என்று அமைகின்றது.*

**ஆய்வுத் தலைப்பு**

*"சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்" என்பது இவ் ஆய்வுரையின் தலைப்பாகும். இவ்ஆய்வுரை எட்டுத்தொகை நூல்களில் இடம்பெற்றுள்ள பாலைத்திணைப் பாடல்களை முழுமையாக ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு, அப்பாடல்கள் வாயிலாக அறியப்படும் பாலைநில மக்களின் வாழ்வியலையும் சமூகப் பண்பாட்டியல் கூறுகளின் முழுமைத் தொகுதிகளையும் கண்டறிந்து விரிவாகவும் விளக்கமாகவும் ஆராய்வதாக அமைகின்றது.*

**ஆய்வின் நோக்கம்**

*சங்ககால மக்கள் நிலப் பின்புலங்களை நிலைக்களன்களாகக் கொண்டு அந்தந்த நிலங்களின் தகவமைப்புகளுக்குத் தக்கவாறு தொழில்களையும் வாழ்க்கை முறைகளையும் அமைத்துக்கொண்டு வாழ்ந்தனர். முல்லையும்*

குறிஞ்சியும் திரிந்த பாலைநிலம் நிலையான வாழ்நிலம் அன்று. ஆயினும் பாலைப் பகுதியில் வாழ்ந்த எயினரும் மறவரும் ஆறலைக் கள்வரும் எயிற்றியரும் தங்களுக்கென்று தனித்த அடையாளங்கள், தொழில்கள், வாழ்க்கை முறைகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், பண்பாட்டு முறைகள், உணவு, உடை, வாணிகம், அணிகலன்கள், கலைகள், வழிபாட்டு முறைகள், புழங்கு பொருட்கள் போன்ற பல்வேறு வாழ்வியல் மற்றும் பண்பாட்டு உட்கூறுகளைக் கொண்டிருந்தனர். இக்கூறுகளால் அவர்கள் பிற நில மக்களிடமிருந்து வேறுபட்டுத் தனித்துச் செயல்பட்டனர். இத்தனித்த நிலைப்பாட்டால் பாலைநில மக்கள் எவ்வகையான வாழ்க்கைமுறை, பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டிருந்தார்கள்? சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியல் நிலைப்பாடுகளும் பண்பாட்டுக் கூறுகளும் எத்தகையவை? என்பதைக் கண்டறிந்து வெளிப்படுத்துவது இவ் ஆய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

"சங்க இலக்கியத்தில் குறிப்பாக எட்டுத்தொகை நூல்களில் அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய அக நூல்களில் இடம்பெற்றுள்ள பாலைத்திணைப் பாடல்களில் பாலைநில மக்களாகிய எயினர், எயிற்றியர் ஆகியோரின் வாழ்க்கை முறைகளும் பண்பாட்டுக் கூறுகளும், அது குறித்த அம்மக்களின் வாழ்வியல் மற்றும் உலகியல் அனுபவங்களும் கூறப்படுமாயினும் அப்பாடல்களில் பிறதிணை மாந்தர்களைப் பற்றியும் அவர்களின் தொழில்முறைத் தொடர்பான வாழ்வியல் செய்திகளும் குறிக்கப்படுவதற்கான வாய்ப்பு உண்டு என்பதே இவ்ஆய்வுரை எடுத்துரைக்கும்.

மேலும் சங்க அகப்பாடல்களில் அதிக எண்ணிக்கை உடைய பாடல்கள் பாலைத்திணைப் பாடல்கள், பாலைப் பாடல்களில் அத்திணைக்குரிய முதல் பொருளாகிய நிலமும் பொழுதும் பற்றி விரிவாகப் பேசப்பெற்றிருக்கும். ஆயின் அத்திணைக்குரிய பெரும்பாண்மை கருப்பொருள் பின்னணியும் காணத்தக்கதாகப் பாடப்பெற்றிருக்கும். ஆயின் மக்கள், தொழில் குறித்ததான செய்திகள் பாலைத்திணைக்குரியதாக மட்டுமின்றிப் பிற அகத்திணைகளுக்கும் தொடர்புடையனவாக பாடப்பெறுவதற்குரிய வாய்ப்பு மிகுதியாக உண்டு; ஏனெனில் பிறதிணைகளுக்குரிய மக்களின் வாழ்வியல் தொடர்பான பிரிதல், பொருள்தேடல், வணிகம் செய்தல், போர் நிகழ்த்துதல் போல்வனவற்றிற்கு நிலைக்களமாக பாலைநிலம் அமைந்திருத்தலைப் பாடல்களில் காணவியலும். ஆதலின் அனைத்து திணை மாந்தர்களின் வாழ்வியல் தொடர்பான பழக்க

வழக்கங்கள், பண்பாட்டு மரபுகள் பாலைப்பாடல்களில் இடம்பெற்றிருக்கும் என்ற கருதுகோளை முன்வைத்து இவ்ஆய்வு மேற்கொள்ளப்படுகின்றது. அவ்வகையில் பாலைத்திணை அனைத்து அகத்திணைகளுக்கும் நடுவண் திணையாகவும், பொதுவன் திணையாகவும் அமைந்திருத்தலை இவ்ஆய்வு விளக்கியுரைப்பதாக அமையும்.

**பயன்பாடு**

ஒருநில மக்களின் வாழ்வியலையும் சமூகப் பண்பாட்டுக் கூறுகளையும் முழுமையாகக் கண்டறிந்து வெளிப்படுத்தும் இவ் ஆய்வு, சங்கத் தமிழர் பண்பாட்டின் ஒரு பகுதியைத் தெளிவுறுத்துவதாக அமையும். இவ்வாறு ஏனைய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலமக்களின் வாழ்வியலையும் பண்பாட்டுக் கூறுகளையும் தனித்தனியே ஆராய்ந்து அவற்றைத் தொகுத்துத் தமிழர் வாழ்வியலையும் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளின் சிறப்புத் தன்மைகளையும் முழுமையாக வெளிப்படுத்துவதற்கு இவ்ஆய்வு வழிகாட்டுவதாகவும் பயனுடையதாகவும் அமையும்.

**ஆய்வு எல்லையும் பரப்பும்**

எட்டுத்தொகையின் அக நூல்களாகிய அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய நூல்களில் முறையே 200, 90, 104, 100, 35 என்ற எண்ணிக்கையிலும், பத்துப்பாட்டின் பட்டினப்பாலையையும் சேர்த்து மொத்தம் 530 பாலைத்திணைப் பாடல்கள் காணப்படுகின்றன. பட்டினப்பாலை தவிர்ந்த பாடல்களை முதன்மைத் தரவுகளாகக் கொண்டு இப்பாடல்களின் அடிக்கருத்துக்கள், உவமை, உள்ளுறை, இறைச்சி ஆகியனவற்றின் வாயிலாக வெளிப்படும் பாலைநில மக்களின் வாழ்வியலையும் பண்பாட்டுக் கூறுகளையும் நுட்பமாக ஆராய்ந்து வெளிப்படுத்துவதே இவ்ஆய்வு முயற்சியின் எல்லையும் பரப்புமாகும்.

**முன் ஆய்வுகள்**

க.முத்துகிருஷ்ணன் ‘குறுந்தொகையில் உரிப்பொருள் கட்டமைப்பு’ (மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2002) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடும், கே.செல்லத்தாய் ‘சங்க அகப்பாடல்களில் காலநிகழ்வும் காதல் பொருண்மையும்’ (மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2009) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடும், இரா.சௌந்தரராஜின் ‘நெய்தல் திணைப் பாடல்களில் குறியியல்’ (மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2010) என்னும் முனைவர் பட்ட

ஆய்வேடும், பூ.பூங்கோதையின் 'சங்க இலக்கியம் காட்டும் மருதநில மக்களின் வாழ்வியலும் பண்பாடும்' (மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2012) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடும், வெ.சங்கீதா 'சங்க அகப்பாடல்களில் கருப்பொருள் கட்டமைப்பு' (மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2013) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடும், கி.வெங்கட்ராமனின் 'பழந்தமிழ் இலக்கியங்களில் குறிஞ்சிநில மக்களின் வாழ்வியல்' (மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2016) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடும், மா.கோமதி 'தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களில் பேராண்மை' (மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2016) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடும், ஆ.தட்சிணாமூர்த்தி 'அகநானூற்றில் உரிப்பொருள் கட்டமைப்பு' (மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 2017) என்னும் முனைவர் பட்ட ஆய்வேடும் இவ் ஆய்விற்கு முன் ஆய்வுகளாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

**ஆய்வுச் சான்றுகள்**

இவ்ஆய்விற்கு முதன்மைச் சான்றுகளாகவும், துணைமைச் சான்றுகளாகவும் பின்வருவன அமைகின்றன.

**முதன்மைச் சான்றுகள்**

பாலைநில மக்களின் வாழ்வியலும் பண்பாடும் பற்றி ஆய்வு செய்யப்படுவதால் எட்டுத்தொகை நூல்களில் ஐங்குறுநூற்றில் அமைந்த 100 பாலைத்திணைப் பாடல்களும், குறுந்தொகையின் பாலைத்திணையில் அமைந்த 90 பாடல்களும், நற்றிணையின் பாலைத்திணையில் அமைந்த 104 பாடல்களும், அகநானூற்றின் பாலைத்திணையில் அமைந்த 200 பாடல்களும், கலித்தொகையின் பாலைக்கலியில் அமைந்த 35 பாடல்களும் என மொத்தம் 529 பாலைத்திணைப் பாடல்கள் மட்டும் இவ்ஆய்விற்கு முதன்மைச் சான்றுகளாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

**துணைமைச் சான்றுகள்**

மூதறிஞர் வ.சுப.மாணிக்கத்தின் 'தமிழ்க் காதல்', ந.சுப்பிரமணியனின் 'சங்ககால வாழ்வியல்', மு.சண்முகம்பிள்ளையின் 'சங்கத் தமிழர் வாழ்வியல்', பெ.மாதையனின் 'அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்', ச. அகத்தியலிங்கத்தின் 'சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே', தமிழண்ணலின் 'சங்க மரபு', கதிர்.மகாதேவனின் 'பழந்தமிழர் வீரப்பண்பாடு', க.ப.அறவாணனின் 'அற்றைநாட் காதலும் வீரமும்', மு.வரதராசனின் 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை' ஆகிய ஆய்வு மற்றும் திறனாய்வு நூல்களும், சங்க

இலக்கியமான பத்துப்பாட்டு நூல்கள், சங்க இலக்கியத்தில் பாலைத்திணை மற்றும் அகப்பொருள், புறப்பொருள் தொடர்பாக இதுவரை செய்யப்பட்டுள்ள ஆய்வுகள், சங்க இலக்கியத் திறனாய்வு நூல்கள், ஆய்வுக்கோவைகள், ஆய்வு இதழ்கள், மலர்கள் ஆகியனவும் இவ்ஆய்விற்குத் துணைமைச் சான்றுகளாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

**ஆய்வு அணுகுமுறைகள்**

இவ்ஆய்வு உள்ளடக்கப் பகுப்பாய்வாக (Content Analysis) அமைந்தது. இவ்ஆய்வு சங்ககாலப் பாலைநிலச் சமூகம் மற்றும் பண்பாடு குறித்த ஆய்வாக அமைந்திருப்பதால் சமுதாயவியல் அணுகுமுறை (Sociological Approach), சமூகப் பண்பாட்டியல் அணுகுமுறை (Socio-Cultural Approach), உளவியல் அணுகுமுறை (Psychological Approach) முதலான இலக்கிய ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்பெற்றுள்ளன. இவற்றோடு விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive Criticism) பகுப்புமுறைத் திறனாய்வு (Analytical Criticism) முதலான திறனாய்வு முறைகளும் மேற்கொள்ளப் பெற்றுள்ளன.

**ஆய்வேட்டின் கட்டமைப்பு**

ஆய்வு அறிமுகம், ஆய்வு நிறைவுரை நீங்கலாக இவ் ஆய்வு பின்வரும் ஐந்து இயல்களாகப் பகுக்கப்பெற்று ஆய்வு செய்யப் பெற்றுள்ளது.

1. பாடுபொருள் கட்டமைப்பு
2. பாடிய புலவர்களும் பாடற்பொருண்மைகளும்
3. நில மக்களின் தொழில்கள்
4. நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும்
5. வாழ்வியல் பண்பாடு

'ஆய்வு அறிமுகம்' என்னும் இப்பகுதியில் ஆய்வுத் தலைப்பு விளக்கம், ஆய்வின் நோக்கம், கருதுகோள், பயன்பாடு, ஆய்வு எல்லையும் பரப்பும், முன் ஆய்வுகள், ஆய்வுச் சான்றுகள், முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வேட்டின் கட்டமைப்பு, இயல் விளக்கங்கள், ஆய்வு நிறைவுரை, மேலாய்வுக் களன்கள், துணைநூற் பட்டியல் என்பன குறித்த செய்திகள் விளக்கப்பெற்றுள்ளன.

**ஆய்வுச் செய்திகள்**

*1. 'பாடுபொருள் கட்டமைப்பு' என்னும் முதல் இயலினுள் 'பாலை' என்பதற்கான விளக்கங்கள், பாலைத்திணைப் பாடல்களின் பாடுபொருள்கள், நெய்தல் திணையில் உடன்போக்குத் துறைப் பாடல்கள், பாலைத்திணைப் பாடல்களில் பாடுபொருளும் திணைமயக்கமும், நீண்டகாலப் பிரிவு, பொருள்வயிற் பிரியும் தலைவன் நிலை, பாலைத்திணை – பொதுத்திணை, நானிலங்களும் பாலையும், பாலைத்திணை களவுக்கும் கற்புக்கும் பொது, பாலைத்திணைப் பாடல்களின் அமைப்பும் பாடுபொருட்களின் வகைமைப்பாடும், தலைவன் தலைவியை விட்டுப் பிரிதல், தலைவன் பிரிவில் தலைவியின் நிலை, உடன்போக்கு மாந்தர்களும் அவர்தம் செயல்களும், கடற்பயணங்கள் தவிர்ப்பு, பாலை வருணனைகள், பாலையில் புறத்திணைக் கலப்பு, திணைமரபும் சமுதாயப் பின்புலமும், திணைப்பாடல்களும் பொருளாதாரச் சூழலும், பாலைப்பிரிவு, பாலைத்திணையில் மருதம், முல்லைப் பின்னணிகள் என்பன குறித்த செய்திகள் பாலைத்திணைப் பாடல்களின் பாடுபொருள் கட்டமைப்பிற்குத் துணைசெய்யும் பாங்கு தக்க சான்றுகளுடன் ஆராய்ந்து விளக்கப்பெறுகின்றன.*

*2. 'பாடிய புலவர்களும் பாடற் பொருண்மைகளும்' என்னும் இரண்டாம் இயலினுள் ஐநூற்று முப்பது பாலைத்திணைப் பாடல்களை இயற்றிய புலவர்களுள் பாலை பாடிய பெருங்கடுங்கோ, வெள்ளிவீதியார், ஓதலாந்தையார், ஔவையார், ஓரோடகத்துக் கந்தரத்தனார், கயமனார், கல்லாடனார், கழார்க்கீரன் எயிற்றியார், காவன்முல்லைப் பூதனார், குடவாயிற் கீரத்தனார், குன்றியனார், நக்கீரர், பரணர் ஆகிய புலவர்களின் பாலைப் பாடல்களில் காணலாகும் தனித்தன்மைகளும் அவற்றின் பாடுபொருள் கட்டமைப்புக்களில் காணலாகும் புதுமைகளும் ஆராய்ந்து விளக்கப்பெறுகின்றன.*

*3. 'நில மக்களின் தொழில்கள்' என்னும் மூன்றாம் இயலினுள் பாலைநில மறவர்கள், எயிற்றியர் தொழில், வாணிகம், கடல் வாணிகம், இடம்பெயர்ந்து வாணிகம் செய்தல், வாணிகச்சாத்தர், உப்புவாணிகர், உப்பை விலை கூறி விற்றல், வாணிகத்திற்குக் கழுதைகளைப் பயன்படுத்துதல், உப்பு வாணிகர் தொழில், பண்டமாற்று வாணிகம், யவனர்களுடன் வாணிகம், ஓடாமறவரின் வழிப்பறிக் கொள்ளை, மறவர் தொழில், ஆறலைக் கள்வர்களின் கொலைத்தொழில், கொடுவில் எயினர் தொழில், வில்லேர் உழவர் தொழில், வணிகர் கூட்டத்தைக் கொள்ளையிடல், வேட்டைத் தொழில், உழவுத்தொழில்,*

முத்தெடுக்கும் தொழில், சாணைக்கல் செய்யும் தொழில், கிணறு தோண்டும் தொழில், ஆடை வெளுக்கும் தொழில், பூ விற்கும் தொழில், கள் விற்கும் பெண்கள், ஓவியத் தொழில், கிணறு தோண்டும் தொழில், செம்பினால் பானை செய்யும் தொழில், தூதுத் தொழில், ஓரேர் உழவன் தொழில், மருத்துவத் தொழில் முதலான பாலைநில மக்களின் தொழில்கள் பாலைத்திணைப் பாடல்களின் வழி ஆராய்ந்து விளக்கப்படுகின்றன.

4. 'நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும்' என்னும் நான்காம் இயலினுள் நம்பிக்கைகள், நம்பிக்கைகளின் தோற்றம், பாலைநில மக்களின் வழிபடு தெய்வம், தெய்வ வழிபாடு, கடவுளுக்குப் பலியுணவு படைத்தல், இறைவனுக்கு நாட்பலி, வேப்பமரத்தில் உறையும் தெய்வத்திற்குப் பலியிடல், பலி வழிபாடு, கொற்றவைக்குப் பலிக்கடன், கானமர் செல்வி வழிபாடு, அறக்கடவுள், கடல்நீர்ப் பரப்பில் தெய்வம் உறைதல், ஓமை மரத்தில் தெய்வம், ஆலமுற்றத்தில் சிவன், பேய்கள் உணவு கொள்ளல், கழுது என்னும் பேய், அணங்கும் சுணங்கும், உருஇல் பேய், பேய்கள் கனவு காணல், பழூஉப்பல் பேய், நல்வினைப் பயன், பழவினையாகிய ஊழ்வினை, ஊழ் நம்பிக்கை, தொல்வினையாகிய தீவினைப் பயன், கூறறம், நரகம், பிறப்பு – மறுபிறப்பு, இம்மை – மறுமை, பழியஞ்சல், தவம் – தவசியர், நிரையப் பெண்டிர், பொய்ச்சாட்சி, முன்னோர்க்குத் தன்புலக்கடன், நற்சொல் கேட்டல், வேள்விக்குண்டம், கனவு, வேங்கைமலர் கொய்தல், காக்கை கரைதல் முதலான நம்பிக்கைகள், பல்லி, கண் துடித்தல், புள், ஓந்தி, கன்றினை ஈன்ற பசு ஆகியன குறித்த நிமித்தங்களும், கருவுற்ற பெண் தின்னல், சிலம்பணியைக் கழற்றல், பசுக்களின் கழுத்தில் மணி கட்டுதல், நடுகல் நடுதல், நடுகல்லில் பெயர் எழுதுதல், மயிற்பீலி சூட்டல், வேல் நடுதல், நடுகல்லில் பயண வழிகளைக் குறித்தல், இறைவனுக்கு நாட்பலி இடுத்ல், பால் கறத்தல், ஆடவர் சுடர்ப்பூண் அணிதல், யானையைப் பொற்கயிற்றால் பிணித்தல், சீழ்க்கை ஒலியெழுப்புதல், நறவினைப் பலியாகக் கொடுத்தல், பறையறைதல் முதலான பழக்கங்களும், அந்தணர்களின் வேள்வித்தீ, உமணர் 'யா' மரப்பட்டைகளைக் கொண்டு தீ மூட்டுதல், உப்பு மூட்டைகளைக் கழுதைகளின் மீது ஏற்றிச் செல்லல், பெண்கள் நெற்றியில் பொட்டு வைத்தல், பெண்கள் பாதங்களுக்குச் செம்பஞ்சிக்குழம்பு தடவுதல், மழவரும் உப்பு வணிகரும் கால்களில் செருப்பு அணிதல், வடுகர் கள்ளுண்டு மகிழ்தல், கொள்ளிக்கட்டையை வீசி யானைகளை விரட்டல், குந்தாலியால் குழி தோண்டுதல், உப்பு வணிகர் எருது பூட்டிய வண்டியைப் பயன்படுத்துதல், ஆடவர் கால்களில் வீரக்கழல் அணிதல் முதலான வழக்கங்களும், மாலை

நேரத்தில் வீட்டில் விளக்கேற்றல், தயிர்ப்பானையில் விளம்பழத்தை இடுதல், பகைவனின் பல்லைக் கோட்டை வாசல் கதவில் பதித்தல், தெய்வத்தின் சினம் தணிக்க யாழினை இசைத்தல், பாணர்தம் வருத்தம் தீர யாழிசைத்தல், சூதாடுதல், காக்கைக்குப் பலிச்சோறு வைத்தல், பகைவேந்தன் ஊரைத் தீயிட்டு எரித்தல், வடக்கிருந்து உயிர் துறத்தல், கன்னிப்பெண்கள் பிறைதொழல், சுவரில் கோடிட்டு எண்ணல், சுவரில் வட்டத்தைச் சுழித்தல், பாலை வழியில் பிரண்டைக் கொடியை அறுத்துப்போட்டுச் செல்லல், பகழியைச் செப்பம் செய்தல், காக்கைகள் பிணங்களை உண்ணல், பாலைவழிச் செல்வோர் தம் மன்னர்களின் அடையாளப் பூக்களை மாலைகளாகச் சூடிக்கொள்ளல் முதலான பழக்க வழக்கங்களும் பாலைத்திணைப் பாடல்களின் சான்றுகளின் வழி ஆராய்ந்து நுட்பமாக விளக்கப்பெற்றுள்ளன.

5. ‘வாழ்வியல் பண்பாடு’ என்னும் ஐந்தாம் இயலினுள் பண்பாட்டின் பொதுமைக் கூறுகள், பண்பாடு – விளக்கம், பண்பாட்டுக் கூறுகள், பண்பாட்டுக் கலவை, பண்பாட்டுத் தனங்களும் விழுமியங்களும், பண்பாட்டின் வகைகளும் பொதுமைகளும், பாலைநில மக்களின் குடியிருப்புக்கள், இல்லறம், ஒன்றினார் வாழ்க்கை, இல்லற வாழ்க்கையில் ஈதலும் துய்த்தலும், மனைமுதல் வினை, இல்வாழ்வின் கடமை, தலைவன் – தலைவி இன்பமும் துன்பமும், விருந்தோம்பல், தலைவியின் அறிவும் ஒழுக்கமும், பாலைத்திணைப் பாடல்களில் தலைவன், நற்றாய், அறனில் அன்னை, செவிலித்தாயின் வருத்தம், கார்த்திகை தீபம் ஏற்றல், இல்லங்களில் விளக்கேற்றல், கலங்கரை விளக்கு, கட்டில், மெத்தை, படுக்கை, நடுகல் வழிபாடு, உடன்போக்கும் தமர் அறியச் செய்யும் திருமணமும், வதுவைச் சடங்கு, கொடுப்போர் இன்றியும் கரணம், நெற்றிப்பொட்டு, வெறியாடல், நீர்ப்பந்தர், பொருளீட்டல், ஈகையும் பொருளும், பொருள் வழிப்பட்ட வாழ்க்கை, இல்வாழ்க்கையில் பொருட்பயன், செல்வத்தின் பயன், பொருளே காதலர் காதல், உடையும் உணவும், செல்வர் உணவும் உண்கலமும், பங்குனி உத்தரவிழா, திருப்பரன்குன்றத்து முருகன் விழா, கார்த்திகை தீபப் பெருவிழா, பூந்தொடை விழா, காமன் விழா, விழாக்கொண்ட மூதூர், விழவுடை விழுச்சீர் வேங்கடம், வழிபாடு, பாலைநிலக் கொற்றவை, பெண்களின் கற்பு நெறி, கற்பின் பெருமை, நாணொடு மிடைந்த கற்பு, மனைமாண் கற்பு, ஆதிமந்தியின் கற்பு, வணங்குறு கற்பு, அடங்கிய கற்பு, செவிலித்தாய் பராய்க்கடன் செய்தல், பாலைநில மகளிர் ஒப்பனைகள், தொய்யில் எழுதுதல், பாலைநில மகளிர் அணிகலன்கள், சிலம்பணி, பாலைநில மக்களின் கலைகள், கூத்தரும் கலையும், குரவைக் கூத்து, கழைக்கூத்து, வள்ளிக்கூத்து, ஓவியக்கலை,

*மகளிரின் பல்வகையான விளையாட்டுக்கள், பூக்கொய்தலும் புனலாடலும், சிறுவர்கள் வட்டாடல், தம்பலப் பூச்சிகளைப் பிடித்து விளையாடல், புதல்வனின் விளையாட்டு, ஆவணமாக்கள், அரசாட்சி, அரசியலறம், அந்தணர் வாழ்க்கை மரபுகள், அந்தணர் இல்லம், பயன்படு பொருட் பண்பாடு, குறுநீர்க் கன்னல் என்னும் நாழிகை வட்டில், அறச்சிந்தனைகள் என்பன குறித்த பாலைநில மக்களின் வாழ்வியல் பண்பாட்டுச் சிந்தனைகள் பாலைத்திணைப் பாடல்களின் சான்றுகளின் வழி ஆராய்ந்து விரிவாகவும் விளக்கமாகவும் கூறப்பெறுகின்றன.*

**ஆய்வு நிறைவுரை**

*'ஆய்வு நிறைவுரை' என்னும் இப்பகுதியில் இயல்தோறும் திறனாய்வு அடிப்படையில் கண்டறிந்த முக்கிய ஆய்வு முடிபுகள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.*

**சான்றுகாட்டல் நெறி**

*இவ்வாய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரங்களை எடுத்துரைக்கும்போது அவை பற்றிய விவரக் குறிப்புக்கள் அவை அமையும் இடங்களில் அடைப்புக் குறிப்புக்குள் காட்டப்படுகின்றன. இயல்களில் காட்டப்பட்டுள்ள துணைமைச் சான்றாதாரங்களின் விவரக் குறிப்புக்கள் தொடரெண் தரப்பெற்று அவ்வவ் இயல்களின் இறுதியில் தரப்பெற்றுள்ளன.*

**மேலாய்வுக்களன்கள்**

*'மேலாய்வுக் களன்கள்' என்னும் பகுதியில் இனிவரும் ஆய்வாளர்களுக்கு இவ்ஆய்வுரை முன்வைக்கும் மேலாய்வுக் களன்கள் சுட்டிக் காட்டப்பெற்றுள்ளன.*

**துணைநூற் பட்டியல்**

*'மேலாய்வுக் களன்கள்' என்னும் பகுதியைத் தொடர்ந்து இவ்ஆய்விற்குப் பயன்படுத்தப்பெற்ற முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள் ஆகியன அடங்கிய துணைநூற் பட்டியல் அகர வரிசையில் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.*

# இயல் – 2
# பாடுபொருள் கட்டமைப்பு

**முன்னுரை**

*பாலைத்திணை என்பது தனித்த நிலம் இல்லாதது. குறிஞ்சியும் முல்லையும் கோடைக்கால வெப்பத்தால் வளம் குன்றிப் போவதால் உருவாகும் நிலமே பாலை நிலமாகும். சங்க இலக்கியங்களின் பாலைப் பாடல்கள் காட்டும் நிலப்பகுதி குறிஞ்சியும் முல்லையும் அன்று. அவற்றை அடுத்த வறண்ட நிலப்பகுதிகளே ஆகும். இதனால்தான் இறையனார் அகப்பொருள் உரையில்,*

*“பாலைக்கு நிலமில்லை; என்னை? பொழுது நண்பகலும் வேனிலும்; பின்பனியும் உரித்து. நிலமின்றிப் பொழுதினானேயும் திணையாகுமோ? எனின் குறிஞ்சியும் முல்லையும் அடுத்த நிலமே காலம் பற்றிய பாலையாம் என்பது”[1] எனக் கூறப்பெற்றுள்ளது. தொல்காப்பியரால் நிலம் வகுத்துக் கூறப்படாத நிலையில் உரையாசிரியர்களும் ஆய்வாளர்களும் சிலப்பதிகாரத்தின் அடிப்படையில் பாலைக்கு நிலத்தை வரையறுத்துக் கூறியுள்ளனர். பாலைக்குத் தனித்ததோர் நிலம் இல்லை. பாலை நிலத்தில் காதல் ஒழுக்கம் நிகழ்வதில்லை. பாலை, காதலர்களைக் கொண்ட நிலப்பகுதியும் அன்று. பாலை என்பது ஒரு வழிநிலமாகும். இதனை,*

*“பாலை நிலம் என்பதும் இல்லை. பாலைநில மக்கள் என்பாரும் இலர் என்பது தெளிவு. அதனாலன்றோ அகத்திணைத் தலைவராகவும் தலைவியாகவும் இலக்கியத்தில் பாலைநில மக்கள் வந்திலர். காதலர்களின் காட்சிக்குப் பாலைச் சூழ்நிலை கூறப்படவில்லை. அகத்திணைப் பனுவல்களில் பாலைப் பாடல்களே பெருவாரியன. இப்பாடற்குப் பொருளான காதலர்கள் ஆறலைக் கள்வர்களும் சூறையாடிகளும் அல்லர். குறிஞ்சி முதலான நானில மக்களே. அன்னவர்தம் பிரிவுகளே பாலைத்திணைச் செய்யுட்களில் புனையப்பட்டுள்ளன. பாலை ஒருசார் வழிநிலமேயன்றி நிலையான வாழ்நிலம் அன்று” [2] என்பார் வ.சுப.மாணிக்கம். அவர் சுட்டிக்காட்டுவதைப் போலவே சங்கப் பாடல்களில் காதலனாகிய தலைவன் கடந்து செல்லும் வழிநிலமாகிய பாலை நிலம் அகநானூற்றின் பாலைப் பாடல்களில்,*

***“நெடும்பெருங் குன்றம்***
***எம்மொடு இறத்தலும் செல்லாய்”*** ***(அகம்.19)***

*"வெம்பரல் அத்த குன்றுபல நீந்தி"* *(அகம்.33)*

*"யாமே எமியம் ஆக*
*பனிபடு பல்மலை இறந்தோர்"* *(அகம்.101)*

*"விண்தோய் பிறங்கல்மலை இறந்தோரே"* *(அகம்.111)*

என மலைப்பகுதியாகவும்,

*"கல்மிசை அருவிய காடு இறந்தோரே"* *(அகம்.25)*

*"காடு இறந்தனரே காதலர்"* *(அகம்.45)*

*"திரிமருப்பு இரலைய காடு இறந்தோரே"* *(அகம்.133)*

*"கணிவாய் பல்லிய காடு இறந்தோரே"* *(அகம்.151)*

எனக் காட்டுப்பகுதியாகவும் காட்டப்பெற்றுள்ளன. எனவே இருப்பிடமாகவும் வாழ்விடமாகவும் இருந்த குறிஞ்சியையும் முல்லையையும் அடுத்த வளம் குன்றிய வறண்ட நிலப்பகுதியே பாலையாகும். அது கடந்து செல்லுவதற்கு அரிய சுரமாகும் என்பது தெளிவாகின்றது. பாலைப் பாடல்களில் சுரன் இறந்தோர் (அகம்.201, 205), வெஞ்சுரம் இறந்தனர் (அகம்.231), வெஞ்சுரம் இறந்தோர் (அகம்.265, 269), சுரன் இறந்து அகன்றனர் (அகம்.233) எனவரும் குறிப்புக்கள் மலை, காடு என்னும் இவற்றையடுத்த, கோடைக்கால நிலை திரிந்த அரிய வழிகளை அகமாந்தர்கள் கடந்து சென்ற நிகழ்வுகளைக் கூறுகின்றன. ஆதலால் பாலை வாழ்விடத் திரிபு அன்று, இறையனார் களவியலுரை கூறுவதைப் போன்று குறிஞ்சியும் முல்லையும் சார்ந்த நிலப்பகுதிகளே; பொதுப் பயன்பாட்டில் இல்லாதனவாகிய பகுதிகளே 'பாலை' என்பது தெளிவாகின்றது. மக்கள் குடியேற்றம் நிகழாத நிலப்பகுதிகள் தவிர எஞ்சிய நிலப்பகுதிகளும், மக்கள் குடியேறிய நானிலப் பகுதிகள் எஞ்சிய, அவற்றிற்கு இடைக்கிடந்த பயன்படாத நிலப்பகுதியும் 'பாலை' எனக் கொள்ளப்படடிருக்க மிகுதியான வாய்ப்புள்ளது.

*"'நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு*
*முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே'*

என்னும் நூற்பாவிற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், நிலையென்றது நிலத்தினை; முடிவுநிலைப் பகுதிக்கண் முன்னப்படுமெனவே அத்துணையாக்கமின்றி ஒழிந்த மருதமும் நெய்தலும் முடியாநிலமாய் அத்துணை முன்னப்படாவாயின பாலைக்கென்பதாம். ..... சுரத்தருமை அறியின் இவள் ஆற்றாளாமெனத் தலைவன் செலவழுங்குதலும் துணிந்து போதலும் உடன்போவலெனத் தலைவி கூறுதலும், அதனை அவன் விலக்கலும்

*இருந்திரங்கலும் போல்வன பலவும் முடியவரும் நிலம் குறிஞ்சியும் முல்லையுமாகலின் சுரத்தருமை முதலியன நிகழாமையின் மருதமும் நெய்தலும் அப்பொருண் முடிய வாராவாயின" [3] எனக் குறிப்பிட்டுள்ளார்.*

*நச்சினார்க்கினியர் முல்லை, குறிஞ்சிப் பாடல்களில் பாலைப்பிரிவு வந்ததற்கான சங்கப் பாடல்களைச் சான்றுகாட்டி விளக்கியுள்ளார். ஆதலால் பாலைப்பிரிவு பெரும்பான்மையும் குறிஞ்சியும் முல்லையும் சார்ந்தே நிகழும் என்பதும், சுரத்தருமை இவற்றுக்கே உரியது என்பதும், மருதத்திற்கும் நெய்தலுக்கும் உரியதல்ல என்பதும் நச்சினார்க்கினியரின் தெளிந்த முடிபாகும்.*

**பாலை – விளக்கங்கள்**

*'பாலை' என்னும் சொல் ஒருவகை மரத்தைக் குறிக்கும். பெரிய நகமுடையதாகிய பெண்யானை தின்னுவதற்காக மேலுள்ள தோற்பட்டைகளை உரித்துக்கொண்டதால் நாரில்லாத வெண்மையான கிளைகளுடன் பற்றுக் குறடு போல் காய்களும் வெள்ளிய பூங்கொத்துக்களும் கொண்டது வெண்பாலை மரம் என நற்றிணைப் பாடல் கூறுவதால் அறியலாம். அப்பாடலடிகள் வருமாறு:*

***"உள்ளுந்தொறும் நகுவேன் தோழி! வள்உகிர்ப்***
***பிடி பிளந்திட்ட நார்இல் வெண்கோட்டுக்***
***கொடிறு போல் காயவால் இணர்ப்பாலை"     (நற்.107: 1–3)***

*இம்மரம் பெரும்பாலும் வறண்ட பகுதிகளிலேயே காணப்பெறும். கடுங்கோடையிலும் இம்மரத்தின்அரும்புகளும் கிளைகளும் வாடுவதில்லை. இதனை, தொல்காப்பியம் அகத்திணையியலில் வரும் 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்னும் நூற்பாவிற்கு இளம்பூரணர் எழுதிய உரையால் அறியமுடிகின்றது.*

> *"பாலை என்பதற்கு நிலம் இன்றேனும் வேனிற்காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாதலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறிப்பிட்டார். கைக்கிளை, பெருந்திணை என்பனவற்றிற்கு நிலமும் காலமும் பகுத்து ஓதாமையின் இவ்வாறன்றிப் பிறிதோர் காரணத்தாற் குறிப்பிட்டார்" [4]*

*என்பது அவரது உரை விளக்கமாகும். காலப்போக்கில் இச்சொல் வறண்ட நிலத்தையும் அங்கு நிலவிய வெம்மையையும் குறிக்க வந்தது. இதனை,*

*“வெயில் உருப்புற்ற வெம்பரல் கிழிப்ப*
*வேனில் நின்ற வெம்பற வழிநாள்*
*காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறுப்ப*
*பாலை நின்ற பாலை நெடுவழிச்*
*சுரன்முதல் மராஅத்த வரிநிழல் அசைஇ”* [5]

என்னும் சிறுபாணாற்றுப்படையின் பாடல் வரிகளால் தெளியலாம். ‘பாலை’ எனனும் சொல் ‘பிரிதல்’ என்னும் பொருளுடையது என்பார் நச்சினார்க்கினியர்.

*‘நிழல்உரு இழந்த வேனில் குன்றத்து*
*பாலை சான்ற சுரம் சார்ந்து’* [6]

என்னும் மதுரைக்காஞ்சியின் பாடல் வரிகளுக்கு, ‘நிழல் தன் வடிவத்தை இழத்தற்குக் காரணமாக முதுவேனிற் காலத்து மலையிடத்தில் அருவழிகள் உள்ளன’ என நச்சினார்க்கினியர் எழுதிய உரை விளக்கத்தால் இதனை அறியலாம். இங்கு நச்சினார்க்கினியர் பாலை என்னும் சொல்லிற்குப் ‘பிரிவு’ என்னும் உரிப்பொருள் உண்டு என்கின்றார். இவ்வாறு கூறுவதால் ‘பாலை’ என்னும் சொல் பிரிவின் ஒரு குறியீடாக அமைகின்றது. தலைவன் தலைவியைப் பிரிவதைப் பொருளாகக் கொண்டு இயற்றப்படும் அகப்பாடல்கள் பாலைநிலப் பின்னணியைப் பெறும் என்பது கருதத்தக்கதும் அகத்திணை குறிப்பிடத்தக்கதும் ஆகும். குறிப்பிட்ட ஒருவகைப் பண்ணும் ‘பாலை’ என்னும் பெயரினைப் பெறுவதைக் கபிலரின் ‘குறிஞ்சிப்பாட்டு’,

*“நைவளம் பழுநிய பாலை வல்லோன்*
*கைவளர் நரம்பின் இம்மென இமிரும்”* [7]

எனக் குறிப்பிடுவதால் அறியலாம்.

**பாலைத்திணைப் பாடல்களின் கட்டமைப்பு**

சங்க இலக்கியத்தில் பாலைத்திணையில் மட்டுமே அதிக எண்ணிக்கையுள்ள பாடல்கள் காணப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் காணப்பெறும் 1862 அகப்பாடல்களில் 530 பாடல்கள் பாலைத்திணைப் பாடல்களாகும். தனிப்பாடல்களின் தொகை நூல்களாகத் தொகுக்கப் பெற்றனவற்றுள் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகியனவற்றுள் முறையே 90, 104, 200 பாடல்கள் என்ற எண்ணிக்கையில் பாலைத்திணைப் பாடல்கள் அமைந்துள்ளன. திணைப் பாடல்களின் தொகையாகத் தொகுக்கப்பட்ட நூல்களில் ஐங்குறுநூற்றில் 100 பாடல்களும், கலித்தொகையில் 35 பாடல்களும்

*உள்ளன. பத்துப்பாட்டினுள் 'பட்டினப்பாலை' என்ற நெடும்பாடல் பாலைத்திணைப் பாடலாகும்.*

**பாடுபொருள்கள்**

*'மேற்குறித்த 530 பாடல்களில் தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடுவதற்கான பிரிவைக் கூறுவது' என்னும் பாலைத்திணையின் துறை, சூழல், பின்னணிகள் சார்ந்து 422 பாடல்கள் அமையப்பெற்றுள்ளன.*

*தலைவி தலைவனுடன் சேர்ந்து, தன் பெற்றோரையும் தமரையும் பிரிந்து தலைவன் ஊர்க்குச் சென்று அவனை மணந்துகொள்ளுவதைக் கூறும் உடன்போக்குத் துறையில் 108 பாடல்கள் உள்ளன.*

*தலைவியின் பெற்றோர் திருமணத்திற்கு ஒப்புதல் அளிக்காதபோது உடன்போக்கு நிகழ்வது வழக்கமாக உள்ளது. களவுக் காதலர்களாகிய தலைவனும் தலைவியும் யாருமறியாமல் உடன்போக்கு மேற்கொள்ளத் தோழி உதவுகின்றாள். எனவே இதனைக் களவின் ஒரு பகுதி எனக் கருதலாம். களவுக்காதலை வளர்த்த குறிஞ்சித்திணையின் சில பாடல்களில் உடன்போக்கு என்னும் துறையும் கலந்துள்ளன. இதற்குச் சான்றுகளாகக் குறுந்தொகையின் பின்வரும் பாடல்களைக் குறிப்பிடலாம். இப்பாடலில் தலைவியைத் தலைவனுடன் உடன்போக்கிற்கு ஒருப்படுத்தி மீளும் தோழி தலைவனிடம்,*

***"பெருநன்று ஆற்றின் பேணாரும் உளரே?<br>ஒருநன்று உடையள் ஆயினும் புரிமாண்டு<br>புலவிதீர அளிமதி இலைகவர்பு<br>ஆடுஅமை ஒழுகிய தண்நறுஞ் சாரல்<br>மென்நடை மரையா துஞ்சும்<br>நன்மலை நாட! நின்அலது இலளே"                    (குறுந்.115)***

*என்கின்றாள். இப்பாடலில் தோழியை மலைநாடனுடன் (குறிஞ்சி நிலத்தவன்) உடன்போக்கிற்கு ஒருப்படுத்துகின்றாள். குறுந்தொகையில் தங்கால் முடக் கொல்லனார் இயற்றிய குறிஞ்சித்திணைப் பாடலில் களவு அலராயினும், தமர் வரைவு மறுத்தபோதும், வேற்றுவரைவு வரினும் தலைவியை உடன் கொண்டு செல்லலே தக்கது என்று தோழி தலைவனிடம் உடன்போக்கு வேண்டுவது கூறப்படுகின்றது.*

***"தினைகிளி கடிதலின் பகலும் ஒல்லும்<br>இரவுநீ வருதலின் ஊறும் அஞ்சுவல்;***

*யாங்குச் செய்வாம்எம் இடும்பை நோய்க்கென*
*ஆங்குயான் கூறிய அனைத்திற்குப் பிறிதுசெத்து*
*ஓங்குமலை நாடன் உயர்ந்தோன் மன்ற;*
*ஐதேயப் கம்ம யானே;*
*கழிமுதுக் குறைமையும் பழியும் என்றிசினே"* *(குறுந்.217)*

என்பது அப்பாடலாகும்.

**நெய்தல் திணையில் உடன்போக்குத்துறைப் பாடல்கள்**

சங்க அகப்பாடல்களில் நெய்தல் திணைப் பாடல்கள் சிலவற்றிலும் பாலைக்குரிய உடன்போக்குத்துறை கலந்து வந்துள்ளது. இதற்குச் சான்றுகளாகப் பின்வரும் ஐங்குறுநூற்றுப் பாடல்களைக் குறிப்பிடலாம். ஐங்குறுநூற்றின் குறிஞ்சித் திணையில் 'அன்னாய் வாழிப் பத்து' என்னும் பகுதியில் தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்று தன்னூர் மீண்ட போது, அவள் தலைவன் ஊரில் கிடைக்கும் நீரின் நுகரல் பற்றித் தோழி வினவியபோது தலைவி அவளுக்குக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

*"அன்னாய் வாழி வேண்டுஅன்னை நம்படப்பைத்*
*தேன்மயங்கு பாலினும் இனியஅவர்நாட்டு*
*உவலைக் கூவற் கீழ*
*மான்உண்டு எஞ்சிய கலிழி நீரே"*
*(ஐங்குறு. குறிஞ். – அன்னாய்வாழிப்., பா.எண்.203)*

தலைவன் நாட்டில் மானுண்டு எஞ்சிய அழுகற்சின்னீர் தேன் கலந்த பாலினும் இனியதாயிற்று எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள். இவ்வாறே குறிஞ்சித் திணையின் 'தெய்யோப்பத்து' பகுதியில் அமைந்துள்ள பாடலில் இற்செறிப்பு முதலிய இடையூறுகளால் தலைவி தன் காதல் நிறைவேற்றத் தடையைக் கண்டு வெறுத்துத் தலைவனுடன் உடன்போக்குச் செல்லத் துணிந்தாள். அவள் தோழியும் அதற்கு உதவினாள். அவளை அழைத்துச் செல்ல நடுயாமத்தில் தலைவன் வந்தபோது தலைவிக்குத் தோழி,

*"கையற வீழ்ந்த மைஇல் வானமொடு*
*அரிது காதலர்ப் பொழுதே; அதனால்*
*தெரியிழை தெளிர்ப்ப முயங்கி*
*பிரியலம் என்கமோ? எழுகமோ? தெய்யோ"*
*(ஐங்குறு. குறிஞ். – தெய்யோப்., பா.எண்.235)*

எனக் கூறுகின்றாள். இவ்வாறே குறிஞ்சித்திணையின் ‘குன்றக்குறவன் பத்து’ பகுதியில் தலைவியைத் தலைவனுடன் அவன் நாட்டுக்கு உடன்போக்கு அனுப்பி வைக்க விரும்பிய தோழி அதற்குத் தலைவியின் உடன்பாடு வேண்டிக் கூறுவதாகப் பின்வரும் பாடல் அமைந்துள்ளது.

*“குன்றக் குறவன் ஆரம் அறுத்தென*
*நறும்புகை சூழ்ந்து காந்தள் நாறும்*
*வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்!*
*கொண்டனர் செல்வர்தம் குன்றுகெழு நாட்டே”*

*(ஐங்குறு., குறிஞ். – குன்றக்குறவன். பா.எண்.254)*

மேற்குறித்தவற்றைத் தவிர வேறு எத்திணையிலும் உடன்போக்குப் பற்றிக் குறிக்கப்பெறவில்லை. உடன்போக்கு மேற்கொள்ளும் தலைவன் தலைவியர் சங்க அகப்பாடல் மரபுக்கேற்ப பொதுப்படக் கூறப்படினும் ஒரு பாலைத்திணைப் பாடலில் மட்டும் உடன்போக்கு மேற்கொள்ளும் தலைவி குறிஞ்சி நிலத்தவளாகக் கூறப்படுகின்றாள். அப்பாடல் வருமாறு:

*“மெய்த்தலைப் படுதல் செல்லேன்; இத்தலை*
*நின்னோடு வினவல் கேளாய்! பொன்னொடு*
*புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி*
*ஒலிக்குழைச் செயலை உடைமாண்அல்குல்*
*ஆய்சுளைப் பலவின் மேய்கலை உதிர்த்த*
*துய்த்தலை வெண்காழ் பெறூஉங்*
*கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே” (அகம். 7:16:23)*

அகநானூற்றின் இப்பாலைத் திணைப்பாடலைக் கயமனார் இயற்றியுள்ளார். தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்றுவிட்டாள். அதனை அறிந்த செவிலித்தாய் சுரத்தினிடையே பின் தொடர்ந்து சென்றாள். அந்த இடைச்சுரத்தில் பெண்மான் ஒன்றைக் கண்ட செவிலி அதனிடம் தன் ஆற்றாமையை வெளிப்படுத்திக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

மற்றொரு தலைவன் தலைவியிடம் தங்களுடைய குறிஞ்சி நிலத்திற்கு வந்துவிட்டதாகக் கூறுகின்றான். அப்பாடல் வருமாறு:

*“முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூர்எரிச்*
*சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கும்*
*இன்னா அருஞ்சுரம் தீர்ந்தனம்; மென்மெல*
*ஏகுமதி வாழியோ குறுமகள்! போதுகலந்து*

*கறங்குஇசை அருவி வீழும்*
*பிறங்குஇருஞ் சோலைநம் மலைகெழு நாட்டே”*

***(ஐங்குறு. பாலை – மறுதரவுப்., பா.எண்.395)***

ஈழத்துப் பூதன்தேவன் குறுந்தொகையில் இயற்றிய பாலைத்திணைப் பாடல் தோழி தலைவியை உடன்போக்கு நயப்பக் கூறுவதாக அமைந்துள்ளது. அப்பாடல் வருமாறு:

***“நினையால் வாழி தோழி, நனைகவுள்***
***அண்ணல் யானை அணிமுகம் பாய்ந்தென***
***மிகுவலி இரும்புலிப் பகுவாய் ஒற்றை***
***வெண்கோடு செம்மறுக் கொளீஇய விடர்முகைக்***
***கோடை ஒற்றிய கருங்கால் வேங்கை***
***வாடுபூஞ் சினையின் கிடக்கும்***
***உயர்வரை நாடனொடு பெயரு மாறே”*** ***(குறுந்.343)***

இப்பாடலில் ‘நனைகவுள் அண்ணல் யானை’ என்னும் தொடர் செல்வச் செருக்கும் தலைமையும் உடைய தலைவனைக் குறிக்கும். ‘புலி ஏற்றை யானையின் முகத்தில் பாய்தல்’ என்பது தலைவன் எதிரில் ஊரார் தலைவியின் களவை அலர் தூற்றுவதைக் குறிக்கும். ‘யானையின் செந்நிறம்பட புலி இறந்துபடுதல்’ என்பது மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும் துறந்து ஒழுகும் ஒழுக்கத்தின் ஏதம் அஞ்சித் தலைவன் களவிற்கூட்டம் வேண்டாது ஒதுங்கியிருப்பதைக் குறிக்கும். ‘கோடைக்காற்று வேங்கையைச் சாய்த்தல்’ உடன்போக்கையும், ‘வேங்கையின் சினை வீழ்ந்து வாடிக்கிடத்தல்’ களவொழுக்கம் வீழ்ந்து ஒழிதலையும் குறிக்கும்.

உடன்போக்கு நேர்வித்து வந்த தோழி, நாணத்தால் வருந்தும் தலைவியை நாணுக்கெடக் கூறுவதாகப் புலவர் படுமரத்து மோசிகீரன் இயற்றிய பின்வரும் குறுந்தொகைப் பாடல் அமைந்துள்ளது.

***“நீஉடம் படுதலின் பயன்தர வந்து***
***குறி நின்றனனே குன்ற நாடன்;***
***இன்றை அளவைச் சென்றுரைக்க என்றி***
***கையும் காலும் ஓய்வன ஒடுங்கத்***
***தீஉறு தளிரின் நடுங்கி***
***யாவதும் இலையான் செயற்கு உரியதுவே”*** ***(குறுந்.383)***

இப்பாடலில் தலைவி தலைவனுடன் உடன்போக்குச் செல்ல அவளது நாணம் ஒன்றே தடையாகிற்று. 'நீ உடம்படுதலின்' என்ற தொடரால் தோழியின் பிற கூற்றைத் தலைவி ஏற்றாள் என்பது புலனாகின்றது. தலைவியின் கையும் காலும் காமத்தால் தலைவனுடன் செல்ல விழைந்தபோதும் அவளுடைய உள்ளம் தீயுற்ற தளிர் போல நாணத்தைக் காத்தல் குறித்து மெலிந்தது.

மகட்போக்கிய செவிலித்தாய் கூற்றாக மதுரை ஆசிரியன் கோடங்கொற்றன் என்னும் புலவர் இயற்றிய பாலைத்திணைப் பாடலொன்று குறுந்தொகையில் இடம்பெற்றுள்ளது.

***"கழிய காவி குற்றும் கடல***
***வெண்தலைப் புணரி ஆடியும் நன்றே***
***பிரிவுஇல் சூயம் உரியதொன்று அயர***
***இவ்வழிப் படுதலும் ஒல்லாள், அவ்வழிப்***
***பரல்பாற் படுப்பச் சென்றனள் மாதோ***
***செல்மழை தவழும் சென்னி***
***விண்உயர் பிறங்கல் விலங்குமலை நாட்டே"        (குறுந்.144)***

'வெண்தலைப் புணரி ஆடியும்' என்பதால் தலைவி நெய்தல் நிலத்தவள் எனவும், அத்தலைவி தலைவனுடன் 'விண்உயர் பிறங்கும் விலங்குமலை' நாட்டிற்குச் சென்றாள் என்பதால் தலைவன் குறிஞ்சி நிலத்தவன் எனவும் அறியமுடிகின்றது.

'களவு' என்பது குறிஞ்சி, நெய்தல் நில மக்களுக்குப் பொதுவானதாக அமைவதால் உடன்போக்கும் அந்நிலமக்களின் சிறப்புக்குரிய பண்பாட்டமைவு எனக் கொள்ளலாம். ஆயினும் 'பிரிவு' என்னும் உரிப்பொருளுக்குரிய பாலைத்திணைக்கு உரியதாக உடன்போக்கைக் கூறியிருப்பது ஆழ்ந்த சிந்தனைக்குரியதாகும். தலைவன் தலைவியர் உடன்போக்கில் செல்வது மட்டும் பிரிவாகாது. ஆயினும் பெண் என்ற நிலையில் தலைவி தன் பெற்றோரையும் தோழியரையும் ஊரையும் விட்டுப் பிரிகின்றாள். எனவே அவளது உள்ளத்தில் ஓர் ஆழமான பிரிவு உணர்வு ஏற்படுகின்றது.

பாலைத்திணையின் பல பாடல்களில் செவிலித்தாய், நற்றாய் முதலான தாயரின் அன்பும் நேயமும் மகளின் திடீர்ப் பிரிவு பற்றிய செய்திகளும், அதனால் இத்தாயரின் உள்ளங்களில் தோன்றும் துன்பங்களும் பாலைத் திணையின் உடன்போக்குத் துறைப் பாடல்களில் கூறப்பெறுகின்றன. ஆதலால் உடன்போக்குத் துறையை பாலைத்திணைக்குரியதாகக் கொள்வது பொருத்தமாக உள்ளது.

**பாலைத்திணைப் பாடல்களில் பாடுபொருளும் திணைமயக்கமும்**

பாலைத்திணைப் பாடல்களில் தலைவனின் 'பொருள்வயிற் பிரிவே' முதன்மையானதாகக் கூறப்படுகின்றது. ஆயினும் இரண்டு பாடல்களில் தலைவனின் பகைவர்க்கு எதிரான 'போர்வயிற் பிரிதல்' கூறப்பெறுகின்றன.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய கலித்தொகையின் பாலைத்திணைப் பாடல் ஒன்றில் (பா.எண்.26) தலைவன் வேந்தனின் நாடு காவல் பொருட்டுப் பிரிவேன் என்றான்; பிரியுங்கால் இளவேனிற் காலத்து வருவேன் எனக் காலம் குறித்துப் பிரிந்து சென்றான். அக்காலம் வந்த அளவில் தலைவி ஆற்றாளாய் தனக்கு அருள் செய்ய வேண்டிய காலத்துத் தலைவன் அருள் செய்யவில்லை எனக் கூறி வருந்தினாள். அதுகேட்ட தோழி 'அத்தலைவன் வர இருக்கின்றமைக்கு இக்காலம் தூதாக அன்றோ வந்தது; நீ ஆற்றுவாயாக' என வற்புறுத்திக் கூறுகின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

***"அறல்சாஅப் பொழுதொடுஎம் அணிநுதல் வேறாகி***
***திறல்சான்ற பெருவனப்பு இழப்பதை அருள்வார்***
***ஊறுவஞ்சிநிழல் சேர்ந்தார்க்கு உலையாது காத்தோம்பி***
***ஆறுஇன்றிப் பொருள்வெஃகி அகன்றநாட்டு உறைபவர்***
***என நீ***
***தெருமரல் வாழி தோழிநம் காதலர்***
***பொருமுரண் யானையர் போர்மலைந்து எழுந்தவர்***
***செரு மேம்பட்ட வென்றியர்***
***'வரும்'என வந்தன்றுஅவர் வாய்மொழித் தூதே" (கலி.26:16–25)***

இப்பாடலின் தலைவன் வேற்றுநாட்டில் இருத்தலால் தன்னுடைய தோளையும் நலத்தையும் நுதலையும் நினைத்துப் பார்ப்பானோ என்று இப்பாடலின் தலைவி கேட்கின்றாள். கார்காலத்தில் பல்வேறு மரங்களும் பல்வேறு நிறங்களைக் கொண்ட மலர்களைப் பூத்து நின்றன. இப்பூக்களில் ஒவ்வொரு நிறத்திற்கும் ஒவ்வொரு தெய்வமும் உவமையாகக் கூறப்பெற்றுள்ளன.

வேற்றுநாட்டில் வேந்தன் பொருட்டுப் பிரிந்த தலைவன், இளவேனிற் காலம் தொடங்கியதும் தன் வரவினைத் தூதுவர் வாயிலாகக் கூறி அனுப்பினான். இச்செய்தியைத் தோழி தலைவிக்குக் கூறி ஆற்றுப்படுத்துகின்றாள்.

மண்நசையால் வேந்தன் சென்றபோது தலைவனும் அவ்வேந்தனுடன் சென்றான். அவ்வாறு சென்ற தலைவன் இளவேனிற் காலத்தே வருவேன்; அதுகாறும் ஆற்றியிருத்தல் வேண்டும் என்று தலைவியிடம் கூறிப் பிரிந்து

சென்றான். முன்பனிக் காலமும் பின்பனிக் காலமும் வந்து வருத்துகின்றமையால் தலைவி ஆற்றாளாயினாள். ஆற்றாத தலைவிக்குத் தோழி அவர் வருவது உறுதி என வற்புறுத்திக் கூறினாள். தோழி கூறியமைக்குத் தலைவி எதிரழிந்தாள். தலைவன் தான் குறித்த பருவம் வரும்துணையும் தலைவி ஆற்றியிராள் என நினைத்துப் பின்பனிக் காலத்தே வந்தான்; தலைவன் வரவுணர்ந்த தோழி கழிபேருவகையுடன் தலைவியிடம் பின்வருமாறு கூறுகின்றாள்.

*"பகைவென்று திறைகொண்ட பாய்திண் தேர்மிசையவர்*
*வகைகொண்ட செம்மல்நாம் வனப்புஆர விடுவதோ?*
*புகையெனப் புதல்சூழ்ந்து பூஅக்கள் பொதிசெய்யா*
*முகைவெண் பல்நுதிபொர முற்றிய கடும்பனி*
*என ஆங்கு,*
*வாளாதி வயங்கிழாய்! வருந்துவள் இவள்என*
*நாள்வரை நிறுத்தத்துத்தாம் சொல்லிய பொய்அன்றி*
*மீளிவேற் தானையர் புகுதந்தார்*
*நீள்உயர் கூடல் நெடுங்கொடி எழவே"* *(கலி.31: 16–25)*

இவ்விரண்டு பாலைக்கலிப் பாடல்களின் தலைவர்களும் மன்னர்கள் என்பது தெளிவாகக் கூறப்பெற்றுள்ளது. பாலைக்கலியின் 31ஆம் பாடலில் வெற்றி பெற்றவர் உள்ளே நுழையும் போது கூடல்நகரின் கோட்டையின்மீது வெற்றிக்கொடி ஏற்றப்பட்டது என்பதால் அம்மன்னன் பாண்டிய மன்னன் என்பதும் தெளிவாகின்றது. இவ்வாறு அகப்பாடலில் தலைவன் யார் எனச் சுட்டிக்காட்டுவது அகத்திணை மரபுக்கு மாறானதாகும். ஆயினும் இத்தகைய மரபு மீறல்கள் சங்க அகப்பாடல்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்படுகின்றன.

பாலைத்திணைப் பாடல்களில் பிற திணை உரிப்பொருள்கள் கலந்திருப்பது மிகவும் அரிதாகவே காணப்படுகின்றது. சில பாடல்களின் வருணனைகளில் பாலையின் கற்பனைப்பாங்கு முல்லையின் கற்பனைப் பாங்கை ஒத்துள்ளது. பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வருவது குறித்து ஏறத்தாழ 40 பாடல்கள் பாலைத்திணையில் உள்ளன [8] என்பார் 'தமிழண்ணல்' இராம.பெரியகருப்பன். பாலைப் பாடல்களின் இக்கற்பனை மரபு, போருக்காகத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வருதலையும் தலைவி பொறுமையாக ஆற்றியிருத்தலையும் முதன்மையாகக் கூறும் முல்லைப் பாடல்களின் கற்பனை மரபை ஒத்துள்ளது. இதற்குச் சான்றளிப்பனவாக அகநானூற்றில் ஐந்து

பாடல்களும் குறுந்தொகையில் மூன்று பாடல்களும் காணப்படுகின்றன (அகம். 9, 85, 87, 93, 351, குறுந்.189, 235, 237). அகநானூற்றில் கல்லாடனார் இயற்றிய பாலைத்திணைப் பாடலில் வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்கு,

*“கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின்*
*வில்லோர் தூணி வீங்கப் பெய்த*
*அம்புநுனை ஏய்ப்ப அரும்பிய இரும்பை*
*செம்புஅடர் அன்ன செங்குழை அகம்தோறு*
*இழுதின் அன்ன தீம்புழல் துய்வாய்*
*உழுதுகாண் துளைய ஆகி ஆர்கழல்பு*
*ஆலி வானின் காலொடு பாறி*
*துப்பின் அன்ன செங்கோடு இயவின்*
*நெய்த்தோர் மீமிசை நிணத்தின் பரிக்கும்*
*அந்தம் நண்ணிய அம்குடிச் சீறூர்” (அகம். 9:1–10)*

எனக் கூறுகின்றான். காட்டூர்கிழார் மகனார் கண்ணனார் இயற்றிய அகநானூற்றுப் பாடலில் தலைவன் பொருள்வயிற் பிரிந்தமையால், பிரிவாற்றாமையால் வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுவிக்கும்போது,

*“நன்நுதல் பசப்பவும் பெருந்தோள் நெகிழவும்*
*உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சாஅய்*
*இன்னம் ஆகவும் இங்குநத் துறந்தோர்*
*அறவர் அல்லர் அவர்எனப் பலபுலந்து*
*ஆழல் வாழி தோழி சாரல்*
*ஈன்றுநாள் உலந்த மெல்நடை மடப்பிடி*
*கன்றுபசி களைஇய பைங்கண் யானை*
*முற்றா மூங்கில் முளைதருபு ஊட்டும்*
*வென்வேல் திரையன் வேங்க நெடுவரை*
*நல்நாள் பூத்த நாகுஇள வேங்கை” (அகம். 85:1–10)*

எனத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள். வினைமுற்றி மீளும் தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக மதுரைப் பேராலவாயார் இயற்றிய பாலைத்திணைப் பாடலிலும் இக்கற்பனை மரபு காணப்படுகின்றது.

*“தீம்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்*
*கன்றுவாய் சுவைப்ப முன்றில் தூங்கும்*
*படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை*
*நல்கூர் சீறூர் எல்லித் தங்கி*

*குடுமி நெற்றி நெடுமரச் சேவல்*
*தலைக்குரல் விடியற் போகி முனாஅது*
*கடுங்கண் மறவர் கால்கெழு குறும்பின்*
*எழுந்த தண்ணுமை இடங்கட் பாணி*
*அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சம் துண்ணென*
*குன்றுசேர் கவலை இசைக்கும் அத்தம்"* *(அகம். 87:1–10)*

இவ்வாறு மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலிலும் வினைமுற்றி மீளும் தலைமகன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குப் பின்வருமாறு கூறுகின்றான்.

*"கேள்கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும்*
*கேள்அல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்*
*ஆள்வினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து*
*......... ......... .......*
*நீள்இருங் கூந்தல் மாஅயோ ளொடு*
*வரை குயின்ற வான்தோய் நெடுநகர்*
*நுரைமுகத் தன்ன மென்பூஞ் சேக்கை*
*நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து*
*நலம்கேழ் ஆகம் பூண்வடுப் பொறிப்ப*
*முயங்குகம் சென்மோ நெஞ்சே! வரிநுதல்*
*வயம்திகழ்பு இழிதரும் வாய்புகு கடாஅத்து*
*மீளி மொய்ம்பொடு நிலன்எறியாக் குறுகி*
*ஆள்கோள் பிழையா அஞ்சுவரு தடக்கைக்*
*கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை*
*திருமா வியன்நகர்க் கருவூர் முன்துறை*
*தெண்நீர் உயர்கரைக் கவைஇய*
*தண்ஆன் பொருநை மணலினும் பலவே"* *(அகம்.93)*

மற்றொரு அகநானூற்றுப் பாடலில் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று தான் வேண்டுமளவுக்குப் பொருள் ஈட்டிக்கொண்டு திரும்ப வருகின்றான். வருபவன் இடைச்சுரத்தில் தலைவியை நினைத்துத் தன் நெஞ்சிற்குக் கூறுவதாகப் புலவர் பொருந்தில் இளங்கீரனார் இயற்றிய பாலைப் பாடலும் உள்ளது. இப்பாடலின் புனைவு வருமாறு:

*"வேற்றுநாட்டு உறையுள் விருப்புறப் பேணி*
*பெறல்அருங் கேளிர் பின்வந்து விடுப்ப*

*பொருள்அகப் படுத்த புகல்மலி நெஞ்சமொடு*
*குறைவினை முடித்த நிறைவுஇன் இயக்கம்*
*அறிவுறூஉம் கொல்லோ தானே கதிர்தெற*
*கழல்இலை உகுத்த கால்பொரு தாழ்சினை*
*அழல்அகைத் தன்ன அம்குழைப் பொதும்பில்*
*புழல்வீ இருப்பைப் புன்காட்டு அத்தம்*
*மறுதரல் உள்ளமொடு குறுகத் தோற்றிய*
*செய்குறி ஆழி வைகல்தோறு எண்ணி"* *(அகம். 351:1–10)*

இவ்வாறே குறுந்தொகையில் மதுரை ஈழத்துப் பூதன்தேவன் இயற்றிய பாலைப்பாடலில் வினைதலை வைக்கப்பட்ட இடத்துத் தலைவன் தேர்ப்பாகனுக்குப் பின்வருமாறு கூறுகின்றான்.

*"இன்றே சென்று வருதும் நாளைக்*
*குன்றுஇழி அருவியின் வெண்தேர் முடுக*
*இளம்பிறை அன்ன விளங்கு சுடர்நேமி*
*விசும்புவீழ் கொள்ளியின் பைம்பயிர் துமிப்ப*
*கால்இயல் செலவின் மாலை எய்தி*
*சில்நிரை வால்வளைக் குறுமகள்*
*பல்மாண் ஆகம் மணந்து உவக்குவமே"* *(குறுந். 189)*

அள்ளூர் நன்முல்லையார் இயற்றிய குறுந்தொகையின் பாலைத் திணைப் பாடலில் பொருள்முற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்குப் பின்வருமாறு முல்லைத் திணையின் பாங்குடன் கூறுகின்றான்.

*"அஞ்சுவது அறியாது அமர்துணை தழீஇ*
*நெஞ்சுநப் பிரிந்தன்று; ஆயினும் எஞ்சிய*
*கைபிணி நெகிழின் அஃதுஎவனோ? நன்றும்*
*சேய அம்ம இருவாம் இடையே*
*மாக்கடல் திரையின் முழங்கி வலனேர்பு*
*கோட்புலி வழங்கும் சோலை*
*எனைத்துஎன்று எண்ணுகோ – முயக்கிடை மலைவே?"* *(குறுந்.237)*

புலவர் மாயேண்டன் இயற்றிய குறுந்தொகையின் பாலைத்திணைப் பாடலில் தலைவியை வரைந்து கொள்ளாமல் பிரிந்து வரும் தலைவன் வாடைக் காற்றுக்குக் கூறுபவனாய் தேர்ப்பாகனுக்குப் பின்வருமாறு கூறுகின்றான்.

*“ஓம்புதி வாழியோ வாடை! பாம்பின்*
*தூங்குதோல் கடுக்கும் தூவெண் அருவிக்*
*கல்உயர் நண்ணியதுவே, நெல்லி*
*மரையினம் ஆரும் முன்றிற்*
*புல்வேய் குரம்பை நல்லோள் ஊரே”* *(குறுந். 235)*

ஐங்குறுநூற்றில் குறிஞ்சித்திணையின் களவுக்காதலை வெளிப்படுத்தும் இரண்டு பாலைப்பாடல்கள் உள்ளன. இவ்விரண்டு பாடல்களும் பாலைத்திணையின் முன்னிலைப்பத்தில் காணப்படுகின்றன. தலைவனது பிரிவாற்றாது தலைவியின் உடலில் தோன்றிய வேறுபாடு கண்டு வருந்திய செவிலித்தாய், அவ்வேறுபாட்டிற்குக் காரணம் அறியாது தலைவியை வினவினாள். அப்பொழுது தோழி அறத்தொடு நிற்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

*“அன்னாய் வாழி! வேண்டன்னை என்தோழி*
*பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை*
*கொன்னே கடவுதி ஆயின் என்னதூஉம்*
*அறிய ஆகுமோ மற்றே*
*முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே?”*
*(ஐங்குறு. பாலை – முன்னிலைப்., பா.எண்.366)*

இப்பாடலில் தலைவிக்கு எடுக்கவிருக்கும் வெறியாடலைத் தோழி தவிர்க்கின்றாள். இப்பாடலைப் ‘பூத்தரு புணர்ச்சி’ காட்டுவது எனலாம்.

நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பதாகப் பின்வரும் ஐங்குறுநூற்றின் பாலைத்திணைப் பாடல் அமைந்துள்ளது.

*“பொரிஅறைக் கோங்கின் பொன்மருள் பசுவீ*
*விரிஇணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி*
*விரவுமலர் அணிந்த வேனில் கான்யாற்றுத்*
*தேரொடு குறுக வந்தோன்*
*பேரொடு புணர்ந்தன்று அன்னைஇவள் உயிரே”*
*(ஐங்குறு. பாலை – முன்னிலைப்., பா.எண்.367)*

இவ்வாறே ஐங்குறுநூற்றின் பாலைத்திணையில் மருதத்திணையின் பரத்தைமை ஒழுக்கம் குறித்த இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. இவ்விரு பாடல்களும் பாலைத்திணையின் முன்னிலைப்பத்தில் காணப்படுகின்றன. தலைவன் தான் விரும்பிய பரத்தையொடு பொழிலாட்டயர்ந்து வந்தான்.

தலைவி இதனை அறிந்தமையின் அதுபற்றி வினவினாள். தான் அப்படி யொருத்தியை அறிந்ததில்லை என்று தலைவன் கூறியபோது அவனுக்குத் தலைவி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

*“வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்*
*முளைநிரை முறுவல் ஒருத்தியொடு நெருநல்*
*குறிநீ செய்தனை என்ப; அலரே,*
*குரவ நீள்சினை உறையும்*
*பருவமாக் குயிற் கௌவையின் பெரிதே”*

*(ஐங்குறு., பாலை – முன்னிலைப்., பா.எண்.369)*

தலைவன் பரத்தையொருத்திக்குத் தன் அன்பின் அடையாளமாகப் பூச்சூட்டினான். இது குறித்துத் தலைவி ஊடியபோது தலைவன் அதனை மறைத்தான். அப்போது தலைவி தலைவனிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

*“வண்சினைக் கோங்கின் தண்கமழ் படலை*
*இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப*
*நீநயந்து உறையப் பட்டோள்*
*யாவளோ? எம்மறையா தீமே?”*

*(ஐங்குறு., பாலை – முன்னிலைப்., பா.எண்.370)*

இவற்றைத் தவிர எஞ்சிய பாலைப்பாடல்கள் அனைத்தும் பொருட்பிரிவு குறித்து மட்டுமே எடுத்துரைக்கின்றன. நாமலார் மகன் இளங்கண்ணன் இயற்றிய குறுந்தொகையின் பின்வரும் பாடலை முல்லைத்திணைக்கு உரியதாகக் கொள்ளலாம்.

*“பரல்அவற் படுநீர் மாந்தி துணையோடு*
*இரலை நன்மான் நெறிமுதல் உகளும்*
*மாலை வாரா அளவை கால்இயல்*
*கடுமாக் கடவுமதி பாக! நெடுநீர்ப்*
*பொருகயல் முரணிய உண்கண்*
*தெரிதீம் கிளவி தெருமரல் உயவே”* *(குறுந்.250)*

என்னும் இக்குறுந்தொகைப் பாடலில் இரலை மானும் மாலைக்காலமும் வருவதால் இதனை முல்லைத்திணைப் பாடல் எனலாம். ஆயினும் இப்பாடல் பாலைத்திணைப் பாடலாக வகுக்கப்பட்டுள்ளது. இதற்குக் காரணம் பாலை, முல்லைத் துறைகளுக்கு இடையேயுள்ள ஒற்றுமையாகும்.

**நீண்டகாலப் பிரிவு**

*ஐந்திணைப் பாடல்களில் நிகழும் பிரிவுகளில் பாலைத்திணைக்குரிய பொருட்பிரிவே நீண்ட காலத்திற்கும் நெடுந்தொலைவிற்கும் உரியதாகக் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியர் இப்பிரிவும் போர்வயிற் பிரிவும் ஓராண்டுக்கால வரையறைக்கு உட்பட்டதென்பார்.*

***"வேந்துறு தொழிலே யாண்டின தகமே" [9]***
***"ஏனைப் பிரிவும் அவ்வியல் நிலையும்" [10]***

*பாலைத்திணையில் ஓராண்டு நீண்ட பிரிவு தெளிவாகக் குறிக்கப்பட்டதைப் போல் முல்லைத்திணையில் பிரிவில் கூறப்பெறவில்லை. முதுவேனில் பருவத்தில் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் இளவேனில் பருவத்தில் திரும்புகின்றான் (அகம்.229, 277, 317, கலி.26–29, 32–36) முதுவேனிலுக்கும் இளவேனிலுக்கும் இடைப்பட்ட காலம் ஓராண்டாதலின் இப்பிரிவிற்குரிய வரையறை ஓராண்டு என்பதைத் தெளிவாக அறிய முடிகின்றது.* ***அகநானூற்றின் 317ஆம் பாடலில் பாலைக்குரிய பிரிவு ஓராண்டுக்காலம் என்பது மிகத் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளது.*** *இப்பாடலின் தலைவன் கார், கூதிர் என்னும் மழைக்காலத்திற்கும், முன்பனி, பின்பனி என்னும் பனிக்காலத்திற்கும் பின்பு இளவேனில் காலத்தில் திரும்புகின்றான். அப்பாடல் வருமாறு:*

***"மாக விசும்பின் மழைதொழில் உலந்தெனப்***
***பாஅய் அன்ன பகல்இருள் பரப்பிப்***
***புகைநிற உருவின் அற்சிரம் நீங்கக்***
***குவிமுகை முருக்கின் கூர்நுனை வைஎயிற்று***
***நகைமுக மகளிர் ஊட்டுகிர் கடுக்கும்***
***முதிராப் பல்லிதழ் உதிரப் பாய்ந்துடன்***
***மலருண் வேட்கையின் சிதர்சிதர்ந்து உகுப்ப***
***பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி***
***நுண்கோல் அறைகுறைந்து உதிர்வன போல***
***அரவ வண்டினம் ஊதுதொறும் குரவத்து***
***ஓங்குசினை நறுவீ கோங்குஅலர் உறைப்பத்***
***துலைத்து எழூதும்பி தவிரிசை விளரி***
***புதைத்து விடுநரம்பின் இம்மென இமிரும்***
***மானே முற்ற காமர் வேனில்***
***வெயில்அவிர் புரையும் வீததை மராஅத்துக்***

*குயில்இடு பூசல் எம்மொடு கேட்ப*
*வருவேம் என்ற பருவம் ஆண்டை*
*இல்லை கொல்என மெல்ல நோக்கி*
*நினைந்தனம் இருந்தனமாக நயந்து ஆங்கு*
*உள்ளிய மருங்கின் உள்ளம் போல*
*வந்து நின்றனரே காதலர்"* *(அகம்.317:1–21)*

பொருள்வயிற் பிரியும் தலைவன் தமிழகத்தின் வடவெல்லையைத் தாண்டிச் செல்கின்றான். அவன் வேங்கட மலையைத் தாண்டிப் பல புதிய மொழிகள் வட்டாரவழக்குகள் பேசப்படும் நிலத்திற்குச் செல்கின்றான் (குறுந்.11, 380, நற்.212, அகம்.85, 127, 209, 215). இதற்குக் குறுந்தொகை, அகநானூறு, நற்றிணை ஆகியனவற்றின் பாலைப் பாடல்களில் குறிப்புக்கள் கிடைக்கின்றன. மாமூலனார் இயற்றிய குறுந்தொகைப் பாடலில் பொருள்வயிற் பிரிந்த தலைவன் வடுகர் நாட்டிற்குச் செல்கின்றான். அந்நாட்டின் மக்கள் வேற்றுமொழியைப் பேசுகின்றனர்.

*"குல்லைக் கண்ணி வடுகர் முனையது*
*வல்வேற் கட்டி நல்நாட்டு உம்பர்*
*மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்*
*வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே"* *(குறுந்.11:5–8)*

கருவூர்க் கதப்பிள்ளை இயற்றிய குறுந்தொகையின் பாலைப்பாடலின் தலைவன் தொலைதூர நாட்டிற்குச் செல்கின்றான்.

*"........ ..... ...... காதலர்*
*நனிசேய் நாட்டர்; நம் உன்னலரே"* *(குறுந்.380:3–4)*

குடவாயிற் கீரத்தனார் இயற்றிய நற்றிணைப் பாடலின் தலைவன் பொருள் தேடி வடுகர் கூட்டம் வாழும் நெடிய குன்றப்பகுதிக்குச் செல்கின்றான்.

*"கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்*
*நெடும் பெருங்குன்றம் நீந்தி"* *(நற்.212:4–5)*

இதனைத் தவிர தலைவன் வணிகம் செய்யவும் பொருளீட்டவும் இக்கால ஆந்திர மாநிலத்தின் வழியாக வட இந்தியாவிற்கும் பயணம் மேற்கொண்டான் எனக் கூறும் பாலைத்திணைப் பாடல்கள் பலவும் உள்ளன (நற்.189:4–5). நற்றிணைப் பாடலில் தலைவன் பொருள் தேடி இனிய குருகுகள் வாழ்கின்ற கங்கை ஆற்றில் ஓடும் மரக்கலத்தில் ஏறிச் செல்கின்றான்.

*“நரம்பு இசைத்தன்ன இன்குரற் குருகின்*
*கங்கை வங்கம் போகுவர் கொல்லோ?”* *(நற்.189:4–5)*

மாமூலனாரின் அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் தலைவன் மோகூர் பழையன், மோரியர் (மௌரியர்) நாடுகளுக்குச் செல்வதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

*“துனைகால் அன்ன புனைத்தேர்க் கோசர்*
*தொல்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்*
*இன்னிசை முரசம் கடிப்புஇகுது இரங்க*
*தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்*
*பணியா மையின் பகைதலை வந்த*
*மாகெழு தானை வம்ப மோரியர்*
*புனைதேர் நேமி உருளிய குறைத்த*
*இலங்குவெள் அருவி அறைவாய் உம்பர்”* *(அகம்.251:7–14)*

மாமூலனார் இயற்றிய பாலைத்திணைப் பாடலில், தலைவன் பொருள் தேடி வேங்கடத்தைக் கடந்து நந்தர்களின் பாடலிபுத்திரம் வரை செல்வதாகக் கூறப்பட்டுள்ளது.

*“பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்*
*சீர்மிகு பாடலிக் குழீஇ கங்கை*
*நீர்முதல் கரந்த நிதியம் கொல்லோ?*
*........ ........ .... ........ ........*
*செந்நுதல் யானை வேங்கடம் தழீஇ*
*வெம்முனை அருஞ்சுரம் இறந்தோர்*
*நம்மினும் வலிதாத் தூக்கிய பொருளே!”* *(அகம்.265)*

**வாழ்க்கைக்குப் பொருளின் தேவை**

சங்கப் புலவர்கள் ஆழ்ந்த இரங்கல் பொருண்மையின் காரணமாகவே அவலம் நிறைந்த துயரங்களைப் பாலைத்திணைப் பாடல்களில் மிகுதியாகச் சுட்டிக்காட்டிப் பாடியுள்ளனர் என இக்கால ஆய்வாளர் பலர் கருத்துக் கொண்டுள்ளனர். இதனை மட்டும் பாலைத்திணைப் பாடல்களின் உரிப்பொருள் பின்புலமாகக் கொள்ள இயலாது. சங்கப் புலவர்கள் பிற திணைப் பாடல்களிலும் இன்பத்தை விட அவலத்தையே நுணுக்கமாகச் சித்திரித்துள்ளனர்.

இவ்வுலகில் காதலே எல்லார்க்கும் எல்லாமாகவும் முடிந்த பொருளாகவும் இருக்க இயலாது. வாழ்க்கைக்குப் பொருளே அடிப்படைத் தேவையாகும்.

பொருளற்றவர்கள் தம்மைச் சார்ந்தோர்க்கு உதவுதலும், தம்மீது நெருங்கிய அன்புடையாரோடு மகிழ்ச்சியான வாழ்க்கை நடத்துதலும் இயலாது என்பதை காவன்முல்லைப் பூதரத்தனார் இயற்றிய அகநானூற்றின் பாலைப்பாடல்,

*"தம்நயந்து உறைவோர்த் தாங்கி தாம் நயந்து*
*இன்னமர் கேளிரொடு ஏமுறக் கெழீஇ*
*நகுதல் ஆற்றார் நல்கூர்ந் தோரென*
*மிகுபொருள் நினையும் நெஞ்சமொடு அருள்பிறிது" (அகம்.151:1–4)*

என வலியுறுத்திக் கூறுகின்றது. பொருளிருந்தால் அதனைக்கொண்டு ஒழுக்கத்தோடு நிமிர்ந்த வாழ்க்கையை நடத்தவும் பிறர் வாயிற்கடை சென்று உதவி வேண்டாமல் போதுமான செல்வத்தைப் பெற்றிருக்கவும் இயலும் என்பதைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடல்,

*"அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்*
*பிறன்கடைச் செல்லாஅச் செல்வமும் இரண்டும்*
*பொருளின் ஆகும்" (அகம்.155:1–3)*

என எடுத்துரைக்கின்றது. 'நண்பர்கள் துன்பத்திலிருக்கும் போது அவர்களுக்கு உதவப் பொருள் பயன்படும். உறவினர்களை ஆதரிக்கவும் பொருள் உதவும். பொருளினால் பகைவர்கூட நண்பராகவும், அன்புடையவராகவும் ஆவர் என்பதை மதுரைக் கணக்காயனார் மகன் நக்கீரனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடல்,

*"கேள்கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும்*
*கேள்அல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்*
*ஆள்வினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து" (அகம்.93:1–3)*

எனக் குறிப்பிடுகின்றது. இத்தகைய வாழ்க்கையை எம்முயற்சியும் இல்லாமல் வீட்டில் சோம்பி இருப்பவர்களால் அடைய இயலாது என்பதை முள்ளியூர்ப் பூதியார் என்னும் சங்கப் புலவர் அகநானூற்றில் இயற்றிய பாலைத்திணைப் பாடல்,

*"அறம்தலைப் பிரியாது ஒழுகலும் சிறந்த*
*கேளிர் கேடுபல ஊன்றலும் நாளும்*
*வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்" (அகம்.173:1–3)*

எனச் சுட்டிக்காட்டுகின்றது. இவ்வாறாகப் பொருள் தமக்கும் பிறர்க்கும் பெரிதும் பயன்பாடுடையதாக இருப்பதால்தான் அதன் இன்றியமையாமையைப் பாலைத்திணைப் பாடல்கள் பாடுபொருளாகவும் உரிப்பொருளாகவும் கொண்டுள்ளன.

**பொருள்வயிற் பிரியும் தலைவன் நிலை**

பொருளைத் தேடிச் சேர்ப்பது தன் சொந்தக்கடமை என்பதை நினைவில் கொண்ட தலைவனின் மன உணர்வுகளையும், மனவோட்டங்களையும் பாலைத்திணைப் பாடல்கள் உளவியல் பார்வையில் காட்டுவதோடு, பொருள் தேட விழையும் தலைவன் அல்லிமலர் போன்ற தன் மென்மையான காதலைக் கொண்ட தலைவியின் மனம் வெறுப்பும் சலிப்பும் கொள்ளாமல் பார்த்துக்கொள்வதையும் காட்டுகின்றன.

தலைவி, தலைவன் தன்னிடத்துக் கொண்ட காதல் ஆர்வத்தைவிடப் பொருளின் மேல் கூடுதல் பற்றும் ஆர்வமும் கொண்டுள்ளதாகக் கருதி வருந்துகின்றாள். இதனை ஆற்றாமையால் வருந்தும் தலைவியை ஆற்றுவிக்கும் தோழியிடம் தலைவி கூறுவதாக அகநானூற்றில் சீத்தலைச் சாத்தனார் இயற்றிய பாலைத்திணைப் பாடலால் அறியமுடிகின்றது.

*“அருஞ்சுரக் கவலை நீந்தி என்றும்*
*இல்லோர்க்கு இல்என்று இயைவது கரத்தல்*
*வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்*
*பொருளே காதலர் காதல்*
*அருளே காதலர் என்றி நீயே”* *(அகம்.53:12–16)*

தோழியும் பாலைத்திணைப் பாடல்களில் இக்கருத்தினையே வலியுறுத்துகின்றாள். தலைவனின் உள்ளத்தில், அத்தோழி தலைவியிடம் கொண்டுள்ள காதலுக்கும், அவளது எதிர்கால வாய்ப்புக்களைக் குறித்த ஆர்வத்திற்கும் இடையே இருமுனைப் போராட்டம் நிகழ்கின்றது. இச்செய்தி தலைவனால் பல பாலைத்திணைப் பாடல்களில் எடுத்துரைக்கப்படுகின்றன. தலைவன் தான் செல்லவிருக்கும் வறண்ட வழியின் வெம்மைக்கும், தன் தலைவியின் தண்ணிய இயல்பிற்கும் இடையேயான பெரிய வேறுபாட்டை நினைத்துப் பார்க்கின்றான். அவன் தோழியிடமிருந்தோ தலைவியிடமிருந்தோ விடைபெறும் போதும், தன் உள்ளத்தோடு அவன் உரையாடும் போதும் தலைவியின் பண்புகளையும் அழகையுமே பெரிதும் மனமுவந்து பாராட்டுகின்றான். இப் பாராட்டு, வளமும் மகிழ்ச்சியும் நிறைந்த வாழ்க்கையை நடத்தப் பொருளைத் தேடிச் சேர்ப்பதற்காகத் தலைவியை வீட்டை விட்டு

வெளியே துரத்தும் சிந்தனையிலிருந்து பிறப்பதாகும். தலைவன் எவ்வளவுக்கு மிகுதியாகத் தலைவியைப் பாராட்டுகின்றானோ அவ்வளவு விரைந்து அவன் தலைவியைப் பிரிந்து பொருள்வயிற் பிரியப்போகின்றான் என்பதை உணர்த்துவதாகும் என்பார் தொல்காப்பியர்,

*"செய்பொருள் அச்சமும் வினைவயின் பிரிவும்*
*மெய்பெற உணர்த்தும் கிழவி பாராட்டே"* [11]

தலைவன் பொருளை ஈட்டி எவ்வித இடையூறும் இல்லாமல் வெற்றியுடன் இல்லம் திரும்ப வேண்டும் என்பதே தலைவியரின் விருப்பமாக இருந்தன. ஏனைய நான்கு திணைகளும் ஒவ்வொரு வகையில் காதலைக் குறித்தனவாயினும் பாலைத்திணை காதலோடு சிறந்த வாழ்க்கைக்குரிய முயற்சிகளையும் சித்திரித்துக் காட்டுகின்றன. சிறந்த வாழ்க்கைக்கான முயற்சிகளைப் பாலைத்திணைப் பாடல்களிலேயே நுட்பமாகச் சித்திரிக்க இயலும் குறிப்பாகவும் உணர்த்திக்காட்ட இயலும். பாலைத்திணையில் சங்கப் புலவர்கள் எண்ணிக்கையில் மிகுதியான பாடல்களை இயற்றியமைக்கு இதுவே அடிப்படைக் காரணமாகும். பாலைத்திணைப் பாடல்கள்,

*"வினையே ஆடவர்க்கு உயிரே; வாள்நுதல்*
*மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென*
*நமக்கு உரைத்தோரும் தாமே*
*அழாஅல் தோழி! அழுங்குவர் செலவே"* *(குறுந்.135)*

என்னும் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் குறுந்தொகைப் பாடலின் அடிக்கருத்தை நிறுவுவனவாகவே அமைந்திருக்கின்றன.

**பாலைத்திணை - பொதுத்திணை**

பாலைத் திணையைத் தொல்காப்பியர்,

*"நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்*
*படுதிரை வையம் பாத்திய பண்பே"* [12]

*"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு*
*முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"* [13]

என்பவற்றில் 'நடுவணது', 'நடுவுநிலைத்திணை' எனக் குறித்துள்ளார். இவ்விரண்டு சொற்றொடர்களும் 'பொதுத்திணை' என்னும் பொருளுடையன. தொல்காப்பியர் அன்பின் ஐந்திணைகளில் ஏனைய நான்கு திணைகளுக்கும் நிலம் இருப்பதால் நிலமற்ற பாலைத் திணையை அத்திணைகளுக்குப் பொது எனக் குறிப்பாக உணர்த்தப் 'பொதுத்திணை' என்னும் ஆட்சியைப் பயன்படுத்தியுள்ளார்.

**'நிலப்' பகுப்பில் பொதுமை**

*தென்னிந்தியாவில் சகாரா, தார் போன்ற பாலைவனங்கள் இல்லை; கடற்கரையை அடுத்த நெய்தல் நிலமும், ஆற்றையடுத்த மருதநிலமும் இயல்பாக அமைந்த வளமான நிலப்பகுதிகள் ஆகும். குறிஞ்சிக்கும் முல்லைக்கும் இடைப்பட்ட எல்லைகளில் (காட்டை அடுத்துள்ள மேட்டு நிலங்கள்) உள்ள நிலப்பகுதிகள் கோடைக்காலத்தில் நீரற்று வறண்டு பாலைவனம் போல மாறின. ஆயினும் மழைக்காலத்தில் இப்பகுதி முழுவதும் ஈரமாயின. சிறிய நீர்க்குட்டைகள் ஏற்பட்டன. மரங்களும் செடிகொடிகளும் ஏனையத் தாவரங்களும் வளரத்தொடங்கி அந்நிலத்தின் கொடுமையான இயல்புகள் மாறின; இந்த வறண்ட வழிகள் பயணத்திற்குரிய வழிகளாகப் பயன்படுத்தப்பட்டன. கடந்த காலத்தில் இத்தகைய கொடுமையான வழிகள் ஆந்திர மாநிலத்திலும் தமிழகத்தின் வடபகுதியிலும் இருந்தன எனப் பொதுவாகக் கருதலாம். இவ்வழிகள் தமிழ்நாட்டின் வணிகர்களால் வாணிக வழிகளாகப் பயன்படுத்தப்பட்டன.*

*"கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் தென்னக வணிக வழிகள் பற்றிக் கூறுவது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. தட்சிணப்பாரதத்தில் நெடுகச் செல்லும் வணிக வழிகள், பல சுரங்கங்கள், மிகச்சிறந்த பொருள்கள் கிடைக்கும் இடங்கள் ஆகியன பலராலும் அடிக்கடி காணப்பெறுமாறும் பயணம் செய்ய எளிமையாக இருக்குமாறும் இருந்தமையான் பிறர்க்கு மிகவும் மேம்பட்டவையாக இருந்தன"[14] என்பர்.*

*பாலைத்திணைப் பாடல்களில் இருவகையான 'சுரம்' குறிக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று மலைப்பகுதி நெடுகிலும் அமைந்த பாலை வழிகள் ஆகும். இவ்வழியைச் சங்கப் பாடல்கள் 'பன்மலை அருஞ்சுரம்' என்கின்றன. இதனை,*

***"நீர்நசைக்கு ஊக்கிய உயவல் யானை***
***வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்***
***நிலஞ்செல செல்லாக் கயந்தலைக் குழவி***
***சேரியம் பெண்டிர் நெஞ்சத்து எறிய***
***ஊரான் கன்றொடு புகுதும் நாடன்***
***பன்மலை அருஞ்சுரம் இறப்பின்" (நற்.171:1–6)***

*என்னும் நற்றிணைப் பாடலால் அறியலாம். இதனைத்தவிர,*

***"களிறுபிடி தழீஇப் பிறபுலம் படராது***
***பசிதின வருந்தும் பைதுஅறு குன்றத்து"***
***(ஐங்குறு., பாலை–செலவழுங்குவித்த பத்து, பா.எண்.305:1–2)***

*எனவும்,*

*"காய்கதிர் கடுகிய கவின்அழி பிறங்கல்*
*வேய்கண் உடைச் சிமைய*
*வாய்படு மருங்கின் மலைஇறந் தோரே"* *(நற்.399:16–18)*

எனவும் பாலைநில வழிகள் கூறப்பெற்றுள்ளன. இங்குக் கூறப்பட்டனவற்றுள் மற்றொன்று கான்வழிச் செல்லும் பாலை வழியாகும். இவ்வழி,

*"செங்கணைச் செறித்த வன்கண் ஆடவர்*
*ஆடுகொள் நெஞ்சமோடு அதர்பார்த்து அல்கும்*
*அத்தம் இறந்தனர் ஆயினும்"* *(நற்.329:7–9)*

எனவும்,

*"கல்லாக் கோவலர் கோலின் தோண்டிய*
*ஆன்நீர்ப் பத்தல் யானை வௌவும்*
*கல்லதர்க் கவலை செல்லின்"* *(ஐங்.304:1–3)*

எனவும்,

*"புறவணி கொண்ட பூநாறு கடத்திடை*
*இடிஎன இடிக்கும் கோல்தொடி மறவர்*
*வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது*
*அமரிடை உறுதர நீக்கிநீர்*
*எமரிடை உறுதர ஒளித்த காடே"* *(நற்.48:5–9)*

எனவும்,

*"உறைதுறந் திருந்த புறவின் தனாது*
*செங்கதிர்ச் செல்வன் தெறுதலின் மண்பக*
*உலகுமிக வருந்தி அயாவுறு காலைச்*
*சென்றனர் ஆயினும்"* *(நற்.164:1–4)*

எனவும் பல சான்றுகள் சங்க அகப்பாடல்களில் கிடைக்கின்றன. இளங்கோவடிகள் பாலைநிலத் தோற்றத்தை நானிலத்திற்குள் அடக்கி,

*"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து*
*நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்*
*பாலை என்பதோர் படிவங் கொள்ளும்"* [15]

என்பார். ஆதலால் பாலை என்பது முல்லை, குறிஞ்சி ஆகிய இவ்விரு நிலங்களுக்கும் பொது என்றும், இவ்வழிகள் பண்டைய நாளில் வணிகப் பெருவழிகளாகப் பயன்படுத்தப் பெற்றன என்றும் அறியமுடிகின்றது.

**பாலைத்திணையின் பொழுதுகளில் பொதுமை**

ஒவ்வொரு திணைக்கும் பெரும்பொழுதும் சிறுபொழுதும் வகுக்கப்பட்டமையால் பின்பனி, இளவேனில், முதுவேனில், நண்பகல் ஆகியன பாலைக்குரிய பொழுதுகளாகவும் பருவங்களாகவும் தொல்காப்பியரால் வகுத்துக் கூறப்பட்டுள்ளன.

*"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு*
*முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"* [16]

*"பின்பனி தானும் உரித்தென மொழிப"* [17]

என்பன தொல்காப்பியரின் நூற்பாக்கள் ஆகும். முதுவேனில் கடுங்கோடை நாட்களையும், நண்பகல் சூரியனின் வெம்மை மிகவும் கொதிப்புற்றுக் கொப்பளிக்கும் நேரத்தையும் குறிக்கும். தலைவனின் பிரிவு கூறும் பாலைப் பாடல்களில் இப்பருவத்தாலும் பொழுதாலும் ஏற்படும் துயரத்தின் மிகுதி பாலைத் திணையைப் பாடிய புலவர்களால் திறம்பட விளக்கப்பெற்றுள்ளன. பெருந்தேவனாரின் அகநானூற்றுப் பாலைப்பாடலில்,

*"வேனில் நீடிய வேய்உயர் நனந்தலை*
*நீஉழந்து எய்தும் செய்வினைப் பொருட்பிணி"* *(அகம்.51:7–8)*

எனவும் பாலைக்கலியில்,

*"ஏறுபெற்று உதிர்வனபோல் வரைபிளந்து இயங்குநர்*
*ஆறுகெட விலங்கிய அழல்அவிர் ஆர்இடை"* *(கலி.2:7–8)*

எனவும் வரும் பாடலடிகளால் இதனை அறியலாம். பாலைத்திணைப் பாடல்களில் இளவேனிற் பருவமே தலைவன் திரும்பி வருவதாகத் தலைவிக்கு உறுதிகூறித் திரும்பி வரும் பருவமாகும். இதனை, விற்றூற்று மூதெயினனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடல்,

*"மருதமர நிழல் எருதொடு வதியும்*
*காமர் வேனில்மன் இது*
*மாண்நலம் நுகரும் துணைஉடை யோர்க்கே"* *(அகம்.37:16–18)*

எனவும்,

நக்கீரர் இயற்றிய நற்றிணையின் பாலைப்பாடல்,

*"கோங்கம் குவிமுகை அவிழ, ஈங்கை*
*நல்தளிர் நயவர நுடங்கும்*
*முற்றா வேனில் முன்னி வந்தோரே"* *(நற்.86:7–9)*

எனவும் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம். பாலைக்கலியின் 26 – 29, 32 – 35 ஆகிய பாடல்களிலும் இச்செய்தி வலியுறுத்திக் கூறப்பெற்றுள்ளன. பாலைத்திணைப் பாடல்களில் பின்பனிக் காலம் தலைவி நீண்ட பிரிவின் காரணமாக மகிழ்ச்சியின்றி இருக்கும் காலமாகவும், பிரிந்துசென்ற தலைவன் திரும்பிவரும் காலமாகவும் கூறப்பெற்றுள்ளன. பரணரின் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் பின்பனிக் காலத்தில் தலைவனின் நீண்ட பிரிவில் தலைவி,

*"அரம்போழ் அவ்வளை தோள்நிலை நெகிழ*
*நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி"* *(அகம்.125:1–2)*

என மகிழ்ச்சி இன்றித் துயரப்படுவதாகக் காட்டப்படுகின்றாள். பரணரின் நற்றிணைப் பாடலிலும் தலைவி,

*"தேர்வண் விரர்அன் இருப்பை அன்னஎன்*
*தொல்கவின் தொலையினும் தொலைக"* *(நற்.350:4–5)*

என வருந்துவது கூறப்படுகின்றது. பெருங்குன்றூர்க்கிழார் இயற்றிய குறுந்தொகையின் பாலைத்திணைப் பாடலில் தலைவன் பின்பனிக் காலத்தில் திரும்பி வருவது,

*"பின்பனிக் கடைநாள் தண்பனி அற்சிரம்*
*வந்தன்று பெருவிரல் தேரே"* *(குறுந்.338:5–6)*

எனக் கூறப்பெற்றுள்ளது. மதுரை மருதன்இளநாகனாரின் அகநானூற்றுப் பாலைப்பாடலில்,

*"இளையர்பதிப் பெயரும் அருஞ்சுரம் இறந்தோர்*
*தைஇ நிறை தண்பெயல் கடைநாள்*
*... ... ... ... ... ... ... ....*
*ஒண்செய் கழுநீர் அன்னநின்*
*கண்பனி துடைமார் வந்தனர் விரைந்தே"* *(அகம்.269:13–15)*

எனப் பின்பனிக் காலத்தில் தலைவன் திரும்பிவந்த செய்தி கூறப்பெற்றுள்ளது.

இவற்றைத்தவிர ஏனையப் பருவங்களும், நாளின் கூறுகளான பொழுதுகளும் பாலைத்திணைப் பாடல்களில் கலந்துள்ளன. அனைத்துப் பருவங்களிலும் தலைவனின் பிரிவில் தலைவியின் துயரங்களைச் சங்கப்

புலவர்கள் சித்திரித்துக் காட்டியுள்ளனர். மழைக்காலம் தொடங்கியும் தலைவன் வாராமையால் தலைவி மிகுந்த துன்பத்தை அடைகின்றாள்.

தொல்கபிலன் இயற்றிய குறிஞ்சித்திணைப் பாடலில் தலைவன் பிரிவின் கண் தலைவி தோழிக்கு அவன் வரைவொடு வரவேண்டும் என்னும் தன் விருப்பத்தைப் பின்வருமாறு கூறுகின்றாள்.

*“எந்தையும் எதிர்ந்தனன் கொடையே அலர்வாய்*
*அம்பல் ஊரும் அவனொடு மொழியும்*
*சாய்இறைத் திரண்ட தோள்பா ராட்டி*
*யாயும் அவனே என்னும் யாமும்*
*‘வல்லே வருக வரைந்த நாள்’என*
*நல்லிறை மெல்விரல் கூப்பி*
*இல்லுறை கடவுட்கு ஓக்குதும் பலியே!” (அகம்.282:12–18)*

பறநாட்டுப் பெருங்கொற்றனாரின் பாலைத்திணைப் பாடலில் தோழி மேகம் காலிறங்கிப் பெய்யும் கார்காலம் இதுவாதலின் காதலன் வருவான் என உறுதிப்படத் தலைவியிடம் கூறுகின்றாள்.

*“......... ....... ....... வானத்து*
*வயங்குகதிர் மழுங்கப் பாஅய் பாம்பின்*
*பைபட இடிக்கும் கடுங்குரல் ஏற்றொடு*
*ஆலி அளிதுளி தலைஇக்*
*கால்வீழ்ந் தன்றுநின் கதுப்புறழ் புயலே!” (அகம்.323:9–13)*

மழைக்காலம் காதலர் பிரிவுக்குத் தூண்டுவதைவிடப் புணர்ச்சியைத் தூண்டுவதாக அமையும் எனச் சங்க அகப்பாடல்களில் விளக்கப்பெற்றுள்ளன. மதுரையாசிரியர் நல்லந்துவனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில்,

*“கதிர்மருங்கு அறியாது அஞ்சுவரப் பாஅய்*
*தளிமயங் கின்றே தண்குரல் எழிலி யாமே*
*கொய்அகை முல்லை காலொடு மயங்கி*
*மையிருங் கானம் நாறும் நறுநுதல்*
*பல்லிருங் கூந்தல் மெல்லியல் மடந்தை*
*நல்லெழில் ஆகம் சேர்ந்தனம் என்றும்*
*அளியரோ அளியர்தாமே அளிஇன்று*

*ஏதில் பொருட்பிணிப் போகிதம்*
*இன்துணைப் பிரியும் மடமை யோரே”* *(அகம்:43:7–15)*

எனக் கார்காலம் புணர்ச்சிக்குத் தூண்டுவது கூறப்பெற்றுள்ளது. இந்நிலை நொச்சிநியமங் கிழாரின் நற்றிணையின் பாலைத்திணைப் பாடலிலும் பின்வருமாறு கூறப்பெற்றுள்ளது.

*“சிறந்த அன்பினர் சாயலும் உரியர்*
*பிரிந்த நம்மினும் இரங்கி அரும்பொருள*
*முடியாது ஆயினும் வருவர்; அதன்தலை*
*இன்துணைப் பிரிந்தோர் நாடித்*
*தருவது போலும் இப்பெரு மழைக்குரலே?”* *(நற்.208:8–12)*

முல்லைத்திணைப் பாடல்களைப் போலவே பாலைத்திணைப் பாடல்களிலும் முல்லைத் திணைக்குரிய மழைக்காலமும் மாலைப்பொழுதும் ஒருசேரக் கூறப்பெற்றுள்ளன.

*“அன்பிலிர் அகறிர் ஆயின் என்பரம்*
*ஆகுவது அன்றுஇவள் அவலம் நாகத்து*
*அணங்குடை அருந்தலை உடலி வலனேர்பு*
*ஆர்கலி நல்லேறு திரிதரும்*
*கார்செய் மாலை வரூஉம் போழ்தே”* *(நற்.37:7–11)*

குளிர்காலத்தில் நீண்ட பிரிவில் தலைவியின் துயரங்கள் பலவாறு விவரிக்கப்பட்டுள்ளன. குறிஞ்சித் திணையில் போலவே அத்திணைக்குரிய குளிர்காலமும் நள்ளிரவுப் பொழுதும் பாலைத்திணைப் பாடல்களிலும் நிகழ்வதாகக் கூறப்பெற்றுள்ளன. ஓரில்பிச்சையார் இயற்றியுள்ள குறுந்தொகை பாலைத்திணைப் பாடலில்,

*“மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை*
*எக்கால் வருவது? என்றி*
*அக்கால் வருவர்எம் காத லோரே”* *(குறுந்.277:6–8)*

எனக் குளிர்காலமும் நள்ளிரவும் ஒருசேரக் கூறப்பெற்றுள்ளன. கருவூர்க் கதப் பிள்ளையின் குறுந்தொகையின் பாலைப்பாடலும் இவ்வாறே அமைந்துள்ளது.

*“பெயல் ஆனதே வானம் காதலர்*
*நனிசேய் நாட்டார்; நம்உன் னலரே!*
*யாங்குசெய் வாம்கொல்? தோழி, ஈங்கைய*

*வண்ணத் துய்ம்மலர் உதிர*
*முன்னர்த் தோன்றும் பனிக்கடு நாளே!"* *(குறுந்.380:3–7)*

இதேபோன்று பாலைத்திணைப் பாடல்களில் முன்பனிக்காலமும் குறிக்கப்பட்டுள்ளன. கழார்க்கீரன் எயிற்றியார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில்,

*"நல்காக் காதலர் நலனுஉண்டு துறந்த*
*பாழ்படு மேனி நோக்கி நோய்பொர*
*இணரிறுபு உடையும் நெஞ்சமொடு புணர்வுவேட்டு*
*எயிறுதீப் பிறப்பத் திருகி*
*நடுங்குதும் பிரியின்யாங் கடும்பனி உழந்தே"* *(அகம்.217:16–20)*

என முன்பனிக்காலம் குறிக்கப்பட்டுள்ளது. மருதத்திணைக்குரிய வைகறை, விடியல் ஆகிய பொழுதுகளும் பாலைத்திணையில் குறிக்கப்பெற்றுள்ளன. விற்றூற்று மூதெயினனார் இயற்றிய அகநானூற்றின் பாலைப்பாடலில்,

*"மறந்தவண் அமையார் ஆயினும் கறங்கிசைக்*
*கங்குல் ஓதைக் கலிமகிழ் உழவர்*
*பொங்கழி முகந்த தாவில் நுண்துகள்*
*மங்குல் வானின் மாதிரம் மறைப்ப*
*வைகுபுலர் விடியல் வைபெயர்ந் தாட்டித்"* *(அகம்.37:1–5)*

எனவும், குன்றியனார் இயற்றிய அகநானூற்றுப் பாடலில்,

*"வைகுபுலர் விடியல் மைபுலம் பரப்ப*
*கருநனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்"* *(அகம்.41:1–2)*

எனவும் **மருதத்திணையின் வைகறை, விடியல் பொழுதுகள் பாலைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன.** பாலைத்திணைப் பாடல்களில் மாலைக்காலம் கூறப்பெற்றுள்ளன. ஆலம்பேரி சாத்தனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில்,

*"குறுநடைப் புறவின் செங்காற் சேவல்*
*நெடுநிலை வியனகர் வீழ்துணைப் பயிரும்*
*புலம்பொடு வந்த புன்கண் மாலை"* *(அகம்.47:11–13)*

எனவும்,

அந்தியிளங்கீரனாரின் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில்,

*"ஐயறி வகற்றுங் கையறு படரோடு*
*டகிலிரு வானம் அம்மஞ்சீனப்*
*பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை"* *(அகம்.71:7–9)*

எனவும் மாலைக்காலம் குறிக்கப்பெற்றுள்ளது. ஆதலால் தமிழ் ஆண்டின் ஆறு பருவங்களும் ஒரு நாளின் எல்லாப் பொழுதுகளும் வந்து கலத்தல் பாலைத்திணைப் பாடல்களின் பொதுத்தன்மையாக உள்ளது.

**நானிலங்களும் பாலையும்**

ஏனைய நான்கு நிலங்களின் பாடல்கள் அவற்றுக்குரிய நிலங்களிலேயே வளர்ந்தனவாகும். அங்கு வாழும் மக்களின் பழக்கவழக்கங்களும் ஒழுகலாறுகளும் நில அடிப்படையில் உருவாக்கப்பட்டு வளர்ந்தவைகளாகும். பொதுவாக பாலைநிலம் ஒரு குடியிருப்புப் பகுதியன்று. அது ஒரு பெருவழியாகவே பயன்படுத்தப்பட்டது. ஆறலைக் கள்வரே அதனை இருப்பிடமாகக் கொண்டனர். பாலைநிலத்தில் வாழ்ந்த எயினரும் எயிற்றியரும் சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பெறுகின்றனர். தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப்படையில்,

*"உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்*
*வில்லுடை வைப்பின் வியன்காட்டு இயவின்*
*நீல்அரை இலவத்து அலங்குசினை பயந்த*
*பூளைஅம் பசுங்காய் புடைவிரிந் தன்ன*
*வரிப்புற அணிலொடு கருப்பை ஆடாது*
*யாற்றுஅறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்*
*வேற்றலை அன்ன வைநுதி நெடுந்நகர்*
*ஈத்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை*
*மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி*
*ஈன்பிணவு ஒழியப் போகி நோன்காழ்*
*இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்*
*உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி*
*இருநிலக் கரம்பைப் படுநீறு ஆடி*
*நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்*
*பார்வை யாத்த பறைநாள் விளவின்*
*நீழல் முன்றில் நிலஉரல் பெய்து,*
*குறுங்காழ் உலக்கை ஓச்சி நெடுங்கிணற்று*
*வல்ஊற்று உவரி தோண்டித் தொல்லை*

*முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி*
*வாராது அட்ட வாடுஊன் புழுக்கல்*
*வாடாத் தும்பை வயவர் பெருமகன்*
*ஓடாத் தானை ஒண்தொழிற் கழற்கால்*
*செவ்வரை நாடன் சென்னியம் எனினே*
*தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇநும்*
*பைதீர் கடும்பொடு பதம்மிகப் பெறுகுவீர்*
*மான்அடி பொறித்த மயங்குஅதர் மருங்கின்*
*வான்மடி பொழுதில் நீர்நசைஇக் குழிந்த*
*அகழ்சூழ் பயம்பின் அகத்துஒளித்து ஒடுங்கி*
*புகழா வானகப் பூவின் அன்ன*
*வளைமருப்பு ஏனம் வரவுபார்த் திருக்கும்*
*அரைநாள் வேட்டம் அழுங்கின் பகல்நாள்*
*பகுவாய் ஞமலியொடு பைம்புதல் எருக்கி*
*தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி*
*முள்அரைத் தாமரைப் புல்லிதழ் புரையும்*
*நெடுஞ்செவிக் குறுமுயல் போக்குஅற வளைஇ*
*கடுங்கண் கானவர் கடறு கூட்டுண்ணும்”* [18]

என எயினர், எயிற்றியரின் காட்டுவழி, குரம்பைக் குடியிருப்பு (குடிசை), புல்லரிசி எடுக்கும் தொழில், எயிற்றியரின் உணவும் விருந்தோம்பலும், பாலைநிலக் கானவர்களாகிய எயினரின் வேட்டைத் தொழில் ஆகியன விரிவாகவும் விளக்கமாகவும் கூறப்பெற்றுள்ளன. ஆதலால் பாலைத்திணைப் பாடல்கள் பாலைநில மக்களின் வாழ்க்கைப் படைப்பன்று; பாலைநில நாட்டுப்புறப் பாடல்களிலிருந்து விரிவுபடுத்தப்பட்டவையும் அல்ல. அவை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலத் தலைவர்களின் பிரிவு பற்றிய பாடல்களே ஆகும். பாலைப் பாடல்கள் இந்நான்கு நிலமக்களுக்கும் பொதுவாக உள்ளமையால் பாலைப் பாடல்களின் எண்ணிக்கையும் மிகுதி எனலாம்.

பாலைநிலத் தலைவன்,

*“மைவரை நாட”* *(ஐங்.301)*

*“விறுவரை நாட”* *(ஐங்.309)*

என விளிக்கப்படுகின்றான். ஆதலால் இப்பாடல்களின் தலைவன் குறிஞ்சி நிலத்தவன் என்பது புலனாகின்றது. குறுந்தொகையில் கருவூர் ஓதஞானி

இயற்றிய பாலைத்திணைப் பாடலில் குறிஞ்சி நிலத்தலைவி குறிக்கப் பெறுகின்றாள். அப்பாடல் வருமாறு:

*“மருந்தெனின் மருந்தே; வைப்பெனின் வைப்பே;*
*அரும்பிய சுணங்கின் அம்பகட் டிளமுலைப்*
*பெருந்தோள் நுணுகிய நுசுப்பிற*
*கல்கெழு கானவர் நல்குறு மகளே”* *(குறுந்.71)*

ஐங்குறுநூற்றில் ஓதலாந்தையாரின் பாலைத்திணைப் பாடலில் நெய்தல் நிலத் தலைவன் தன் தலைவியிடமிருந்து பிரிய விரும்புகின்றான்.

*“அரும்பொருள் செய்வினை தப்பற்கு முரித்தே*
*பெருந்தோ ளரிவை தகைத்தற்கு முரியள்*
*செல்லா யாயினோ நன்றே*
*மெல்லம் புலம்ப விவளழப் பிரிந்தே”* *(ஐங்.302)*

‘மெல்லம் புலம்பன்’ நெய்தல்நிலத் தலைவன் ஆவான். முல்லை, மருதத் திணைகளின் தலைவன் தலைவியரின் பிரிவுத்துயரங்களும் பாலைத்திணைப் பாடல்களில் காணப்படுகின்றன. இதற்குச் சான்றாக மதுரையாசிரியர் நல்லந்துவனார் இயற்றிய அகநானூற்றின்,

*“நிலனும் விசும்பும் நீரியைந் தொன்றிக்*
*குறுநீர் கன்னல் எண்ணுநர் அல்லது*
*கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்த்*
*தளிமயங் கின்றே தண்குரல்எழிலி; யாமே*
*கொய்யகை முல்லை காலொடு மயங்கி*
*மையிருங் கான நாறு நறுநுதற்*
*பல்லிருங் கூந்தல் மெல்லியல் மடந்தை*
*நல்லெழில் ஆகஞ் சேர்ந்தனம் என்றும்”* *(அகம்.43:5–12)*

என்னும் பாடலடிகள் அமைந்துள்ளன. இச்சான்றுகள் பாலைத்திணைப் பாடல்கள் ஏனைய நான்கு நிலப் பண்புகளையும் பெற்றிருப்பதை உறுதி செய்கின்றன.

பாலைத்திணைப் பாடல்களில் இப் பின்புலங்களில் தலைவன், தலைவியர் மிகுதியாகக் குறிப்பிடப்படுகின்றனர். அவர்களது நிலப்பெயர்களால் குறிப்பாகச் சுட்டப்பெறுகின்றனர். காதலர்கள் எந்த நிலங்களுக்கு உரியவர்களோ, அந்த நிலங்களின் அடிப்படையில் வழங்கும் அவர்களது பெயர்களைப் பாடல்கள் விவரமாகக் குறிப்பிட்ட போதும் அவற்றைத் தனியாகப் பாலைத்திணைப்

பாடல்கள் எனக் கூறமுடியாது. அவை ஏனைய நான்கு திணைகளோடு கலந்தே இருக்கும். உண்மையில் பாலைத்திணைப் பாடல்கள் ஏனைய நான்கு திணைகளின் ஒரு பகுதியாகவே இருக்கவேண்டும்; இருந்திருக்க வேண்டும். சங்கப் புலவர்கள் பாலைப் பாடல்களை ஏனைய திணைப் பாடல்களிலிருந்து பிரித்துக்காட்ட ஓர் உத்தியைப் பயன்படுத்தினர். அவர்கள் தலைவனை **அந்நிலங்களுக்குரிய சிறப்புச் சொற்களால்** குறித்தனர். அதுவே நிலையான திணை வழக்காயிற்று.

| | |
|---|---|
| *“சுரன்இறந் தோரே”* | *(குறுந்.215, அகம்.391, நற்.274)* |
| *“காடிறந் தோரே”* | *(அகம்.395, நற்.14, குறுந்.16)* |
| *“மலைஇறந் தோரே”* | *(அகம்.155, நற்.18)* |
| *“பிரிந்திசி னோரே”* | *(நற்.241)* |

இவ்வாறே அவர்கள் தலைவியைக் குறிக்கப் பின்வரும் தொடர்களைப் பரவலாகப் பயன்படுத்தினர்.

| | |
|---|---|
| *“நோய் நொந்து உறைவி”* | *(குறுந்.192)* |
| *“கலிழ்வோள் எய்தி”* | *(அகம்.47)* |

பாலைத்திணையைப் பாடிய புலவர்கள் சிலவிடங்களில் சிறப்புப் பெயர்களையும் பயன்படுத்தித் தலைவன் தலைவியரைக் குறித்துள்ளனர்.

தலைவனை,

| | |
|---|---|
| *“விடலை”* | *(ஐங்.304, குறுந்.15)* |
| *“தோன்றல்”* | *(ஐங்.304)* |
| *“குரிசில்”* | *(ஐங்.306)* |
| *“காளை”* | *(அகம்.397)* |

எனவும், தலைவியை

| | |
|---|---|
| *“ஆயிழை”* | *(நற்.308)* |
| *“மாஅயோளே”* | *(நற்.362)* |

எனவும் குறித்துள்ளனர். எனவே பாலையின் காதலர்களாகிய தலைவன் தலைவியரை எந்நிலத்திற்கும் உரியவர்களாகக் கருதும் வாய்ப்பு உள்ளது. பாடல்களில் அவர்கள் செல்லும் வழி கொடுமையான பாலை வழி என்பதை மட்டும் புலவர்கள் சிறப்பாகச் சுட்டியுள்ளனர். பாலை ஒழிந்த ஏனைய திணைகளில் நிலம், பருவம், பொழுது மற்றும் பொருள்கள் குறித்த வகையில் காட்டப்பெற்றுப் பின்னர்த் தலைவனும் தலைவியும் அத்தகைய நிலத்திற்கு

உரியவர் எனக் கூறப்பெறுகின்றனர். ஆயினும் பாலைப் பாடல்களில் நிலத்தையும் பொழுதையும் விளக்கிய பின்னரே தலைவன் அத்தகைய பாலை நிலத்தின் வறண்ட வழியில் சென்றவனாகக் கூறப்பெறுகின்றான். ஏனைய திணைகளின் பாடல்கள் **நிலத்தைச் சார்ந்து வாழ்ந்த மக்களின் வாழ்க்கையை விளக்குகின்றன. பாலைப் பாடல்கள் தலைவன் பொருள்தேடிச் சென்ற பாலைவழி குறித்த வாழ்க்கையைச் சித்திரிக்கின்றன.** பாலைத்திணைக்கு உரை விளக்கம் எழுதிய நச்சினார்க்கியரும், "ஏனைய போல ஒருபாற் படாது நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறி வழக்கம் செய்து வருதல் பற்றிப் பாலைக்கு 'நடுவணது' என்னும் பெயர்" [19] எனக் கூறுவது இக்கருத்தினதேயாகும்.

**பாலைத்திணை களவுக்கும் கற்புக்கும் பொது**

தொல்காப்பியர் பொருள்வயிற் பிரிவை களவுக்கும் கற்புக்கும் பொதுவாக உரியது என்பதை,

***"வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும்***
***ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக***
***வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை"*** [20]

என்றார். களவுக் காலத்தில் தலைவன் தலைவியைப் பிரிந்த நிகழ்வுகளைக் கூறும் பாடல்களும் பாலைத் திணையில் காணப்படுகின்றன (நற்.7, குறுந்.209, 201, 266, அகம்.187, 201). நல்வெள்ளியார் இயற்றிய நற்றிணையின் பாலைப் பாடலில் களவுக் காலத்தில் தலைவன் பொருள்வயிற் பிரிய ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி,

***"தண்ணறுஞ் சிலம்பில் துஞ்சுஞ்***
***சிறியிலைச் சந்தின வாடுபெருங் காட்டே"         (நற்.7:7–8)***

என ஆறுதல் கூறுகின்றாள். களவுக் காலத்தில் தலைவன் தலைவியைப் பொருள்வயிற் பிரிவில் பிரிந்தான். அப்போது தலைவி ஆற்றியிருந்தாள். அத்தலைவி தோழிக்கு,

***"முள்இல் அம்பணை மூங்கிலில் தூங்கும்***
***கழைநிவந்து ஓங்கிய சோலை***
***மலைகெழு நாடனை வரும்என் றோளே!"         (குறுந்.201:5–7)***

எனக் கூறுகின்றாள். பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய குறுந்தொகையின் பாலைப்பாடலில் பொருள்முற்றித் திரும்பும் தலைவன் தோழிக்குக் கூறுவானாய்த் தலைவிக்கு,

*“சுரந்தலைப் பட்ட நெல்லிஅம் பசுங்காய்*
*மறப்புலிக் குருளை கோள்இடம் சுரக்கும்*
*இறப்பருங் குன்றம் இறந்த யாமே”* *(குறுந்.209:1–3)*

எனக் கூறுகின்றான். நக்கீரர் இயற்றிய குறுந்தொகையின் பாலைப்பாடலில் தலைவன் தலைவியை மணந்துகொள்ளாமல் பிரிந்தபோது,

*“நமக்குஒன்று உரையார் ஆயினும் தமக்குஒன்று*
*இன்னா இரவின் இன்துணை ஆகிய*
*படப்பை வேங்கைக்கு மறந்தனர் கொல்லோ*
*மறப்புஅரும் பணைத்தோள் மரீஇத்*
*துறத்தல் வல்லியோர் புல்வாய்த் தூதே?”* *(குறுந்.266)*

என்று தோழிக்குத் தலைவி கூறுகின்றாள். மாமூலனார் இயற்றிய அகநானூற்றின் குறுந்தொகைப் பாடலில் தலைவன் பிரிவில் களவுக்காலத்தில் ஆற்றாளாகிய தலைவிக்குத் தோழி.

*“இருள்துணிந் தன்ன குவவுமயிர்க் குருளைத்*
*தோன்முலைப் பிணவொடு திளைக்கும்*
*வேனில் நீடிய சுரன்இறந் தோரே?”* *(அகம்.201:17–19)*

எனக் கூறுகின்றாள். கற்புக் காலத்தில் தலைவன் தலைவியைப் பிரியும் பொருள்வயிற் பிரிவு குறித்த பாடல்களும் அமைந்துள்ளன. இவ்வாறு பாலைத்திணைப் பாடல்கள் களவுக்கும் கற்புக்கும் பொதுவாக உள்ளன. இந்த உண்மையைக் கருத்தில் கொண்டே தொல்காப்பியர் பிரிவுகளின் வகைகளின் விளக்கத்தை களவியல் மற்றும் கற்பியல்களில் கூறாமல் இரண்டிற்கும் பொதுவான அகத்திணையியலில் கூறியுள்ளார். இதனை,

*“ஓதல் பகையே தூதிவை பிரிவே”* [21]

*“அவற்றுள்*
*ஓதலுந் தூதும் உயர்ந்தோர் மேன”* [22]

*“தானே சேறலுந் தன்னொடு சிவணி*
*ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே”* [23]

*“மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய*
*முல்லை முதலாச் சொல்லிய முறையாற்*
*பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்*
*இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே”* [24]

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கு திணைகளோடும் மேலே எடுத்துக்காட்டிய காரணங்களின் அடிப்படையில் பாலைத்திணை உறவு உடையதாதலின் 'பொதுத்திணை' ஆயிற்று.

பாலைத்திணை குறித்துக் கூறும் தொல்காப்பியர் அத்திணைக்குள் பல்வேறு கூறுகள் கலந்திருப்பினும் பாலைப் பாடல்கள் அடிப்படை மரபுகளுக்கு மாறாகப் புனையப்படுதல் கூடாது என்பதற்கான விதியை வகுத்துக் காட்டியுள்ளார்.

*"மரபுநிலை திரியா மாட்சிய ஆகி*
*விரவும் பொருளும் விரவும் என்ப"* [25]

என்பது அந்நூற்பாவாகும். பாலைக்குக் கூறிய பாசறைப் புலம்பற் கண்ணும், தேர்ப்பாகனுக்குக் கூறுதற் கண்ணும் முல்லைக்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் விரவி வரும்; வேறுவகையில் கூறுவதாயின் பாலை பொதுத் திணையாதலின் பிற திணைகள் சார்ந்த முதல் கருப்பொருட்கள் கலைந்துவரும் என்பதாகும்.

**பாலைத்திணைப் பாடல்களின் அமைப்பும் பாடுபொருளும்**

I. **பொருள்வயிற் பிரிவில் மாந்தர்கள்**

பாலைத்திணைப் பாடல்களில் பொருள்வயிற் பிரிவில் தலைவன், தலைவி, தோழி ஆகிய மூன்று மாந்தர்கள் மட்டுமே பங்கு பெறுகின்றனர். தலைவன் கூற்றில் 106 பாடல்களும், தலைவி கூற்றில் 153 பாடல்களும், தோழி கூற்றில் 162 பாடல்களும் இப்பொருண்மையில் அமைந்துள்ளன. கலித்தொகையில் இப்பொருண்மையில் ஒரேயொரு பாடல் மட்டும் பாணன் கூற்றாக அமைந்துள்ளது.

***"தணியாநோய் உழந்தானாத் தகையவள் தகைபெற***
***அணிகிளர் நெடுந்திண்டேர் அயர்மதி, பணிபுநின்***
***காமர் கழலடி சேரா,***
***நாமஞ்சால் தெவ்வரின் நடுங்கினள் பெரிதே" (கலி.30:17–20)***

இப்பாட்டில் பாணன் தலைவனின் பாசறைக்கு ஒரு செய்தியோடு தலைவியின் சார்பாகச் செல்கின்றான். அவன், தலைவன் பரத்தையரோடு கொண்டிருந்த தொடர்பினைக் குறிக்கின்றான். பாலைப் பாடல்களில் இது வழக்கத்திற்கு மாறான செய்தியாகும். பாலைப் பாடல்களில் தலைவனின் கூற்றைவிட தலைவியின் கூற்றும் தோழியின் கூற்றுமே எண்ணிக்கையில் மிகுதி. தலைவனின்

*பிரிவை விடவும், தலைவியின் துயரமும் தோழியின் ஆற்றுதலுமே பாலைத்திணைப் பாடல்களில் நுட்பமாக விளக்கப்படுகின்றன.*

**II. உடன்போக்கில் மாந்தர்கள்**

*பாலைத் திணையின் முக்கிய உட்பிரிவான உடன்போக்கில் தலைவன், தலைவி, தோழி, கண்டோர், தாயர் ஆகிய ஐந்து மாந்தர்கள் பங்கு பெறுகின்றனர். இவ்வகையில் உடன்போக்கில் தலைவன் கூற்றில் 14 பாடல்களும், தலைவி கூற்றில் 7 பாடல்களும், தோழி கூற்றில் 14 பாடல்களும், கண்டோர் கூற்றில் 2 பாடல்களும், தாயர் கூற்றில் 59 பாடல்களும் உள்ளன. மகளின் உடன்போக்கில் ஆழ்ந்த பெருந்துன்பம் கொள்வதால் தாய்க்கு இப்பகுதியில் சிறப்பிடம் தரப்பெற்றுள்ளது.*

**III. தலைவனின் பொருள்வயிற் பிரிவில் செலவழுங்குவித்தல்**

*தலைவன் பொருள் ஈட்டுவதற்காகத் தலைவியைப் பிரிந்து வேற்றுநாட்டிற்குச் செல்ல விரும்புகின்றான். தலைவனின் இச்செயலை அறியும் தலைவியின் உள்ளம் மிகவும் வருந்தித் துன்பமடைகின்றது. தலைவியின் துயரத்தைக் கண்ட தலைவன் அவளைப் பிரிந்துசெல்லத் தயங்குகின்றான். இந்நிலையில் அவன் தன் உள்ளத்தைத் தானே தேற்றிக்கொள்கின்றான். தன் நெஞ்சிற்குத் தலைவியைப் பிரியக்கூடாதென அறிவுறுத்திக் கொள்கின்றான். இதனால் தடுமாறும் தலைவனைச் சூழலைப் பயன்படுத்தித் தோழி மென்மையும் நற்பண்பும் கொண்ட தலைவியைப் பிரிந்து கொடிய பாலைவழியில் அவன் செல்லக்கூடாதென இடையிட்டுத் தலைவனைத் தடுக்கின்றாள். இவை (அ) தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்குவித்தல் (ஆ) தோழி தலைவனைச் செலவழுங்குவித்தல் எனப்படுகின்றன.*

**(அ) தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்குவித்தல்**

*தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்குவிப்பதாக நற்றிணையில் 3 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும், அகநானூற்றில் 3 பாடல்களும் (நற்.3, 16, 52, குறுந்.63, 71, 151, அகம்.3, 5, 43) அமைந்துள்ளன.*

*நற்றிணையில் இளங்கீரனார் இயற்றிய பாலைப் பாடலில் பொருள்வயிற் பிரிவில் தலைவன் தன் நெஞ்சிற்கு,*

***"யுள்ளினென் அல்லெனோ யானே, யுள்ளிய***
***வினைமுடித் தன்ன இனியோள்***
***மனைமாண் சுடரொடு படர்பொழ தெனவே?" (நற்.3:7–9)***

எனக் கூறுகின்றான். சிறைக்குடி ஆந்தையார் இயற்றிய நற்றிணையின் பாலைப் பாடலில் பொருள்வயிற் பிரிவில் தலைவன்,

*"புணரின் புணராது பொருளே; பொருள்வயிற்*
*பிரியில் புணராது புணர்வே; யாயிடைச்*
*சேர்வினுஞ் செல்லா யாயினு நல்லதற்*
*குரியை வாழியென் நெஞ்சே" (நற்.16:1–4)*

என்கின்றான். உகாய்க்குடிக் கிழார் இயற்றிய குறுந்தொகையின் பாலைப் பாடலில் பொருள்வயிற் பிரிவில் தலைவன் தலைவியை நினைத்து,

*"அம்மா அரிவையும் வருமோ?*
*எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே!" (குறுந்.63:3–4)*

எனத் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். தூங்கலோரி இயற்றிய குறுந்தொகையின் பாலைப் பாடலில் பொருள்வயிற் பிரிவில் தலைவன் தன் நெஞ்சிற்கு,

*"மருப்பருங் காதலி ஒழிய*
*இறப்பல் என்பது ஈண்டு இளமைக்கு முடிவே" (குறுந்.151:5–6)*

எனக் கூறுகின்றான். பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய குறுந்தொகையின் பாலைப் பாடலில் பொருள்வயிற் பிரிவில் தலைவன் தன் நெஞ்சிற்கு,

*"றேதில் பொருட்பிணிப் போகித்தம்*
*இன்றுணைப் பிரியும் மடமை யோரே" (அகம்.43:14–15)*

என்கின்றான்.

பத்துப்பாட்டினுள் பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார், கரிகாற் பெருவளத்தானைப் பாடிய பட்டினப்பாலையில்,

*"..... .... தெவ்வர்க்கு ஒக்கிய*
*வேலினும் வெய்ய கானம், அவன்*
*கோலினும் தண்ணிய தடமென் தோளே" (பட்டினப்.300–302)*

எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

**(ஆ) தோழி தலைவனைச் செலவழுங்குவித்தல்**

தோழி தலைவனைச் செலவழுங்குவிப்பதாக நற்றிணையில் 3 பாடல்களும், அகநானூற்றில் 3 பாடல்களும், பாலைக்கலியில் 3 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 10 பாடல்களும் (நற்.26, 43, 71, அகம்.137, 81, 108, கலி.3,4,5. ஐங்.301–310)

அமைந்துள்ளன. இதற்குச் சான்றுகளாகச் சில பாடல்களைச் சுட்டிக்காட்டி விளக்கலாம்.

சாத்தந்தையார் இயற்றிய நற்றிணையின் பாலைப்பாடலில் பொருள்வயிற் பிரியும் தலைவன் குறித்த பருவத்தில் வரவேண்டி, 'நீ பிரிகின்றாய் எனக்கேட்டதும் ஆற்றாமையால் வருந்தும் தலைவியைக் கண்டு நானும் ஆற்றலேன்' என்பதை,

*"நோகோ யானே நெகிழ்ந்தன வளையே"* *(நற்.26:1)*

எனக் கூறித் தோழி தலைவனைச் செலவழுங்குமாறு வற்புறுத்துகின்றாள். எயினந்தையார் இயற்றிய நற்றிணையின் பாலைப் பாடலில் தலைவனின் பொருட்பிரிவை அறிந்த தோழி, 'நீவிர் பிரிவது நுமக்கு மகிழ்ச்சியைத் தருவதாக உள்ளது. நீ பிரிதலைக் கேட்டதும் இவளுக்கு (தலைவி) பேரழிவு உற்றது. நீ ஏற்றதைச் செய்வாயாக' என்கின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

*"வெம்மை யாரிடை இறத்தல் நுமக்கே*
*மெய்ம்மலி யுவகை யாகின்ற இவட்கே*
*அஞ்ச லென்ற இறைகை விட்டெனா"* *(நற்.43:6-8)*

உறையூர் முதுகூத்தனார் அகநானூற்றில் இயற்றிய பாலைப் பாடலில் தலைவன் பொருள்வயிற் பிரிவான் எனக் கருதி ஆற்றாமையால் வேறுபட்ட தலைவியைத் தோழி பின்வருமாறு ஆற்றுவிக்கின்றாள்.

*"பெரும்பாழ் கொண்டன்று நுதலே; தோளும்*
*தோளா முத்தின் தெண்கடல் பொருநன்*
*திண்தேர்ச் செழியன் பொருப்பின் கவாஅன்*
*நல்லெழில் நெடுவேய் புரையும்*
*தொல்கவின் தொலைந்தன; நோகோ யானே"* *(அகம்.137:12-16)*

ஆலம்பேரி சாத்தனார் இயற்றிய அகநானூற்றின் பாலைப்பாடலில் தலைவன் தலைவியைப் பொருள்வயிற் பிரியக் கருதினான். அதனைத் தோழி வாயிலாக அறிந்த தலைவி அழுது புலம்பினாள். அதைக் கண்ட தோழி தலைவனிடம் சென்று தலைவியின் நிலையை,

*"ஒளிறுவேல் அழுவம் களிறுபடக் கடக்கும்*
*மாவண் கடலன் விளங்கில் அன்னஎம்*
*மையெழில் உண்கண் கலுழ*
*ஐய! சேறீரோ அகன்றுசெய் பொருட்கே?"* *(அகம்.81:12-15)*

என எடுத்துக்கூறித் தலைவனைச் செலவழுங்குவிக்கின்றாள்.

ஓதலாந்தையாரின் பாலைக்கலிப் பாடலில் தலைவன் தோழியிடம் பொருள்வயிற் பிரிவேன் என்கின்றான். தலைவியின் உள்ளக் குறிப்பை அறிந்து, அவளது ஆற்றாமைத் தோழி தலைவனுக்கு உணர்த்திச் செலவினைத் தவிர்ப்பாயாக என்கின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

*“கழிபெரு நல்கல் ஒன்றுடைத்துஎன என்தோழி*
*அழிவொடு கலங்கிய எவ்வத்தள்; ஒருநாள்நீர்*
*பொழுதிடைப் படநீப்பின் வாழ்வாளோ?*
*ஒழிகினிப் பெருமநின் பொருட்பிணிச் செலவே” (கலி.4:21–25)*

தலைவியின் ஆற்றாமையைத் தோழி எடுத்துரைத்தும் தலைவன் பொருட்பிரிவிலேயே இருந்தான். இதனை அறிந்த தோழி நீர் செல்லும் கானமே நின் செலவினைத் தடுக்கும் என்றுரைத்துத் தலைவனது செலவினைத் தடுத்து நிறுத்துகின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

*“யாம்நிற் கூறவு மெமகொள்ளா யாயினை;*
*யானா திவள்போ லருள்வந் தவைகாட்டி*
*மேனின்று மெய்கூறுங் கேளிர்போனீ செல்லுங்*
*கானந் தகைப்ப செலவு” (கலி.3:19–22)*

தலைவன் பொருள்வயிற் பிரிவேன் எனக் கூறக்கேட்ட தோழி, நீர் ஈட்டும் பொருளைக் காட்டிலும் நாங்கள் உமக்குச் சிறந்துள்ளோம் என நினைத்தால் நும் செலவை நாளும் புள்ளும் விலங்கும் நீக்கும்; நீ பிரிய இவள் உயிர் வாழாள்; பிரிந்த அன்றே இறந்துபடுவாள் எனக் கூறித் தலைவனது செலவினைத் தவிர்க்கின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

*“பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்*
*டெந்நாளோ நெடுந்தகாய்நீ செல்வ*
*தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே” (கலி.5:17–19)*

ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றின் ‘செலவழுங்குவித்த பத்து’ பகுதியில் பத்துப் பாடல்கள் தலைவன் பொருள்வயின் தலைவியைப் பிரிந்து செல்ல முயலும்போது தோழி அத்தலைவனின் செலவினைத் தவிர்க்குமாறு வேண்டுவதாக அமைந்துள்ளன.

பொருள்தேடப் பிரிய ஒருப்பட்ட தலைவனிடம் தலைவி தானும் உடன்வருவதாகக் கூறினாள். சுரத்தின் கொடுமையைக் கூறித் தலைவன் தலைவியின் வேண்டுகோளை மறுத்தான். அதற்கு விடையாகத் தோழி,

*"புதுக் கலந்தன்ன கனிய வாலம்*
*போகிறதனைத் தடுக்கும் வேனில ருஞ்சுரம்*
*தண்ணி வினிய வாக*
*மெம்மொடுஞ் சென்மோ விடலை நீயே"* *(ஐங்குறு.303)*

என்கின்றாள். தலைவி தன்னையும் உடன்கொண்டு செல்லுமாறு தலைவனை வேண்டியபோது, சுரத்தருமை கூறித் தலைவன் மறுத்துத் தான் மட்டும் தனியே செல்வதாகக் கூறினான். அது கேட்ட தோழி,

*"களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது*
*பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்*
*சுடர்த்தொடிக் குறுமகள் இனைய*
*எனைப்பயம் செய்யுமோ விடலைநின் செலவே?"* *(ஐங்.305)*

எனக் கூறித் தலைவனது செலவைத் தவிர்க்கின்றாள். மற்றொரு பாடலில் பொருள்வயிற் பிரிய விரும்பிய தலைவனிடம் இல்லறத்தின் இனிமையைக் கூறித் தோழி அவனது பொருட்பிரிவைத் தடுக்கின்றாள். இது குறித்த பாடல் வருமாறு:

*"வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து*
*செலவ யர்ந்தனையா னீயே; நன்று*
*நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்*
*முறுவல் காண்டலி னினிதோ*
*விறுவரை நாட யிறந்துசெய் பொருளே?"* *(ஐங்.309)*

இவ்வாறு பாலைத்திணைப் பாடல்கள் அமைவதால் தலைவன் பொருள் ஈட்டலைக் கருதாமலும், வீட்டிலேயே தொழில் செய்யாமலும் மனைவியோடு தங்கியிருக்க வேண்டும் என்பது பொருளில்லை. தொல்காப்பியர் செலவழுங்குவித்தல் நோக்கத்தைத் தலைவன் தலைவிக்கு ஆறுதல் கூறித் தேற்றவும், தான் பொருள் தேடச் சென்றாக வேண்டும் என்ற கடமையைத் தலைவியின் உள்ளத்தில் அவள் ஏற்குமாறு பதியவைக்கவுமே அவன் பிரிவைச் சில காலம் தள்ளி வைக்கின்றான் எனக் கூறியுள்ளார்.

*"செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே*
*வன்புறை குறித்த தவிர்ச்சி ஆகும்"* [26]

பொருள்வயிற் பிரிவில் தலைவனது கூற்றில் காதலுக்கும் கடமைக்கும் இடையிலான போராட்டமே காணப்படுகின்றது. தலைவனின் உள்ளத்தின் ஒரு பக்கம் தலைவியின் மென்மை, இளமை, நற்பண்பு, அழகு ஆகியன

தாக்குகின்றன. மறுபக்கம் அவனது உள்ளத்தில் அவன் தொடர்ந்து செல்ல வேண்டிய காட்டின் வெம்மை, இடையூறுகள் முதலான அச்சங்கள் தாக்குகின்றன. தலைவியிடம் அவன் கொண்ட எல்லையற்ற காதல் அவனைத் தடுத்தபோதும் உலகியல் வாழ்க்கையை நகர்த்த இன்றியமையாதனவாகிய பொருளைத் தேடும் கடமை அவனை மறுவழியில் தள்ளுகின்றது. இதனால் தலைவனது உள்ளம் ஊசலைப் போல ஆடுகின்றது.

**தலைவன் தலைவியை விட்டுப் பிரிதல்**

தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் முடிவைத் தலைவிக்கும் தோழிக்கும் கூறும் வகையில் தலைவன் கூற்றாக நாற்பது பாடல்கள் உள்ளன. அவன் தலைவியின் கூந்தலை மெல்லக் கோதியவாறு அவளிடம் தன் கருத்தைப் பின்வருமாறு கூறுகின்றான். அகநானூற்றில் அமைந்த இப்பாடலைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ளார். இதனைத் தலைவி,

***"அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்***
***பிறன்கடைச் செல்லாஅச் செல்வமும் இரண்டும்***
***பொருளின் ஆகும் புனையிழை என்றுநம்***
***இருளேர் ஐம்பால் நீவி யோரே" (அகம்.155:1–4)***

எனத் தோழியிடம் கூறுகின்றாள். மற்றொரு பாலைத் தலைவன் தலைவியின் கைவளையல்களைச் சீர்செய்து கொண்டே,

***"செய்வினை புரிந்த நெஞ்சினர் நறுநுதல்***
***மையீர் ஓதி அரும்படர் உழத்தல்***
***சில்நாள் தாங்கல் வேண்டும் என்றுநின்***
***நல்மாண் எல்வளை திருத்தின ராயின்***
***வருவர் வாழி தோழி பலபுரி" (அகம்.173:4–8)***

என்று தலைவன் செயலைச் சுட்டித் தோழி தலைவியிடம் கூறுகின்றாள். இப்பாடலை முள்ளியூர்ப்பூதியார் இயற்றியுள்ளார். இப்பாடலில் தலைவன் தலைவியைப் பிரியும் செயலை மென்மையாகச் சுட்டிக்காட்டுகின்றாள். தலைவி, தலைவனின் பிரிவுக்குத் தான் உடன்படாமையைக் கூறிப் பாலைவழியின் இடையூறுகளை விளக்குகின்றாள். இவ்வகையில் நற்றிணையில் 2 பாடல்களும் குறுந்தொகையில் 3 பாடல்களும் அகநானூற்றில் 3 பாடல்களும் அமைந்துள்ளன (நற்.73, 76, குறுந்.20, 174, 207, அகம்.119, 147, 157). மூலங்கீரனார் இயற்றிய நற்றிணையின் பாலைப்பாடலில் தலைவி தலைவனின் பிரிவுக்கு உடன்படாமல் அவன் செல்ல இருக்கும் பாலைவழியின் இடையூறுகளை,

*“வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன*
*மாணா விரல வல்வாய்ப் பேஎய்*
*மல்லன் மூதூர் மலர்ப்பலி உணீஇய*
*மன்றம் போழும் புண்கண் மாலைத்*
*தம்மொடும் அஞ்சும் நம்மிவண் ஒழியச்*
*செல்ப என்ப தாமே செவ்வரி”* *(நற்.73:1–6)*

எனக் கூறுகின்றாள். கோப்பெருஞ்சோழன் இயற்றிய குறுந்தொகையில் அமைந்த பாலைப்பாடலில் பொருள்வயிற் பிரிவில் தலைவனுக்கு உடன்படாத தலைவி தோழியிடம்,

*“அருளும் அன்பும் நீக்கி துணை துறந்து*
*பொருள்வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்*
*உரவோர் உரவோர் ஆக*
*மடவம் ஆக மடந்தை நாமே!”* *(குறுந்.20)*

என்கின்றாள். வெண்பூதியார் இயற்றிய குறுந்தொகைப் பாலைப்பாடலில் தலைவனின் பொருள்வயிற் பிரிவுக்கு உடன்படாத தலைவி அவன் செல்லும் பாலை வழியின் ஏதங்களைத் தோழியிடம் கூறுகிறாள்;

*“பெயன்மழை துறந்த புலம்புஉறு கடத்துக்*
*கவைமுட்க் கள்ளிக் காய்விடு கடுநொடி*
*துதைமென் தூவித் துணைப்புறவு இரிக்கும்*
*அத்தம் அரிய என்னார் நத்துறந்து”* *(குறுந்.174:1–4)*

குடவாயிற் கீரத்தனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் தலைவனின் பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைவி, தலைவன் செல்லும் பாலை வழியின் ஏதங்களை,

*“ஆறுசெல் மாக்கள் அறுத்த பிரண்டை*
*ஏறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப*
*நெறியயல் திரங்கும் அத்தம் வெறிகொள”* *(அகம்.119:5–7)*

எனக் கூறுகின்றாள். இவ்வாறு ஔவையார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலிலும் தலைவி தோழியிடம் தலைவன் செல்லும் பாலை வழியின் ஏதங்களை,

*“ஓங்குமலைச் சிலம்பில் பிடவுடன் மலர்ந்த*
*வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன*
*ஊன்பொதி அவிழாக் கோட்டுகிர்க் குருளை*
*மூன்றுடன் ஈன்ற முடங்கர் நிழத்த*

*துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனர்*
*பொறிகிளர் உழுவைப் போழ்வாய் ஏற்றை*
*அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்*
*நெறிபடு கவலை நிரம்பா நீளிடை”* *(அகம்.147:1–8)*

எனக் கூறுகின்றான். இவ்வேளையில் தோழி, தலைவியின் வனப்பைப் புகழ்ந்துரைப்பதில் ஈடுபட்டு அதன் வாயிலாகத் தலைவன் தலைவியைப் பிரிவதைத் தடுத்துவிடலாம் என்று நம்புகின்றாள். இவ்வகையில் நற்றிணையில் 2 பாடல்களும், குறுந்தொகையில் 2 பாடல்களும், அகநானூற்றில் 3 பாடல்களும் (நற்.33, 46, குறுந்.135, 273, அகம்.27, 75, 137) காணப்படுகின்றன. இளவேட்டனார் இயற்றிய நற்றிணையின் பாலைப்பாடலில் தோழி தலைவியின் அழகை,

*“விம்முறு கிளவிய ளென்முக நோக்கி*
*நல்லக வனமுலைக் கரைநேர்பு*
*மல்குபுனல் பரந்த மலரேர் கண்ணே”* *(நற்.33:10–12)*

எனத் தலைவனிடம் புகழ்ந்து கூறுகின்றாள். சிறைக்குடி ஆந்தையார் இயற்றிய குறுந்தொகையின் பாலைப் பாடலில் தோழி தலைவியின் வனப்பைப் பின்வருமாறு புகழ்ந்து கூறுகின்றாள்.

*“அல்குறு பொழுதில் தாதுமுகை தயங்கப்*
*பெருங்காடு உளரும் அசைவளி போலத்*
*தண்ணிய கமழும் ஒண்ணுத லோயே!”* *(குறுந்.273:1–3)*

உறையூர் முதுகூத்தனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் தலைவனுக்குத் தோழி தலைவியின் வடிவத் தோற்றத்தைப் பின்வருமாறு புகழ்ந்து கூறுகின்றாள்.

*“பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்*
*வீஇலை அமன்ற மரம்பயில் இறும்பில்*
*தீயில் அடுப்பின் அரங்கம் போலப்*
*பெரும்பாழ் கொண்டன்று நுதலே; தோளும்*
*தோளா முத்தின் தெண்கடற் பொருநன்*
*திண்தேர்ச் செழியன் பொருப்பின் கவாஅன்*
*நல்லெழில் நெடுவேய் புரையும்*
*தொல்கவின் தொலைந்தன நோகோ யானே”* *(அகம்.137:9–16)*

**பாலைவழியில் தலைவன் செல்லும்போது நிகழ்வுகள்**

*தலைவியைப் பிரிந்து தலைவன் பாலை வழியில் செல்லும்போது நிகழும் நிகழ்வுகளாகத் தலைவன் கூற்றில் ஏறத்தாழ 40 பாலைப் பாடல்கள் உள்ளன. தலைவன், தலைவியர் அன்புடைமையின் ஆழத்தில் கொண்டிருந்த உறவு உயிரும் உடலும் போன்றதாதலின் தலைவன் பிரிய நேர்ந்த தன் தலைவிக்காக வருந்துகின்றான். இதனை நரைமுடி நெட்டையார் இயற்றிய அகநானூற்றின் பின்வரும் பாலைப்பாடல் வழி அறியலாம்.*

***"ஆள்வினைக்கு எழுந்த அசைவுஇல் உள்ளத்து***
***ஆண்மை வாங்கக் காமந் தட்ப***
***கவைபடு நெஞ்சஞ்! கட்கண் அகைய***
***இருதலைக் கொள்ளி யிடைநின்று வருந்தி***
***ஒருதலைப் படாஅ விறலி போன்றனம்;***
***நோங்கொல்? அளியள் தானே யாக்கைக்கு***
***உயிரியியைந் தன்ன நட்பின் அவ்வுயிர்***
***வாழ்த லன்ன காதல்***
***சாதல் அன்ன பிரிவரி யோளே!"*** ***(அகம்.339:6–14)***

*தலைவன் தளர்ந்து நடக்கும்போது அவனுடைய இனிய காதலியின் அன்பு நினைவுகள், நற்பண்புகள், அவளுடைய வனப்பு மற்றும் இணக்கமான தன்மைகளும் அவன் நினைவிற்குத் தோன்றுகின்றன. அவன் அவற்றைத் தான் கடந்து செல்லும் கொடிய வழியோடு வேறுபடுத்திக் காணுகின்றான். இவை குறித்த பாடல்கள் தலைவன் தன் நெஞ்சிற்கு உரைத்தனவாகக் கூறப்பெற்றுள்ளன (நற்.103, 105, 113; குறுந்.321, 322, 323; அகம்.19, 21, 33. தலைவன் கண்டோர்க்குக் கூறுவன; ஐங்.328, 329 ஆகிய இரண்டு பாடல்கள்). மருதன்இளநாகனார் இயற்றிய நற்றிணைப் பாலைப் பாடலில் பொருள் வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுரத்து ஆற்றானாகித் தன் நெஞ்சிற்கு,*

***"பொய்யா மரபின் பிணவுநினைந்து இரங்கும்***
***விருந்தின்வெங் காட்டு வருந்துதும் யாமே;***
***ஆள்வினைக்கு அகல்வாம் எனினும்***
***மீள்வாம் எனினும் நீதுணிந் ததுவே"*** ***(நற்.103:8–12)***

*எனக் கூறிக் கொள்கின்றான். தலைவன் தலைவியின் இனிய பண்பையும் தண்ணெனும் நோக்கையும் நினைத்துப் பார்க்கின்றான். அதே வேளையில் அவனுள்ளம் வெம்மை மிகுந்த வழியையும் நினைத்துப்பார்க்கின்றது. தலைவன் இருதலைக் கொள்ளி எறும்பாகத் தன்னிலையை உணர்கின்றான். தன்*

தடுமாற்றத்திற்காகத் தன் நெஞ்சை அவனே கடிந்துகொள்கின்றான். விடாது சென்று பொருளை ஈட்டுவதென்றும், இடையில் மீளுதல் கூடாதென்றும் தொடர்ந்து செல்கின்றான். இதனைக் காவன்முல்லைப் பூதனார் இயற்றிய அகநானூற்றின் பின்வரும் பாலைத்திணைப் பாடலடிகளால் அறியலாம்.

*"மனையிள நொச்சி மௌவல் வால்முகைத்*
*துணைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்*
*அவ்வயிற்ற கன்ற அல்குல் தைஇத்*
*தாழ்மென் கூந்தல் தடமென் பணைத்தோள்*
*மடந்தை மாணலம் புலம்பச் சேய்நாட்டுச்*
*செல்லல் ஒன்றியான் சொல்லவும் ஒல்லாய்*
*வினைநயந் தமைந்தனை ஆயின் மனைநகப்*
*பல்வேறு வெறுக்கை தருகம் வல்லே*
*எழுவினி வாழியென் நெஞ்சே புரியிணர்"* *(அகம்.21:1–9)*

தலைவனின் பிரிவு தொலைதூரமும், நீண்ட காலமும் கொண்டதாகலின் தலைவியைக் குறித்த பழைய நினைவுகளால் தலைவன் இடையறாமல் துன்பம் கொள்கின்றான். போருக்காகப் பிரியும் முல்லைப் பிரிவுக்கும், பொருளுக்காகப் பிரியும் பாலைப் பிரிவுக்கும் இடையே உள்ள நுட்பமான வேறுபாடு இங்குக் குறிக்கப்படுகின்றது. முல்லைத் திணைப் பாடல்களில் தலைவன் போருக்குப் பிரியும்போது தலைவி வருந்துவதாகவும், தோழி தடுப்பதாகவும், தலைவன் தென் நெஞ்சிற்குக் கூறி வருந்திப் பின்னர் செலவிலிருந்து தவிர்ப்பதாக குறிப்புக்கள் இல்லை. நாட்டுக்காகப் போரிடவும் தன் கடமையைச் செய்யவும் செல்லும் வீரன் இத்தகைய மலிவான எண்ணங்களில் கவனம் செலுத்த புலவர்கள் வாய்ப்புக் கொடுக்கவில்லை. இது ஒரு தலைவனுக்குப் பொருத்தமான செயலன்று; அவன் தகுதிப்பாட்டிற்கு இது மதிப்பாகாது. தலைவனின் போர்ப் பிரிவில் தலைவியைப் பிரிந்ததற்கு வருந்தியதாகக் கற்பனை செய்யப்படவும் இல்லை. அத்தலைவன் போர்த்தொழில் முடித்து மீண்டு வரும்போதே தேர்ப்பாகனிடம் தேரை விரைந்து செலுத்துமாறு கூறுகின்றான். அல்லது தலைவியை விரைந்து காணவேண்டும் எனத் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். தொல்காப்பியர் இதனை,

*"கிளவி நிலையே வினையிடத்து உரையார்*
*வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்"* [27]

என்றார். இக்கூற்று தலைவனின் கடமை நிலையிலுள்ள வேறுபாட்டைத் தெளிவாக உணர்த்துகின்றது. பாசறையில் இருக்கும் முல்லைத் தலைவன்

வருத்தமாக இருக்கின்றான். அது அவன் தலைவியைக் குறித்துக் கொள்ளும் வருத்தமன்று. ஆயினும் அவன் மீண்டுவருவதாகக் கூறிய கார்காலம் வந்துவிட்டமையால் தலைவி மிகுந்த துன்பப்படுவாள் என வருந்துகின்றான்.

**தலைவனின் பிரிவில் தலைவி நிலை**

தலைவனின் பிரிவில் தலைவி வருந்துவதும், அவளைத் தேற்றும் தோழியின் முயற்சியும் பாலைத் திணையில் 220 பாடல்களில் பாடுபொருளாக உள்ளன'[28] என்பர். இதிலிருந்து தலைவியின் பிரிவுத்துயரை வெளிப்படுத்துவதே பாலைத் திணையின் இன்றியமையாப் பகுதி என அறியமுடிகின்றது. சங்கப் புலவர்கள் கடுங்கோடையைப் பின்புலமாகக் கொண்டே பிரிந்து சென்ற தலைவன் நிலையை விளக்கிக் கூறியுள்ளனர். ஆயினும் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியர் துயரங்களை வெளிப்படுத்தப் புலவர்கள் கார்காலம், கூதிர்காலம், பனிக்காலம், இளவேனிற் காலம் ஆகிய காலங்களைப் பொருத்தமான பின்னணியாகச் சேர்த்துள்ளனர். இவ்வகையில் அகநானூற்றில் 2 பாடல்களும் குறுந்தொகையில் 3 பாடல்களும் (அகம்.125, 237, குறுந்.282, 350, 380) அமைந்துள்ளன.

தாயங்கண்ணனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியின் துயரத்தை விளக்க குயில்கள் கூவும் வேனிற்காலம் பின்புலமாகக் கூறப்பெற்றுள்ளது.

***"புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ***
***நுண்கொடி அதிரலொடு நுணங்குஅறல் வரிப்ப***
***அரவெறிற்று அன்ன அரும்புமுதிர் குரவின்***
***தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்***
***குயில்குரல் கற்ற வேனிலுந் துயில்துறந்து***
***இன்னா கழியும் கங்கு லென்றுநின்***
***நன்மா மேனி அணிநலம் புலம்ப"*** ***(அகம்.237:1–7)***

இவ்வாறே கருவூர்க் கதப்பிள்ளை இயற்றிய குறுந்தொகைப் பாலைப்பாடலில் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியின் துன்பத்திற்குக் கார்காலம் தக்க பின்புலமாகக் காட்டப்பெற்றுள்ளது.

***"விசும்புகண் புதையப் பாஅய் வேந்தர்***
***வென்றுஎறி முரசின் நன்பல முழங்கி***
***பெயல் ஆனாதே வானம் காதலர்"*** ***(குறுந்.380:1–3)***

என்பன அப்பாடலடிகளாகும். ஆயினும் வடமோதங்கிழார் இயற்றிய அகநானூற்றின் பாலைப்பாடலில் தலைவி தன் தலைவன் கார், கூதிர்,

பனிக்காலங்கள் கழிந்த பின்னரும் இளவேனிற் காலத்திலும் வந்திலன் என ஆற்றாமை மீதூரப் புலம்புகின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

***"மாக விசும்பின் மழைதொழில் உலந்தென***
***பாஅய் அன்ன பகலிருள் பரப்பி***
***புகைநிற உருவின் அற்சிரம் நீங்கக்***
***குவிமுகை முருக்கின் கூர்நுனை வையெயிற்று***
***… …. ….***
***மானே முற்ற காமர் வேனில்***
***வெயிலவிர் புரையும் வீததை மராஅத்துக்***
***குயிலிடு பூசல் எம்மொடு கேட்ப***
***வருவே மென்ற பருவம் ஆண்டை***
***இல்லை கொலென மெல்ல நோக்கி***
***நினைந்தன மிகுந்தன மாகநயந் தாங்கு"*** ***(அகம்.317:1–19)***

ஆயினும் தோழி கார்காலமும் வேனிற்காலமும் வரத்தொடங்கியமையால் தலைவன் வருவான் எனக் கூறித் தலைவியைத் தேற்றுவதாக நற்றிணையில் 2 பாடல்களும் அகநானூற்றில் 2 பாடல்களும் அமைந்துள்ளன. பொதும்பில் கிழார் மகனார் இயற்றிய நற்றிணைப் பாலைப்பாடலில் கார்காலம் தொடங்கியமையால் தலைவன் வருவான் எனத் தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள்.

***"வருவர் வாழி தோழி செறுவிறந்து***
***ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்த***
***வேல்கெழு தானைச் செழியன் பாசறை***
***உறைகழி வாளின் மின்னி உதுக்காண்***
***நெடும்பெருங் குன்றம் முற்றி***
***கடும்பெயல் பொழியும் கலிகெழு வானே"*** ***(நற்.387:6–11)***

காட்டூர்கிழார் மகனார் கண்ணனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலிலும் ஆற்றாமையால் வருந்தும் தலைவியைத் தோழி கார்காலத்தைச் சுட்டித் தலைவன் வருவான் என ஆற்றுவிக்கின்றாள்.

***"நன்னாட் பூத்த நாகிள வேங்கை***
***நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை***
***நனைப்பசுங் குருந்தின் நாறுசினை யிருந்து***
***துணைப்பயிர்ந்து தகவுந் துணைதரு தண்கார்***

*வருதும் யாமெனத் தேற்றிய*
*பருவங் காண்அது பாயின்றால் மழையே”* *(அகம்.85:10–15)*

**பணி முடித்த தலைவன், அவன் வரவில் மகிழும் தோழி கூற்றுக்கள்**

தன் வினையை முடித்து வீடு திரும்பும் தலைவன் கூற்றாகவும் அத்தலைவனின் வரவில் மகிழும் தோழியின் கூற்றாகவும் பாலைத்திணையில் 40 பாடல்கள் உள்ளன. தலைவன் குறித்துச் சென்ற இளவேனில் பருவம் தொடங்கிற்று. அவனும் இல்லம் திரும்பினான் என்பதைப் பாலைக்கலியில் குறித்த தோழி ஒருத்தித் தலைவியிடம் பின்வருமாறு கூறுகின்றாள்.

*“நோய்மலி நெஞ்சமோ டினையல் தோழி!*
*நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ்செய் பொழுதாயின்*
*காமவேள் விழவாயின் கலங்குவள் பெரிதென*
*ஏமுறு கடுந்திண்தேர் கடவி*
*நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே”* *(கலி,27:21–26)*

மற்றொரு பாலைக்கலிப் பாடலின் தோழி,

*“தெருமரல் வாழி தோழிநங் காதலர்*
*பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்*
*செருமேம் பட்ட வென்றியர்*
*வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே”* *(கலி,26:22–25)*

எனத் தலைவன் விரைந்து வரவிருக்கும் செய்தியைத் தலைவிக்குக் கூறுகின்றாள். மற்றொரு பாலைக்கலிபாடற் தோழி தலைவியிடம் தலைவன் விரைந்து வருவான் என்பதை,

*“தாம்பிரிந் துறைதல் ஆற்றலர்*
*பரிந்தெவன் செய்தி வருகுவர் விரைந்தே”* *(கலி, 28:23–24)*

என்கின்றாள்.

**உடன்போக்கில் மாந்தர்களும் செயல்களும்**

களவுக் காதலில் தலைவி தலைவனை மணக்க இயலாத நிலை ஏற்பட்டாலும், தலைவியின் பெற்றோர் அவளை நொதுமலர் மணத்திற்கு ஏற்பாடு செய்யினும், தலைவி தலைவனைச் சந்திக்க இயலாத வகையில் தாயரால் இற்செறிக்கப்படினும் அத்தலைவி தன் தோழியின் உதவியால் தலைவனோடு தலைவனின் ஊருக்குச் செல்வாள். அங்குத் தலைவனின் ஊரில் திருமணத்திற்கு முற்பட்ட சிலம்புகழி நோன்பையும் வதுவைச் சடங்கையும் நிகழ்த்துவர்.

இவ்வாறு தலைவி தலைவனுக்கு முறையாக மணம்செய்து வைக்கப்படுவதே உடன்போக்காகும். இந்த வகையில் நற்றிணையில் பாடலும், ஐங்குறுநூற்றில் பாடலும், அகநானூற்றில் 2 பாடல்களும் (நற்.279, ஐங்.399, அகம்.367, 385) காணப்படுகின்றன. கயமனார் இயற்றிய நற்றிணையின் பாலைப் பாடலில் மகட்போக்கிய தாய்,

*"..... ..... ... அத்தத்து*
*அதருழந்து அசையின கொல்லோ ததரல்வாய்ச்*
*சிலம்பு கழீஇய செல்வம்*
*பிறருணக் கழிந்தஎன் ஆயிழை அடியே?"* (நற்.279:8–10)

எனச் சிலம்புகழி நோன்பு தலைவனது ஊரில் நடைபெற்றமைக்கு வருந்துகின்றாள். உடன்போக்கில் தலைவனது ஊரில் சிலம்புகழி நோன்பு நடைபெற்றதைக் கேள்விப்பட்ட நற்றாய் தன் மகளுக்குத் தன் வீட்டில் வதுவை நல்மணம் நடைபெற வேண்டும் என்கின்றாள்.

*"நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்*
*மெம்மனை வதுவை நல்மணங் கழிகவெனச்*
*சொல்லி னெவனோ மற்றே வென்வேல்*
*மையற விளங்கிய கழலடி*
*பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே?"* (ஐங்.399)

குடவாயிற் கீரத்தனார் இயற்றிய அகநானூற்றின் பாலைப்பாடலில் மகட்போக்கிய செவிலித்தாய் உடன்போக்கில் தலைவனோடு சென்ற தலைவி அவன் நாட்டில் சிலம்பு கழித்து அத்தலைவனை மணந்துகொண்டது கொடுமையிலும் கொடுமை என வருந்துகின்றாள்.

*"தானமர் துணைவன் ஊக்க ஊக்கி*
*உள்ளாது கழிந்த முள்ளெயிற்றுத் துவர்வாய்ச்*
*சிறுவன் கண்ணி சிலம்புகழீஇ*
*அறியாத் தேஎத்தள் ஆகுதல் கொடிதே"* (அகம்.385:15–18)

தலைவியின் உறவினர்களான தந்தையும் உடன்பிறந்தோரும் உடன்போக்குச் சென்ற தலைவியைத் திரும்பத் தன் இல்லத்திற்குக் கொண்டுவர முயற்சிகள் செய்கின்றனர். உடன்போக்கில் மீண்டு வந்த தலைவி நின் ஐயன்மார் பின் தொடர்ந்து வந்தபோது நிகழ்ந்தது என்ன? என வினவிய தோழிக்குத் தலைவி, தலைவனை மறைக்க உதவிய மலையை வாழ்த்திப் பின்வருமாறு கூறுகின்றாள்.

*"அறஞ்சா லியரோ! வறஞ்சா லியரோ!*
*வறனுண் டாயினு மறஞ் சாலியரோ*
*வாள்வனப் புற்ற வருவிக்*
*கோள்வ லென்னையை மறைத்த குன்றே"* *(ஐங்.312)*

உடன்போக்கில் தலைவன் தலைவியிடம் அவளுடைய தமர்களிடம் இருந்து பாதுகாப்பேன் என்கின்றான்.

*"அமர் வரின் அஞ்சேன் பெயர்க்குவென்*
*நுமர் வரின் மறைகுவென் மாஅ யோளே!"* *(நற்.362:9-10)*

உடன்போக்கு மேற்கொண்ட பாலைக் காதலர் பின்னர்த் திரும்பவும் தலைவியின் ஊருக்கு வருகின்றனர். உடன்போக்கில் மீண்டுவந்த தலைவி வழி வந்த வருத்தம் கண்டு ஆற்றாளாகிய தோழிக்கு,

*"வேய்வனப் பிழந்த தோளும் வெயிறெற*
*வாய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்*
*பரியல் வாழி தோழி பரியி*
*னெல்லையி லிடும்பை தரூஉம்*
*நல்வரை நாடனொடு வந்தமாறே"* *(ஐங்.392)*

எனக் கூறுகின்றாள். மற்றொரு ஐங்குறுநூற்றின் பாலைப்பாடலில் உடன்போக்குச் சென்று மீள்கின்ற தலைவி தன் ஊருக்குச் செல்கின்றாரைக் கண்டு,

*"கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை*
*குருளைப் பன்றி கொள்ளாது கழியுஞ்*
*சுரனணி வாரா நின்றன ளென்பது*
*முன்னுற விரைந்தநீ ருரைமின்*
*னின்னகை முறுவலென் னாயத் தோர்க்கே"* *(ஐங்.397)*

எனக் கூறுகின்றாள். உடன்போக்குத் துறை சார்ந்த பாலைத்திணைப் பாடல்கள் அக்கால நடைமுறையை ஒட்டியன என்பதையே காட்டுகின்றன. தோழியே உடன்போக்கிற்குரிய சிந்தனையை அறிவுறுத்து கின்றாள். கயமனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் தலைவனை உடன்போக்கிற்கு உடன்பட வைத்த தோழி தலைவியையும் அதற்கு உடன்படச் செய்வதற்கு,

*"நனைவிளை நறவின் தேறல் மாந்திப்*
*புனைவினை நல்லில் தருமணற் குவைஇப்*

*பொம்மல் ஓதி எம்மகள் மணனென*
*வதுவை அயர்ந்தனர் நமரே; அதனால்*
*புதுவதுவை புனைந்த சேயிலை வெள்வேல்*
*மதியுடம் பட்ட மையறை காளை*
*வாங்குசினை மலிந்த திரளரை மராஅத்துத்*
*தேம்பாய் மெல்லிணர் தளிரொடு கொண்டுநின்*
*தண்ணறும் முச்சி புனைய அவனொடு"* *(அகம்.221:1–9)*

எனக் கூறுகின்றாள். தோழியே அதற்கான முன்னேற்பாடுகளையும் செய்கின்றாள். தலைவியின் பெற்றோர் அறியாமல் தலைவி தலைவனுடன் உடன்போக்குச் செல்ல உதவுகின்றாள். படுமரத்து மோசிகீரன் இயற்றிய குறுந்தொகைப் பாலைப்பாடலில் தலைவனை உடன்போக்கு நேர்வித்து வந்த தோழி நாணத்தால் வருந்தும் தலைவியை அவள் நாணுக்கெடுமாறு,

*"நீஉடம் படுதலின் யான்தர வந்து*
*குறிநின் றனனே குன்ற நாடன்*
*இன்றை அளவைச் சென்றைக்க என்றி*
*கையும் காலும் ஓய்வன ஒடுங்கத்*
*தீயுறு தளிரின் நடுங்கி*
*யாவதும் இலை யான் செயற்குஉரி யதுவே"* *(குறுந்.383)*

தலைவன் – தலைவியரின் உடன்போக்கால் ஊர்மக்களின் அலரும், பெற்றோர் சினமும் சிறு சுவடுகூட இல்லாமல் அழிக்கப்படும் எனத் தோழி தன் உள்ளத்திற்குள் மகிழ்கின்றாள். மாமூலனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலின் தோழி இதனை,

*"உன்னம் கொள்கையோடு உளம்கரந்து உறையும்*
*அன்னை சொல்லும் உய்கும்; என்னதூஉம்*
*ஈரம் சேரா இயல்பின் பொய்மொழிச்*
*சேரிஅம் பெண்டிர் கௌவையும் ஒழிகும்"* *(அகம்.65:1–4)*

எனக் கூறுவதால் அறியலாம். பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய குறுந்தொகைப் பாலைப்பாடலின் தோழியும் தலைவியிடம்,

*"ஊஉர் அலர்எழச் சேரி கல்லென*
*ஆனாது அலைக்கும் அறன்இல் அன்னை*
*தானே இருக்க தன்மனை யானே"* *(குறுந்.262:1–3)*

எனக் கூறுகின்றாள். தலைவனோடு செல்லும் தலைவிக்கு விடை கொடுக்கும் தோழி தலைவியின் நலத்தை நன்கு பேணுமாறும், எப்போதும் அவளைக் கைவிடாமல் பாதுகாக்குமாறும் தலைவனை வேண்டுகின்றாள். அவள் 'இப்பெண் நின்னொடு வருகிறாள்; நின் சொற்களில் நம்பிக்கை கொண்டு வருகிறாள்; இவள் அழகு மறையும் போதும், கரு தமணிபோலும் பொன்னிற முகில் தாழும் கூந்தல் வயது மூத்த காலத்தில் நரை எய்தினும் இவளைக் கைவிடற்க; அக்காலத்திலும் இவளை நன்கு புரக்க' எனத் தலைவனை வேண்டுகின்றாள். அப்பாடல் வருமாறு:

*"அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்*
*பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த*
*நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்*
*நீத்த லோம்புமதி பூக்கே மூர!"* *(நற்.10:1–4)*

உடன்போக்கில் தலைவிக்கு விடை கொடுக்கும் தோழி கூறும் நெஞ்சை நெகிழ்விக்கும் இச்சொற்கள் தலைவியிடம் அவள் கொண்டுள்ள ஆழ்ந்த காதலைக் காட்டுவதாகும். தலைவிக்கு ஒரு தோழி என்பதைவிட அவள் தன்னலமற்ற ஒரு தாயாகவும் உயர்ந்து நிற்கின்றாள்.

ஊர் அலருக்கு அஞ்சிய தலைவி ஒருத்தி உடன்போக்கு மேற்கொள்ள முடிவு செய்கின்றாள். ஓரோடோகத்துக் கந்தரத்தனார் இயற்றிய அகநானூற்றின் பாலைப்பாடலின் அத்தலைவி தோழியிடம்,

*"சுரம்பல கடந்தோர்க் கிரங்குப என்னார்*
*கௌவை மேவலர் ராகி 'இவ்வூர்*
*நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ*
*புரைய அல்லஎன் மகட்கெனப் பரைஇ*
*நம்முணர்ந் தாறிய கொள்கை*
*அன்னை முன்னர்யாம் என்னிதற் படலே!"* *(அகம்.95)*

எனக் கூறுகின்றாள். அவள் தன்னுடைய காதலனோடு உடன்போக்குச் செல்லும்போது அவளுடைய இனிய தாய் மற்றும் தோழியர் கூட்டத்தினர் அவள் மனத்தினுள் ஊடாடுகின்றனர். அவள் வழியிடைக் கண்டோரிடத்தும் துறவியரிடத்தும் பாலை வழியே தான் செல்வதைத் தன் உறவினர்களுக்குத் தெரிவிக்க வேண்டுகின்றாள். அவள் தன் எதிரே வரும் அந்தணரிடம்,

*"சேட்புல முன்னிய வசைநடை யந்தணீர்!*
*நும்மொன் றிரந்தனென் மொழிவ; லெம்மூர்*

*யாய்நயந் தெடுத்த வாய்நலம் கவின*
*வாரிடை யியந்தன ளென்மின்*
*னேரிறை முன்கைஎன் ஆயத் தோர்க்கே"* *(ஐங்.384)*

என்கின்றாள்.

அத்தலைவி இடைச்சுரத்தில் கண்டாரிடம்,

*"கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்*
*கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய*
*வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்*
*கூறுமின் வாழியோ வாறுசென் மாக்க*
*ணல்றோள் நயந்துபா ராட்டி*
*யெற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே"* *(ஐங்.385)*

எனக் கூறுகின்றாள். அவள்தன் உறவினர்கள் தன்னைத் தேடாமல் இருக்கவும், அவர்களுக்கு ஆறுதல் அளிக்கவும் இச்செய்தியைக் கண்டோரிடம் சொல்லியனுப்புகின்றாள்.

உடன்போக்கில் தலைவன் கூற்றாக அமைந்த 14 பாலைப்பாடல்களிலும் தலைவன் தலைவியைத் தாம் செல்லும் வழியில் களைப்பும் சோர்வும் தோன்றாமல் இருக்கப் பலவாறு புகழ்ந்துரைத்துப் பாராட்டுகின்றான். அவன் இளவேனில் பருவத்தைத் தலைவியிடம் கூறி இவ்வழியே நாம் தொல்லையின்றிச் செல்வோம் என்கின்றான். இதனை,

*"வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே!*
*மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்*
*நறுந்தண் பொழில கானங்*
*குறும்ப லூர யாஞ் செல்லும் ஆறே"* *(நற்.9:9–12)*

எனத் தலைவன் தலைவியிடம் கூறுகின்றான். மேலும் அவன் தலைவியிடம் பலவாகிய பூக்கள் நிறைந்த கோங்க மரங்கள் நிரம்பிய காட்டு வழியின் தன்மையையும் கூறுகின்றான்.

*"அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்*
*செல்சுடர் நெடுங்கொடி போலப்*
*பல்பூங் கோங்கம் அணிந்த காடே"* *(நற்.202:9–11)*

என்பன அது குறித்த பாடலடிகளாகும். ஆயினும் தலைவியின் தாய் உடன்போக்குக் குறித்துக் கூறும் செய்திகள் வேறுவிதமாக உள்ளன.

தலைவியின் தாய், தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்ற கொடிய பாலைவழி குறித்தும், அப்போதைய கடுங்கோடை குறித்தும், மெல்லடியைக் கொண்ட தன் மகளின் மென்மை, அழகு குறித்தும் பலவாறு கவலை கொள்கின்றாள். அத்தாய், 'கடுங்கோடைப் பருவத்தில் தன் மகளைக் கொடும் பாலை வழியே தலைவன் கூட்டிச்சென்றனன். மெல்லியல் இயல்பினளாகிய என் மகள் எத்தகைய துன்பம் அடைவாளோ?" என வருந்துகின்றாள். பூதனாரின் நற்றிணையின் பாலைப்பாடலில் மகட்போக்கிய தாய்,

*"..... ..... .... .... .... 'யான்றன்*
*வனைந்தேந் திளமுலை நோவ கொல்லென?'*
*வனைந்துகைந் நெகிழ்ந்த வணைத்தற்குத் தான்றன்*
*பேரமர் மழைக்கண் நீரிய கலுழ*
*வெய்ய வுயிர்க்குஞ் சாயன்*
*மையீ ரோதிப் பெருமடத் தையே?" (நற்.29:6–11)*

என வருந்துகின்றாள். கயமனாரின் குறுந்தொகைப் பாலைப்பாடலில் மகட்போக்கிய செவிலித்தாய்,

*"யாங்குவல் லுநள்கொல் தானே – ஏந்திய*
*செம்பொற் புனைகலத்து அம்பொரிக் கலந்த*
*பாலும் பலஎன உண்ணாள்*
*கோல்அமை குறுந்தொடித் தளிர்அன் னோளே?" (குறுந்.356:5–8)*

என வருந்துகின்றாள். கயமனாரின் அகநானூற்றுப் பாலைபப்பாடலில் மகளை உடன்போக்கில் விடுத்த செவிலித்தாய்,

*"துஞ்சா முழவின் துய்த்தியல் வாழ்க்கைக்*
*கூழுடைத் தந்தை இடனுடை வரைப்பின்*
*ஊழடி ஒதுங்கினும் உயங்கும் ஐம்பால்*
*சிறுபல் கூந்தல் போதுபிடித் தருளாது*
*எறிகோல் சிதைய நூறவுஞ் சிறுபுறம்*
*'எனக்குரித்' தென்னான் நின்றஎன்*
*அமர்க்கண் அஞ்ஞையை அலைத்த கையே!" (அகம்.145:16–22)*

என அவளின் நிலைக்காக இரக்கம் கொள்கின்றாள்.

இவ் வருணனைகளிலிருந்து பாலைத்திணைப் புலவர்கள் பின்பற்றிய செய்யுள் மரபுகளை உய்த்துணரலாம். தமரைப் பிரிந்து தலைவனுடன் உடன்போக்குச் செல்லும் தலைவியின் மனநிலை, மகள் தலைவனுடன்

உடன்போக்குச் சென்றமையை அறிந்த தாய் மற்றும் செவிலித்தாயின் மனநிலை ஆகிய இரண்டும் வேறுபடவும், நாடகப் பாங்கிலும் சித்திரிக்கப்பட்டுள்ளன. தலைவனும் தலைவியும் பாலை வழியில் உடன்போக்குச் செல்லும்போது தலைவிக்கு ஆறுதல் கூறித் தேற்றுகின்றான். தலைவியிடம் அப்போது அவன் கூறும் இளவேனில் பருவம் பொருத்தமான பின்னணியாக உள்ளது. இவ்வகையில் நற்றிணையில் 4 பாடல்களும் அகநானூற்றில் பாடலும் காணப்படுகின்றன. சான்றாக அம்மூவனாரின் நற்றிணையின் பாலைப் பாடலில் இடைச்சுரத்தில் தலைவன் தலைவிக்கு,

*"வருமழை கரந்த வால்நிற விசும்பின்*
*நுண்துளி மாறிய உலவை அம்காட்டு*
*ஆல நீழல் அசைவு நீக்கி*
*அஞ்சுவழி அஞ்சாது அசைவழி அசைஇ*
*வருந்தா தேகுமதி வாலிழைக் குறுமகள்" (நற்:76:1–6)*

எனக் கூறி ஆற்றுவிப்பதைக் குறிப்பிடலாம். இவ்வாறு **இளவேனிலும் கோடையுமாகிய பருவங்கள் உடன்போக்காகிய பாலைத்திணையின் ஒரே நிகழ்வுக்குப் பொருந்தும் பின்னணிகளாகப் புலவர்களால் அமைக்கப் பெற்றுள்ளன.** இது உணர்ச்சியை மிகுவித்து நாடகப் பாங்கில் பாலைப் பாடல்களின் வருணனைகளைப் புனையும் உத்தியாகும். **நடப்பியல் சார்ந்து நோக்கினால் தலைவன் எப்பருவத்திலும்** உடன்போக்கை மேற்கொள்ளலாம்.

தலைவன் தலைவியோடு உடன்போக்குச் செல்வதே வாழ்க்கையின் உண்மை நிகழ்வாகும். அதற்குரிய பின்னணிகள் புலவர்களால் செயற்கையாகப் படைத்துக் கொள்ளப்பட்டவை. சங்கப் புலவர்கள் குறிப்பாகப் பாலைத் திணையைப் பாடிய புலவர்கள் அக்கால வாழ்க்கையிலிருந்து பெறப்பட்ட நம்பத்தகுந்த உண்மைகளைச் செழுமையான கற்பனைப் பாங்குடன் இலக்கியமாகப் படைத்துள்ளனர்.

பாலைத்திணைப் பாடல்களில் உடன்போக்கில் அறிமுகப்படுத்தப்படும் மாந்தர்கள் கண்டோர் ஆவார். இவர்கள் தலைவனும் தலைவியும் உடன்போக்குச் செல்லும் வழியில் போவோர், பயணம் மேற்கொள்வோர், வழிபோக்கர் ஆவர். தலைவன் கால்களில் கழல் அணிந்திருப்பதாலும், தலைவி காலில் சிலம்பணிந்திருப்பதாலும் காதலர்களான இவர்கள் இன்னமும் திருமணம் செய்து கொள்ளவில்லை என்பதைக் கண்டோர் இவர்களைக் கண்ட உடனேயே அறிந்து கொள்கின்றனர். இதனை உடன்போக்கில் இடைச்சுரத்தில் கண்டார்

கூற்றாக குறுந்தொகையில் பெரும்பதுமனார் இயற்றிய பின்வரும் பாலைப் பாடலால் அறியலாம்.

*“வில்லோன் காலன கழலே; தொடியோள்*
*மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்*
*யார்கொல்? அளியர் தாமே ஆரியர்*
*கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி*
*வாகை வெண்ணெற் றொலிக்கும்*
*வேய்பயில் அழுவம் முன்னி யோரே” (குறுந்.7)*

இவர்கள் உடன்போக்கில் காதலர்களுக்கு வழிகாட்டுவதுடன், வழியிடையிலுள்ள பல இடையூறுகளையும் அறியச் செய்கின்றனர். இதனைக் குறுந்தொகையில் உறையூர் முதுகொற்றன் இயற்றிய,

*“எல்லும் எல்லின்று பாடும் கேளாய்*
*செல்லா தீமோ சிறுபிடி துணையே*
*வேற்றுமுனை வெம்மையிள் சாத்துவந்து இறுத்தென*
*வளைஅணி நெடுவேல் ஏந்தி*
*மிளைவந்து பெயரும் தண்ணுமைக் குரலே” (குறுந்.390)*

என்னும் பாலைத்திணைப் பாடலால் அறியலாம். உடன்போக்கு மேற்கொண்ட மகளைத் தேடிவரும் தாயைக் கண்டு,

*“பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை*
*மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யும்*
*நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே*

*சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை*
*நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்*
*தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே*
*ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை*
*யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்*
*சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே” (கலி.9:12–20)*

எனக் கூறுகின்றனர். கண்டோரின் கருத்துச் செறிந்த இப்பதிலுரை அவர்களது அறிவாற்றலையும் வாழ்க்கை அனுபவத்தையும் காட்டுகின்றன. அவர்கள் அத்தாயிடம் அவளுடைய மகள் காதலனோடு சென்று கொண்டிருப்பதைக் கண்டதாகவும், அத்தாயும் சிறிது தூரம் சென்றால் அவளைக் காணலாம் என்றும் கூறுகின்றனர். அவள் மகள் அவளது மனம் விரும்பிய தலைவனோடு

செல்வதாகவும், அவளை அவன் விரும்பிப் பாராட்டி அழைத்துச் செல்வதாகவும் கூறிச் சுரத்திடை அத்தாயைத் தேற்றுகின்றனர்.

உடன்போக்கில் தலைவன் தலைவியைப் பின்தொடர்ந்து சென்ற செவிலித்தாயிடம் இடைச்சுரத்தில் அந்தணர்,

***“அறம்புரி அருமறை நவின்ற நாவிற்***
***றிறம்புரி கொள்கை யந்தணீர்! தொழுவலென்***
***றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே!***
***கண்டனெ மம்ம சுரத்திடை யவளை***
***யின்றுணை யினிதுபா ராட்டக்***
***குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே” (ஐங்.387)***

என்கின்றனர்.

உடன்போக்குச் சென்ற தன் மகளைத் தேடிச் சென்ற செவிலித்தாயிடம் இடைச்சுரத்தில் கண்டோர்,

***“நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்***
***கருங்கால் யாத்து வரிநிழ லிரீஇச்***
***சிறுவரை யிறப்பிற் காண்குவை, செறிதொடிப்***
***பொன்னேர் மேனி மடந்தையொடு***
***வென்வேல் விடலை முன்னிய சுரனே” (ஐங்.388)***

எனக் கூறி அவளை ஆற்றுப்படுத்துகின்றனர். உடன்போக்குத் துறையில் நற்றிணையில் 11 பாடல்களும், குறுந்தொகையில் 7 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 16 பாடல்களும் அகநானூற்றில் 25 பாடல்களுமாக மொத்தம் 59 பாடல்கள் தாயின் கூற்றாக அமைந்துள்ளன. தாயின் கூற்றுக்களில் மகள்மீது அவள் கொண்ட எல்லையற்ற அன்பு வெளிப்படுகின்றது. நற்றாய், செவிலித்தாய் இருவருமே வேறுபாடற்ற அன்புடையராக உள்ளனர். பண்பும் மென்மையும் மெல்லடியும் கொண்ட தன் மகள் துன்பம் தரும் வறண்ட பாலை வழியில் செல்ல வல்லவளோ? என நினைக்கையில் தாயரின் அன்புள்ளம் துயரப்படுகின்றது. பூதனாரின் நற்றிணையின் பாலைப் பாடலில்,

***“பேரமர் மழைக்கண் ஈரிய கலுழ***
***வெய்ய வுயிர்க்குஞ் சாயன்***
***மையீ ரோதிப் பெருமடத் தகையே?” (நற்.29:9–11)***

எனத் தாய் வருந்துவது இதற்குச் சான்றாகும். தன் மகள் விட்டுச்சென்ற விளையாட்டுப் பந்தையும், சிறு பாவையையும் காணும்போது தாயின் கண்கள் அழுகின்றன, நெஞ்சம் ஓலமிடுகின்றது. அத்தாய்,

*"நீர்நசைக் கூக்கிய வுயவல் யானை*
*யியம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தஞ்*
*சென்றனண் மன்றவென் மகளே*
*பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே"* *(ஐங்.377)*

என அழுகின்றாள்.

தலைவியின் தாய் தன்னை விட்டுத் தன் மகளைப் பிரித்துச் சென்ற தலைவனின் தாய் மீது மிக்க சினமும் பழிவாங்கும் இயல்பும் கொண்டு தலைவனின் தாய்க்குச் சாபம் தருநாள்,

*"..... .... .... .... எம்போல்*
*பெருவிதுப் புறுக மாதோ எம்மில்*
*பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்*
*கொண்டுடன் போக வலித்த*
*வன்கண் காளையை ஈன்ற தாயே"* *(நற்.293:5–10)*

ஐங்குறுநூற்றில் மகட்போக்கிய பாலைத்தாய் தலைவனின் தாயை,

*"நினைத்தொறுங் கலிழு மிடும்பை யெய்துக*
*புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை*
*மாண்பினை யணைதர வாண்குரல் விளிக்கும்*
*வெஞ்சுரம் மென்மக ளுய்த்த*
*வம்பமை வல்வில் விடலை தாயே!"* *(ஐங்.373)*

எனச் சபிக்கின்றாள். ஒரு பாலைத்தாயின் கால்கள் மகளைத் தேடிக் களைத்தன. கண்கள் ஒளி இழந்தன. தன் மகளையன்றி வேறுபலரே எதிரே வருகின்றனர். தன் மகளைக் காண இயலாத நிலையில் அவள்,

*"காலே பரிதப் பினவே; கண்ணே*
*நோக்கி நோக்கி வாளிழந் தனவே;*
*அகலிரு விசும்பின் மீனினும்*
*பலரே மன்றவிவ் உலகத்துப் பிறரே"* *(குறுந்.44)*

என இரங்கிக் கூறுகின்றாள். இப்பாடலை வெள்ளிவீதியார் என்னும் பெண்பாற் புலவர் இயற்றியுள்ளார். தாய் தன் மகள்மீது எல்லையற்ற அன்புடையவள்;

மிக்க சினத்திற்கும் துயரத்திற்கும் இடையிலும் அவள் தன் மகளின் வாழ்க்கையில் அக்கறை கொண்டு தன் மகள் காதலனோடு செல்லும் பாலை வழியில் மழையும் மழைத்தூறலும் வேண்டும் என்கின்றாள். அவ்வழியில் தன் மகளுக்கு உதவி செய்வோரும் இருக்க விழைகின்றாள். குறுந்தொகையில் கயமனாரின் பாடலில் மகட்போக்கிய செவிலி,

*"ஞாயிறு காயாது மாண்நிழற் படீஇய*
*மலைமுதல் சிறுநெறி மணல்மிகத் தாஅய்*
*தண்மழை தலையின்றாக நந்நீத்துச்*
*சுடர்வாய் நெடுவேற் காளையொடு*
*மடமா அரிவை போகிய சுரனே" (குறுந்.378)*

என மழையை வேண்டுகின்றாள். மாமூலனாரின் அகநானூற்றுப் பாலைப்பாடலில் மகட்போக்கிய தாய்,

*"கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி*
*வன்கை யெண்கின் வயநிரை பரக்கும்*
*இன்றுணைப் படர்ந்த கொள் கையொடு ஓராங்கு*
*குன்ற வேயில் திரண்ட என்*
*மென்றோள் அஞ்ஞை சென்ற ஆறே" (அகம்.15:15–20)*

எனக் கூறுகின்றாள். தலைவியின் ஈடுபாடு தன்னிடம் எத்தகையதாக இருந்தது என நினைவுகூறும் தாய், உடன்போக்கைத் தான் எதிர்பாராமைக்கும் தடுத்து நிறுத்தாமைக்கும் மிகவும் வருந்துகின்றாள். வண்ணப்புறக் கந்தரத்தனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில்,

*"செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போல*
*கோதை யாயமொ டோரை தழீஇத்*
*தோடமை அரிச்சிலம் பொலிப்ப அவள்*
*ஆடுவழி ஆடுவழி அகலேன் மன்னே!" (அகம்.49:16–20)*

தாய் எனத் தன்னைத்தானே நொந்துகொள்ளுகின்றாள். கருவூர்க் கண்ணம்பாளனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் மகட்போக்கிய செவிலித்தாய் தன் நெஞ்சிற்குப் பின்வருமாறு கூறி ஆறுதல் அடைகின்றாள்.

*"நீடுநிலை யாஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம்*
*கொண்டனன் கழிந்த வன்கண் காளைக்கு*
*அவள்துணிவு அறிந்தனென் ஆயின் அன்னோ!*

*ஔிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும்*
*வஞ்சி யன்னவென் வளநகர் விளங்க*
*இனிதினிற் புணர்க்குவென் மன்னோ துனியின்று*
*திருநுதற் பொலிந்தவென் பேதை*
*வருமுலை முற்றத் தேமுறு துயிலே!"* *(அகம்.263:9–15)*

மற்றொரு தாய் ஐங்குறுநூற்றின் பாலைப்பாடலில் உடன்போக்கு மேற்கொண்ட தன் மகளின் செயல் நேர்மையானதென ஏற்றுக்கொண்டு தன்னைத்தானே தேற்றிக்கொள்கின்றாள். அப்பாடல் வருமாறு:

*"மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலு*
*முயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்*
*சுரம்நனி யினிய வாகுக தில்ல*
*வறநெறி யிதுவெனத் தெளிந்தவென்*
*பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே"* *(ஐங்.371)*

அத்தாய் உடன்போக்கு மேற்கொண்ட தன் மகள் அவள் காதலனோடு திரும்ப வேண்டும் என்று உள்ளன்போடு விரும்புகின்றாள். இதற்குச் சான்றாக ஐங்குறுநூற்றின் பின்வரும் பாலைப் பாடலைக் குறிப்பிடலாம்.

*"மள்ள ரன்ன மரவந் தழீஇ*
*மகளி ரன்ன வாடுகொடி நுடங்கு*
*மரும்பதங் கொண்ட பெரும்பத வேனிற்*
*'காதல் புணர்ந்தன ளாகி யாய்கழல்*
*வெஞ்சின விறல்வேற் காளையொ*
*டின்றுபுகு தருமென' வந்தன்று தூதே"* *(ஐங்.400)*

**கடற்பயணங்கள் தவிர்ப்பு**

சங்க இலக்கியத்தில் தமிழர்களின் கடற்பயணங்கள் குறித்துப் பல செய்திகள் கூறப்பெற்றுள்ளன. புறநானூற்றிலும் அகநானூற்றிலும் நற்றிணையிலும் பட்டினப்பாலையிலும் பெரும்பாணாற்றுப்படையிலும் (புறம்.66, 126, அகம்.20, நற்.295, பட்டினப்.175, பெரும்பாண்.346–351) இதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. ஆயினும் தலைவன் தலைவியைப் பிரிந்து கடல்வழிப் பயணம் மேற்கொண்டமைக்கு திணைப்பாடல்களில் சான்றுகள் இல்லை. அகநானூற்றில் மதுரை இளநாகனார் இயற்றிய பாடலொன்றே தலைவன் கடல்வழியாகத் தலைவியைப் பிரிந்து சென்றான் என்கின்றது.

*“உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்*
*புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ*
*இரவும் எல்லையும் அசைவின் றாகி*
*விரைசெலல் இயற்கை வங்கூ ழாட்டக்*
*கோடுயர் திணிமணல் அகன்துறை நீகான்*
*மாட வொள்ளெரி மருங்கறிந்து தொய்ய*
*ஆள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல”* *(அகம்.255:1–7)*

எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள். பாலைப் பாடல்களின் முதன்மையான குறிக்கோளாகத் தலைவன் பிரிந்து செல்லும் வழியின் கொடிய இயல்புகளையும், துன்பங்களையும், கொடுமைகளையும் விளக்குவதாக இருப்பின், பாலைநிலம் போல அக்காலத்தில் கடலும் இருந்திருக்க வேண்டும். ஆயினும் பெரும்பான்மையான பாலைப் பாடல்களில் (இப்பாடல் ஒன்றைத் தவிர) தலைவனின் கடற்பயணம் சித்திரிக்கப்படவில்லை.

**பாலை வருணனைகள்**

பாலைப் பாடல்களில் நிலத்தின் செல்வாக்கே முக்கியமானது. தமிழகத்தின் வடவெல்லைக்கு அப்பால் உள்ள பாலை நிலம் பல பாடல்களின் வருணனைக்குரியதாக உள்ளது. எல்லை மீறிய கோடையின் வெப்பம், வறட்சி, விலங்குகளின் தொல்லை, கொடிய ஆறலைக் கள்வர்களின் கொலைச்செயல், உணவும் தங்குமிடமும் இன்மை, நெடுந்தொலைவு, வழியெங்கும் இடையூறுகள், கழிகள் ஆகியன பாலைத்திணைப் பாடல்களின் வருணனைகளில் மிகுதி. சங்கப் புலவர்கள் துன்ப உணர்வுகளுக்கு மதிப்பளிக்கும் வகையில் பாலைப் பாடல்களைப் புனைந்துள்ளனர்.

**பாலையில் புறத்திணைக் கலப்பு**

ஒரு நாட்டை, நகரத்தை, மலையைச் சுட்டிக்காட்டி அதன்பின்னர் அவற்றைப் பெறுவதாயினும் நான் என் காதலியைப் பிரியமாட்டேன் எனப் பாடுவது அகப்பாடல் மரபு. தலைவன் தலைவியிடம் கொண்ட ஆழ்ந்த காதல் இதனால் புலனாகும். தோழியும் இதனையே பின்பற்றுகின்றாள். இதற்குச் சான்றாக அகநானூற்றில் 6 பாடல்கள் (அகம்.61, 91, 159, 199, 237, 251) காணப்படுகின்றன. சான்றுகளாகப் பின்வரும் பாடல்களை விளக்கலாம். பிரிவடை மெலிந்த தலைவியை ஆற்றுவிக்கும் தோழி,

*“குடநாடு பெறினும் தவிரலர்*
*மடமான் நோக்கிநின் மாணநலம் மறந்தே”* *(அகம்.91:17–18)*

என்கின்றாள். மற்றொரு தோழி தலைவியை,

*"கொடுமுடி காக்குங் குரூஉக்கண் நெடுமதில்*
*சேண்விளங்கு சிறப்பின் ஆமூர் எய்தினும்*
*ஆண்டமைந்து உறையுநர் அல்லர்நின்*
*பூண்தாங்கு ஆகம் பொருந்துதல் மறந்தே" (அகம்.159:18–21)*

எனக் கூறி ஆற்றுவிக்கின்றாள். இச்செய்யுள் மரபினை உட்கொண்டே கடியலூர் உருத்திரங்கண்ணனார் 301 அடிகளைக் கொண்ட பட்டினப்பாலையை இயற்றியுள்ளார். இதில் சோழர் தலைநகரமாகிய காவிரிப்பூம்பட்டினம் (பூம்புகார்) வரைபடம் போலக் காட்டப்பெற்றுள்ளது. ஆயினும் உருத்திரங்கண்ணனார் புறச்செய்திகளைக் கூறும் இந் நெடும்பாடலில் பாலைத்திணையின் உயிர்ப்பொருளை நுணுக்கமாகப் பயன்படுத்தியுள்ளார்.

**திணை மரபும் சமுதாயப் பின்புலமும்**

'திணை மரபு' என்பது செய்யுள் மரபும் சங்ககாலச் சமூக மரபும் ஆகும். இச் சமுதாய மரபையும் சமுதாயப் பின்புலத்தையும் சங்க அகப்பாடல்களின் ஐந்திணைக் கோட்பாடுகள் வெளிப்படுத்துகின்றன.

"பண்டித இராகவையங்கார் ஒழுக்கமுறைகள் திணைக் கோட்பாட்டோடு தொடர்புடையன என்றும், ஒவ்வொரு ஒழுக்கமுறையும் ஒருநிலப் பகுதிக்குத் தேவையான தொன்று என்றும், அக்காலச் சமுதாயத் தேவைகளுக்கு இவ்வொழுக்க முறைகள் தொடர்புடையன வென்றும், இத்தொடர்புகளாலேயே இலக்கிய மரபுகள் தொல்காப்பியர் வருணித்த முறையில் வளர்ச்சி பெற்றனவென்றும்" [29]

கூறியுள்ளார். இதனை எடுத்துக்காட்டும் கார்த்திகேசு சிவத்தம்பி பி.டி.சீனிவாச ஐயங்கார், இராமச்சந்திர தீட்சிதர், கபில்சுவெலபில், தனிநாயக அடிகள் ஆகியோர் கருத்துக்களைச் சுட்டிக்காட்டித் திணைக் கோட்பாடு சமுதாய வாழ்க்கையின் அடிப்படையில் தோன்றியது என விளக்கியுள்ளார். [30] மலையில் தொடங்கிய மக்கள் வாழ்க்கை சமதள நோக்கியும், வளமான வாழ்விடங்களை நோக்கியும் படிப்படியாக வளர்ந்த வளர்ச்சியே ஐந்திணை வாழ்வு என்பது பி.டி.சீனிவாச ஐயங்காரின் திடமான கருத்தாகும்.

"நிலப்பரப்பின் இந்த ஐந்து இயற்கைப் பிரிவுகளும் தமிழ்நாட்டில் சிறுசிறு அளவிலேனும் காணப்படுகின்றன. தென்னிந்தியர் ஒரு நிலப்பிரிவிலிருந்து பிறிதொரு நிலப்பிரிவிற்குப் பரவி வாழ்ந்தமையால் அந்நிலப்பரப்பு ஒவ்வொன்றும் உருவாக்கி அளித்த நாகரிகத்தை அவர்கள் படிப்படியாக

வளர்த்துள்ளனர். மனிதன் பண்டு கடந்துவந்துள்ள நாகரிகத்தின் படிக்கட்டுகள் ஐந்து. அவையாவன வேட்டையாடுதல், நாடோடி வாழ்க்கை, கால்நடை மேய்த்தல், கடல்மேற் சேறல், தொழில் மயக்கம் கலந்த உழவுத்தொழில் மேற்கோடல். இவை முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதத்திணைக்கு நிகழ்வுகளாகும். ஒவ்வொரு நிலப்பிரிவையும் சார்ந்த இயற்கை வளங்களின் இயல்புகள் அந்தந்த நிலத்திற்குரிய நாகரிக வளர்ச்சிக்குத் தூண்டுதலாய் அமைந்தன" [31] என்பார் பி.டி.சீனிவாசஐயங்கார். மேலும் அவர்,

"குறிஞ்சியின் ஒருபால் மக்கள்தொகை பெருகிவிட, மற்றொருபால் கிடைக்கக்கூடிய உணவுப்பொருள் வழங்கல் குறையத் தொடங்கியபோது அம்மக்கள் அடுத்த நிலப்பகுதியாகிய காட்டு நிலமாம் முல்லைக்குக் குடிபெயர்ந்தனர்" [32] என்கின்றார். இதனால் மக்களின் உணவு தேடல் சார்ந்த நில இடப்பெயர்வினை அறியமுடிகின்றது.

"வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் தென்னிந்தியா ஏராளமான இனக்குழு மக்களைக் கொண்டிருந்தது. அவர்களுள் ஐந்து குழுவினர் மட்டும் இப்பகுதியின் புவியியல் பிளவுகளுக்கேற்பச் சிறப்பாக வேறுபடுத்திக் காட்டப்பெற்றுள்ளனர்"[33] என்னும் வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதர் கருத்தும் ஏற்புடையதே. பி.டி.சீனிவாச ஐயங்காரைப் போன்றே கபில்சுவெலபிலும் திணைக் கோட்பாடும் படிப்படியான தமிழ்ச் சமுதாயப் பரிணாம வளர்ச்சியின் வெளிப்பாடு [34] என்றே கருதுகின்றார்.

'சங்ககால வாழ்வியல்' என்னும் நூலில் என்.சுப்பிரணியன் சீனிவாச ஐயங்காரின் கருத்தை மறுத்துக் கூறியுள்ளார். "இந்நில மக்கள் முறையே வேடர், கள்ளர், இடையர், மீனவர், உழவர் என்பார் வாழிடங்கள் இவ்வாறு அமைக்கப்பட்ட ஒரு சமுதாய ஏற்பாடு தென்னிந்திய நாகரிக வளர்ச்சியின் வரலாற்றுத் தோற்றுவாயாக அவர் கண்டார். அதாவது முரட்டு மலைவாழ் மக்கள் ஆற்றோர நாகரிக மக்களாகப் பரிணமித்த வரலாறு என்று இதில் சிறிது குழப்பம் இருக்கிறது. இக்கொள்கை மேம்போக்காகப் பார்ப்பதற்கு எத்துணை விழுமியதாயினும் அது வரலாற்று உண்மையைத் தோற்றுவதாகத் தெரியவில்லை. வேடர், இடையர், மீனவர், கள்ளர், உழவர் என்போர் இன்று போலவேதான் அன்றும் ஒருவர் பக்கலில் ஒருவராக வாழ்ந்தனர். அவர்கள் காலவகையினானே ஒருவர்பின் ஒருவராகத் தோன்றியவர் அல்லர். உண்மையில் ஒரு உழவன் தானே ஒரு உழவனாகவோ மீனவனாகவோ மாறவில்லை. அவன் வேடனாய்ப் பிறந்து வேடனாகவே இறந்தவன். இவ்வாறு கூறப்பட்ட பரிணாமம் என்பது பரந்த அரங்கமான உலக வரலாற்றில் மானுடஇயல் வரலாற்றுத்

தொடக்ககால அமைப்புக்களில் நிகழக்கூடியதேயாம். ஆனால் அதனைக் குறுகிய அரங்கமான தமிழகத்தில் புகுத்தி அம்மாறுதல்களெல்லாம் இங்கும் நிகழ்ந்தன. அன்றியும் அதே வரலாற்றுக்கிரமத்தில் நிகழ்ந்தன எனல் பொருந்தாது. ஆனால் பெரும்போக்காக நோக்குமிடத்து வேடர் உழவரை விடச் சமுதாய வயதில் மூத்தவர் என்று கூறுவதோடு அமைதல் வேண்டும். தவிர குறிஞ்சி, பாலை, நெய்தல், முல்லை, மருதம் என்னும் வரிசைமுறை இப்பேராசிரியரால் (பி.டி.சீனிவாச ஐயங்கார்) எவ்விதக் காரணமும் இன்றிக் கொள்ளப்பட்டது" [35] என்பது என்.சுப்பிரமண்யனின் கருத்தாகும். முதலில் மலைப்பகுதியில் தொடங்கிய வாழ்வு பின்னர்ப் படிப்படியாக சமநிலம் நோக்கி வளர்ந்தது என்னும் கருத்து ஏற்புடையதாக இல்லை. பத்துப்பாட்டின் ஆற்றுப்படை நூல்களும் மதுரைக்காஞ்சியும் ஏககாலத்தில் நானில வாழ்வு நிலவியமைக்குச் சான்றளிக்கின்றன.

"சங்க இலக்கியத்தைத் துருவி ஆராய்ந்தால் ஒருவழிப்போக்கான பரிணாம வளர்ச்சிக் கொள்கையைச் சிறிது மாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது. இப்புவியில் அமைப்புகள் அக்காலத்தில் பௌதீக உண்மைகள் என்பதைச் சங்க இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன. குறுகியதாகவும் குறிப்பிட்ட இடத்திற்கு ஏற்றவாறும் பாடப்பெற்றுள்ள எட்டுத்தொகைப் பாடல் பிரிவுகளைச் சார்ந்த பாடல்களைவிடப் பத்துப்பாட்டிலுள்ள ஆற்றுப்படை நூல்கள் இவ்ஆராய்ச்சிக்குச் சிறப்பாக உதவுகின்றன" [36] என்பார் கார்த்திகேசு சிவத்தம்பி. இவர் ஆற்றுப்படை நூல்களில் காணலாகும் வெவ்வேறு நானில வாழ்வியல்புகளை நுட்பமாக எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

**போரும் பொருள் உற்பத்தியும்**

போர் முறைகள் வெட்சியில் தொடங்கி வாகையில் முடிவது புறத்திணைப் பாடல்கள் காட்டும் மரபான சிந்தனைப் போக்காகும்.

"பொதுவாகப் போர் என்பது ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியிலிருந்து தொடங்கியது. அதாவது பகைவர்களின் பசுக்களைக் கவர்தல் (நிரை கவர்தல்) அது போருக்கு ஒரு காரணமாகவும் ஒரு நியாயமாகவும் அமைந்தது" [37] என்பர்.

இம் மரபான சிந்தனைப் போக்கை மறுப்பதாக ஏககாலத்தில் நிலவிய நால்வகைப்பட்ட நிலப்பிரிவுகள் சார்ந்த வாழ்க்கை முறைகள் உள்ளன. மாட்டைப் பொருளாதாரமாகக் கொண்ட சமுதாயத்தில் மட்டுமே மாடு பிடி சண்டைகளான வெட்சி X கரந்தைப் போர்கள் நடைபெற்றன. செழிப்பான

நிலப்பகுதிகளைக் (மருதநிலம்) கைப்பற்றும் நிலையிலேயே நிலங்கவர் போர்கள் நிகழ்ந்துள்ளன. இவை விளைவயல்களைக் கவர்வதற்கான போர்களாகும். மருதவளத்தால் ஏற்பட்ட உடைமைகளைப் பாதுகாப்பதற்கான மதில்கள் கட்டப்பட்ட நிலையிலேயே மதில் தொடர்பான நொச்சி, உழிஞைப் போர்கள் நடந்தன. இப்போர்கள் குறிப்பிட்ட நிலப்பகுதிகளை அடிப்படையாகக் கொண்ட சமுதாயத்தின் பொருளாதார அடித்தளங்களாகும். இவ்வாறே குறிஞ்சி முதலான நானில வாழ்வுக்கு அவ்வவ் நிலக் கருப்பொருள்களை ஆதாரமாகக் கொண்டவையாகவும், அவ்வவ் நிலத்திற்கேற்ப வேறுபட்ட வாழ்க்கை முறையினை உடையனவாகவும் உள்ளன. ஒவ்வொரு திணையும் ஒவ்வொரு வகைப்பட்ட பொருள் உற்பத்தி முறையுடன் தொடர்புடையன.

திணைக் கவிதை மரபு என்பது சங்க இலக்கிய மரபு மட்டுமன்று; அது சமுதாய நடவடிக்கையாகும். திணை மரபு என்பது எதார்த்தம் சார்ந்த சமுதாய இயல்புச் செயற்பாடாகும். மாந்தர், கூற்றுக்கள், உள்ளுறை இவற்றைக் கடந்து (கவிதை மரபு), இயல்பான ஒரு சமுதாய நடவடிக்கை இருப்பதை சங்க அகப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

**திணைப் பாடல்களும் பொருளாதாரச் சூழலும்**

குறிஞ்சி முதலான ஒவ்வொரு திணையும் ஒவ்வொரு வகையான பொருளாதாரச் சூழலைக் கொண்டிருக்கின்றன. குறிஞ்சித்திணை மலைவளத்தை அடிப்படையாகக் கொண்டது. உழவர் உழாமல் கிடைக்கும் இயற்கை விளைபொருட்களான மூங்கில் நெல், வள்ளிக்கிழங்கு, பலா, தேன் ஆகியன குறிஞ்சி நில மக்களின் முக்கிய உணவுப்பொருட்களாகக் கபிலரால் (புறம்.109:3–8) குறிக்கப் பெற்றுள்ளன. இந்த இயற்கை விளைபொருட்களுடன் திணை முதலான வேளாண் விளைபொருட்களும் உற்பத்தி செய்து கொள்ளப்பட்டன.

காடும் காடு சார்ந்த பகுதியுமான முல்லைத்திணைச் சூழலில் இருவேறுபட்ட பொருளாதார அடிப்படைகள் இருந்தன. ஒன்று கால்நடை வளர்ப்பு; மற்றொன்று புன்செய் வேளாண்மை. பெரும்பாலும் கால்நடை வளர்ப்பே முல்லைநில மக்களின் முக்கியத் தொழிலாகவும் பொருளாதாரமாகவும் இருந்துள்ளன. ஆணும் பெண்ணும் இத்தொழிலில் ஈடுபட்ட போதும், இந்த பொருளாதார உற்பத்திச் செயல் பெண்களை மையமிட்டே இருந்தது. கலித்தொகைப் பாடல்களில் மோர் விற்றுவரும் பெண்கள் காட்டப்பட்டிருப்பது (கலி.108:26, 109:6, 110: 5–6) இதற்குத் தக்க சான்றாகும்.

கார்காலத்தில் தலைவன் திரும்புவதாகக் காட்டப்பெறும் முல்லைச்சூழல் வேளாண் உற்பத்தியில் முல்லைநிலச் சமுதாயம் ஈடுபட்டிருந்ததையே காட்டும். மழை இல்லாத காலத்தில் வேந்துவிடு தொழில் போன்ற தொழில்கள் மேற்கொள்ளப்பெற்றுள்ளன. விளைச்சல் இல்லாத காலங்களில் சமுதாயப் பொருளாதாரத் தேவையை நிறைவுசெய்யவே வினைவயின் பிரிவு மேற்கொள்ளப்பட்டது.

*"எருது காலுறாஅது இளையர் கொன்ற*
*சில்விளை வரகின் புல்லென் குப்பை"* *(புறம்.327:1–2)*

*"புன்புலச் சீறூர் நெல்விளை யாதே"* *(புறம்.328:2)*

என மூதின்முல்லைப் பாடல்கள் வரகு விளைச்சல், அதன் பற்றாக்குறை, முல்லையில் நெல் விளையாத நிலை ஆகியனவற்றைக் குறித்துள்ளன.

உணவுப் பற்றாக்குறை காரணமாகச் சீறூர் மன்னர் வேந்துவிடு தொழில்மேற் சென்றதை புறநானூற்றின் மூதின்முல்லை, வல்லாண் முல்லைப் பாடல்கள் (புறம்.314, 316, 318, 319, 320, 324, 326) சுட்டிக்காட்டுகின்றன.

மருதமும் நெய்தலும் இத்திணைகளிலிருந்து வேறுபட்டு உயர்ந்த நிலையிலான பொருளாதாரச் சிறப்பினைக் கொண்டிருந்தன. நெய்தல் நிலப்பகுதிகளில் வேளாண் பொருளாதாரத்திற்கு வாய்ப்பில்லை. அங்கு வணிகப் பொருளாதாரம் முதன்மை பெற்றுள்ளது. அரசுகள் தோன்றிய காலச்சூழலில் மருதமும் நெய்தலுமே முக்கியப் பொருளாதார மையங்களாக இருந்துள்ளன. மழையையும் நீரையும் நம்பிய வேளாண் பொருளாதாரத்தைவிட இயற்கை விளைபொருட்களை ஆதாரமாகக் கொண்ட வணிகப் பொருளாதாரம் முக்கிய வாழ்வாதாரமாக இருந்துள்ளது. நன்செய், புன்செய் என்னும் இரு வேளாண்மைகளில் நன்செய் வேளாண்மையே சிறப்புடைய பொருளாதாரம் ஆகும். நன்செய் வேளாண்மைக்கு அடிப்படையான நீர்வளத்தைப் பெருக்க வேண்டும் என்பதே நிலைத்த அரசுக்கான பொருளாதார அடிப்படையாகச் சங்க காலத்தில் அறிவுறுத்தப்பட்டன (புறம்.18) பட்டினப்பாலை (வரி. 129 – 137, 185 – 193), மதுரைக்காஞ்சி (வரி 81 – 5'85, 315 – 324), அகநானூறு (அகம். 127, 57, 123, 149, 152, 338) ஆகியனவற்றில் துறைமுகப் பட்டினங்களின் வளமும், ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்களின் பெருக்கமும் சிறப்பாகப் பேசப்பெற்றுள்ளன. இது அரசு சார்ந்த பொருளாதாரமாகும்.

சுங்கவரி (பட்டினப்.125, பெரும்பாண்.81) திரட்டப்பட்டுள்ளது. மருதமும் நெய்தலும் மேன்மக்களின் வளமான வாழ்விற்கு வழிவகுத்துள்ளன. மீன் பிடித்தலும் உப்பு விளைவித்தலும் நெய்தல்நில மக்களின் அடிப்படைப் பொருளாதாரமாகும். ஆயினும் இவை பெரிய அளவிலான பொருளாதாரத்திற்கு வழி வகுக்கவில்லை. வணிகப் பொருளாதாரமே சங்கச் சமுதாய வளர்ச்சியின் உச்சநிலையாகும். பட்டினங்கள் அரசு வருமானத்தைப் பெருக்கின.

***"....... ........ .......... மீக்கூறும்***
***வியன்மேவல் விழுச்செல்வத்து***
***இருவகையான் இசை சான்ற***
***சிறுகுடிப் பெருந் தொழுவர்***
***குடிகெழீஇய நானிலவரோடு***
***தொன்று மொழிந்து தொழில் கேட்ப***
***.... .... .... .... .... .... .... ....***
***அடுதிறலுயர் புகழ்வேந்தே"*** [38]

என்னும் மதுரைக்காஞ்சிப் பாடலடிகள் நெய்தல்நில வணிகம், மருதநில வேளாண்மையின் முக்கியத்துவத்தை முதன்மைப்படுத்துகின்றன. இப்பாடலடிகளுக்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் "உலகத்துத் தொழில்களில் மேலாகச் சொல்லும் உழவு, வணிகமென்கின்ற இரண்டு கூற்றாலே புகழ்மிக்க குடிமக்கள் பொருந்தின நான்கு நிலத்து வாழ்வாருடன்" [39] எனச் சுட்டிக்காட்டியதை பெ.மாதையன் மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

"பல்வேறு நிலப்பகுதிகளில் முதன்முதலில் பரவலாகத் தோன்றிய வேளாண் குழுக்களிடையே நிலவிய பண்பாட்டு முழுமையின் வேறுபாடே நாட்டின் பொதுநிலை வேறுபாட்டுக்குக் காரணமாகும்"[40] என்னும் கூற்றிற்கேற்ப கவர்ச்சி நிலப்பகுதியாக இருந்த மருதநிலமே சங்ககாலப் பொருளாதாரத்தின் அடித்தளமாகும்.

"நான்கு நிலப்பகுதிகளிலும் மிகக்குறைந்த அளவிலேயே மலைப்பகுதியில் (குறிஞ்சி நிலம்) வளர்ச்சி வாய்ப்பு அமைந்திருந்தது. இங்கு இயற்கை மீது முழு ஆதிக்கம் செலுத்தலும் அவ்வியற்கை வளங்களை நுண்ணிய அறிவுக்கூர்மையின் வாயிலாகப் பயன்படுத்திக் கொள்ளலும் இன்றி உற்பத்தியை அதிகரிப்பது சாத்தியமில்லை. நெய்தல் நிலப்பகுதியிலும் இதே நிலைமைதான். இந்தப் பகுதியின் இயல்பு மிகுந்த உற்பத்திக்கு ஏற்றதாக இல்லை. இப்பகுதியின் பொருளாதார வளர்ச்சி என்பது மீன் பிடிக்கப் பயன்படுத்தும் தொழில்

நுட்பங்களைப் பொறுத்தது. சங்க இலக்கியங்களில் ஆழ்கடல் மீன் பிடிப்புப் பற்றிய செய்திகள் இல்லை. பாடல்கள் வாயிலாக அறிவதெல்லாம் கடற்கரையோரம் மீன் பிடித்தலையும் உள்நாட்டில் மீன் பிடித்தலையும் உப்பு விளைவித்தலையுமே" [41] என்பர். இதனால் குறிஞ்சி, நெய்தல் நிலங்களின் பின்னடைவுப் பொருளாதாரத்தை அறியலாம். முல்லையும் மருதமுமே வேளாண் பொருளாதார வளர்ச்சிக்கு ஆதாரங்களாக இருந்துள்ளன. இவற்றுள் மருத வேளாண் பொருளாதாரத்தையே கா.சிவத்தம்பி தம் ஆய்வில் கருத்தில் கொண்டுள்ளார்.

**பாலைப்பிரிவு**

நானிலங்களில் வேளாண்மையை மையப்படுத்திய மருதமும் வணிகத்தை மையப்படுத்திய நெய்தலும் கோடைக்காலத்திலும் பொருளாரத் தன்னிறைவுடைய தளங்களாகும். எனவே கோடைக்காலம் இந்நில மக்களின் சமுதாய வாழ்க்கையில் பெரிய பாதிப்புக்களை ஏற்படுத்தவில்லை. கோடைக்காலத் தேவைகளை நிறைவு செய்துகொள்ள இயலாத சூழலால், அதற்கேற்ற பொருளாதார வளம் இல்லாததால் குறிஞ்சியிலும் முல்லையிலும் மட்டும் பொருளாதார முயற்சிகள் நடைபெற்றுள்ளன. இதற்குப் போதிய நீர்வளம் இன்மையே முக்கியக் காரணமாகும். வித்திட்டு வான் நோக்கும் பின்புலங்களாகவும், நீர் வளமற்ற புன்செய் நிலங்களாகவும் இப்பகுதிகள் இருந்தமையால் கோடையில் மிகப்பெரிய வறட்சி ஏற்பட்டன. இவ் வறட்சிக் காலப்பகுதியில் பொருள் தேட வேண்டிய கட்டாயத்தேவை இவ்விரு நிலச் சமுதாய மக்களுக்கும் இருந்தன. இத்தேவைக்கான முயற்சியாக அமைவதுதான் பாலைப்பிரிவு ஆகும்.

**பிரிவு வகைகள்**

'பிரிவு' என்னும் உரிப்பொருள் வகை பரந்துபட்டதாகும். ஓதல், பகை, தூது, பொருளீட்டல், பரத்தை என்பன தொடர்பான பிரிவுகள் அனைத்தும் பாலைத் திணைக்கு மட்டும் உரியன அல்ல. இவற்றுள் திணை சார்ந்த வேறுபாடுகள் உள்ளன. "கற்புக்குரிய பிரிவுகளும் ஓதலும் பரத்தையும் தவிர்ந்த ஏனையவை சிறுபான்மை களவின் கண்ணும் நிகழ்தலுண்டு. இருத்தல், இரங்கல், ஊடல் என்பவையும் தலைவன் பிரிந்தவழி நிற்கும் பொருளாதலின் ஓராற்றான் அவை பிரிவினுள் அடங்குமென்பது தோன்றப் பிரிதலை இரண்டாவதாக வைத்தோதினார் என அறிக. அவ்வாற்றான் அக ஒழுகலாறுகள் புணர்வு பிரிவு என்னும் இருவகையுள் அடங்குமாற்றிக." [42] "பரத்தையிற் பிரிவும் நாடுகாவல்

அறங்காவற் பிரிவுகளும் பாலையாகாமையின் ஓதல் முதலிய ஏனைய பிரிவுகள் இம்மூன்று பொழுதுகளின் பாங்காக நிகழும்" [43] எனக் கூறும் ச.பாலசுந்தரம் பாலையில் பரத்தையிற் பிரிவும் நாடுகாவற் பிரிவும் இல்லையென விலக்கியுள்ளார். ஆதலால் திணை வாரியாகப் பிரிவுகளும் ஆய்வுக்கு உட்பட்டன. சங்க இலக்கியங்களில் பரவலாக பொருள்வயிற் பிரிவு, பகைவயிற் பிரிவு, பரத்தையிற் பிரிவு என்னும் மூன்று பிரிவுகளே பேசப்பெற்றுள்ளன. இப்பிரிவுகள் முறையே பாலை, முல்லை, மருதத்திணைகள் சார்ந்தவை. இதற்குச் சான்றுகளாகச் சங்கப் பாடல்கள் உள்ளன.

**பாலையும் பொருள்வயிற் பிரிவும்**

'பிரிதல்' என்னும் உரிப்பொருள் பற்றியது எனப் பாலைத்திணையைப் பொதுவாகக் குறிப்பிட்டாலும் பொருட்பிரிவு இத்திணையில் முதன்மையானது. முல்லை, குறிஞ்சி என்னும் இருநிலம் சார்ந்தனவாகவும் அதன் செயற்பாடாகவும் பொருள்வயிற் பிரிவு இருந்துள்ளமையைக் காடிறந்தோர், மலையிறந்தோர் என வரும் பாலைப் பாடல்களின் குறிப்புக்கள் காட்டுகின்றன. குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு ஆகிய தொகை நூல்களில் வரும் கூற்றுக்களில் பொருள்வயிற் பிரிந்த, பொருள் கடைக்கூட்டிய நெஞ்சு. பொருள்முற்றி மறுத்தரா நின்றான், பொருள் வலித்த நெஞ்சு, பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைவன், பொருள்வயிற் பிரிந்து போகாநின்றான், பொருள்முற்றி வந்த தலைமகன் எனவரும் குறிப்புக்கள் பொருள்வயிற் பிரிவை வெளிப்படுத்துகின்றன. அகநானூற்றுப் பாடல்களில் சான்றுகள் வருமாறு:

| **கூற்றுத்தொடர்** | **அகநானூற்றுப் பாடல் எண்** |
|---|---|
| 1. "முன்னொரு காலத்து நெஞ்சினால் பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்தான் தலைமகன்" | அகம். 3 |
| 2. "பொருள்வழிப் பிரியக் கருதிய தலைமகன்" | அகம். 5 |
| 3. "தலைமகன் பொருள்வயிற் பிரிந்த இடத்து" | அகம். 11 |
| 4. "பொருள்வயிற் பிரியவற்ற தலைமகன்" | அகம். 13 |
| 5. "நெஞ்சினாற் பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன்" | அகம். 19 |
| 6. "பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன்" | அகம். 21 |
| 7. "பொருள் முற்றிய தலைமகன்" | அகம். 21 |

8. “தலைமகன் பொருள்வயிற் பிரிந்த இடத்து” அகம். 39

9. “தலைமகன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்கு” அகம். 41

10. “பொருள்வயிற் பிரிவு கடைக்கூட்டிய நெஞ்சிற்கு” அகம். 51

11. “பொருள்வயிற் பிரிந்த தலைமகன்” அகம். 57

12. “தலைமகன் பொருள்வயிற் பிரிய வேறுபட்ட” அகம். 61

13. “பொருள்வயிற் பிரிந்த வழி” அகம். 67

14. “பொருள்வயிற் பிரிந்து நீட்டித்தான்” அகம். 69

15. “பொருள்வயிற் பிரிந்த இடத்து” அகம். 71

16. “தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றான்” அகம். 73

17. “பொருள்வயிற் பிரிவர் என” அகம். 75

18. “பொருள்வயிற் பிரிந்த தலைமகன்” அகம். 79

19. “பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்கு” அகம். 131

20. “பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகனை” அகம். 143

21. “தலைமகன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்கு” அகம். 167

22. “பொருள் வலித்த நெஞ்சிற்கு” அகம். 193

23. “பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்கு” அகம். 199, 225, 377

24. “பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன்” அகம். 239

25. “பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினை” அகம். 245, 327

26. “பொருள்வயிற் பிரிந்து” அகம். 279

27. “பொருள்வயிற் போகாநின்ற” அகம். 291, 297

28. “பொருள்வயிற் பிரியக் கருதிய” அகம். 293

29. “தலைமகன் பொருள் கடைக்கூட்டிய” அகம். 335

30. “தலைமகன் பொருள்வயிற் பிரிந்து” அகம். 337

31. “பொருள்முற்றி மறுத்தரா நின்ற” அகம். 351

32. “பொருள்வயிற் பிரிந்த” அகம். 353

*33. “பொருள்வயிற் பிரிந்து”* *அகம். 361, 371*

*34. “பொருள்முற்றி வந்த தலைமகன்”* *அகம். 379*

*எனப் பாடலின் புறத்தே உள்ள கூற்றுக்களிலும், பாடல்களிலும் பொருள்வயிற் பிரிவு பற்றிய குறிப்புக்கள் இடம்பெற்றுள்ளன.*

**அகநானூற்றின் பாலைப் பாடல்களில்**

*‘பொருட்பிணி சென்று இவண் தருமார்’ (அகம்.27), ‘பிறர்நகு பொருள்’ (அகம்.33), ‘ஏதில் பொருட்பிணி’ (அகம். 43, 51), ‘அரும்பொருட் பிணி’ (அகம். 271), ‘பொருளே காதலர் காதல்’ (அகம்.53), ‘அருஞ்செயற் பொருட்பிணி’ (அகம்.59) ‘செய்பொருள் திறவர் ஆகி’ (அகம்.69), ‘அகன்றுசெய் பொருட்கு’ (அகம்.81), ‘நம்நீத்து உறையும் பொருட்பிணி’ (அகம்.115), ‘அரிதுசெய் விழுப்பொருள்’ (அகம்.149), ‘முயன்றுசெய் பெரும்பொருள்’ (அகம்.229), ‘பொருள்வலின் செலின்’ (அகம்.239), ‘ஒண்பொருள் தருமார்’ (அகம்.245), ‘பொருள் புரிந்து’ (அகம்.247), ‘நம்மினும் வலித்தாத் தூக்கிய பொருள்’ (அகம்.265), ‘அவனதுஆக பொருள்’ (அகம்.337), ‘பல்பொருள் வேட்கையின் செலவு’ (அகம்.379), ‘அரும்பொருள் வேட்டம் எண்ணி’ (அகம்.389) எனத் தலைவனின் பொருள் வேட்கை மற்றும் பொருள்வயின் பிரிவு குறித்த குறிப்புக்கள் பரவலாக இடம்பெற்றுள்ளன.*

**குறுந்தொகையின் பாலைப் பாடல்களில்**

*‘பொருள்வயின் பிரிவோர்’ (குறுந்.20), ‘பொருள்வயின் பிரிவார் ஆயின்’ (குறுந்.174), ‘எய்தினர் கொல்லோ பொருளே’ (குறுந்.180), ‘கேடில் விழுப்பொருள் தருமார் காடிறந்தோர்’ (குறுந்.216), ‘செய்பொருள் தர நசைஇச் சென்றோர்’ (குறுந்.254), ‘காமர் பொருட்பிணி போகிய’ (குறுந்.255), ‘அரும்பொருள் தரற்கே’ (குறுந்.331), ‘நிலையா பொருட்பிணிப் பிரிந்திசினோரே’ (குறுந்.350), ‘அரும்பொருள் என்னார்’ (குறுந்.395) எனத் தலைவனின் பொருள் வேட்கைக் குறிப்புக்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றுடன் “ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லெனச் செய்வினை கைம்மிக எண்ணுதி’ (குறுந்.63), ‘வினையே ஆடவர்க்கு உயிரே’ (குறுந்.135), ‘உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்’ (குறுந்.283) என்னும் தொடர்களும் இடம்பெற்றுள்ளன. வினையை அடிப்படைச் செயற்பாடாகக் கொள்ள வேண்டிய ஆடவர்கள் உடைமையாளர்களாக இருப்பினும், அவ் உடைமையைச் செலவிடாமல் அப்படியே பாதுகாத்து வைப்பதற்காகவும், இல்வாழ்க்கைக்குத் தேவையான பொருட்செலவிற்காகவும்*

*தலைவன் தலைவியைப் பிரியும் கடமை குறுந்தொகைப் பாடலடிகளில் கூறப்பெற்றுள்ளன.*

**நற்றிணையின் பாலைப்பாடல்களில்**

*'புணராது பொருளே, பொருள்வயிற் பிரியின் புணராது புணர்வே' (நற்.16) 'மன்னாப் பொருட்பிணிப் பிரிதும்' (நற்.46), 'மன்னாப் பொருட்பிணி முன்னி' (நற்.71) 'காமர் பொருட்பிணி போகிய' (நற்.186), 'அரும்செயல் பொருட்பிணிப் பிரிந்தனராக' (நற்.193), 'செய்பொருட்கு அகன்றனர்' (நற்.246), 'அரும்பொருட் கூட்டம்' (நற்.252), 'பொருள்வலி நெஞ்சம்' (நற்.308), 'அரும்பொருட்கு அகன்ற காதலர்' (நற்.333), 'பிறிதுஉறை மரபின் பொருள் படைத்தோர்' (நற்.337), 'பொருள்வயின் யாரோ பிரிகிற்பவர்' (நற்.391) எனத் தலைவனின் பொருட்பிரிவு பற்றிய குறிப்புக்கள் பரவலாகக் காணப்படுகின்றன.*

**ஐங்குறுநூற்றின் பாலைப்பாடல்களில்**

*'அரும்பொருள் செய்வினை' (ஐங்.302), 'நின்பொருளே (ஐங்.307), 'நீடிய பொருளே' (ஐங்.317), 'சென்றோர்க்குப் பொருளே இல்பொருட் பிணி முற்றிய' (ஐங்.336), 'அருஞ்செயல் பொருட்பிணி' (ஐங்.355), 'செய்பொருட் செலவு' (ஐங்.357) எனப் பாலைப் பிரிவின் நோக்கம் பொருள் ஈட்டலே எனத் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன.*

*எட்டுத்தொகையின் அகநூல்களில் பொருள்வயிற் பிரிவு செய்வினை, ஆள்வினை, இதுவே வினை எனக் கூறப்பெற்றுள்ளன. பொருள்வயிற் பிரிவைப் பாலைத் திணைக்கே உரியதாகக் கூறினும் அது பிற திணைகளுக்கும் உரியதாகத் தொகைநூல்களில் குறிப்புக்கள் உள்ளன. சான்றாக, "பொருள்முற்றிப் புகுந்த தலைமகன் எம்மை நினைத்தும் அறிதிரோ எனத் தோழிக்கும் சொல்லியது" (குறுந்.99) என முல்லைத் திணையிலும்,*

*"பொருள்வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச் செலவு அழுங்கியதூஉம் ஆம்" (குறுந்.101) எனக் குறிஞ்சித் திணையிலும், "பொருள்முற்றி வந்த தலைமகனை உடைய கிழத்தி காமம் மிக்க கழிபடர் கிளவியால் கூறியது" (குறுந்.107) என மருதத் திணையிலும், "பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது" (குறுந்.376) என நெய்தல் திணையிலும் ஆகிய குறுந்தொகைப் பாடல்களில் வரும் கூற்றுக்கள் அமைந்திருப்பதைக் கூறலாம். இப்பாடல்களில் பொருள்வயிற் பிரிவு பற்றிய நேரடியான குறிப்புக்கள் இல்லை. குறுந்தொகையின் 99ஆம் பாடலில் 'மருண்டனென் அல்லனோ உலகத்துப் பண்பே' எனவும்,*

*376ஆம் பாடலில் 'யாணர் ஊரனொடு வதிந்த ஏம இன்துயில்' எனவும் குறிப்புக்கள் உள்ளன. பொருட்பிரிவு பற்றிய செய்திகள் இல்லாத இப்பாடல்களுக்குப் பொருள்வயின் பிரிவு பற்றிய கூற்றுக்கள் தரப்பெற்றிருப்பது மேலாய்விற்குரியது.*

**முல்லைத்திணையின் வினைவயிற் பிரிவு**

*'பிரிவு' பாலைக்கு மட்டும் உரியதல்ல; பொருள்வயிற் பிரிவும் தலைவியை உடன்கொண்டு பெற்றோரைப் பிரியும் உடன்போக்கும், பொருள்வயிற் பிரிந்த காலத்துத் தலைவி தலைவனது பிரிவால் ஆற்றாமல் வருந்துவதும் பாலைப் பிரிவாகக் கொள்ளப்பெற்றுள்ளன. இப் பொருள்வயிற் பிரிவுக்கு மாறாக வேந்தனின் வினை காரணமாகப் பிரியும் தலைவனின் பிரிவும் தலைவன், தலைவி ஆகிய இருவருக்குமே பிரிவுத் துயரமாக அமைந்துள்ளன.* ***இந்த வினைவயிற் பிரிவு பாலையன்று.*** *இது மரபாக முல்லைத் திணைக்கு உரியதாகும். முல்லைத் திணைப் பாடல்களிலும் புறப்பாடல்களிலும் பொருளாதாரத் தேவையின் காரணமாகப் பிரிந்த பிரிவாக இப்பாடல்களில் கூறப்பெற்றுள்ளன. புறநானூற்றின் மூதின்முல்லை, வல்லாண் முல்லைப் பாடல்கள் முல்லை நிலம் சார்ந்த சமுதாயத்தின் செயற்பாடாக வேந்துவிடு தொழிலைக் கூறியுள்ளன.*

*ஐங்குறுநூற்றின் முல்லைத் திணையில் இடம்பெறும் பாசறையைப் பற்றிய பத்துப் பாடல்களிலும் பாசறைத் தலைவனின் மனப்போக்குகள் நுணுக்கமாக வெளிப்படுத்தப் பட்டுள்ளன. பகைவினை முடித்துத் தலைவியைக் காணவேண்டும் என்ற தலைவனின் மனநிலை இப்பாடல்களில் சிறப்பாகக் காணப்படுகின்றன. வேந்துவிடு தொழில் காரணமாகப் பிரிந்த தலைவனின் பிரிவு தொடர்பான தலைவியின் மனப்பாங்கு பருவங்கண்டு கிழத்தி உரைத்த பத்து, தோழி வற்புறுத்து பத்து ஆகிய பத்துக்களில் சிறப்பாகப் பேசப் பெற்றுள்ளன. கா.சிவத்தம்பி பாலைப் பிரிவினை,*

*"கணவனின் பயணம் குறித்த மனைவியின் கவலை பாலைக்குரிய ஒழுக்க வடிவமாகும். மலைப்பகுதியின் பருவ மாற்றமே பாலை ஆகும். பிரிவு பற்றிய பாடல்களில் கணவனைக் குறித்த மனைவியின் கவலையானது அவன் கடந்து செல்லவேண்டிய காடுகள், மலைகளையும் அவ்வழியிலுள்ள கொள்ளைக்காரர் களையும் குறித்த வருணனைகளால் நுட்பமாக விளக்கிக் காட்டப்பெறுகின்றன. இப்பயணத்தின் நோக்கமும் நுட்பமான கலைச்சொற்களால் குறிப்பிடப்படுகின்றன. செய்பொருள், வினை என்பன இச்சொற்களாகும்.*

அரசனுக்குரிய கடமையும் வினையுள் அடங்கும். ஆயினும் செய்பொருள் முக்கியப் பொருளாதார முயற்சியின் விளைவாகும்” [44] என விளக்கிக் கூறியுள்ளார். இதனை ஓரளவுக்கு முல்லைத் திணைப் பாடல்களோடும் பொருத்திக் காணலாம். முல்லைப் பாடல்களில் ஒரு சில இடங்களில் மட்டுமே பொருள்வயிற் பிரிவைக் குறிக்கின்றது. பெரும்பாலான இடங்களில் ‘வினை’ என்பது வேந்துவிடு தொழில் பாசறைத் தொழில் பற்றியதே.

**பாலைத் திணையில் மருதம், முல்லைப் பின்னணிகள்**

பாலைத் திணையின் சமுதாயப் பின்னணியையும், கவிதையியலின் தேவையையும் ஆய்வாளர், “வருடத்தின் ஒரு பகுதியில் நிகழும் ஒரு நடைமுறையைக் குறிப்பதற்கு அந்தச் செய்யுள் மரபிற்குத் தளமான பிரதேச நிலைப்பாட்டை எடுத்துக் கூறவேண்டிய இலக்கியத்தேவை இருப்பதனாலேயே பாலையை ஒரு தனிநிலமாகக் கூற வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்த வெப்ப காலத்திலேயே மக்கள் வேந்தனின் ஏவுதல் காரணமாகவும் பொருளீட்டல் காரணமாகவும் பிரிந்து சென்றனர்” [45] என்பர். **விளைச்சல் இல்லாத வேனிற்காலத்தில் முக்கியமாகப் பொருளீட்டல் காரணமாகப் பிரியும் பிரிவே பாலையின் பின்புலமாகப் பாடல்களில் காட்டப்பெற்றுள்ளன.** இதனை எந்நிலப் பின்னணியிலும் பாடலாம். சிறப்பாகக் குறிஞ்சியே பாலைப் பின்னணியாக உள்ளது. முல்லை, பிரிதல் பற்றியதாக இருப்பினும், அப்பிரிவு பெரும்பாலும் வினைவயிற் பிரிவேயாகும். பொருள்வயிற்பிரிவும் ஒருசில பாடல்களில் இடம் பெற்றுள்ளன. பொருள்வயிற் பிரிவு எந்தநிலப் பின்னணியிலும் பாடப்பெறலாம் என்பதற்கு **அகநானூற்றின் 13ஆம் பாடல் மிகச்சிறந்த சான்றாகும்.** ‘பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகனைத் தோழி செலவழுங்குவித்தது; உடன்பட்டதூஉம் ஆம்” என்னும் கூற்றில் இப்பாடல் அமைந்துள்ளது.

***“கழிமழை பொழிந்த பொழுதுகொள் அமையத்துச்***
***சாயலின் துறுணை இவட்பிரிந் துறையின்***
***நோயின் றாக செய்பொருள் வயிற்பட***
***மாசில் தூமடி விரிந்த சேக்கைக்***
***கவவின் புன்மைக் கழிக வளவயல்***
***அழல்னுதி யன்ன தோகை ஈன்ற***
***கழனி நெல்லின் கவைமுத அலங்கல்***
***நிரம்பகன் செறுவில் வரம்பணையாத் துயல்வரப்***
***புலம்பொடு வந்த பொழுதுகொள் வாடை***

*இலங்குபூங் கரும்பி னேர்கழை யிருந்த*
*வெண்குருகு நரல வீசும்*
*நுண்பல் துவலைய தண்பனி நாளே"* *(அகம்.13:13–24)*

இப்பாடலடிகளில் பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவனின் மருதநிலப் பின்னணி காட்டப்பெற்றுள்ளது. இவ்வாறே அகநானூற்றின் 37ஆம் பாடலிலும் மருதப்பின்னணி இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் "மாண்நலம் நுகரும் துணை உடையோர்க்கே!" (அகம்.37:18) எனப் பிரிவுக் குறிப்பு இடம் பெற்றுள்ளது. அகநானூற்றின் 97ஆம் பாடலில்,

*"தற்சிர நீங்கிய அரும்பத வேனில்*
*அறலவிர் வார்மணல் அகல்யாற் றடைகரைத்*
*துறையணி மருது தொகல்கொள வோங்கிக்*
*கவிழ்தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்*
*திணர்தை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்*
*புகைபுரை அம்மஞ் சூர*
*நுகர்குயில் அகவுங் குரல்கேட் போர்க்கே"* *(அகம்.97:17–23)*

என மருதப் பின்னணி காட்டப்பெற்றிருப்பினும், "அருஞ்சுரம் இறந்த கொடியோர்க்கு" எனப் பொருள்வயிற் பிரிவு சுட்டப்பெற்றுள்ளது. எனவே அகநானூற்றின் இப்பாடல்களின் திணைப் பின்னணி மருதமாக இருப்பினும் பிரிவு பற்றிய காரணத்தால் இப்பாடல்கள் பாலை எனத் திணைக்குறிப்புப் பெற்றுள்ளன.

*"தளிமயங் கின்றே தண்குரல்எழிலி யாமே*
*கொய்யகை முல்லை காலொடு மயங்கி*
*மையிருங் கான நாறு நறுநுதற்"* *(அகம்.43:8–10)*

*"ஏனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப்*
*பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி*
*விடுபொறிச் சுடரின் மின்னி அவர்*
*சென்ற தேஎத்து நின்றதால் மழையே"* *(அகம்.73:14–17)*

என்னும் அகநானூற்றுப் பாடல்களில் முல்லைநில வருணனையும் கார்கால வரவும் பாடப்பெற்றிருப்பினும், இவ்விரண்டு பாடல்களிலும் பிரிவுக் குறிப்பும் இடம்பெற்றுள்ளன. 43ஆம் பாடலில் 'ஏதில் பொருட்பிணி போகி' எனவும், 73 ஆம் பாடலில் சென்ற 'தேஎம்' எனவும் பொருள்வயிற் பிரிவும், பொருள்வயிற் பிரிவில் சென்ற தேசமும் குறிப்பிடப்பெற்றுள்ளன. இப்பாடல்களின்

*நிலப்பின்னணி முல்லையாக இருப்பினும், பொருட்பிரிவும் குறிப்பும் இடம்பெற்றிருப்பதால் இவ்விரண்டும் பாலைப் பாடல்களாகவே குறிக்கப்பெற்றுள்ளன.*

*கார்கால வரவினைக் கூறும் அகநானூற்றின் 139ஆம் பாடலில்,*

***"இன்னும் வாரா ராயின் நன்னுதல்***
***யாதுகொல் மற்றவர் நிலையே காதலர்***
***கருவிக் காரிடி இரீஇய***
***பருவ மன்அவர் வருதுமென் றதுவே"     (அகம்.139:16–19)***

*எனத் தலைவன் வருவேன் என்று சொன்ன காலம் 'இது அன்று' என மறுத்துக் கூறப்பெற்றுள்ளது. அகநானூற்றின் 183ஆம் பாடலில்,*

***"சென்றுசே ணிடையர் ஆயினும் நன்றும்***
***நீடலர் என்றி தோழி பாடான்று"     (அகம்.183:4–5)***

*எனப் பிரிவு கூறப்பட்டிருப்பதுடன் கார்கால வரவும் பாடப்பெற்றுள்ளன. இவ்வாறு வரும் பாடல்கள் பருவ வரவின்கண் தலைவி வருந்தும் முல்லைத்திணைப் பாடல்களைப் போன்று அமைந்திருப்பினும், பிரிவு பற்றிய குறிப்புக்களால் பாலைத்திணைப் பாடல்களாகக் கொள்ளப்பெற்றுள்ளன. இவ்வாறு பாலைப்பிரிவு மருதப் பின்னணியிலும் முல்லைப் பின்னணியிலும் பாடப்பெற்றிருப்பதைக் காணலாம்.*

**தொகுப்புரை**

- *காலத்தை முதற்பொருளாகக் கொண்ட பாலைத்திணைக்கு நிலம் இல்லை. நண்பகல், வேனில், பின்பனி ஆகிய பொழுதுகள் பாலைத்திணைக்கு உரியது. காதல் காட்சிக்குப் பாலைப் பின்புலம் ஏற்றதல்ல; பாலைப் பாடல்களின் மாந்தர்கள் ஆறலைக் கள்வர்களும் சூறையாடிகளும் அல்லர். குறிஞ்சி முதலான நானில மக்களின் பொருட்பிரிவுச் சூழல்களும் அதற்கான காரணங்களுமே பாலைப் பாடல்களின் வருணனைகளில் புனையப்பெற்றுள்ளன. பாலை என்பது ஒருசார் வழி நிலமாகும். அது நிலையான வாழ்நிலம் அன்று.*
- *இருப்பிடமாகவும் வாழ்விடமாகவும் இருந்த குறிஞ்சியையும் முல்லையையும் அடுத்த வளம் குன்றிய வறண்ட நிலப்பகுதியை பாலை. நச்சினார்க்கினியர் 'பாலை' என்னும் சொல் 'புரிதல்' என்னும் பொருளுடையது என்பார்.*

- *சங்க இலக்கியத்தின் 1862 அகப்பாடல்களுள் 530 பாடல்கள் பாலைத் திணைப் பாடல்களாகும். பாலைத்திணைப் பாடல்களின் பாடுபொருள் கட்டமைப்பிற்கு தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடும் பிரிவு 422 பாடல்களிலும், தலைவி தலைவனுடன் தன் பெற்றோரையும் தமரையும் பிரிந்து செல்லும் உடன்போக்கு 108 பாடல்களிலும் அடிக்கருத்துக்களாக அமைந்துள்ளன.*
- *நெய்தல் திணையின் பாடல்கள் சிலவற்றிலும் பாலைக்குரிய உடன்போக்குத் துறை கலந்து வந்துள்ளன. 'களவு' என்பது குறிஞ்சி, நெய்தல் நில மக்களுக்குப் பொதுவானதாக இருப்பதால் அந்நில மக்களுக்குரிய சிறப்பான பண்பாட்டமைவாகக் கொள்ளலாம். உடன்போக்குத் துறையைப் பாலைக்குரியதாகக் கொள்வது பொருத்தமாக உள்ளது.*
- *பாலைப் பாடல்களில் தலைவனது பொருட்பிரிவே முதன்மையானது. ஆயினும் இரண்டு பாடல்களில் தலைவனின் 'போர்வயிற் பிரிதல்' (கலி.26,31) கூறப்பெற்றுள்ளன.*
- *பிரிவு வகைகளில் பாலைத்திணையின் பொருட்பிரிவே நீண்ட காலத்திற்கும் நெடுந்தொலைவிற்கும் உரியது. அகநானூற்றுப் பாடலில் (அகம்.314) பாலைக்குரிய பொருட்பிரிவு ஓராண்டுக் காலம் எனத் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன.*
- *சங்கப் புலவர்கள் ஆழ்ந்த இரங்கல் பொருண்மையின் காரணமாகவே அவலங்களும் துயரங்களும் நிறைந்த பாலைப் பாடல்களை மிகுதியாக இயற்றியுள்ளனர். இதனை உரிப்பொருள் பின்புலமாக மட்டும் கொள்ள இயலாது. பிறதிணைப் பாடல்களிலும் அவலமே நுணுக்கமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. பாலைத்தலைவி, தலைவன் தன்னிடம் கொண்டுள்ள காதலைவிடப் பொருளின் மேல் கூடுதல் பற்றுக் கொண்டுள்ளதாகக் கருதி ஆற்றாமையால் வருந்துகின்றாள்.*
- *தொல்காப்பியர் நிலமற்ற பாலைத்திணையை ஏனைய நான்கு திணைகளுக்கும் பொதுவான பொதுத்திணையாகக் குறித்துள்ளார்.*
- *பாலைப் பாடல்களில் பின்பனிக்காலம் தலைவி நீண்ட பிரிவில் மகிழ்ச்சி இன்றி இருப்பதாகவும், பிரிந்துசென்ற தலைவன் திரும்பிவரும் காலமாகவும்*

புனையப்பெற்றுள்ளன. பொதுவாக பாலைப் பாடல்கள் நான்கு நிலத் தலைவர்களின் பிரிவு பற்றிய பாடல்களே ஆகும்.

- ❖ நிலமுடைய நான்கு திணைப்பாடல்கள் அந்நிலங்கள் சார்ந்து வாழ்ந்த மக்களின் வாழ்க்கையை விளக்குகின்றன. பாலைப்பாடல்கள் தலைவன் பொருள் தேடிச் சென்ற பாலையின் சுரவழி குறித்த வாழ்க்கையை விளக்குகின்றன. பாலைப் பாடல்கள் களவுக்கும் கற்புக்கும் பொதுவானவையாகும்.

- ❖ தலைவனின் பொருள்வயிற் பிரிவு, உடன்போக்கு (தலைவன் – தலைவி), தலைவனது பொருட்பிரிவில் செலவழுங்குவித்தல், தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்குதல், தோழி தலைவனைச் செலவழுங்குவித்தல், தலைவன் தலைவியை விட்டுப் பிரிதல், தலைவனது பிரிவில் தலைவியின் நிலை, வினை முடித்த தலைவன் வரவு குறித்த தோழி கூற்றுக்கள், உடன்போக்கு மாந்தர்களும் அவர்தம் செயல்களும் ஆகியன பாலைப் பாடல்களின் பாடுபொருள்களும் கட்டமைப்புகளாகவும் உள்ளன.

- ❖ இளவேனிலும் கோடையும் உடன்போக்காகிய பாலைத்திணையின் ஒரே நிகழ்வுக்குப் பொருந்தும் பின்னணிகளாகப் பாலை பாடிய புலவர்களால் அமைக்கப்பெற்றுள்ளன. நடப்பியல் சார்ந்து பார்த்தால் தலைவன் தலைவியர் எப்பருவத்திலும் உடன்போக்குச் செல்லலாம்.

- ❖ தலைவன் தலைவியைப் பிரிந்து கடல்வழிப் பயணம் செய்தமைக்குத் திணைப் பாடல்களில் சான்றுகள் இல்லை. அகநானூற்றுப் பாடலொன்றே (அகம்.255) இதற்குச் சான்றாக உள்ளது. தலைவன் கடற்பயணம் மேற்கொள்கின்றான்.

- ❖ பாலை வருணனைகள், பாலையில் புறத்திணைக் கலப்பு, திணை மரபும் சமுதாயப் பின்புலமும், போரும் பொருள் உற்பத்தியும், திணைப் பாடல்களும் பொருளாதாரச் சூழலும், பாலைப்பிரிவு, பிரிவு வகைகள், பாலையும் பொருள்வயிற் பிரிவும், முல்லைத் திணையின் வினைவயிற் பிரிவு, பாலைத் திணையில் மருதம், முல்லைப் பின்னணிகள் என்பன குறித்த செய்திகள் தக்க சான்றுகளுடன் விளக்கப்பெற்றுள்ளன.

**குறிப்புக்கள்**

1. அம்மன்கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம் – மரபும் மாற்றமும், ப.18.
2. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், ப.150.
3. தி.வே.கோபாலையர், ந.அரணமுறுவல் (பதி.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம், அகத்.நூற்.பா.9, நச்சினார்க்கினியம், மூன்று பகுதிகள், ப.184.
4. தொல்.பொருள்.இளம் (உ.ஆ), அகத்.நூற்.5.
5. சிறுபாண். 8–12.
6. நச்சினார்க்கினியர் உரை, மதுரைக்காஞ்சி, வரி.314–315.
7. குறிஞ்சிப்.146–147.
8. 'தமிழண்ணல்' இராம.பெரியகருப்பன், சங்கமரபு, ப.219.
9. தொல்.பொருள்.இளம் (உ.ஆ), கற்பு. நூற்.187.
10. மேலது, நூற்.188.
11. தொல்.பொருள்.இளம் (உ.ஆ), பொருள்.நூற்.228.
12. தொல்.பொருள்.இளம் (உ.ஆ), அகத்.நூற்.2.
13. மேலது, நூற்.11.
14. P.T.Srinivasa Iyengar, History of the Tamils, Part - I.P.141.
15. சிலம்பு. காடுகாண்காதை, வரி.63–66.
16. தொல்.பொருள்.இளம் (உ.ஆ), அகத்.நூற்.11.
17. மேலது, நூற்.12.
18. பெரும்பாண்.82–116.
19. தொல்.பொருள்.நச்சி (உ.ஆ.), அகத்.நூற்.2 இன் உரை விளக்கம்.
20. தொல்.பொருள்.இளம் (உ.ஆ), களவு.நூற்.139.
21. தொல்.பொருள்.இளம் (உ.ஆ.), அகத்.நூற்.27.
22. மேலது, நூற்.28.
23. மேலது, நூற்.29.
24. மேலது, நூற்.30.

25. தொல்.பொருள்.இளம் (உ.ஆ.), அகத்.நூற்.48.

26. தொல்.பொருள்.இளம் (உ.ஆ.), கற்பு.நூற்.183.

27. தொல்.பொருள்.இளம் (உ.ஆ), கற்பு.நூற்.184.

28. தமிழண்ணல், சங்கமரபு, ப.231.

29. தி.வே.கோபாலையர், ந.அரணமுறுவல் (பதி.ஆ.), தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், மூன்று பகுதிகள், ப.28.

30. கா.சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, ப.89.

31. பி.டி.சீனிவாசஐயங்கார் (மூ.ஆ.), கா.கோவிந்தன் (மொ.பெ.ஆ.), தமிழர் வரலாறு – இரண்டாம் பகுதி, பக்.15–16.

32. மேலது, ப.21.

33. V.R.Ramachandra Dikshithar, Studies in Tamil Literature and History, P.178.

34. Kavil ‘zvelabil, Tamil Poetry 2000 years ago, Tamil Culture, Volume 10.

35. ந.சுப்பிரமண்யன், சங்ககால வாழ்வியல், ப.2‘305.

36. கா.சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, ப.33

37. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.164.

38. மதுரைக்.119–124, 130.

39. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.154.

40. கா.சிவத்தம்பி, மு.நூ., ப.41.

41. கா.சிவத்தம்பி, மு.நூ., ப.38.

42. ச.பாலசுந்தரம் (உ.ஆ.), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை – செய்யுளியல் – மரபியல், ப.39.

43. ச.பாலசுந்தரம் (உ.ஆ.), தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை – செய்யுளியல் – மரபியல், ப.26.

44. கா.சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, ப.46.

45. கா.சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.159.

# இயல் : 3

## பாடிய புலவர்களும் பாடற்பொருண்மைகளும்

**முன்னுரை**

*முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய அகத்திணைகளைவிட மிகுந்த எண்ணிக்கையில் பாடல்களைக் கொண்டிருப்பது பாலைத் திணையாகும். மொத்தமுள்ள 1862 அகப்பாடல்களில் 530 பாடல்கள் பாலைத்திணைப் பாடல்களாகும். தனிப்பாடல்கள் தொகை நூலாகத் தொகுக்கப் பெற்றனவற்றுள் குறுந்தொகையில் 90, நற்றிணையில் 104, அகநானூற்றில் 200 என்ற எண்ணிக்கையில் பாலைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. பாடல்கள் தொகையாகத் தொகுக்கப்பட்ட ஐங்குறுநூற்றில் 100 பாலைப் பாடல்களும், கலித்தொகையில் 35 பாலைப் பாடல்களும் உள்ளன.*

*தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடச் செல்லும் பொருண்மையில் 422 பாலைப் பாடல்களும், தலைவி தன் பெற்றோரை நீங்கித் தலைவனோடு சென்று தலைவனது ஊரில் அவனை மணந்துகொள்ளும் உடன்போக்குத் துறையில் 108 பாலைப் பாடல்களும் உள்ளன.*

*இப் பாலைத்திணைப் பாடல்களை இருநூறுக்கும் மேற்பட்ட புலவர்கள் இயற்றியுள்ளனர். இவர்களுள் பாலைபாடிய பெருங்கடுங்கோ, வெள்ளிவீதியார், ஓதலாந்தையார், ஔவையார், ஒரோடகத்துக் கந்தரத்தனார், கயமனார், கல்லாடனார், கழார்க்கீரன் எயிற்றியார், காவல்முல்லைப் பூதனார், குடவாயில் கீரத்தனார், குன்றியனார், நக்கீரர், பரணர் ஆகிய புலவர்கள் பாலைத்திணைப் பாடல்களின் இலக்கியச் செந்நெறிகள், இலக்கிய மரபுகள், அடிக்கருத்துகள், போக்குகள், பாலைத்திணைப் பாடல்களின் தனித்தன்மைகள் ஆகியனவற்றைச் சிறப்பாகத் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். இவர்களைப் பின்பற்றியே ஏனையப் புலவர்களும் பாலைத்திணைப் பாடல்களை இயற்றியுள்ளனர். அகநானூற்றின் பாலைத்திணையில் சரிபாதியாக பாலைப் பாடல்கள் (இருநூறு பாடல்கள்) அமைந்துள்ளன. மாமூலனார் 27 பாடல்களையும் (அகம்.1, 15, 31, 55, 61, 65, 91, 97, 101, 127, 187, 197, 199, 201, 211, 233, 251, 265, 280, 295, 311, 325, 331, 347, 349, 559, 393), எயினந்தை மகனார் இளங்கீரனார் 9 பாடல்களையும் (அகம்.3, 225, 239, 289, 299, 361, 371, 395, 399), பாலை*

பாடிய பெருங்கடுங்கோ 12 பாடல்களையும் (அகம்.5, 95, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379), கயமனார் 11 பாடல்களையும் (அகம்.7, 17, 145, 189, 195, 219, 221, 259, 321, 381, 397), மதுரை மருதன் இளநாகனார் 12 பாலைப்பாடல்களையும் (அகம்.77, 121, 131, 193, 245, 255, 269, 283, 297, 343, 365, 387), குடவாயிற் கீரத்தனார் 8 பாடல்களையும் (அகம். 35, 79, 119, 129, 287, 315, 345, 385), நக்கீரர் 8 பாடல்களையும் (அகம். 57, 93, 141, 205, 207, 249 369, 389), கல்லாடனார் 6 பாடல்களையும் (அகம். 9, 83, 113, 171, 209, 333), காவன் முல்லைப்பூதனார் 5 பாடல்களையும் (அகம். 21, 151, 241, 293, 391), ஔவையார் 4 பாடல்களையும் (அகம். 11, 147, 271, 303), கழார்க்கீரன் எயிற்றியார் 3 பாடல்களையும் (அகம். 163, 217, 235), காவிரிப்பூம்பட்டினத்துக் காரிகண்ணனார் 3 பாடல்களையும் (அகம். 107, 123, 285), எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் 3 பாடல்களையும் (அகம்.149, 319, 357), ஓரோடகத்துக் கந்தரத்தனார் 3 பாடல்களைப் பாடல்களையும் (அகம். 23, 95, 191), பரணர் 4 பாடல்களையும் (அகம். 125, 135, 181, 367), ஆலம்பேரிசாத்தனார் 4 பாடல்களையும் (அகம்.47, 81, 141, 175) இயற்றியுள்ளனர்.

அகநானூற்றின் பாலைத் திணையில் தாயங்கண்ணனார் (அகம். 218, 237), மதுரை ஈழத்துப் பூதன்தேவனார் (அகம். 231, 307), மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் (அகம். 33, 353), காவிரிப் பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் (அகம். 103, 271), பொருந்தில் இளங்கீரனார் (அகம். 19, 351) ஆகியோர் தலா 2 பாடல்களை இயற்றியுள்ளனார். இவர்களைத் தவிரக் கபிலர் (அகம். 203), மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனார் (அகம். 207), இறங்குடிக் குன்றநாடன் (அகம்.215), மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் (அகம். 229), கொடியூர்கிழார் மகனார் நெய்தல் தத்தனார் (அகம். 243), மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் (அகம். 247), உறையூர் மருத்துவன் தாமோதரனார் (அகம்.257), கருவூர்க் கண்ணம்பாளனார் (அகம்.263), கருவூர்நன்மார்பன் (அகம். 277), அதியன் விண்ணத்தனார் (அகம்.301), வடமவண்ணக்கன் பேரிசாத்தனார் (அகம்.305), கருவூர்க் கதம்பிள்ளைச் சாத்தனார் (அகம்.309), வடமோதங்கிழார் (அகம்.317), பிறநாட்டுப் பெருங்கொற்றனார் (அகம்.323), மருங்கூர்ப்பாகைச் சாத்தன் பூதனார் (அகம்.327), உறையூர் முதுகூத்தனார் (அகம்.329), மதுரைத் தத்தங்கண்ணனார் (அகம்.335), நரைமுடி நெட்டையார் (அகம்.339), ஆவூர் மூலங்கிழார் (அகம்.341), தங்கால் பொற்கொல்லனார் (அகம்.355), மதுரை பொன்செய்கொல்லன் வெண்ணாகனார் (அகம்.363), பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார்

(அகம்.363), இடையன் சேந்தங்கொற்றனார் (அகம்.375), மாறோக்கத்து காமக்கனி நப்பாலத்தனார் (அகம்.377), மதுரை இளங்கௌசிகனார் (அகம்.381), பெருந்தலைச் சாத்தனார் (அகம்.13), ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் (அகம்.25), மதுரைக் கணக்காயனார் (அகம்.27) வெள்ளாடியனார் (அகம்.29), விற்றூற்று மூதெயினனார் (அகம்.37), மதுரைச் செங்கண்ணனார் (அகம்.39), குன்றியனார் (அகம்.41) மதுரையாசிரியர் நல்லந்துவனார் (அகம்.43), வெள்ளிவீதியார் (அகம்.45), வண்ணப்புறக் கந்தரத்தனார் (அகம்.49), பெருந்தேவனார் (அகம்.51), சீத்தலைச்சாத்தனார் (அகம்.53), நோய்பாடியார் (அகம்.67), தொண்டியாமூர்ச் சாத்தனார் (அகம்.169), முள்ளியூர்ப்பூதியார் (அகம்.173), செயலூர் இளம்பொன்சாத்தன் கொற்றனார் (அகம்.177), கோடிமங்கலத்துவாதுளி நற்சேந்தனார் (அகம்.179), கருவூர்க் களத்தார் (அகம்.183), வேம்பாற்றூர்க் குமரனார் (அகம்.157), உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார் (அகம்.69), அந்தியிளங்கீரனார் (அகம்.71), எருமை வெளியனார் (அகம்.73), மதுரைப் போத்தனார் (அகம்.75), காட்டூர்கிழார் மகனார் கண்ணனார் (அகம்.85) மதுரை பேராலவாயார் (அகம்.87), மதுரைக்காஞ்சிப் புலவர் (அகம்.89), கருந்தொடைக் காவினார் (அகம்.109), உறையூர் மருத்துவன் தாமோதரனார் (அகம்.133), உறையூர் முதுகூத்தனார் (அகம்.137), இடைக்காடனார் (அகம்.139), சேரமான் இளங்குட்டுவன் (அகம்.153), ஆமூர்க் கவுதமன் சர்தேவனார் (அகம்.159), மதுரைப் புல்லங்கண்ணனார் (அகம்.161), கடியலூர் உருத்திரங்கண்ணனார் (அகம்.167) ஆகிய புலவர்கள் அகநானூற்றில் தலா ஒரு பாடலைப் பாடியுள்ளனர். அகநானூற்றின் 117, 165 ஆகிய இரண்டு பாடல்களையும் இயற்றிய புலவர்களின் பெயர்கள் அறியப்படவில்லை.

**குறுந்தொகையின் பாலைத்திணையில்** பாலை பாடிய பெருங்கடுங்கோ 8 பாடல்களையும் (குறுந். 16, 37, 124, 135, 137, 209, 262, 398), ஔவையார் 5 பாடல்களையும் (குறுந். 15, 28, 39, 43, 388), வெள்ளிவீதியார் 3 பாடல்களையும் (குறுந். 44, 130, 149), ஓதலாந்தையார் 2 பாடல்களையும் (குறுந். 12, 329), கோப்பெருஞ்சோழன் 2 பாடல்களையும் (குறுந். 20, 147), கச்சிப்பேட்டு நன்னாகையார் 3 பாடல்களையும் (குறுந். 30, 180, 192), அள்ளூர் நன்முல்லையார் 3 பாடல்களையும் (குறுந். 67, 140, 237), குடவாயிற்கீரத்தனார் 3 பாடல்களையும் (குறுந். 79, 281, 363), மோசிகீரனார் 2 பாடல்களையும் (குறுந். 59, 84), சிறைக்குடி ஆந்தையார் 2 பாடல்களையும் (குறுந். 168, 273), மதுரை ஈழத்துப்பூதன் தேவன் 2 பாடல்களையும் (குறுந். 189, 343),

கச்சிப்பேட்டுக் காஞ்சிக்கொற்றன் 2 பாடல்களையும் (குறுந். 213, 216), கயமனார் 2 பாடல்களையும் (குறுந். 378, 396) இயற்றியுள்ளனர்.

குறுந்தொகையின் பாலைத் திணையில் பெரும்பதுமனார் (குறுந். 7), மாமூலனார் (குறுந். 11), சேரமான் எந்தை (குறுந். 22), அணிலாடு முன்றிலார் (குறுந். 41), உகாய்க்குடிகிழார் (குறுந். 63), கருவூர் ஓதஞானி (குறுந். 71), மதுரை மருதன் இளநாகனார் (குறுந். 77), மதுரை ஆசிரியன் ஓரேருழவனார் (குறுந். 131), கோடங்கொற்றன் (குறுந். 144), தூங்கலோரி (குறுந். 151), மதுரைச் சீத்தலைச் சாத்தன் (குறுந். 154), வெண்பூதி (குறுந். 174), உறையன் (குறுந். 207), காவன்முல்லைப் பூதனார் (குறந்.211), மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் (குறுந். 215), கொற்றன் (குறுந். 218), கூவன் மைந்தன் (குறுந்.224), மோதாசனார் (குறுந். 229), ஊண்பித்தை (குறுந். 232), மாயேண்டன் (குறுந். 235), நாமலார்மகன் இளங்கண்ணன் (குறுந். 250), பூங்கண்ணன் (குறுந். 253), பார்காப்பான் (குறுந். 254), கடுகு பெருந்தேவன் (குறுந். 255), கல்லாடனார் (குறுந். 260), நக்கீரர் (குறுந். 266), காலெறி கடிகையார் (குறுந். 267), உருத்திரன் (குறுந். 274), ஓரில்பிச்சையார் (குறுந். 277), பேரிசாத்தன் (குறுந். 278), நாகம்போத்தன் (குறுந். 282), பூதந்தேவன் (குறுந். 285), கடம்பனூர்க் காண்டில்யன் (குறுந். 307), வாடாப் பிரமந்தன் (குறுந். 331), பெருங்குன்றூர்க்கிழார் (குறுந். 338), காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் (குறுந். 347), மாவளத்தன் (குறுந். 348), ஆலத்தூர்கிழார் (குறுந். 350), கடியலூர் உருத்திரங்கண்ணனார் (குறுந். 352), செல்லூர்க்கொற்றன் (குறுந். 363), கருவூர்க் கதப்பிள்ளை (குறுந். 380), படுமரத்து மோசிகீரன் (குறுந். 383), உறையூர்முதுகொற்றன் (குறுந். 390) ஆகியோர் தலா ஒரு பாடலை இயற்றியுள்ளனர். குறுந்தொகையில் பாலைத் திணையில் 256, 395 ஆகிய பாடல்களை இயற்றிய புலவர்களின் பெயர்கள் அறியப்படவில்லை.

**நற்றிணையின் பாலைத் திணையில்** பாலை பாடிய பெருங்கடுங்கோ 10 பாடல்களையும் (நற். 9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391), எயினந்தை மகனார் இளங்கீரனார் 6 பாடல்களையும் (நற். 3, 62, 113, 269, 308, 346), கயமனார் 5 பாடல்களையும் (நற். 13, 198, 279, 293, 305) மதுரை மருதன் இளநாகனார் 4 பாடல்களையும் (நற். 103, 205, 302, 362), அம்மூவனார் 2 பாடல்களையும் (நற். 76, 397) நக்கீரர் 2 பாடல்களையும் (நற். 86, 197) இளவேட்டனார் 2 பாடல்களையும் (நற். 33, 157) இயற்றியுள்ளனர். இவர்களைத் தவிர பெரும்பதுமனார் (நற். 2, நல்வெள்ளியார் (நற். 7), மாமூலனார் (நற். 14),

*சிறைக்குடி ஆந்தையார் (நற். 16), பொய்கையார் (நற்.18), சாத்தந்தையார் (நற். 26), முதுகொற்றினார் (நற்.28), பூதனார் (நற்.29), பேரிசாத்தனார் (நற். 37), இளந்தேவனார் (நற். 41), பாலத்தனார் (நற். 52), பெருவழுதி (நற். 56), இனிசந்தநாகனார் (நற். 66), வண்ணப்புறக் கந்தரத்தனார் (நற். 71), மூலங்கீரனார் (நற். 73), கண்ணகனார் (நற். 79), முடத்திருமாறன் (நற். 105), மீளிப்பெரும்பதுமனார் (நற். 109), போதனார் (நற். 110), எயினந்தையார் (நற். 43), பெருங்கண்ணனார் (நற். 137), சல்லியங்குமரனார் (நற். 141), கண்ணகாரன் கொற்றனார் (நற். 143), கள்ளம்பாளனார் (நற். 148), தனிமகனார் (நற். 153), குடவாயிற் கீரத்தனார் (நற். 212), கருவூர்க் கோசனார் (நற். 214), கணிபுன்குன்றனார் (நற். 226), காரிக்கண்ணனார் (நற். 237), நப்பாலத்தனார் (நற். 240), மதுரைப் பெருமருதனார் (நற். 241), காப்பியஞ்சேந்தனார் (நற். 246), அம்மெய்யன் நாகனார் (நற். 252), ஆவூர்க்காவிதிகள் சாதேவனார் (நற். 264), காவன்முல்லைப் பூதனார் (நற். 274), கழார்க்கீரன் எயிற்றியார் (நற். 281 312 இரண்டு பாடல்கள்), தேய்புரிப் பழங்கயிற்றினார் (நற். 284), துறைக்குலுமாவிற் பாலங்கொற்றனார் (நற். 286), குதிரைத்தறியனார் (நற். 296), வில்லூற்று வண்ணக்கன் தத்தனார் (நற். 298), முப்பேர் நாகனார் (நற். 314), மதுரைக் காருலவியங் கூத்தனார் (நற். 325), மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் (நற். 329, 352 இரண்டு பாடல்கள்), கள்ளிக்குடிப் பூதம் புல்லனார் (நற். 333), கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் (நற். 343), மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் (நற். 366), பொதும்பில் கிழார் மகனார் (நற். 387) ஆகிய புலவர்கள் நற்றிணையின் பாலைத்திணையில் தலா ஒரு பாடலை இயற்றியுள்ளனர்.*

*நற்றிணையின் பாலைத்திணையின் 20 பாடல்களை (நற். 10, 24, 46, 84, 92, 107, 126, 162, 164, 166, 171, 174, 177, 179, 184, 186, 189, 193, 229, 271) இயற்றிய புலவர்களின் பெயர்கள் அறியப்படவில்லை. நற்றிணையில் கயமனார் இயற்றிய 324ஆம் பாடல் குறிஞ்சி பாலை எனக் குறிக்கப் பெற்றுள்ளது. அப்பாடல் வருமாறு:*

***"அந்தோ தானே அளியள் தானே***
***நொந்தழி அவலமொடு என்ஆகுவல் கொல்?***
***பொன்போல் மேனித் தன்மகள் நயந்தோள்***
***கோடுமுற்று யானை காடுடன் நிறைதர***
***நெய் பட்டன்ன நோன்காழ் எஃகின்***
***செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்***
***ஆடுபந்து உருட்டுநள் போல ஓடி***

*அம்சில் ஓதி இவள்உறும்*

*பஞ்சி மெல்லடி நடை பயிற்றும்மே” (நற்.324)*

இப்பாடலைத் தலைவன் பாங்கற்குச் சொல்லியது எனக் கொண்டால் குறிஞ்சித் திணையின்பாற்படும்; இடைச்சுரத்துக் கண்டோர் கூறியதாகக் கொண்டால் பாலைத்திணையாகும். பாங்கற்கூட்டத்தில் தோழன் தலைவனை நெருங்கி நீ கூறும் தலைவி எங்கே இருக்கிறாள்? அவள் எப்படி இருப்பாள்? என்கின்றான். அத்தோழனுக்குத் தலைவன் அவள் அவளது தந்தையின் வீட்டில் இருக்கின்றாள்; அங்கு அவள் தாய் உணவு ஊட்ட வரும்போது அவளை அலைய வைத்து தான் ஓடி விளையாடும் பருவத்தை உடையவள் எனத் தலைவியின் இயல்பையும் அவள் தந்தையின் செல்வ வளத்தையும் கூறுவதால் இப்பாடல் குறிஞ்சித் திணையாகும்.

தலைவி தலைவனுடன் உடன்போக்கில் சென்றபோது அவளைக் கண்டோர் காலினால் பந்து உருட்டுவதைப் போல வெயிலில் நடந்து செல்லும் இவளைப் பெற்ற தாய் இவளைப் பிரிந்தமைக்கு எவ்வாறு வருந்துகின்றாளோ? என இரங்கிக் கூறுவதாகக் கொண்டால் இப்பாடல் பாலைத்திணையாகும்.

ஐங்குறுநூற்றில் நான்காவதாக **ஓதலாந்தையார் இயற்றிய நூறு பாலைத் திணைப் பாடல்கள்** அமைந்துள்ளன. கலித்தொகையில் முதலாவதாகப் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் முப்பத்தைந்து பாலைத்திணைப் பாடல்கள் அமைந்துள்ளன.

**பாலை பாடிய பெருங்கடுங்கோ**

பாலை பாடிய பெருங்கடுங்கோ தொகை நூல்களில் 67 அகப்பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் 7 பாடல்கள் களவொழுக்கம் பற்றியன. 60 பாடல்கள் கற்பொழுக்கம் குறித்தவை. களவு மற்றும் கற்பு ஆகிய இரண்டிலும் “பிரிதலும் பிரிதல் நிமித்தமும்” என்னும் பாலை உணர்ச்சிகளை இரக்கமும் துணிவும் தோன்றத் தம் பாடல்களில் எடுத்துக்காட்டும் தனித்திறம் கொண்டவராதலின் இவருக்குப் “பாலை பாடிய” என்ற அடைமொழி சிறப்பாக வழங்கப்பெற்றது. பாலைப் புலவராகிய ஓதலாந்தையார் களவியலை விரித்துப் பல துறைகளாகவும் பலர் கூற்றுக்களாகவும் ஐங்குறுநூற்றுப் பாடல்களை இயற்றியுள்ளார். பெருங்கடுங்கோ பாலைக்கலியில் களவுத்துறைக்கு இடனளிக்கவில்லை.

‘உடன்போக்கே’ சிறந்த களவுப்பாலையாகும். நற்றாயின் புலம்பல்களை அத்துறையில் கேட்கலாம். இந்த உடன்போக்கினைத் தாயின் கூற்றாகக் கொண்டு பெருங்கடுங்கோ பாடல்களை இயற்றவில்லை. முக்கோற்பகவர் அறங்கூறும்

களவுத்துறையில் தாய் உள்ளிடம் பெறுகின்றாள். (கலி.8) 35 பாலைக்கலிப் பாடல்களில் இது ஒன்றே களவுத்திணைப் பாட்டாகும். பாலைக்கலிப் பாடல்களில் உடன்போக்குத் துறை இடம்பெறவில்லை. ஓதலாந்தையார் உடன்போக்குத்துறைக்கு இடம் தரவில்லை. ஆயினும் தொகை நூல்களில் உடன்போக்குத் துறையைப் பல பாடல்களில் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ளார்.

**உடன்போக்கு**

பாலைப் புலவர் களவில் உடன்போக்குத் துறையை மிகவும் ஏற்றம் கொடுத்துப் பாடுவர். தலைவன் முன்பு பகல், இரவுக் குறிகளில் தலைவியின் இடத்திற்குச் சென்றான். தலைவி, தன்னைப் பெற்றுப் பேணி வளர்த்த குடும்பத்தாரை இதுநாள் வரையில் பிரிந்தவள் இல்லை. அவன் தலைவனுடன் உடன்போக்கிற்காகப் பிரிந்து வருகின்றாளாதலின் தலைவன் இயல்பினும் மிக்க பேரளி செய்வான். தலைவி உள்ளத்தில் சோர்பு ஏற்படாதபடி மகிழ்ச்சியூட்டுவான். வாய் மகிழ்ந்து பேசுவான். ஆதலால் உடன்போக்குப் பாடல்களில் தலைவனது உள்ளப் புனைவுக்கு மிகுந்த வாய்ப்பும் சூழலும் உண்டு. புலவர்களின் புலமை விளையாட்டிற்கும் இடமுண்டு. தலைவன், தலைவியின் கூந்தலுக்குள் பாதிரி மலரைச் செருகிக் கூந்தல்மேல் மராமலரைச் சூட்டினான். 'நின் வளையல் ஒலிக்கக் கைவீசிச் சிறிது முன்னே நட; நான் உன் பின்னழகைக் காண்கிறேன்' என்று இனிது வேண்டினான் தலைவன். தலைவி, தலைவனுக்குப் பின்னே வருவதே தமிழ்ச் சமுதாய வழக்காகும். ஆதலின் அத்தலைவி தலைவனுக்கு முன்னே வழக்கத்திற்கு மாறாகச் செல்வதற்கு நாணினாள். தலைகுனிந்தாள். இதைக் கண்டு தலைவனும் முன்னே செல்லாமல் நின்றுகொண்டான். யார் முன்னே செல்வது என்னும் பூசலில் இருவரும் நடக்காமல் உட்கார்ந்துவிட்டனர். இவ்வகை அன்புக் காட்சியைப் பெருங்கடுங்கோ,

***"கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை***
***அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்***
***செல்சுடர் நெடுங்கொடி போலப்***
***பல்பூங் கோங்கம் அணிந்த காடே"*** ***(நற்.202:8–11)***

எனக் காட்டியுள்ளார். உடன்போக்கின் தொடக்கத்தில் தலைவன் தன் காதலியாகிய தலைவிக்குக் காட்டும் காட்சியே இது. நாம் இப்போது சென்று கொண்டிருக்கும் காடு உன் தந்தையது; கார்த்திகை விளக்கு வரிசைபோல

மலர்ந்திருக்கும் கோங்கம் பூக்களைக் காண் என்று தலைவன் தலைவிக்கு நயவுரை கூறுகின்றான். காதலன், தலைவியிடம் அவள் தந்தையின் காடு என்று கூறுவதற்குக் காரணம் அவளுக்குத் தன் குடும்பத்தின் பிரிவுச் சோர்வு தோன்றாமல் இருப்பதற்கேயாகும். உடன்போக்குத் துறையில் ஒரு புதிய செய்தியைப் பாடிய புலவர்களாக மருதன் இளநாகனார், ஓதலாந்தையார், பெருங்கடுங்கோ ஆகிய மூன்று புலவர்களும் விளங்குகின்றனர்.

மருதன் இளநாகனார் நற்றிணையில்,

*"வினையமை பாவையின் இயலி நுந்தை*
*மனைவரை இறந்து வந்தனை யாயின்*
*தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி*
*அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த*
*கடுஞ்செம் மூதாய் கண்டும் கொண்டும்*
*நீவிளை யாடுக சிறிதே; யானே*
*மழகளிறு உரிஞ்சிய பராரை வேங்கை*
*மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி*
*அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவென்*
*நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே"* *(நற்.362)*

எனவும்,

ஓதலாந்தையார் ஐங்குறுநூற்றின் பாலைத் திணையில்,

*"அறஞ்சா லியரே! வறஞ்சா லியரே!*
*வறனுண் டாயினு மறஞ்சா லியரே*
*வாள்வனப் புற்ற வருவிக்*
*கோள்வ லென்னையை மறைத்த குன்றே"* *(ஐங்.312)*

எனவும்,

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் நற்றிணையின் பாலைத் திணையில்,

*"புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்*
*கிடினென இடிக்குங் கோற்றொடி மறவர்*
*வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது*
*அமரிடை உறுதர நீக்கிநீர்*
*எமரிடை உறுதர ஒளித்த காடே"* *(நற்.48:5–9)*

எனவும்

உடன்செல்லும் நெறியில் தலைவியை நோக்கி 'அச்சம் சிறிதும் இன்றி நீ விளையாடுக; பாலை மறவர்கள் வந்து போர் தொடுத்தால் அஞ்சாது அவர்களைப் புறம் காண்பேன். நும் சுற்றத்தார்கள் வந்தால் அவர்கள் முன்னிற்காமல் மறைந்த கொள்வேன்' என இரு கருத்துக்களைக் கூறுவதாக மதுரை மருதன் இளநாகனார் பாடல் யாத்துள்ளார். தலைவியின் சுற்றத்தார் தொடர்ந்து வந்தனர் என்றும், அப்போது தலைவன் அங்கிருந்த மலைக்குள் மறைந்துகொண்டான் எனவும் நடந்த நிகழ்ச்சி ஒன்றை ஓதலாந்தையார் சுட்டிக்காட்டியுள்ளார். உடன்போக்கில் முதற்கண் தலைவனுக்கும் மறவர்க்கும் போர் உண்டாயிற்று; போரைத் தலைவன் வென்றான் எனவும், அதன்பின்னர் தலைவியின் சுற்றத்தார் தொடர்ந்து வருவதைக் கண்ட அவன் காட்டிற்குள் ஒளிந்துகொண்டான் எனவும் இளநாகனார் கூறிய இரு கருத்துக்களும் நிகழ்ந்தன எனப் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பாடல் கூறுகின்றது. இதனால் பாலைத் தலைவன் வீரன்; வீரமும் காதலும் மோதும்போது காதலுக்காக வீரத்தை மறைத்துக்கொள்பவன் என்பதும் அறியப்படும் செய்திகளாகும். இடைச்சுர மருங்கில் தலைவியின் தமர் வருவர் எனத் தொல்காப்பியர்,

***"இடைச்சுர மருங்கின் அவள்தமர் எய்திக்***
***கடைக்கொண்டு பெயர்தலிற் கலங்குஅஞர் எய்திக்***
***கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட"*** [1]

எனக் குறிப்பிட்ட குறிப்பின் விரிவாகவே மேலே எடுத்துக்காட்டிய மூன்று பாலைப் பாடல்களும் அமைந்துள்ளன.

**இளமையின் வளமை**

வீரத்தினும் காதல் சிறந்தது என்பதைப் போலப் பொருளினும் காதலே சிறந்தது என்பதைப் பெருங்கடுங்கோ தம் பாடல்களில் கூறியுள்ளார். இவரின் பெரும்படைப்பான பாலைக்கலியில் பொருளுக்கும் இளமைக்கும் இடையிலான போராட்டத்தைக் கணவன் மனைவிக்கிடையே வைத்துப் பலவாறு பாடல்கள் புனையப்பெற்றுள்ளன. தலைவன் பொருள் ஈட்ட விரும்பினன்; ஆயினும் பொருள் நோக்கம் அவன் வாழ்க்கை நோக்கமன்று. கணவன் இல்லறக் கடமைகளைத் திறம்பட ஆற்றுவதற்கே பொருட்கருவியை நாடுகின்றான்; அவன் முன்னோர் தேடிய தாயப்பொருளைக் கொண்டு இல்லறம் செய்வதைச் சிறுமையாகக் கருதுகின்றான்.

***"உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்"*** ***(குறுந்.283:1)***
***"உள்ளாங்கு உவத்தல் செல்லல்"*** ***(அகம்.111:1)***

*“வினையே ஆடவர்க்கு உயிரே”* *(குறுந்.135:1)*

எனவரும் தொடர்கள் கணவனின் பெருமித எண்ணங்களாகும். ஆதலால், தலைவனின் பொருள் வேட்கை குறைகூறத் தக்கதன்று. பொருளற்ற கணவனை இல்லாளும வேண்டாள்; இன்பமும் குறையும். இதனைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ பின்வருமாறு தெளிவுபடுத்தியுள்ளார்:

***“அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்***
***பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்***
***பொருளின் ஆகும் புனையிழை என்றுநம்***
***இருளேர் ஐம்பால் நீவி யோரே***
***நோய்நாம் உழக்குவ மாயினுந் தாந்தம்***
***செய்வினை முடிக்க தோழி பல்வயின்”*** ***(அகம்.155:1–6)***

தலைவனது அறவுணர்வு, மானவுணர்வு, பொருளுணர்ச்சி ஆகியன காதல் உணர்ச்சியினும் மிக்கோடுவதைக் காணலாம். காதலுடைய தலைவியை எப்படியோ ஆற்றிப் பொருள்வயிற் பிரிந்தான் என்றும், அவன் பிரிவு மனைவிக்கு மகிழ்ச்சியை அளிக்கவில்லை என்றும் பெருங்கடுங்கோவின் பாலைப் பாடல்கள் காட்டுகின்றன. தலைவனது பொருள் வேட்கையும் தலைவியின் காமவேட்கையும் முரண் போலத் தோன்றினாலும், அவை முடிவில் இல்லறத்தின் நல்வாழ்வுக்கு உதவுகின்றன. பொருட் பற்றுடைய கணவன் தன் மனைவியின் காதலை உணர்ந்து தான் புறப்படுவதற்கு முன்னர் அவள் கூந்தலைத் தடவிக் கொடுக்கின்றான்.

***“காழ்விரி வகையார மீவரு மிளமுலை***
***போழ்திடைப் படாஅமன் முயங்கியு மமையாரென்***
***தாழ்கதுப் பணிகுவர் காதலர் மற்றவர்***
***சூழ்வதை எவன்கொ லறியே னென்னும்”*** ***(கலி.4:9–12)***

இனிப் பன்னாள் புணர்வின்பம் கிடைக்காதே என்ற ஏக்கத்தால் முன்னாட் புணர்ச்சிக்கண் மீதூர்ந்த இன்பச் செயல்கள் செய்கின்றான் கணவன். கணவனின் இக் களிபெருங்களிப்பு பிரிவுக்குறிப்பு என்பதை மனைவியும் அறிகின்றாள். பேருணர்ச்சிமிக்க கணவனை ‘வலனாகவினை’ என வாழ்த்தி வணங்கி விடுவித்த மனைவியும் உண்டு. பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பல பாடல்களில் அகத்தலைவன் பெரும்பொருள் வேட்கையன் எனவும், அகத்தலைவி பெருங்காம வேட்கையள் எனவும் செய்திகள் உள்ளன. ஆதலின் தோழி முக்கிய இடம்பெறுகின்றாள். பெருங்கடுங்கோவின் 67 பாடல்களில் 40 பாடல்கள்

தோழி கூற்றுப் பாடல்கள் ஆகும். தலைவியின் காமத்தையும் அதனால் அவளுக்கு ஏற்படும் ஆற்றாமையையும் தலைவனுக்கு எடுத்துக்காட்டித் தோழி அன்பாலும் அச்சத்தாலும் அவன் பொருட்செலவினைத் தாழ்த்தினாள் அல்லது செலவழுங்குவித்தாள் எனப் பல பாடல்கள் முடிகின்றன.

***"மறப்பருங் காத லிவளீண் டொழிய***
***இறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய***
***தொலைவாகி யிரந்தோர்க்கொன் றீயாமை யிளிவென***
***மலையிறந்து செயல்சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ?***
***நிலைஇய கற்பினாள் நீநீப்பின் வாழாதாள்***
***முலையாகம் பிரியாமை பொருளாயி னல்லதை" (கலி.2:9–14)***

அறம் செய்வதற்குப் பொருள் ஈட்டுவதாயினும் அச்செல்வம் கூட ஆடவன் வாழ்க்கைக்குத் தலைமைப் பொருளில்லை. மனைவியின் புணர்ச்சிக்குச் செல்வம் ஈடாகாது என எடுத்துக்கூறியதும், தோழியின் அறிவுரையைக் கேட்ட தலைவன் கோலின் குத்துக்கு வயப்படாத களிறு யாழின் இசைக்கு அடங்கி நின்றாற் போலத் தலைவன் பொருட்பிரிவைத் தள்ளிவைத்தான். நல்லிசை நரம்பறுந்தால் நின்றுவிடும். பெருஞ்செல்வம் ஊழ் மாறின் ஒரு நொடியில் அழிந்துவிடும். ஆதலின் அழியும் செல்வத்தை ஆர்வத்தோடு காமப்பருவத்தில் தேட முனையாதே எனத் தோழி தலைவனுக்கு அறிவுறுத்தினாள்.

***"தன்னகர் விழையக் கூடின்***
***இன்னுறல் வியன்மார்ப அதுமனும் பொருளே" (கலி.8:22–23)***

இதனால் தெளிந்த தலைவன் 'கூடிய வாழ்வே நீடிய பொருள்' என நினைத்துச் சிலநாள் இல்லத்தில் தங்கினான்.

**இல்லறத்தில் காமம்**

அகத்திணை காதல் திணையாகும். இளமை காதற் பருவம் ஆதலின் கடமைக்காக அப்பருவத்தில் தலைவன் பிரிவதை அகவிலக்கியம் உடன்பட்டு ஏற்பதில்லை. பிரிவிலும் புணர்வுச் சிந்தனை இழையோடும். சங்கப் புலவர்கள் தனி இயற்கையைப் பாடாததைப் போலவே அகத்திணையில் மனைவியின் இல்லறக் கடமைகளை காமத் தொடர்பில்லாமல் பாடியதில்லை. கணவனின் செயல்கடன்களையும் தலைவியின் உள்மனவோட்டம் இல்லாமல் புனைந்து காட்டியதில்லை. **பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்னும் உரிப்பொருள் குறித்த அகப்பாடல்கள் எல்லாம், பசிவழிப்பட்ட தொழில்கள் போலக்**

**காமப்புணர்ச்சியின் அடிப்படையில் எழுந்தன.** புணர்ச்சிக் குறிப்பும் வேட்கையும் தலைவி, தலைவன் நினைவு இல்லாத பாலைப் பாடல்கள் இல்லை.

> ***"பெருஞ்சின வேந்த னருந்தொழி றணியின்***
> ***விருந்துநனி பெறுதலு முரியன் மாதோ***
> ***விருண்டு தோன்று விசும்பி னுயர்நிலையுலகத்***
> ***தருந்ததி யனைய கற்பிற்***
> ***குரும்பை மணிப்பூட் புதல்வன் றாயே" (ஐங்.442)***

என்பது பேயனாரின் முல்லைப் பாட்டாகும். சென்றவினை முடியாது காலம் தாழ்ந்தபோது பாசறையில் இருக்கும் மறத்தலைவன் தன் இல்லத்தை நினைக்கின்றான். இடைச்சுரத்துச் செல்லும் தலைவர்கள் தம் தலைவியர்களின் காதல் பண்புகளை நினைப்பதாகப் புனையப்பட்டுள்ள பாலைப் பாடல்கள் பல உள்ளன. வினை முடிவில் தன் மனைவியின் அழகு நலன்களைக் கணவன் நினைத்துப்பார்ப்பதாகப் பல முல்லைப் பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன. போர்க்குச் சென்ற தலைவனது நெடுந்தேரில் பூட்டிய குதிரைகள் அவன் வரவை எதிர்நோக்கி எழுநிலை மாடத்திலிருக்கும் தேவியின் செவிகளில் ஒலித்தன என நப்பூதனார் முல்லைப் பாட்டைக் காதல் வாய்பாடாக முடித்துக் காட்டியுள்ளார்.

பெருங்கடுங்கோவின் அனைத்துப் பாலைப் பாடல்களிலும் **புணர்ச்சி மயக்கம் உள்ளன.** அருகிருக்கும் போதே இத்துணை அல்லல்படுபவள் பிரிந்தால் உயிரை விடுவாள் எனத் தலைவன் செலவழுங்கும் பாலைத் திணையிலும், பூ வேய்ந்த நின் கூந்தலில் தூங்கிய துயிலை மறந்து அவர்க்குத் துயில் வருமோ? என்று தோழி தலைவியை ஆற்றும் பாலையிலும், சுரம் கடந்தோரைப் பழித்தல் கூடாது; அவரைப் பிணித்துக் கட்டும் ஆற்றல் இல்லாத தோளே பழியுடையன என்று தலைவி தன்னைத்தானே நொந்து கொள்ளும் பாலையிலும் இன்ப உள்ளங்களே புலப்படுகின்றன. ஆதலால் அனைத்து அகப்பாடல்களும் முன்னும் பின்னும் புணர்ச்சியை நோக்கியே நகர்வன எனத் தெளியலாம்.

### வெள்ளிவீதியார்

வெள்ளிவீதியார் 13 அகப்பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் 5 பாடல்கள் களவிற்குரியன. 8 பாடல்கள் கற்பிற்குரியன. வெள்ளிவீதியார் புறப்பாடல்கள் எதையும் இயற்றவில்லை. இவரது களவுப் பாடல்கள் பல துறைகளில் அமைந்திருக்கின்றன. கழற்றெதிர்மறை, இரவுக்குறி, உடன்போக்கு, இடைச்சுரத்துச் செவிலித்தாய், வரைவுக்கவற்சி ஆகியன இவரியற்றிய

பாடல்களின் களவுத் துறைகளாகும். வெள்ளிவீதியாரின் அகமாந்தர்கள் களவினராயினும் கற்பினராயினும் காம உணர்வு மிக்கவர்கள். மழைக் காலத்தில் பாம்புகளை அடித்துக்கொண்டு வரும் ஆறு என்று பாராமல் நீந்தி, ஆண்புலி ஒதுங்கியிருக்கும் குகை வழியாக நடந்து நள்ளிரவில் தலைவன் வேலேந்தி வருகின்றான். அத்தகைய தலைவன் இன்பம் துய்க்காமல் திரும்பலாமா? நல்ல முழு நிலவு இடையூறாக உள்ளதே என்கின்றாள் தோழி.

***"ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்***
***கையில் ஊமன் கண்ணிற் காக்கும்***
***வெண்ணெய் உணங்கல் போலப்***
***பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே"        (குறுந்.58:3–6)***

இவ்வாறு தன்னை இடித்துரைக்கும் பாங்கனுக்குக் களவுத்தலைவன் எடுத்துரைக்கின்றான். தன் காம விரிவுக்குத் தக்கவாறு வெண்ணெய் உருக்கத்தை உவமை கூறுகின்றான். காமம் யாராலும் தடுத்தற்கரியது என்பது அவன் கூற்று. எவ்வளவுதான் காம வெள்ளத்தை என் நாணக்கரை தாங்கும் எனத் தோழிக்குக் கூறுகின்றாள் களவுத் தலைவி,

***"தாங்கும் அளவைத் தாங்கிக்***
***காமம் நெரிதரக் கைந்நில் லாதே"        (குறுந்.149:5–6)***

இவ்வாறு வெள்ளிவீதியாரின் பாடல்கள் காமமிக்க பாடல்களாக விளங்குகின்றன.

பெண் புலவரான வெள்ளிவீதியாரின் கற்புப் பாடல்கள் எட்டும் தலைவன் கூற்றுக்களாகும். களவுப்பாடல்களைப் போல இப்பாடல்களும் மிக்க காமத்தைப் புலப்படுத்துகின்றன. திங்கள் ஒளியும் கடல் ஒலியும் அலையோசையும் அன்றில் பறவையின் குரலும் தாழையின் மணமும் யாழிசையும் நடுயாமத்திலும் தலைவியை நிலைகளங்கச் செய்கின்றன. ஊர் விழவும் வண்டின் புணர்ச்சியும் அவள் காமப்புண்ணைக் கிளறுகின்றன. அவள் உறக்கத்தைக் கெடுக்கின்றன.

***"கானே பூமலர் கஞலிய பொழில கந்தோறும்***
***தாம்அமர் துணையொடு வண்டிமி ரும்மே***
***யானே புனையிழை ஞெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு***
***கனையிருங் கங்குலுங் கண்படை இலனே;***
***அதனால் என்னொடு பொருங்கொல்இவ் வுலகம்?***
***உலகமொடு பொருங்கொல்என் அவலமுறு நெஞ்சே" (நற்.348:5–10)***

இப்பாடலின் தலைவி உலகமே தனக்குப் பகை என வருந்துகின்றாள். வெள்ளிவீதியாரின் மற்றொரு தலைவி 'மாலை' என்பது நல்ல பொருள். விழாக்காலத்தில் பெண்கள் சூடுவதற்கென்று தொடுக்கும் மலரணி என்றுதான் கணவன் உடனுறையும் காலத்தில் இருந்தேன். கணவன் பிரிந்த பின்னர்தான் மாலை என்றொரு காலம் உண்டு. அது உலகம் பரந்த துன்பத்தைத் தருவது என்று அறிந்துகொண்டேன் என்கின்றாள். இதிலிருந்து அவள் கணவனைப் பிரியாமல் நெடுநாள் காமம் துய்த்தாள் என அறியமுடிகின்றது.

அடிக்கடி புணர்வும் பிரிவும் இருந்தால்தான் உள்ளம் இன்ப துன்பங்களில் பயிற்சி பெறும். அதுபோல போக்கும் வரவும் கண்ட செல்வன் பொருள் நிலைப்பினும் அழியினும் நெஞ்சத் திருவாளனாக இருப்பான். துய்த்தும் வழங்கியும் அறியாமல் வரவுத்தடமே கண்ட செல்வத்தகையாளனுக்குப் போக்குதல் சிறிது ஏற்பட்டாலும், அது அவன் உயிர்போகும் வழியாக மாறிவிடும். செவ்விய வாழ்விற்கும் மனச்செப்பத்திற்கும், இன்பதுன்பமென்னும் இருநிலைப் பயிற்சியும், போக்கு வரவு என்னும் பொருட்பற்றியும், புணர்வு பிரிவு என்னும் காதற் பயிற்சியும் ஆகிய இருமுனை அனுபவப் பயிற்சிகள் வேண்டும். வெள்ளிவீதியாரின் பாடல்களில் தலைவியின் பெரும் புலம்பலுக்குக் காரணம் அவளது நெடுநாள் பெரும்புணர்வும், சின்னாள் சிறுபிரிவும் ஆகும். அது ஆற்ற இயலாத உயிர்ப்பிரிப்பாக அத்தலைவியிடம் வளர்கின்றது.

***"காடிறந் தனரே காதலர்; மாமை***
***அரிநுண் பசலை பாஅய்ப் பீரத்***
***தெழின்மலர் புரைதல் வேண்டும், அலரே***
***........... .......... ........... .....***
***காதலற் கெடுத்த சிறுமையோடு நோய்கூர்ந்து***
***ஆதிமந்தி போலப் பேதுற்று***
***அலந்தனென் உழல்வென் கொல்லோ பொலந்தார்க்" (அகம்.45:6–15)***

இப்பாடல் ஆற்றுவிக்கும் தோழிக்கு ஆற்றாது கூறும் மனைவியின் கூற்றாகும். தலைவன் பிரிந்தான் என்ற அளவிலேயே முன்பு பிரிவென்பதை அறியாத தலைவியாதலின் மாநிறம் இழந்த பீர்க்கம் பூவினைப் போலப் பசலை நோயினைப் பெற்றாள். பிரிந்த முதல்நாளிரவே உறக்கத்தை இழந்தாள். ஆதிமந்தியின் செயலை உவமை கூறுவது பொருந்தாது. ஆதிமந்தியின் கணவன் ஆட்டனத்தி என்பான் காவிரிப் புதுவெள்ளத்தில் நீராடும்போது அடித்துச் செல்லப்பட்டான். ஆதிமந்தி பேதுற்றுப் புலம்பிக் கணவனைத் தேடிக் கொண்டே ஆற்றின் கரையோரமாக ஓடினாள்; கண்டீரோ என் கணவனை

என ஓடிக்கொண்டே வினவினாள். இச்செயல் காமத்தால் நிகழ்ந்ததன்று; நாணம் கடந்ததும் அன்று. எப்பெண்ணும் செய்யக்கூடிய இயல்பான செயலே. இச்செயலை உவமைப்படுத்துகின்றாள் இப்பாடலின் தலைவி. கணவனின் உயிருக்கு அலறிஓடும் ஆதிமந்தியின் வாழ்வுணர்ச்சி வேறு; காட்டின் வழிப் பொருளீட்டச் சென்ற தலைவனிடம் காமம் தாங்கமாட்டாமல் ஓடத்துடிக்கும் உடலுணர்ச்சி வேறு. இருவர்தம் உணர்ச்சியின் நிலைக்களம் முற்றும் வேறு. இரண்டையும் ஒன்றாக இணைத்துப் பரணர் முதலியோர் பாடல் இயற்றியுள்ளனர். ஆதிமந்தியின் வாழ்க்கை கண்ணகியனைய வாழ்க்கையாகும். 'ஆதிமந்தி போலப் பேதுற்று' என்னும் உவமைக்கு, மனைவி கணவனது பொருட்பிரிவினை உயிர்ப்பிரிவாகக் கருதித் துன்புற்றாள் எனப் பொருள் கொள்ள வேண்டியுள்ளது. இதனால் வெள்ளிவீதியாரின் அகத்தலைவி பெருங்காமத்தினள் என அறியலாம்.

ஔவையார் தாம் இயற்றிய அகநானூற்றின் பாலைப் பாடலில்,

> ***"நெறிபடு கவலை நிரம்பா நீளிடை***
> ***வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்***
> ***செலவயர்ந் திசினால் யானே பலபுலந்து"*** ***(அகம்.147:8–10)***

என வெள்ளிவீதியாரின் வாழ்க்கையை உவமையாகக் கூறியுள்ளார். இப் பாடல்வரிகள் கணவனைப் பிரிந்த மனைவியின் வேட்கையாகும். ஆதிமந்தி உவமம் போல் இல்லாமல் வெள்ளிவீதி உவமம் அகத்திணைக்குப் பொருந்துவதாக உள்ளது. ஔவையாரின் உவமத்தால் வெள்ளிவீதியார் நிறையற்ற காமத்தார் என்றும், கணவனை நாடி அலைந்தவர் என்றும் அறிய வேண்டியுள்ளது. வெள்ளிவீதியாரின் தலைவியரும் 'காமப்பித்தர்' எனக் காணும்போது, வெள்ளிவீதியார் தம் வாழ்க்கையையே பெயர்களைந்து அகமாகப் பாடியுள்ளார் எனக் கருதவேண்டியுள்ளது.

"மள்ளர் குழீஇய விழவினானும்" (குறுந்.311) என்னும் குறுந்தொகையின் அகப்பாடல் ஆதிமந்தியார் இயற்றியது. அவர்தம் வாழ்க்கை வரலாற்றைத் தேடுவோர்க்கு இப்பாட்டிலும் அதனைக் காணும் சிந்தனை தோன்றும். எனினும், இது அகப்பாட்டு எனக் கொண்டு அச்சிந்தனையைத் தவிர்க்க வேண்டும். இப்பாட்டிற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் "இது காதலாற் கெடுத்த ஆதிமந்தி பாட்டு"[2] எனக் குறிப்பிட்டுள்ளார். அவர் "காதலாற் கெடுத்த" என்னும் அடைமொழியை ஆதிமந்தியார்க்குக் கொடுத்துள்ளார்; இது ஆதிமந்தியார்க்கு அவரெழுதிய வாழ்க்கைக் குறிப்பு ஆகும். குறுந்தொகையைப்

*பதிப்பித்தவரும் தொகுத்தவரும் "இது ஆதிமந்தியார் பாட்டு" என முறையாகவே குறித்துள்ளனர்.*

*உரையாசிரியரும் திறனாய்வாளரும் அகப்பாடல்களுக்குத் திணையும் துறையும் கூறலாம்; இடமும் காலமும் காரணமும் கூறக்கூடாது. இது அகத்திணைப் பாடல்களுக்கும் பொருந்தும். கணவனைத் தேடி அலைய நினைத்தபோதுதான், அலைந்தபின்னர்தான் வெள்ளிவீதியாரும், ஆதிமந்தியாரும் அகப்பாடல்களை இயற்றினார் என்பதற்கு எவ்விதமான சான்றுகளும் இல்லை. வெள்ளிவீதியார் கற்புப் பாடல்களைப் பாடமால் களவுப் பாடல்களையே இயற்றியுள்ளார். ஆதிமந்தியார் ஓர் பாடலை மட்டுமே யாத்துள்ளார். ஆதலால் அகப்பாடல்களுக்கும் அப்பாடல்களை இயற்றிய புலவர்களின் வாழ்க்கைக்கும் தொடர்புபடுத்தி விளக்குவதும் ஆராய்வதும் கூடாது. அகப்பாடல்களை இயற்றிய புலவர்களின் படைப்பாற்றல் திறன்களையும், அவர் படைத்த மாந்தர்களின் பண்புகளையுமே ஆராய்தல் வேண்டும்.*

**ஓதலாந்தையார்**

*ஓதலாந்தையார் அகத்திணையில் தொகை நூல்களில் 103 பாடல்களை இயற்றியுள்ளார். அம்மூவனாரைப் போல இவரும் புறத்திணைப் பாடல்களை இயற்றவில்லை. தலைவன் கூற்றில் 35 பாடல்களையும், தோழி கூற்றில் 25 பாடல்களையும், தலைவி கூற்றில் 19 பாடல்களையும், நற்றாய் கூற்றில் 13 பாடல்களையும் கண்டோர் கூற்றில் 17 பாடல்களையும், செவிலி கூற்றில் 02 பாடல்களையும், அந்தணர் கூற்றில் 01 பாடலையும், அயலோர் கூற்றில் 01 பாடலையும் ஓதலாந்தையார் இயற்றியுள்ளார். இவர் இயற்றிய மொத்தப் பாடல்களில் 38 பாடல்கள் களவிற்குரியன. 65 பாடல்கள் கற்பிற்குரியன. களவில் பாங்கனுக்கு இவர் இடம் தரவில்லை. கற்பில் தலைவன், தலைவி, தோழி ஆகிய மூவருமே இடம்பெறுகின்றனர்.*

*ஓதலாந்தையார் பாலைத் திணைப் பாடல்களைச் சிறப்பாக இயற்றிய புலவர் ஆவார். இவர் பாலைத் திணையின் துறைகளைப் பலபடவும் பண்படவும் இலக்கிய நயத்தோடும் தம் பாடல்களில் விளக்கியுள்ளார். இவர் உடன்போக்குத் துறைகளை ஆளுவதில் தனிச்சிறப்புடையவராகத் திகழ்கின்றார்; தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்ற நிலையில் தாயின் புலம்பல்களைத் தனித்தன்மையோடும் படிப்போர் உள்ளத்தை உருக்குமாறும் உணர்த்தியுள்ளார்.*

**பாலைத் திணையில் உடன்போக்கு**

*களவில் உடன்போக்கு பாலையாகுமா? தலைவனும் தலைவியும் உடன் செல்லும் நிலை குறிஞ்சி ஆகாதா? என்னும் வினாக்கள் எழுகின்றன. தலைவனும் தலைவியும் உடன்போக்குச் செல்லும் வழி நிழலுடையது, நீருடையது, பூவுடையது, இளவேனில் நலமுடையது என்று பாடல்களில் புனையப்படுவதால் நிலத்தால் பாலை, காலத்தால் பாலை எனவும் கூற இயலாது. தலைவி தன் பெற்றோரைப் பிரிந்து தலைவனுடன் சென்றமையால் பாலையாயிற்று எனவும் கூறுவதற்கில்லை. புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்னும் உரிப்பொருள்கள் தலைவனுக்கும் தலைவிக்கும் இடைநிகழ்வன; இவை பிற அகமாந்தரோடு தொடர்புடையன அல்ல; பிரிதலும் பிரிதல் நிமித்தமே பாலையாகும்.* **உடன்போக்கில் தலைவனும் தலைவியும் கூடியிருப்பினும் பெற்றோரால் பிரிவோமோ, பிரிக்கப்படுவோமோ என்ற பிரிவுணர்ச்சி இருவர்தம் உள்ளத்தும் அச்சமாக இருந்துகொண்டேதான் இருக்கும்.**

***"இடைச்சுர மருங்கின் அவள்தமர் எய்திக்***
***கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்குஅஞர் எய்திக்***
***கற்பொடு புணர்ந்தகௌவை"*** [3]

*என்னும் தொல்காப்பிய அகத்திணையியல் நூற்பாவினால் உடன்போக்கில் தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ளத்துயர் உண்டு என்பது தெளிவாகின்றது. ஓதலாந்தையார் இக் களவுப் பாலையையும் கற்புப் பாலையையும் அறமும் திறமும் சிறக்கத் தம் பாடல்களில் சுட்டிக்காட்டியுள்ளார். இவர்தம் ஐங்குறுநூற்றின் பாலைத்திணைப் பாடல்களைக் கற்ற புலவர்களுக்கும் மக்களுக்கும் அகத்திணையின் இலக்கிய வளத்தில் ஐயம் தோன்றாது. மரபுநிலை திரியாமல் அகத்துறைப் பாடல்களைப் படைக்கலாம்; பாடலாம் என்னும் புதிய படைப்பாற்றல் நெறியே தோன்றும்.*

**ஓதலாந்தையாரின் அகத்துறைப் புதுமைகள்**

*1. உடன்போக்குச் சென்ற தலைவி மீண்டு வந்தபோது 'நின் ஐயன்மார் பின்பற்றி வந்தபோது இடைச்சுரத்து நிகழ்ந்தது என்ன?' எனத் தோழி கேட்கின்றாள். தலைவி நிகழ்ந்ததைக் கூறித் தலைவன் மறைந்துகொள்வதற்கு உதவி செய்த மலையை வாழ்த்துவது புதுமையாக உள்ளது. அப்பாடல் வருமாறு:*

***"அறஞ்சா லியரே! வறஞ்சா லியரே***
***வறனுண் டாயினு மறஞ்சா லியரே***

*வாள்வனப் புற்ற வருவிக்*
*கோள்வ லென்னையை மறைத்த குன்றே"* *(ஐங்.312)*

2. புணர்ந்துடன் செல்லும் தலைமகன் இடைச்சுரத்தின் கண், தலைவி விளையாட்டாகப் பூத்தொடுப்பதைக் கண்டு புகழ்ந்து பாராட்டுகின்றான். அதற்குத் தலைவி நாணிக் கண்புதைத்தபோது மகிழ்ந்து தலைவன் பின்வருமாறு கூறுகின்றான்:

*"உயர்கரைக் கான்யாற் றவிர்மணல் அகன்றுறை*
*வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்*
*தொடலை தைஇய மடவரல் மகளே!*
*கண்ணினும் கதவநின் முலையே!*
*முலையினுங் கதவநின் றடமென் றோளே!"* *(ஐங்.361)*

3. உடன்போக்கில் சென்ற தலைவி, தலைவன் வளைத்த கொம்பிற் பூக்கொண்டு தனக்கும் பாவைக்கும் வகுப்பதைப் பார்த்தவர்கள் பின்வருமாறு கூறுகின்றனர்:

*"கோட்சுரும் பரற்று நாட்சுரத் தமன்ற*
*நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி*
*வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற*
*மள்ள னுள்ள மகிழ்கூர்ந் தன்றே*
*பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கு*
*மஞ்சாய் கூந்த லாய்வது கண்டே"* *(ஐங்.383)*

4. இடைச்சுரத்தின்கண் தலைவன் தலைவியின் பண்புநலன்களை நினைத்துப் பார்க்கின்றான். அவளை நினைப்பதனால் சுரத்தின் வெப்பம் நீங்கியமையைக் கண்டு பின்வருமாறு கூறுகின்றான்.

*"நெடுங்கழை முனிய வேனி னீடிக்*
*கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்*
*வெய்ய வாயினை முன்னே; யினியே*
*யொண்ணுத லரிவையை யுள்ளுதொறுந்*
*தண்ணிய வாயின சுரத்திடை யாறே!"* *(ஐங்.322)*

5. உடன்போக்கு மேற்கொண்ட தலைவி ஆங்கு எதிர்வரும் அந்தணர்களிடம் பின்வருமாறு கூறுகின்றாள்.

*"சேட்புல முன்னிய வசைநடை யந்தணிர்!*
*நும்மொன் றிரந்தனென் மொழிவ, லெம்மூர்*

*யாய்நயந் தெடுத்த ஆய்நலம் கவின*
*வாரிடை யிறந்தனன் ளென்மி*
*னேரிறை முன்கையெ னாயத் தோர்க்கே"* *(ஐங்.384)*

ஓதலாந்தையார், உடன்போக்கு மேற்கொண்ட தலைவியின் தாய் படும் அவலத் துயரங்களையும், அத்தாய் தலைவியிடம் கொள்ளும் அன்பினையும் தெளிந்த அறிவினையும் மகட்போக்கியவழித் தாய் இரங்கு பத்து, உடன்போக்கின்கண் இடைச்சுரத்து உரைத்த பத்து, மறுதரவுப் பத்து ஆகிய பத்துக்களில் முப்பது பாடல்களில் (ஐங்.371–400) நுணுக்கமாக விளக்கிக் கூறியுள்ளார். இம்முப்பது பாடல்களையும் ஒரே வீச்சில் வாசிக்கும்போது அப்பாடல்களில் உணர்வுகள் சார்ந்த உள்ளோட்டங்கள் கதிர்ப்படம் போல தோன்றுகின்றன. மகளின் உடன்போக்கைத் தாய் ஏற்கின்றாள். அறநெறி இதுவெனத் தெளிந்த என் மகள் என்று உடன்போக்குச் சென்ற மகளைப் போற்றுகின்றாள் மகளின் உடன்போக்கிற்கு அவள் வருந்தவில்லை. உண்மையைச் சொல்லும் துணிவு மகளுக்கு இல்லையே; கூறியிருப்பின் உடன்போக வேண்டாமே என்று இரங்குகின்றாள். உடன்போவதற்கு உரிய வயதா அவளுக்கு; முடியைக் கூட முடிக்க அறியாதவள் ஆயிற்றே என்று தன் மகளின் பேதைமையையும் இளமையையும் நினைத்து வருந்துகின்றாள்.

என் பாவைக்கு இனிய பாவை இது. என் பைங்கிளிக்கு இனிய பைங்கிளி இது என்று அத்தாய் தன் மகளுடன் தொடர்புடைய பொருட்களைப் பார்த்துப் பார்த்துக் கவல்கின்றாள். தன் மகள் உடன்போக்குச் செல்லக் காரணம் அவளும் இல்லை; காளையாகிய அவனும் இல்லை என்று ஊழை வெறுக்கின்றாள். தன் மகள் உடன்போக்குச் செல்லும் பாலை வழி மழை பெய்து இனிதாகுக என வேண்டுகின்றாள். 'காக்கை கரைந்தால் விருந்து வரும்' என்னும் பொது நம்பிக்கை இன்றையத் தமிழர்களைப் போலப் பண்டைத் தமிழர்க்கும் இருந்தது. ஆதலின் உடன்போக்கு மேற்கொண்ட காளையும் கூந்தல் எழினியும் திரும்பி வரும்படி கத்துவாய் காகமே; உனக்கும் உன் சுற்றத்திற்கும் ஊனுடை உணவைப் பொற்கலத்தில் படைப்பேன் என்று தாய் காக்கையிடம் வேண்டுகின்றாள். சிலம்புகழி நோன்பு காளையாகிய தலைவன் வீட்டில் நடந்தாலும், திருமணம் தன் வீட்டில் நிகழவேண்டும் என்று ஒரு பாலைநிலத் தாய் விழைகின்றாள். இன்றும் சமுதாய நடைமுறையில் பெண்ணின் தாய்க்கும், ஆடவனின் தாய்க்கும் எதிருணர்ச்சி நிலவுகின்றது. அகஇலக்கியத்தில் தலைவியின் தாய் தந்தையர் இயல்பாகவே இடம்பெறுவர். **ஓதலாந்தையாரின் பாலைப்பாடல்களில்**

**தலைவனின் பெற்றோரைப் பற்றியும் அவனது காதல் ஒழுக்கத்தைக் குறித்தும் செய்திகள் காணப்படுகின்றன.** தலைவியின் தாய்,

***"நினைத்தொறுங் கலிழு மிடும்பை யெய்துக***
***புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை***
***மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்***
***வெஞ்சுர மென்மக ளுய்த்த***
***வம்பமை வல்வில் விடலை தாயே"***          *(ஐங்.373)*

எனத் தலைவனின் தாயைச் சபிக்கின்றாள். ஓதலாந்தையார் தலைவனது தாய் மேல் தலைவியின் தாய்க்குச் சினம் உண்டு என்பதை,

***"நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்***
***மெம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்***
***சொல்லி எவனோ மற்றே வெல்வேல்***
***மையற விளங்கிய கழலடிப்***
***பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே"***          *(ஐங்.399)*

என வெளிப்படுத்தியுள்ளார். **மகள் உடன்போக்குத் துறையில் வைத்து தாயர்தம் சிந்தனையோட்டங்களைப் பலவாறு சுட்டியுள்ளார் ஓதலாந்தையார். ஆண், பெண் ஆகிய இருதாயாரின் இகலுணர்ச்சி பாடப்பெறுவதால் அக இலக்கியம் சமுதாய உணர்வோடு இயங்குவதை அறியலாம்.**

**ஔவையார்**

*தமிழகம் நன்கறிந்த தமிழ்ப் புலமையர் ஔவையார் ஆவார். இவர் புறம் பாடுவதில் வல்லவர். இவர் இயற்றியனவாக 33 புறப்பாடல்கள் காணப்படுகின்றன. ஔவையார் 26 அகப்பாடல்களையும் இயற்றியுள்ளார். இவற்றுள் 8 பாடல்கள் களவிற்குரியவை. 18 பாடல்கள் கற்பிற்குரியவை. அகம்பாடுவதிலும் வல்லவராக ஔவையார் விளங்கினார். அகத்திணையின் பல துறைகளிலும் ஔவையார் பாடியிருப்பினும், களவிலும் கற்பிலும் தலைவியரின் பிரிவுத்துயரங்களை எடுத்துக்காட்டும் தனித்திறம் மிக்கவராக ஔவையார் அறியப்படுகின்றார். இவர்தம் அகத்தலைவி அடக்கவியலாத காமவேட்கைக்கு ஆட்பட்டவள். குறுந்தொகையின் அத்தலைவி என் காமம் வானளவு உயர்ந்தது. என் காதலனாகிய தலைவன் அதனை முற்றத் தணிக்கவில்லை என்கின்றாள்.*

***"உள்ளின் உள்ளம் வேமே; உள்ளா***
***திருப்பினெம் அளவைத் தன்றே; வருத்தி***

*வான்றோய் வற்றே காமம்;*
*சான்றோர் அல்லர்யாம் மரீஇ யோரே”* (குறுந்.102)

இப்பாடல் நெய்தல் திணையில் அமைந்துள்ளது. தலைவன் தன்னைப் பிரிந்து செல்லக்கூடாது எனத் தலைவி வம்பு செய்கின்றாள். இதனால் தலைவன் சொல்லிக்கொள்ளாமல் தலைவியைப் பிரிந்து செல்கின்றாள். ஔவையாரின் அப் பாடல் வருமாறு:

*“செல்வார் அல்லரென்று யானிகழ்ந் தனனே*
*ஒல்வாள் அல்லளென் றவர் இகழ்ந் தனரே*
*ஆயிடை இருபே ராண்மை செய்த பூசல்*
*நல்அராக் கதுவி யாங் கென்*
*அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே”* (குறுந்.43)

மனைவியின் காமத்தைத் தலைவன் அவ்வளவு உணர்ந்தவனாகத் தெரியவில்லை. இதனால் தோழி அத்தலைவனை, ‘அவன் வினை முடித்து வரும்வரை தலைவி வாழ்ந்துகொண்டிருப்பாள் என்று தலைவன் தவறாகக் கருதுகின்றான். ஒரு நாள் அவன் இல்லாது நீங்கினாலும் அத்தலைவி உயிர் நீப்பாள் என்பதை அவன் உணரவில்லை’ என இடித்துரைக்கின்றாள். நற்றிணையின் அப்பாடலடிகள் வருமாறு:

*“பெருநகை கேளாய் தோழி! காதலர்*
*ஒருநாள் கழியினும் உயிர்வேறு படூஉம்*
*பொம்மல் ஓதி! நம்மிவண் ஒழியச்*
*செல்ப என்ப நாமே; சென்று*
*தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை*
*வாழ்தும் என்ப நாமே அதன்தலைக்*
*கேழ்கிளர் உத்தி அரவுத்தலை பனப்பப்*
*படுமழை உருமின் உரற்றுகுரல்*
*நடுநாள் யாமத்தும் தமியம் கேட்டே”* (நற்.129)

**ஔவையாரின் அகத்திணை உருவகம்**

ஔவையார் படைத்துக் காட்டும் தலைவி மெய்ம்மலி காமத்தள்; தலைவனுடன் சென்று கையணை முயக்கம் விழைபவள்; தலைவன் இருக்கும் இடத்திற்குச் சென்றேனும் இன்புறும் துடிப்பினள். வழிகள் மயங்கிய நெடுந்தொலைவு நடந்தேனும் வெள்ளிவீதியைப் போலக் காதலனைப் பெறுவேன் எனத் துணிகின்றாள். அகநானூற்றின் அப்பாடல் வருமாறு:

*"நெறிபடு கவலை நிரம்பா நீளிடை*
*வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்*
*செலவயர்ந் திசினால் யானே; பலபுலந்து*
*உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சாஅய்த்*
*தோளும் தொல்கவின் தொலைய நாளும்*
*பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி*
*மருந்துபிறி தின்மையின் இருந்துவினை இலனே!" (அகம்.147)*

ஔவையாரின் மற்றொரு அகநானூற்றுத் தலைவி,

*"அழிநீர் மீன்பெயர்ந் தாங்கவர்*
*வழிநடைச் சேறல் வலித்திசின் யானே" (அகம்.303:19-20)*

என்கின்றார். இது கற்புடைய பெண்ணின் காமச் சொல்லாகும். மீன் உவமம் மிகவும் பொருத்தமானது. நீர் நீங்கின் மீன் நீங்கும். மீன் நீருள்ள இடத்தை நாடிச் செல்வதைப் போல காமத்தலைவி காதற் கணவனைத் தேடிப் பயணிக்கத் துணிகின்றாள். தலைவனுடன் செல்லவேண்டும் அல்லது அவன் போன இடத்திற்குத் தனித்துச் செல்லவேண்டும் என்னும் வேட்கை உடையவளாகத் தலைவியைப் படைத்துக் காட்டும் ஔவையாரின் புலமை சிறப்புடையது.

*"தலைவரம் பறியாத் தகைவரல் வாடையொடு*
*முலையிடைத் தோன்றிய நோய்வளர் இளமுளை*
*அசைவுடை நெஞ்சத்து உவவுத்திரள் நீடி*
*ஊரோர் எடுத்த அம்பல் அஞ்சினை*
*ஆராக் காதல் அவிர்தளிர் பரப்பிப்*
*புலவர் புகழ்ந்த நாணில் பெருமரம்*
*நிலவரை யெல்லாம் நிழற்றி*
*அலரரும்பு ஊழ்ப்பவும் வாரா தோரே" (அகம்.273:10-17)*

அகத்திணைக் கருத்துக்களைக் கொண்ட செய்யுள் மரபு உருவகமாக இப்பாடல் அமைந்துள்ளது. கலங்கும் நெஞ்சம் நிலமாகும். முலையை அணையப்பெறாத வேட்கை முளையாகும். வேட்கையில் பருத்த வருத்தம் அடியாகும். அவ்வருத்தத்தை அறிந்து பெண்கள் கும்பல் கும்பலாகப் பேசும் அம்பல்கள் விரிந்த கிளைகளாகும். அவ்வம்பல்களைக் கேட்டுக் கேட்டுத் தழைக்கும் காதல் உணர்வுகள் தளிர்களாகும். மெல்ல முளைத்துப் பருத்து விரிந்து தழைத்த காமத்தின் காழ்ப்பால் அரிய நாணம் நீங்கித் தடித்த வாழ்வு பெருமரமாகும். அதன் நிழலில் ஊரார் அனைவரும் கூடிக்கூடி வாய்மலர்ந்து பேசுவது விரிந்த அலராகும். இவ்வாறு அகத்திணைக் காதல்மரம் ஒன்றைக் காட்டிய இலக்கிய

ஓவியராக ஔவையார் விளங்குகின்றார். அத்தகைய மலர்களைப் பறிக்கத் தலைவன் வரவில்லையே என்று காமம்மிகக் கொண்ட தலைவி வருந்துகின்றாள்.

ஔவையாரின் பல அகப்பாடல்கள் பெருந்திணையின் பாற்படுவன. பெருந்திணையின் நான்கு துறைகளுள் “தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்” என்பதும் ஒன்றாகும். தலைவியின் காமம் கணந்தொறும் பெருகிச் செல்வதன்றித் தணிவதில்லை. தோழி ஆற்றியும் ஆறி அடங்குவதில்லை. ஊரெல்லாம் அறிந்து பேசும்படியாக அவள் காமம் வெளிப்படையானதாகும். புலவர், பெண்மை எனப் பாராட்டிய நாணம் அகன்றுவிடும். களவிலும் ஊரார் அலர் உண்டு. அவ்வலர் காதலர் தம் மறைவான ஒழுக்கத்தினாற் தோன்றுவது. அது கற்புக்கு உறுதுணையாக அமைவது. தலைவியின் ‘நாணை’ உறுபடுத்தாதது. ஆனால் கற்பில் தோன்றும் இல்லற அலர், மனைவியின் காம வெளிப்பாட்டினை வெளிப்படையாகக் கொண்டது. அது கற்பை ஊறுபடுத்தாமல் நாணை நீக்குவது. “பிரிவின்கண் தலைமகள் அறிவு மயங்கிச் சொல்லியது” என இந்த அகப்பாட்டிற்கு எழுதிய துறைக்குறிப்பால் இப்பாடல் பெருந்திணையின் பாற்பட்டது என்பதை அறியலாம்.

**ஓரோடகத்துக் கந்தரத்தனார்**

சங்கத் தொகை நூல்களில் கந்தரத்தனார் இயற்றியனவாக 8 அகப்பாடல்கள் உள்ளன. இவற்றுள் 3 பாடல்கள் களவிற்கு உரியவை. 5 பாடல்கள் கற்பிற்குரியவை. களவியலில் தலைவியின் நற்றாய் மிகுதியாக இடம்பெறுவதுண்டு. வெறியாடல், அறத்தொடு நிற்றல், உடன்போக்குத் துறைகளில் தாய் பாடப்பெறுவாள். களவுத் திணையில் தாயின் நிலை குறித்துத் தொல்காப்பியத்தில் பல நூற்பாக்கள் உள்ளன. மகள், இல்லத்தலைவியாகிய நிலையில் கற்பியலில் நற்றாய் பேச்சுக்கு வாய்ப்பே இல்லை. ஆயினும் கந்தரத்தனார், கல்லாடனார், நக்கீரர் ஆகிய மூன்று புலவர்களும் அன்னையை அகப்படுத்தியே பாடல்களை இயற்றியுள்ளனர். இம்மூவர் பாடல்களும் பாலைத் திணையின்பாற் படுவன. தலைவனது பிரிவின்கண் தலைவி ஆற்றாது வருந்தும் துறையன. இந்த ஒற்றுமை வியப்பாக உள்ளது. கணவனது பிரிவால் மகள் தோள் நாளும் மெலிவதைக் கண்டு கல்லாடனார்,

***“அன்னையும் அருந்துயர் உற்றனள் அலரே” (அகம்.209:2)***

என்பர். தாய்க்கு முகமலர்ச்சி இல்லை என்பதை நக்கீரர்,

***“அன்னையும் அமரா முகத்தினள் அலரே” (அகம்.253:3)***

எனக் குறிப்பர். இவ்விருவர் பாடல்களிலும் தலைவியின் அன்னை ஓரடியில் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றாள். ஆனால் கந்தரத்தனார் பாடலில் அன்னையின் துயரம்,

*“சுரம்பல கடந்தோர்க் கிரங்குப என்னார்*
*கெளவை மேவல ராகிய ‘இவ்ஊர்*
*நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ*
*புரைய அல்லஎன் மகட்கெனப் பரைஇ*
*நம்முணர்ந் தாறிய கொள்கை*
*அன்னை முன்னர்யாம் என்னிதற் படலே!”* *(அகம்.95:10–15)*

என விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. தலைவன் பொருள்வயிற் பிரிவில் வேற்றுநாடு செல்வதற்குத் தலைவி உடன்பட்டாள். அவன் பிரிந்த பின்னரே அத்தலைவியைப் பிரிவு வாட்டுகின்றது. நுதல் வெளிறியது. மெல்லிய உடல் நொய்தாயிற்று. இதனையறிந்த ஊர்ப்பெண்கள், கணவன் பொருள்வயிற் பிரிவில் செல்வதற்கு ஒருப்பட்டு அவன் பிரிந்தபின் வருந்துகின்றாளே எனத் தூற்றலாயினர். காதலனாகிய கணவன் மனைவி வருந்துவது இயல்பினும் இயல்பே. அதுவும் செல்லும்வழி பாலைச்சுரமாக இருப்பதால் மனைவிக்குப் பெருங்கவலை தோன்றுகின்றது. இவ் உறவு மற்றும் உள்ளநிலையைச் சிறிதும் கருதிப் பாராமல் இந்த ஊர்ப்பெண்கள் தன் மகள் மீது அலர் கூறுவர். இது பொருந்தாது; இப்பெண்கள் கொடியவர்; நரகத்திற்குச் செல்லத்தக்கவர் என்று தலைவியின் தாய் தெய்வத்தைப் பரவுகின்றாள். தானே துயர்ப்படும் தாயின்முன் நம் துன்பநிலையை வெளிப்படுத்தக்கூடாது என்று தோழிக்குத் தலைவி கூறுகின்றாள். மாமன், மாமிமுன் தன் துன்பத்தை வெளிக்காட்டாமல் அடக்கி மறைத்துக்கொள்ளும் மனநிலை இவ் அகநானூற்றுத் தலைவியிடம் காணப்படுகின்றது. தலைவி தலைவனொடு உடன் ஏகுவாள். பின்னிருந்து இரங்குதலும் தாய் அறிய அவலப்படுதலும், மகளின் அவலத்தை அறிந்து தாய் அடங்கியிருத்தலும் நிகழாது. ஆதலின் இப்பாடலைக் களவுத் துறையாக அகநானூற்று உரையாசிரியர்கள் பொருள் முடித்திருப்பது தவறாகும்.

களவியலில் வரும் தாய்க்கும் கற்பியலில் வரும் தாய்க்கும் பாடப்பெறும் முறையில் வேறுபாடு உள்ளது. ‘நற்றாய் கூறியது’ என நேர்கூற்றாகக் களவியலில் பாடப்பெறும். சான்றாக “ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள்” (அகம்.35:1) இப்பாடல் நற்றாய் கூற்றில் “மகட்போக்கிய நற்றாய் தெய்வத்திற்குப் பராஅயது” என்னும் துறையில் அமைந்துள்ளது. இத்தகைய பாடல்கள் பல பாலைத்

*திணையில் உள்ளன. கற்புத் திணையில் தாய் பிறர் கூற்றில் வைத்துப்பாடப் படுகின்றாள். கந்தரத்தனார் பாடல் தலைவி கூற்றாகும். கல்லாடனார், நக்கீரர் பாடல்கள் தோழி கூற்றுப் பாடல்களாகும்.*

**விளங்கிய தலைமக்கள்**

*கந்தரத்தனாரின் தலைமக்கள் ஒருவரையொருவர் புரிந்துகொண்டவர்கள். தலைவன் பிரிவிற்குத் தலைவி உடன்படுகின்றாள். பொருள்வயிற் பிரியலாமா? எனத் தலைவனும் ஓர்கின்றான். அறல் மணல் போல விரிந்து நெளிந்து ஓடிய கருங்கூந்தலை உடைய மனைவி ஆற்றியிருப்பாள். "ஒலியிருங் கூந்தல் தேறும்" (அகம்.191:16) எனத் தலைவனது நெஞ்சம் அவனுக்குத் தேறுதல் மொழியாகின்றது. தலைவன் செல்லும்வழி பாலையாயிற்றே என்று ஒருகால் மனைவி கலங்கினாலும் அவள் குறித்த காலம் வரையில் ஆற்றியிருக்கும் தன்மையள் ஆகின்றாள்.*

***"அனையகொல் வாழி தோழி மனைய***
***தாழ்வின் நொச்சி சூழ்வன மலரும்***
***மௌவல் மாச்சினை காட்டி***
***அவ்வள வென்றார் ஆண்டுச்செய் பொருளே" (அகம்.23:10–13)***

*பொருள்வயிற் பிரியும் தலைவன் தான் திரும்பி வரும் காலத்தைச் சொல்லால் குறிப்பிடவில்லை. நொச்சி மரத்தின் கிளையில் சுற்றிக்கொண்டு கிடக்கும் முல்லைக்கொடியைத் தலைவிக்குக் காட்டி, அயலூரில் பொருளீட்டும் காலம் அவ்வளவுதான் என்கின்றான். முல்லை மலரும் காலமாகிய கார்ப்பருவத்தில் வந்துவிடுவேன் என்பது தலைவன் சுட்டும் குறிப்பு ஆகும். இக்குறிப்பு நாடக முறைக்கு உரிய மெய்ப்பாடாகும். அக்கால வரம்பிற்குள் ஈட்டமுடிந்த பொருளுடன் தலைவன் திரும்பிவிடுவான். இவ்வளவு பொருள் ஈட்ட வேண்டும் எனப் பொருள் வரம்பு அவனிடம் இல்லை. அவன் தன் மனைவியின் காதலை மதித்துக் கால அளவே பொருள் அளவு என்கின்றான்.*

*அவ்வாறே கார்காலத்தைக் கண்ட மனைவி தன் கணவனாகிய தலைவன் வரவில்லை என விம்மி அழுது விழவில்லை. அவர் குறித்த பருவம் 'இதுதானோ, அனைய கொல்?' என அடக்கமாக வினவுகின்றாள். இவ்வாறு கந்தரத்தனாரின் அகப்பொருள் தலைவன் தலைவியர் உரிய அறிவும் ஒத்த உணர்வும் அரிய அடக்கமும் பெற்றவர்களாக விளங்குகின்றனர்.*

**கயமனார்**

*இவர் இயற்றியனவாக எட்டுத்தொகையின் அகநூல்களில் 22 பாடல்கள் கிடைத்துள்ளன. இவற்றுள் 21 பாடல்கள் களவின்பாற்பட்டன. இவற்றுள் 20 பாடல்கள் உடன்போக்குத்துறை பற்றியன. கயமனார் 17 பாடல்களில் செவிலி, நற்றாய் கூற்றுக்களில் அவர்தம் புலம்பல்களை வெளிப்படுத்தியுள்ளார்.* ***கயமனார் மகளது உடன்போக்கு என்னும் ஒரு துறையில் 17 தாயர்களின் மனநிலைகளை நுட்பமாக வெளிப்படுத்தியுள்ளார்.*** *'உள் உறுப்புக்கள் வளர்ந்து வனப்புற்றன. குமரிப்பருவத்து நீ புறத்துப் போகலாமா? என்றுதான் இயல்பாகக் கூறினேன். தாய் தன் களவை அறிந்து விட்டாளோ? என அஞ்சி அகன்றுவிட்டாள்' என்கின்றாள் அகநானூற்றுத் தாயொருத்தி.*

***"முலைமுகஞ் செய்தன; முள்ளெயி றிலங்கின***
***தலைமுடி சான்ற தண்தழை யுடையை***
***அலமரல் ஆயமோடி யாங்கணும் படாஅல்***
***மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய***
***காப்பும் பூண்டிசின் கடையும் போகலை***
***பேதை அல்லை மேதையங் குறுமகள்***
***பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென" (அகம்.7:1–7)***

*'பிறந்த நாள்முதல் உறவுடைய எங்களையும் இல்லத்தையும் துறந்து புதியவளை நம்பிச் சுரத்தின் வழிச் செல்லத் துணிந்தாளே; இவள் அடிகள் பாலை நிலத்தில் பரவுமா?' என்பது மற்றொரு அகநானூற்றுத் தாயின் ஏக்கப் புலம்பலாகும்.*

***"தொடிமாண் சுற்றமும் எம்மும் உள்ளாள்***
***நெடுமொழி தந்தை அருங்கடி நீவி***
***நொதும லாளன் நெஞ்சறப் பெற்றஎன்***
***சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி***
***வல்லகொல் செல்லத் தாமே கல்லென" (அகம்.17:6–10)***

*மெல்லிய மகளின் கூந்தற்கற்றையை ஒருகையால் பற்றிக்கொண்டு முதுகு அவளுக்கு இல்லை என்னும்படியாக மற்றொரு கையால் கோல் கொண்டு நொறுக்கினேன். என் கைகள் அன்னி என்பான் வெட்டிய புன்னை மரம் போலத் தொலைந்தொழிக என மற்றொரு அகநானூற்றுத் தாய் தனக்குத்தானே தற்சாபம் இட்டுக்கொள்கின்றாள் (அகம்.145:11–23). இவ்வாறு மகளின் உடன்போக்குச் சூழலில் பல்வேறு தாயரின் மனநிலைகளைப் புலப்படுத்தியுள்ளார் கயமனார்.*

உடன்போக்குப் பிற நிலங்களிலும் நிகழலாம். எனினும் அது பாலைப் பாடல்களுக்கே சிறப்பாக உரியது. கோடைக்காலத்திலும், இளவேனில் முதலான பிறகாலங்களிலும் உடன்போக்கு நிகழும். உடன்போக்குப் பாலைத் திணையாவதற்கு முதன்மைக் காரணம் தலைவி, தலைவனின் தாம் பிரிக்கப்படுவமோ என்ற அச்சமே காரணமாகும். உடன்போக்கைப் பிற நிலங்களிலும் பிற பருவத்திலும் நிகழ்வதாக வைத்துப் பாடலாம் எனினும், கோடைக்காலமும் பாலையின் சுரவழியுமே அதற்கு உகந்ததாக வைத்துக் கயமனாரால் பாடல்கள் புனையப்பெற்றுள்ளன. இப் பின்னணி தாயின் அவலத்துயரை உருக்கமாகக் காட்ட உதவுகின்றன. தாயின் வருத்தம் தலைவியாகிய தன் மகள் முன் அனுபவித்த வாழ்வின் வளத்தைப் பொறுத்தது. தாயின் துன்பத்தின் ஆழம் தன் மகள் முன்நுகர்ந்து அனுபவித்த இன்பத்தின் அகற்சியையும் நீக்கத்தையும் பொறுத்ததாகும்.

*“நிழல்ஆன்று அவிந்த நீர்இல் ஆர்இடைக்*
*கழலோன் காப்பக் கடுகுபு போகி*
*அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த*
*வெவ்வங் கலுழி தவ்வெனக் குடிக்கிய*
*யாங்குவல் லுநள்கொல் தானே ஏந்திய*
*செம்பொற் புனைகலத்து அம்பொரிக் கலந்த*
*பாலும் பலவென உண்ணாள்*
*கோல்அமை குறுந்தொடித் தளிர்அன் னோளே” (குறுந்.356)*

பொற்கலத்தில் மாக்கலந்த பாலைக் குடிக்க மறுத்த செல்வமகள் நிழலும் நீரும் இல்லாத சுரவழியில் உலர்ந்து வற்றிய சேற்றுக்கலங்கல் நீரை எப்படிக் குடிப்பாள் எனச் செவிலித்தாய் தம் மகளின் முன்னைய நிலையோடு ஒப்பிட்டுப் பெருந்துயர் அடைகின்றாள். இருவேறுபட்ட நிலைகளை அதன் உச்ச எல்லையளவில் புனையும் போதுதான் உணர்ச்சிகள் ஓங்கியெழும். ஆதலின் கயமனார் தாயின் ஆற்றாமையைக் காட்டுவதற்காக மகளின் முந்தையச் செல்வ வாழ்க்கையும், அவள் தற்போது செல்லும் பாலைச்சுரத்தின் கொடுமையையும் சொல்லி இவ்விரண்டையும் இணைத்துத் தம் பாலைப் பாடல்களை இயற்றியுள்ளார்.

*“கமஞ்சூழ் பெருநிறை தயங்க முகந்துகொண்டு*
*ஆய்மடக் கண்ணள் தாய்முகம் நோக்கி*
*பெய்சிலம் பொலிப்பப் பெயர்வனள் வைகலும்*

*ஆரநீர் ஊட்டிப் புரப்போர்*
*யார்மற்றுப் பெறுகுவை அளியை நீயே”* *(அகம்.383:10–14)*

*என்பது கயமனாரின் தாயின் அவலம் செறிந்த பாடலாகும். தன் மகள் வளர்த்த வயலைக் கொடியைக் காணும்போது, தற்போது அது நீர் ஊற்றப் பெறாமையால் வாடுவதைக் கண்டு தாய் இரங்கிக் கூறும் உருக்கமான சொற்களே இப்பாடல்வரிகள். இச்சொற்கள் புரப்பவள் சென்றுவிட்டாள்; இனி உனக்கு நீர் ஊட்டுவார் யார்? நாங்கள் அனைவரும் எங்களையே புரக்கமாட்டாது கலங்குகின்றோம்; இனி உனக்கு வாடுதலைத் தவிர வளர்ச்சி இல்லை எனக் கேட்கும் ஆற்றல் இல்லாத வயலைக் கொடியிடம் அதற்குக் கேட்கும் திறன் இருப்பதாகக் கருதித் தாய் புலம்புகின்றாள். இவ் அவலத்துயரம் படிப்போர் உள்ளத்தைக் கவர்ந்து ஈர்க்கும் ஆற்றலுடையது.*

**கயமனாரின் உடன்போக்குப் பாடல்கள்**

*கயமனாரின் உடன்போக்குப் பாடல்கள் தலைவியின் கற்புத் திண்மையையும், தாயின் அன்புள்ளத்தின் மென்மையையும், அம் மென்மையில் பிறந்த வெகுளியையும் காட்டுகின்றன. தாயின் வெகுளி தலைவன் மீதும், தலைவனின் தாயிடமும் பாய்கின்றது. பிறந்தநாள் முதல் பெருகிய தன்மகளின் அன்பை ஒருநாட் காதலால் மாற்றிவிட்டாளே என்று தாய் மனம் துடிக்கின்றது. இதனால்தான் அத்தாய் தலைவனை நொதுமலாளன், அறனிலாளன், ஏதிலாளன் என இகழ்ந்து கூறுகின்றாள். தன் மகளுக்குத் தங்களைப் பிரிந்து உடன்செல்லும் துணிவு வாராது, அத்துணிவை ஊட்டியவன் அத்தலைவன் என மகளின் தாய் வெதும்புகின்றாள்.*

*“பெறுவிதுப் புறுக மாதோ எம்மில்*
*பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்*
*கொண்டுடன் போக வலித்த*
*வன்கண் காளையை ஈன்ற தாயே”* *(நற்.293:6–9)*

*இத்தகைய கொடிய பெண்ணொருத்தி தன் மகனைப் பெற்றாளே; அவள் அவனைப் பெற்றிராவிட்டால், அவன் வளர்ந்து காளையாகித் தன் மகளைக் கொண்டுசெல்ல முடியாதே; தனக்கும் அவலத்துயர் இராதே என்று மகளின் தாய், தலைவனின் தாயைப் பழித்துக் கூறுகின்றாள். மகளைப் பிரிந்த ஒரு தாயின் உள்ளம் எவ்வாறு நினைக்கும்; எவ்வாறெல்லாம் பேசும் என்பதற்குக் கயமனாரின் உடன்போக்குத் துறைப் பாடல்கள் தக்க சான்றுகளாக அமைகின்றன.*

**கயமனாரின் புறப்பாடல்**

புறநானூற்றில் பொதுவியல் திணையில் முதுபாலைத் துறையில் கயமனார் ஒரு பாடலை இயற்றியுள்ளார். இப்பாடலும் உடன்போக்குத் துறையோடு தொடர்புடையதே. இவ் உடன்போக்குத் திருமணமான கற்பியல் வாழ்வியல் நிகழ்கின்றது. கணவனும் மனைவியும் பாலை வழியில் சென்று கொண்டிருக்கின்றனர். கணவன் இயல்பாக மாண்டுவிட்டான். அவன் மாண்டதை அறியாமல் பேதை மனைவி அவனை எழுப்பிப் பார்க்கின்றாள். அதன்பின்னரே அவன் இறந்ததை அறிந்தாள். 'நின்னை இங்கே இறக்கவிட்டு யான் மட்டும் எப்படித் தனியே ஊர் செல்வேன்?' நின் இறப்பை உன் தாயிடம் எப்படிக் கூறுவேன்? கூறினால் அவளும் இறந்துவிடுவாள் எனப் பலவாறு புலம்புகின்றாள் அம் மனைவி.

*"இளையரும் முதியரும் வேறுபுலம் படர*
*எடுப்ப எழாஅய் மார்பமண் புல்ல*
*இடைச்சுரத் திறுத்த மள்ள விளர்த்த*
*வளைஇல் வறுங்கை ஓச்சி கிளையுள்*
*இன்னன் ஆயினன் இளையோன் என்று*
*நின்னுரை சொல்லும் ஆயின் மற்று*
*முன்ஊர்ப் பழுனிய கோளி ஆலத்து*
*புள்ஆர் யாணர்த் தற்றே என்மகன்*
*வளனும் செம்மலும் எமக்குஎன நாளும்*
*ஆனா புகழும் அன்னை*
*யாங்கு ஆகுவள்கொல் அளியள் தானே?"* *(புறம்.254)*

இப்பாடலில் தலைவன் இடைச்சுரத்தில் இறந்தான் என வருவதால் உடன்போக்கில் நிகழ்ந்த இறப்பு என்பதும், தலைவனின் தாயைக் குறிப்பதால் கற்பில் நிகழ்ந்த உடன்போக்கு என்பதும், வாழ்வைக் கூறாமல் மரணத்தைக் கூறுவதால் புறமாகிய முதுயிலையாயிற்று என்பதும் அறியப்படும் செய்திகளாகும். இது உண்மையாக நடந்தது என நம்பும்படியாக உள்ளது. அகத்திலும் புறத்திலும் உடன்போக்கைப் பாடிய இப்புலவரை உடன்போக்குப் பாடிய கயமனார் என்று அழைக்கலாம்.

**கல்லாடனார்**

வரலாற்றுக் குறிப்புக்களை மிகுதியாகத் தம் பாடல்களில் இடைமடுத்து அகப்பாடல்களைப் பாடும் இயல்பினர் கல்லாடனார். இவர் இயற்றியனவாக

9 அகப்பாடல்கள் கிடைத்துள்ளன. அவற்றுள் 8 பாடல்கள் கற்பியல் சார்ந்தவை; பாலைத்திணைப் பாடல்கள். கல்லாடனாரின் அகநானூற்றுப் பாடலொன்றில் பாண்டியன் செழியன், வேங்கடத்தின் புல்லி முள்ளூர்க்காரி, ஓரி, சேரலர் ஆகியோர் குறிக்கப்பெற்றுள்ளனர். அவரது பிற பாடல்களில் அஃதை, கோசர், நன்னன், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் ஆகியோர் இடம்பெறுகின்றனர்.

***"பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்***
***எழுகாழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்***
***நேரா எழுவர் அடிப்படக் கடந்த***
***ஆலங் கானத்து ஆர்ப்பினும் பெரிதென***
***ஆழல் வாழி தோழி அவரே***
***மாஅல் யானை மறப்போர்ப் புல்லி***
***காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்***
***அறையிரந் தகன்றனர் ஆயினும் நிறையிறந்து***
***உள்ளா ராதலோ அரிதே செவ்வேல்***
***முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி***
***செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்***
***ஓரிக் கொன்று சேரலர்க் கீத்த"*** ***(அகம்.209:3–14)***

நெடுஞ்செழியனது ஆலங்கானத்துப் போரைப் புறநானூற்றில் விரிவாகப் பாடிய கல்லாடனார், அகநானூற்றிலும் அப்போர் ஆரவாரத்தை அவருக்கு உவமையாகக் கூறியுள்ளார்.

பிரிவினைப் பாடுபொருளாக்கிப் பாடல்களை இயற்றிய கல்லாடனார் பிரிந்திருக்கும் கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் நினைத்துப் பார்ப்பதைச் சிறப்பாகப் பாடியுள்ளார். இடைச்சுரத்தில் செல்லும் தலைவன் நெய்தல் மலரன்ன தன் காதலியின் கண்வனப்புக் கொண்ட நினைவு வருத்த, அவள் குணங்களை நினைத்துப் பார்க்கின்றான்.

***"........... ............. தன்புமிகக் கடைஇ***
***எய்தவந் தனவால் தாமே நெய்தல்***
***கூம்புவிடு நிகர்மலர் அன்ன***
***ஏந்தெழில் மழைக்கணெம் காதலி குணனே"*** ***(அகம்.83:11–14)***

மற்றொரு அகநானூற்றுத் தலைவி தலைவன் பண்பை நாளும் நினைத்து உருகுவேன் என்கின்றாள்.

*"...... .... .... .... நாளும்*
*நினைவல் மாதவர் பண்பென்று ஓவாது*
*இனையல் வாழி தோழி புணர்வர்"* *(அகம்.171:3–5)*

பின்வரும் கல்லாடனாரின் அகநானூற்றுப் பாடல் இல்லறத் தலைமக்களுக்கு எடுத்துக்காட்டாகும்.

*"ஓங்கிய நல்லில் ஒருஇறை நிலைஇப்*
*பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்*
*கன்றுபுகு மாலை நின்றோள் எய்திக்*
*கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்*
*பிடிக்கை யன்ன பின்னகம் தீண்டித்*
*தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ*
*நாணொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்*
*அந்தீங் கிளவிக் குறுமகள்*
*மென்றோள் பெறநசைஇச் சென்றஎன் நெஞ்சே" (அகம்.9)*

கணவன் பிரிந்த காலத்தில் மனைவி பொறுமையோடு கடன் ஆற்றுகின்றாள். நாண் கடவாத கற்பினள் என்று கணவனும் மனைவியைப் போற்றுகின்றான். உள்ளம் அவனையும் முந்தி அவளை அணையப் புறப்பட்டது. இவ்வாறு கல்லாடனார் காதலனின் ஆர்வத்தைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

**கழார்க்கீரன் எயிற்றியார்**

சங்ககாலத்தில் 23 பெண்பாற் புலவர்கள் அகப்பாடல்களைப் பாடியுள்ளனர். இப்புலவர்களுள் ஒருவரே கழார்க்கீரன் எயிற்றியார் ஆவார். 'கழார்க்கீரன்' என்னும் ஆண்பால் அடைமொழி பற்றிய காரணத்தை அறிய இயலவில்லை. எயிற்றியார் தொகை நூல்களின் 8 அகப்பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் 7 பாடல்கள் கற்பிற்கு உரியவையாகும். எயிற்றியார் பாலைத்திணைப் பாடல்களை இயற்றுவதில் அறிவுக்கூர்மை உடையவர். பொதுவாகப் பாலைத்திணைப் பாடல்களை இயற்றும் புலவர்கள் கோடைக்காலத்தையும் பாலைச்சுரத்தையும் பற்றியே புனைந்துரைப்பர். நீரும் நிழலும் இல்லாத சுரவழியில் தலைவன் செல்லுவதை நினைத்துத் தலைவி பெருந்துயர் அடைவதாகப் புனைந்து காட்டுவர். இத்தகைய பொதுப்போக்கு எயிற்றியாரிடம் இல்லை.

**எயிற்றியார் பாலைப் புனைவிற்கு மருதநிலத்தையும் வாடைக் காலத்தையும் பின்புலாகக் கொண்டுள்ளார்.** இவரது பாடல்கள் முதல்,

கருப்பொருள்களால் பாலையன்று. **உரிப்பொருளால் மட்டுமே பாலையாகும்.** எயிற்றியார் தலைவன் செல்லும் **சுரவழியின் கொடுமையைப் பாடாமல், தலைவியது தனிமைத்துயர் உணர்ச்சிகளையே பெரிதுபடுத்திக் காட்டியுள்ளார்.** பசுமையான இயற்கைச் செழிப்பும் வாடைக்குளிரும் முன்பனியும் அவளை வருத்துகின்றன.

***"நாணில மன்ற வெங் கண்ணே நாணேர்பு***
***சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப் பன்ன***
***கனைத்த கரும்பின் கூம்புபொதி யவிழ***
***நுண்ணுறை யழிதுளி தலைஇய***
***தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே" (குறுந்.35)***

இப்பாடல் மருதத் திணையில் பிரிவிடை மெலிந்த தலைவி தோழிக்குக் கூறுவதாகும். பசுங்கரும்பின் காட்சியும் வாடைச்சாரலும் தலைவியின் கண்களை அழச்செய்கின்றன. காலத்திற்கு நெஞ்சழியும் தலைவியை எயிற்றியார் காட்டுகின்றார். தாம் இயற்றிய ஏழு கற்புப் பாடல்களிலும் ஒரு களவுப் பாடலிலும் தலைவி மேல் காலத்தின் தாக்குதலைச் சுட்டிக்காட்டுகின்றார். காலவயப்பட்டாள் மனைவி என்பதனைக் கணவனும் அறிகின்றான்.

***"கோடைத் திங்களும் பனிப்போள்***
***வாடைப் பெரும்பனிக் கென்னள்கொல் எனவே" (நற்.312:8-9)***

உடனிருக்கும் போதே கோடைக்காலத்திலும் குளிரென நடுங்கும் என் மனைவி, குளிர்மிக்க வாடைக்காலத்தே தான் பிரிந்துவிட்டால் என்னாவாள்? என்று நினைத்துப் பார்க்கின்றான். பொருள் விரும்பும் நெஞ்சினைக் கடிந்து கொள்கின்றான். எயிற்றியாரின் 7 பாடல்கள் தலைவி கூற்றில் அமைந்துள்ளன. அத்தலைவி தோழியிடம்,

***"ஆனா தெறிதரும் வாடையொடு***
***நோனேன் தோழியென் தனிமை யானே" (அகம்.294:15-16)***

எனக் காலத்தை எதிர்கொள்ள இயலாத தன் நிலையைத் தெளிவுபடுத்துகின்றாள். குன்றையும் உலுக்கும் அவ்வாடை எனக்கு மட்டும்தான் வந்ததோ? என் கணவன் இருக்கும் இடத்திற்கும் இக்கொடுமையோடு செல்லாதோ? என்று தலைவி வினவுவது அவளது ஆற்றாமையைக் காட்டுவதாகும்.

***"குன்று நெகிழ்ப்பன்ன குளிர்கொள் வாடை!***
***எனக்கே வந்தனை போறி புனல்கால்***
***அயிரிடு குப்பையின் நெஞ்சுநெகிழ்ந் தவிழ***

*கொடியோர் சென்ற தேஎத்து மடியாது*
*இனையை யாகிச் சென்மதி;*
*வினைவிதுப் புறுநர் உள்ளலும் உண்டே"* *(அகம்.163:9–14)*

கூதிர்காலத்துக் கருவிளைப்பூ மலருகின்றது. மழைத்துளியை ஏற்று அம்மலர் இடையறாது நீரை வடிக்கின்றது. அது காதலரைப் பிரிந்திருக்கும் பெண்கள் அழுது நீர்வடிக்கும் கண் போல் அமைந்தது என வாடைக்கு வருந்தும் தலைவி கூறுகின்றாள்.

*"காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்*
*நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத்"* *(அகம்.294:4–5)*

ஆதலால் எயிற்றியாரை வாடை பாடிய புலவர் எனப் போற்றலாம்.

**காவன்முல்லைப் பூதனார்**

காவல்முல்லைப் பூதனார் இயற்றிய 8 அகப்பாடல்களும் கற்பியலில் பாலைத் திணைக்குரியவை. இவர் பிற திணைகளில் பாடல்களை இயற்றவில்லை. பூதனார் நீர் வறட்சி, பேய்த்தேர், விலங்குகளின் உயக்கம், நிலத்தின் வெருவரு தோற்றம் ஆகிய பாலை இயல்புகளைச் சிறப்பாகத் தம் பாடல்களில் சுட்டிக்காட்டியுள்ளார். இவர் பாலை நிலத்தின் பல்வேறு இன்மைகளில் நீரின்மையை மட்டும் தனித்துக் காட்டி இலக்கிய வளம் சிறக்கத் தம் பாடல்களை இயற்றியுள்ளார்.

பூதனாரின் அகத்திணைத் தலைவி தானே ஆறுதல் அடைபவள்; ஆற்றுப்படத் தக்கவளாகவும் விளங்குகின்றாள். தலைவன் சென்ற வழி புலி வழங்கும் இடம் எனத் தலைவி கவலைப்படுகின்றாள். இல்லை எனத் தோழி ஆற்றுவிக்கின்றாள். 'நீயும் உடன் வருவதாயின் வருக. செல்லும் சுரநெறியில் வானம் மின்னும். மேகம் துளிர்த்துப் பெருமழை பெய்யும். பெண்கள் அணியும் பொன்னணிகள் போலக் குமிழம் பூக்கள் மெத்தென வீழ்ந்து கிடக்கும்' எனத் தலைவன் இனிதாகக் கூறிய பழஞ்சொற்களைத் தோழி நினைவுபடுத்தவே தலைவி ஆறுதல் அடைகின்றாள்.

*"நெடுவான் மின்னிக் குறுந்துளி தலைஇப்*
*படுமழை பொழிந்த பகுவாய்க் குன்றத்து*
*உழைமான் அம்பினை தீண்டலின் இழைமகள்*
*பொன்செய் காசின் ஒண்பழந் தாஅங்*
*குமிழ்தலை மயங்கிய குறும்பல் அத்தம்*

*எம்மொடு வருதியோ பொம்மல் ஓதியெனக்*
*கூறின்று முடையரோ மற்றே வேறுபட்டு"* *(நற்.274:1–7)*

தலைவன் தன்னைப் பிரிதற்குக் காரணம் கடமையுணர்வு; தாங்க வேண்டுவோரைத் தாங்கி உற்றார்க்கு உதவும் அருள்ளம் எனத் தானே நினைத்து ஆறுதல் பெறுகின்றாள் தலைவி.

*"தம்நயந்து உறைவோர்த் தாங்கித் தாம்நயந்து*
*இன்னமர் கேளிரொடு ஏமுறக் கெழீஇ*
*நகுதல் ஆற்றார் நல்கூர்ந் தோரென*
*மிகுபொருள் நினையும் நெஞ்சமொடு அருள்பிறிது" (அகம்.151:1–4)*

தலைவன் பிரிந்த பின்னர் ஒருவாறு தலைவி ஆற்றியிருப்பினும், அவன் பிரிவதற்கு முன்னர் பாலை வழியாயிற்றே என அத்தலைவி மிகவும் பேதுற்றுக் கலங்குகின்றாள். பலவாறு புலம்புகின்றாள். அன்பற்ற இடையர்கள் தாயிடமிருந்து பிரித்து வைத்த கன்று போலத் தலைவனுடன் என்றும் உடனுறைய அவாவுகின்றாள்.

*"பண்பில் கோவலர் தாய்பிரித்து யாத்த*
*நெஞ்சமர் குழவிபோல நொந்துநொந்து*
*இன்னா மொழிதும் என்ப"* *(அகம்.293:11–13)*

இப்புலவர் இயற்றிய பாடல்களில் இவரது பெயர் காவன்முல்லைப் பூதரத்தனார் என்றும், காவன்முல்லைப் பூதனார் என்றும் குறிக்கப்பெற்றுள்ளன.

**குடவாயில் கீரத்தனார்**

இப்புலவர் தன் ஊராகிய குடவாயிலைத் தலைவிக்கும், தன் ஊர் அகழியில் பூத்த நீலமலர்களை அவளது கண்ணுக்கும் உவமையாகக் கூறியுள்ளார். இவர் இயற்றியனவாகத் தொகை நூல்களில் களவில் 5 பாடல்களும் கற்பில் 12 பாடல்களும் காணப்படுகின்றன. பாலையே இவர் பாடிய முதன்மை உரிப்பொருளாகும். 8 பாடல்களில் உவமையாகவும் புனைவுகளாகவும் வரலாற்றுச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

கீரத்தனாரின் அகப்பாடல்களின் தாய் தன் மகளை இற்செறிக்கும் மனப்பாங்கு உடையவள். தன் மகளின் குமரிப்பருவம் முதல் அவளைக் கூர்ந்து நோக்கி வருபவள். அத்தாய் நேற்றுக்கூட அவள் (தன்மகள்) செயலை ஐயுற்றேன். அறியாமையால் வீட்டில் அடைக்காமல் விட்டுவிட்டேன் என்கின்றாள்.

*“கூழையுங் குறுநெறிக் கொண்டன முலையும்*
*சூழி மென்முகம் செப்புடன் எதிரின*
*பெண்டுணை சான்றனள் இவளெனப் பன்மாண்*
*கண்டுணை யாக நோக்கி நெருநையும்*
*அயர்த்தன்று மன்னே நெஞ்சம் பெயர்த்தும்*
*அறியா மையிற் செறியேன் யானே”* *(அகம்.315:1–6)*

தாய் நாள்தோறும் தலைவியாகிய தன்மளை நெய்தல்பூவைப் பறித்துவருமாறு ஏவினாள். அவள் நடத்தையில் சிறிது ஐயம் தோன்றியமையால் அத்தாய் தன் மகளைப் பூக்கொய்ய ஏவவில்லை.

*“றிறவா ரினக்குழு கொலிப்பச் சுறவங்*
*கண்போற் பூத்தமை கண்டு நுண்பல*
*சிறுபா சடைய நெய்தல்*
*குறுமோ சென்றெனக் கூறாதோளே”* *(நற்.27:9–13)*

புணர்ச்சியில் என்கை வளையலை அழுந்த அழுத்தாதே; அவ்வாறு அழுத்தினால் கையில் தழும்பு படும். காரணமில்லாமல் சினம் கொள்ளும். என் தாய் என் கைத்தழும்பினைக் கண்டால் இற்செறிப்புச் செய்து அரிய காவலைப் புரிவாள் என்ற அகநானூற்றுத் தோழியின் கூற்றால் (தலைவி தலைவனிடம் புணர்ச்சியில் கூறுவது) கீரத்தனார் புனையும் பாடல்களின் தாயின் பண்பினை அறியலாம்.

*“திண்டோர்ப் பொறையன் தொண்டி அன்னஎம்*
*ஒண்டொடி ஞெமுக்கா தீமோ தெய்ய”* *(அகம்.60:7–8)*

**உடன்போக்குத்துறைப் பாடல்கள்**

குடவாயில் கீரத்தனாரின் பல பாடல்களில் தலைவியர் களவிலும் கற்பிலும் உடன்போக்கை நாடுகின்றமை கூறப்படுகின்றது. தலைவர்களும் இதற்குத் துணை நிற்கின்றனர். உடன்கொண்டு செல்வதாக ஆசை வார்த்தை கூறி ஏமாற்றும் சில தலைவர்களும் உள்ளனர். சின்னாள் கழியட்டும்; செல்லும்வழி மழை பெய்து குளிரட்டும் என விழைவுகாட்டிப் பொய்த்தலும், அவர் செல்லும் நெறி காடு தழைத்து இனிதாகுக என்பதும் ஏமாறிய ஒரு தலைவியின் வாழ்த்தாக உள்ளது. ஒரு தலைவன் தலைவியை உடன் அழைத்துச் செல்ல ஒப்புகின்றான்.

*“அத்த வாகை அமலை வால்நெற்று*
*அரிஆர் சிலம்பின் அரிசி ஆர்ப்பக்*
*கோடை தூக்கும் கானம்*
*செல்வாம் தோழி நல்கினர் நமரே”* *(குறுந்.369)*

என்பது குறுந்தொகையின் அப்பாலைப் பாடலாகும்.

இவ்வாறு கற்பியலில் உடன்போக்கிற்குத் தலைவர்கள் தலைவியரை உடன் அழைத்துச் செல்ல ஒப்பினர் எனக் கூறுவதைக் காணமுடிகின்றது. இருவர்தம் உடன்போக்கையும் நேர்படக்கூறி இயற்றப்பட்ட பாடல் ஒன்றுகூட சங்க இலக்கியத்தில் இல்லை.

***"உயர்கரைக் கான்யாற் றவிர்மண லகன்றுறை***
***வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்***
***தொடலை தைஇய மடவரன் மகளே***
***கண்ணினும் கதவநின் முலையே***
***முலையினுங் கதவநின் றடமென் றோளே" (ஐங்.361)***

என்பது ஓதலாந்தையாரின் பாலைப் பாடலாகும். இப்பாடலில் களவில் உடன்போகும் தலைவன் தலைவி பூத்தொடுப்பதைப் பார்த்துப் புகழ்கின்றான். புகழ்ச்சி நாணித் தலைவி கண்ணைப் பொத்திக்கொண்டாள். நின் கண்ணிலும் எனக்குக் காதல் வெம்மையை விளைவிப்பன நின் முலைகளே என்று தலைவன் மேலும் பாராட்டினான். அவற்றையும் அவள் மறைத்துக்கொள்ளவே மறைக்க இயலாத தோள்அழகைத் தலைவன் வியந்து பாராட்டினான். இவ்வாறு களவின் உடன்போக்குக் குறித்த நேர்முகப் பாடல்கள் உள்ளன; கண்டோர் கூற்றுக்களும் உள்ளன. தொல்காப்பியர் கற்பியலில்,

***"புணர்ந்துடன் போகிய கிழவோள்"*** [4]

என இக் கற்பு உடன்போக்கினைக் கூறியுள்ளார்.

***"மணமனை கமழும் கானம்***
***துணையீ ரோதியென் தோழியும் வருமே" (அகம்.107:21-22)***

***"குவளை யுண்கண் இவளும் நம்மொடு***
***வரூஉம் என்றனரே காதலர்***
***வாராய் தோழி முயங்குகம் பலவே" (அகம்.285:13:5)***

***"அருஞ்சுரம் அரிய வல்ல வார்கோல்***
***திருந்திழைப் பணைத்தோள் தேன்நாறு கதும்பின்***
***குவளை உண்கண் இவளொடு செலற்கென***
***நெஞ்சுவாய் அவிழ்ந்தனர் காதலர்***
***அம்சில் ஓதி ஆயிழை நமக்கே" (அகம்.129:14-18)***

எனவரும் பாடல்களில் முதலிரண்டும் காரிக்கண்ணனார் இயற்றியவை. மூன்றவாது பாடல் குடவாயில் கீரத்தனார் பாடலாகும். கற்பொழுக்கத்தில் மனைவி உடன்செல்ல விரும்பினாள். இதனைத் தோழி தலைவனுக்குக் கூறினாள். நல்லது எனத் தலைவனும் அழைத்துச் செல்வதாகக் கூறும் பல பாடல்கள் உள்ளன. ஔவையாரின் அகநானூற்றுப் பாடலில் தலைவி,

***"கயந்துகள் ஆகிய பயந்தபு கானம்***
***எம்மொடு கழிந்தன ராயின் கம்மென***
***வம்பு விரித்தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்***
***படுசினை தாழ்ந்த பயிலிணர் எக்கர்***
***மெய்புகு வன்ன கைகவர் முயக்கம்***
***அவரும் பெறுகுவர் மன்னே நயவர்" (அகம்.11:6–11)***

எனக் கூறுகின்றாள். குடவாயிற் கீரத்தனாரின் குறுந்தொகைபாடற் தலைவி,

***"அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்ச்***
***சேர்ந்தனர் கொல்லோ தாமேயாந் தமக்கு***
***ஒல்லேம் என்ற தப்பற்***
***சொல்லா தகறல் வல்லு வோரே" (குறுந்.79:5–8)***

இடைச்சுரத்துச் செல்லும் தலைவன் தலைவியைக் கூட்டிக்கொண்டு வந்திருக்கலாம் என்றும், வாராதிருந்தது நன்று என்றும் சிந்திக்கும் பாடல்களும் உள்ளன. குடவாயிற் கீரத்தனாரின் குறுந்தொகையின் பாலைப் பாடலின் தலைவி, தோழியிடம் கூறும் முன்னையப் பாடலும் (குறுந்.79:5–8) தலைமகன் இடைச்சுரத்தில் தானே செல்லும்போது இடைச்சுரத்தின் கொடுமையைக் கண்டு,

***"வளையுடைக் கையள் எம்மொடு உணீஇயர்***
***வருகதில் அம்ம தானே***
***அளியளோ அணியள் என்நெஞ்சு அமர்ந்தோளே" (குறுந்.56:3–5)***

எனக் கூறும் சிறைக்குடி ஆந்தையாரின் குறுந்தொகைப் பாடலும், கற்பில் உடன்போக்கு நிகழ்ந்ததாகச் செயல்மேல் வைத்துப் பாடப்பெற்றுள்ளன. பிற புலவர்கள் இவ்வாறு பாடல் இயற்றவில்லை. காதலர்களுக்குக் களவில் கடமைகள் எதுவும் இல்லை. திருமணம் செய்து இல்லறத்தார் ஆவதே அனைவர் தம் சமுதாயக்கடன் ஆதலின் களவுக் காதலர் தம் உடன்போக்கு பாலையாகின்றது. கற்பு மிகவும் இன்றியமையாதது ஆகும். இல்லறத் தலைவன் தலைவியர்க்குக் கடமைகள் பல உள்ளன. இதற்குக் கணவன் புறம் சென்று பொருளீட்ட வேண்டும். இவ்வகையில் நோக்கும்போது **இல்லறத்தார்**

***உடன்போக்கு குறிஞ்சியாகும்.*** *அது பாலையாகாது. பிரிவு இல்லாமல் மனைவி கணவனுடன் சென்று வெளியூரில் இல்லறம் நடத்திக்கொண்டிருப்பது, உடன்போக்கு என்ற பேச்சிற்கே இடமில்லாதது ஆகும். இதனால்தான்* ***கற்புத் தலைவி உடன்போக்குச் சென்றதாகப் புலவர்கள் பாடல்களை இயற்றவில்லை.***

**குன்றியனார்**

*குன்றியனார் தொகை நூல்களில் 10 அகப்பாடல்களை இயற்றியுள்ளார். முல்லைத்திணை நீங்கலாகப் பிற நான்கு திணைகளிலும் இவரது பாடல்கள் காணப்படுகின்றன. இப் பத்துப் பாடல்களில் ஆறு பாடல்கள் களவுப் பாடல் களாகும். ஆயினும் இப்பாடல்கள் வரைவை வலியுறுத்துகின்றன. குன்றியனார் தம் பாடல்களில் பொருளுக்கு ஏற்றவாறு காலப்புனைவு செய்வதில் வல்லவர்.*

*தலைவன் களவை நீட்டிக்கின்றான்; வரைவு முயற்சியை அவன் மேற்கொள்ளவில்லை; தலைவியும் தோழியும் இத்தலைவனுக்கு மாறான கருத்தினர். தலைவனின் இரவுக்குறி வருகை தலைவியின் எதிரிகளுக்கு உவமையாகின்றது என்பதைத் தோழி குறிப்பாகப் புலப்படுத்துகின்றாள்.*

***"செறுவர்க்கு உவகை ஆகத் தெறுவர***
***ஈங்கனம் வருபவோ? தேம் பாய் துறைவ" (குறுந்.336:1–2)***

*தலைவனின் உயிர்க்கு ஏதம் (ஊறு) ஏற்பட்டால், அலர் தூற்றும் ஊரார்க்குக் கொண்டாட்டமாகும் என்பது தோழியின் குறிப்பு.*

***"யானும் காதலென் யாயுநனி வெய்யள்***
***எந்தையுங் கொடீஇயர் வேண்டும்***
***அம்ப லூரும் அவனொடு மொழிமே" (குறுந்.51:3–5)***

*தலைவியை அத்தலைவனுக்கு வரைந்து கொடுப்பதற்குத் தலைவியோடு தொடர்புடைய அனைவரும் உடன்படும் போது அவன் வரைவினை நீட்டிக்க வேண்டியதில்லை என்கின்றாள் தோழி. வரைவு நீட்டிப்பதால் தலைவியின் உடல் மெலிகின்றது. கைவளையல்கள் நெகிழ்கின்றன. இதனைத் தாய் அறிந்தால் என்னவாகுமோ எனத் தலைவி அஞ்சுகின்றாள். இது முருகனால் வந்த நோய் எனக் கூறுவதைப் பண்பன்று எனவும், பழி எனவும் தலைவி கருதுகின்றாள். தலைவியின் தோழி மதிநுட்பம் உடையவளாதலின்,*

***"கயிறுஅரி எருத்தின், கதழும் துறைவன்***
***வாராது அமையினும் அமைக!***
***சிறியவும் உளஈண்டு விலைஞர்கை வளையே" (குறுந்.117:4–5)***

தலைவன் மணந்துகொள்ள வாராவிட்டால் என்ன? தாயிடம் கைமெலிவை மறைக்க ஒரு வழி உண்டு. பெரிய வளையல்களை அணிந்து கொண்டால்தான் நெகிழ்ச்சி புலனாகும். நாள்தோறும் மெலியும் கைக்குப் பொருத்தமாக உள்ளூர் வளையற்காரர் வளையல்கள் வைத்துள்ளார். அவற்றை வாங்கி மாற்றி அணிந்து கொள்ளலாம் எனத் தலைவிக்குக் கூறுவதைப் போலத் தோழி தலைவனை இடித்துரைக்கின்றாள்.

**நக்கீரர்**

சங்கச் சான்றோர்களில் நாடறிந்த புலவர் பெருமகனார் நக்கீரர் ஆவர். அவர் அஞ்சாத் தனியுணர்வு உடையவர்; திருமுருகாற்றுப்படையின் ஆசிரியர் என்பதே இவரது புகழ் பரவலுக்குக் காரணமாகும். கபில, பரண, நக்கீரர் எனப் புலவர் வரிசையில் சிந்திக்கப்படினும், அக இலக்கியப் புலமையில் கபிலரே முதன்மையர்; பரணரும் நக்கீரரும் வரலாற்று உள்ளத்தினர். நக்கீரரின் பதினேழு அகநானூற்றுப் பாடல்களில் பதினைந்து பாடல்கள் மூவேந்தர்களையும் குறுநில மன்னர்களையும் பற்றிய குறிப்புக்களைக் கொண்டிருக்கின்றன. நக்கீரர் தம் அகநானூற்றுப் பாடலில்,

***"உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை***
***வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று***
***செழுஞ்செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு***
***தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி***
***யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையா"*** ***(அகம்.78:16–19)***

என மூவேந்தரும் பாரியின் பிறப்பு அரணை முற்றுகையிட்ட போது, அரண் உள்ளிருப்போர் உணவின்றி வருந்தாதவாறு கபிலர் கிளிகளை வளர்த்துப் பழக்கி வெளியிலிருந்து முற்றிய நெற்கதிர்களைக் கொண்டு வரச்செய்து அவர்தம் பசியைப் போக்கினார் என்னும் வரலாற்றுக் குறிப்பினை எடுத்தாண்டுள்ளார். அதன்பின்னர் நக்கீரர் அத்தகைய வாகைப்பாரியின் பைஞ்சுனையில் பூத்த புதுமலரைக் காட்டிலும் தலைவியின் நுதல் மணமும் ஒளியும் மிக்கது என்பதை,

***"கடும்பரிப் புரவிக் கைவண் பாரி***
***தீம்பெரும் பைஞ்சுனைப் பூத்த***
***தேங்கமழ் புதுமலர் நாறுமிவள் நுதலே"*** ***(அகம்.78:22–24)***

என முடித்துள்ளார். மற்றொரு அகநானூற்றுப் பாடலில் சோழரது நல்லவை திகழும் உறந்தையையும், பாண்டியரது கூடலின் நாளங்காடியையும், சேரரது

ஆன்பொருநை ஆற்றையும் என மூவேந்தரையும் தம் அகப்பொருட் கருத்துக்களுக்கு (அகம்.93) உவமையாக்கியுள்ளார்.

**உவமை நயங்கள்**

நக்கீரர் 33 அகப்பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றின் 17பாடல்கள் களவுப் பாடல்கள்; 16 பாடல்கள் கற்பின்பாற் படுவன. நக்கீரர் படைத்துக் காட்டும் தலைவன் பொருளீட்ட விழைபவன்; தலைவி அவனது முயற்சிக்கு உடன்படுபவள்; தன் சுற்றத்தைப் பாதுகாக்கவும், கேட்டினை விலக்கவும், பகையை நட்பாக்கவும், ஈத்து உவக்கும் பொருள் தேடவும் பொருளீட்ட விழைகின்றான் தலைவன். அவனது பொருளீட்டும் நோக்கத்தைத் தலைவியும் அறிகின்றாள்.

***“இரப்போர் எந்துகை நிறையப் புரப்போர்***
***புலம்பில் உள்ளமொடு புதுவதந் துவக்கும்***
***அரும்பொருள் வேட்டம் எண்ணிக் கறுத்தோர்***
***சிறுபுன் கிளவிச் செல்லல் பாழ்பட***
***நல்லிசை தம்வயின் நறுவுமார் வல்வேல்” (அகம்.389:11–15)***

ஆற்றும் மதுகை உடையவளாயினும் எத்தலைவியையும் பிரிவுத்தனிமை ஓரளவு கொல்லவே செய்யும். நக்கீரரின் அகத்தலைவியர் பிரிவில் வருத்தம் கொண்டாலும் அதனைத் தாங்க வல்லவர்கள்; தலைவனையும் அவன் வினைகளையும் வாழ்த்தும் அறிவுடையவர்கள். நம்மை அழச் செய்து பிரிந்தாலும் நல்விருந்து அயரும் பொருட்டு,

***“பூவிரி நெடுங்கழி நாப்பண் பெரும்பெயர்க்***
***காவிரிப் படப்பைப் பட்டினத் தன்ன***
***செழுநகர் நல்விருந் தயர்மார் ஏமுற***
***விழுநிதி எளிதினின் எய்துக தில்ல” (அகம்.205:11–14)***

என்பது ஒரு அகநானூற்றுத் தலைவியின் வாழ்த்தாகும். மற்றொரு அகநானூற்றுப் பாடலின் தலைவி,

***“களங்கொள் மள்ளரின் முழங்கும் அத்தம்***
***பலஇறந்து அகன்றன ராயினும் நிலைஇ***
***நோயில ராகநங் காதலர் வாய்வாள்” (அகம்.227:11–13)***

எனக் காதலன் நோயின்றி இருக்க வேண்டுகின்றாள். நக்கீரர் புனைந்த தலைவனும் தலைவியும் காமநுகர்ச்சியில் ஒத்த வேட்கையினர். தலைவியின்

முடிக்கூந்தலும் பெருந்தோளும் சிறுமெல் மார்பகமும் குறுமேனியும் இளையனாகிய தலைவனின் உள்ளத்தை வருத்துகின்றன. அவளைக் கூடிப்பெறும் ஒருநாள் இன்பம் கிடைக்காதா? என ஏங்குகின்றான். அந்த ஒருநாள் வாழ்க்கை இந்தப் பிறவிக்குப் போதுமே என்று தவிக்கின்றான் தலைவன். குறுந்தொகையின் அப்பாடல் வருமாறு:

*"கேளிர் வாழியோ கேளிர் நாளும்என்*
*நெஞ்சுபிணிக் கொண்ட அம்சில் ஓதிப்*
*பெருந்தோட் குறுமகள் சிறுமெல் ஆகம்*
*ஒருநாள் புணரப் புணரின்*
*அரைநாள் வாழ்க்கையும் வேண்டலன் யானே" (குறுந்.280)*

இரவில் மழை பெய்வதையும் பொருட்படுத்தாமல் ஒரு தலைவன் தலைவியின் வீட்டில் வந்து நிற்கின்றான்.

*"என் மலைந் தனன்கொல் தானே – தன்மலை*
*ஆரம் நாறும் மார்பினன்*
*மாரி யானையின் வந்துநின் றனனே?" (குறுந்.161:3–5)*

நக்கீரரின் அகநானூற்றுத் தோழியின் இக்கூற்றால் களவுத் தோழியும் காமக் குறிப்பினள் என்பதை அறியமுடிகின்றது. அப்பாடலடிகள் வருமாறு:

*"குவளை யுண்கண் கலுழ நின்மாட்டு*
*இவளும் பெரும்பே துற்றன ளோருந்" (அகம்.310:5–6)*

இருவர்தம் தொடக்க வேட்கையினையும் கண்ட தோழி, களவை முடிக்க விரும்பாமல் புணர்ச்சிக்கு உதவி செய்கின்றாள். தலைவி நாண்மிக்க மடமகள் ஆதலின், அவளது காம விழைவைத் தலைவனுக்குப் பதமாகக் கூறுகின்றாள். மாலை கழிந்தது. கடலலை பெருகுகின்றது. சுறாமீன்கள் தாக்கிக் கோவேறுகள் நடை மெலிந்தன. பாம்புகள் ஊர்கின்றன. தலைவியும் ஏங்குகின்றாள். உடன் வந்த பாங்கர் கூட்டத்தோடு இரவில் எம் இல்லத்தில் தங்கிச் செல்க எனத் தலைவனைத் தோழி வேண்டுகின்றாள்.

**பெண் வருணனை**

நக்கீரரின் அகப்பாடல் புனைவுகளில் பெண்ணின் உடல், உறுப்பு, நிறம் ஆகியனவற்றின் வனப்புக்களை ஓவியமாகக் கூறும் பாங்கு தனிச்சிறப்புடன் காணப்படுகின்றன. தலைவி கிளி எனப் பேசும் சிறிய செவ்வாயினள்; பெரிய கயல்மீன் போலப் பாயும் மைக்கண்ணள்; கரும்புயல் போலத் தாழ்ந்து இருண்ட

கொத்துக் கூந்தலள்; மின்னெனத் தோன்றி மறையும் நுண் இடையினள் எனவொரு அகநானூற்றுத் தலைவன் தலைவியைப் பாராட்டிக் காதல் மொழிகளைக் கூறுகின்றான்.

*"...... ...... ..... ...... கிளியெனச்*
*சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப், பெரிய*
*கயலென அமர்த்த உண்கண், புயலெனப்*
*புறந்தாழ்வு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்*
*மின்னேர் மருங்குல் குறுமகள்*
*பின்னிலை விடாஅ மடம்கெழு நெஞ்சே?" (அகம்.126:17–22)*

மூங்கிலைப் போன்ற பரத்த பசுந்தோளும், தென்னங்குரும்பை அனைய மென்முலையும், மார்பிற் படர்ந்த சுணங்குத் தேமலும், நீண்டு தழைத்த கருங்கூந்தலும், திங்கள் அன்ன திருமுகமும், அம்முகத்தில் காதளவு ஓடிக் கிடக்கும் கிளர்ச்சிக் கண்களும் பிரிந்து சென்ற தலைவனை மறக்கவிடுமோ? நின் உடல் வனப்பினும் கண் நோக்கிலும் உயிர் வளர்க்கும் அத்தலைவர் விரைந்தோடி வருவார் எனத் தோழி தலைவியை ஆற்றுவிக்கும் புதுநெறியைப் படைத்துக் காட்டியுள்ளார் நக்கீரர். சங்கப் புலவர்களுள் நக்கீரர் மட்டுமே சிறப்பாக நெற்றியில் திலகம் இடும் வழக்கத்தினைச் சுட்டிக்காட்டியுள்ளார். இதனை,

*"மாக விசும்பில் திலகமொடு பதித்த*
*திங்கள் அன்னநின் திருமுகத்து*
*ஒண்சூட்டு அவிர்குழை மலைந்த நோக்கே" (அகம்.253:24–26)*

எனவும்,

*"...... ....... .......... ...... நெறிகுரல்*
*சாந்தார் கூந்தல் உளரிப் போதணிந்து*
*தேங்கமழ் திருநுதல் திலகம் தைஇயும்" (அகம்.389:1–3)*

எனவரும் நக்கீரரின் பாடலடிகளால் அறியலாம். திலகம் அணிந்த முகத்திற்கு வெறுந்திங்களை உவமையாகக் கூறாமல், திங்களுக்கு திலகம் இட்டுப் பின் அதனைத் திலகமிட்ட பெண்ணின் முகத்திற்கு உவமையாகக் கூறியிருப்பது நக்கீரரின் இலக்கியப் புதுமையாகும்.

**புணர்ச்சிப் புனைவுகள்**

புணர்ச்சிக் கூட்டுக்குரிய பொருள்களையும் ஆயத்தங்களையும் சூழ்நிலைகளையும் காதலின் பல்வேறு படிநிலைகளையும் வெளிப்படையாகத்

தம் பாடல்களில் வெளிப்படுத்தும் புதுப்போக்கினராக நக்கீரர் விளங்குகின்றார். அவர் தலைவன், தலைவியரின் இன்பப்படுக்கையினை,

*"வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்*
*நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை*
*நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து" (அகம்.93:12–14)*

எனவும்,

*"அஞ்செஞ் சீறடிப் பஞ்சி ஊட்டியும்*
*ஏற்புறத் தந்து நிற்பா ராட்டிப்*
*பல்பூஞ் சேக்கையிற் பகலும் நீங்கார்" (அகம்.389:7–9)*

எனவும் விளக்கிக் கூறியுள்ளார். புணர்ச்சிப் பெருக்கத்திற்கு ஊடல் கிளர்ச்சி வேண்டும்; தொடுதல், மோத்தல், கேட்டல், பார்த்தல், சுவைத்தல் என்னும் ஐம்புலச் செயல்கள் மெல்ல மெல்ல இன்ப அலைகளை மனக்கடலில் தோற்றுவிக்கும்; உயிர்த்தெழச் செய்யும். புணர்ச்சி முன்னர் அதனை உணரும் இன்ப நினைவுகள் தழைக்க வேண்டும்; காமச் சொற்கள் கனிய வேண்டும் என்னும் முன்னிலைக் கூறுகளை அகத்திணை கண்ட தமிழினம் நன்கு அறிந்திருந்தது. ஐந்திணையில் புணர்தல், ஊடல் நிமித்தங்கள் புணர்ச்சிக்கு முந்தைய விளையாட்டுக்கள் ஆகும். புணர்ச்சிக்கு முன்னர் காதலர்கள் செய்துகொள்ள வேண்டிய முன் செயல்களைப் புணர்தல் நிமித்தம், ஊடல், ஊடலுக்கோர் நிமித்தம் என வகுத்துக் காட்டியிருப்பதிலிருந்து இன்பத்தைவிட, இன்பத்தின் தூண்டுதல்களைப் பன்மடங்காக்கும் எண்ண அலைகளின் பெருக்கத்தைத் தமிழர் பலவாறு சிந்தித்துக் காட்டியுள்ளனர்.

காதலியின் தோளில் துயிலுதல், மார்பில் துயிலுதல், கூந்தலணையில் துயிலுதல், தொய்யில் உழுதல், அல்குலில் பூவணிதல், எயிற்றுநீர் அருந்துதல் எனச் சங்கப் பனுவல்களில் காணலாகும் காமப் பள்ளிக் குறிப்புக்கள் பற்பல. இந் நுணுக்கங்கள் தனி ஆய்விற்கு உரியவை. நக்கீரரின் பாடல்களில் ஊடல் நுண் கூறுகள் மிகுந்து காணப்படுகின்றன. இது இப்புலவரின் தனிச்சிறப்பாகும். இதனை,

*"சாந்தார் கூந்தல் உளரிப் போதணிந்து*
*தேங்கமழ் திருநுதல் திலகம் தைஇயும்*
*பல்விதழ் எதிர்மலர் கிள்ளி வேறுபட*
*நல்லிள வனமுலை அல்லியொ டப்பியும்*
*பெருந்தோள் தொய்யில் வரித்தும் சிறுபரட்டு*
*அஞ்செஞ் சீறடி பஞ்சி ஊட்டியும்*

***எற்புறந் தந்து நிற்பா ராட்டிப்***
***பல்பூஞ் சேக்கையிற் பகலும் நீங்கார்***
***மனைவயின் இருப்பவர் மன்னே துணைதந்து" (அகம்.389:2–10)***

என்னும் நக்கீரரின் அகநானூற்றுப் பாடலடிகளால் அறியலாம். கற்பியல் வாழ்க்கையில் கணவன் – மனைவியின் பகற்புணர்ச்சியைக் கூறுவது இப்பாடல் ஒன்றேயாகும்.

தலைவன் தலைவியின் கூந்தலை வாரிப் புதுமலர் அணிவித்தான். அவள் நெற்றியில் பொட்டு வைத்தான். சாந்தணிந்த வண்ண மார்பில் பல இதழ்களையும் மலர்களையும் அப்பினான். பரந்த அவள் தோளில் காதல் காட்சிகளைத் தொய்யிலாக வரைந்தான். சிறிய அடிகளைத் தொட்டுத் தூக்கிச் செம்பஞ்சுக் குழம்பு தடவினான். பலவாறு தழுவி அணைத்து மெத்தென்ற பூப்படுக்கையில் பகற்காலத்தும் கூட்டுறவு நீங்காதவனாகக் கிடந்தான். இம்முறையில் முடிமுதல் அடிவரை தலைவன் புணர்ச்சிக்கு முன்னர் இழைத்த கூடற்பணிகளை நக்கீரரின் பின்வரும் அகநானூற்றுப் பாடலால் அறிய முடிகின்றது.

***"நாளங் காடி நாறும் நறுநுதல்***
***நீளிருங் கூந்தல் மாஅ யோளொடு***
***வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்***
***நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை***
***நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து***
***நலங்கேழ் ஆகம் பூண்டுவடுப் பொறிப்ப***
***முயங்குகஞ் சென்மோ நெஞ்சே வரிநுதல்" (அகம்.93:10–16)***

இரவுப் புணர்ச்சிக்குரிய சூழ்நிலையைக் காட்டுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. தலைவி பல்வேறு பூக்களைக் கூடை கூடையாகக் கூந்தலில் வைத்துக்கொள்ளும் ஆசையுடையவள் என்பதை நக்கீரர் '**நாளங்காடி**' என்னும் உவமையால் விளக்கியுள்ளார்.

மெல்லிய இனிய உயரமான பூங்கட்டிலின்கண் அமர்ந்திருந்து தலைவியின் மார்பணிகள் தழும்பச் செய்யும் அளவிற்கு விளக்கொளியில் அவளை முயங்குவோம் என மீண்டு வரும் தலைவன் இடைச்சுரத்தில் தலைவியை நினைத்து மகிழ்கின்றான். அவன் வீடு திரும்பும் காலம் மாலைக்காலம் ஆதலின் இரவுப் புணர்ச்சியைப் பற்றி நினைக்கின்றான். சங்க இலக்கியத்தில் புணர்ச்சியைப் பற்றிக் கூறும் பாடல்கள் பல உள்ளன. இப்பாடல் ஒன்றில்தான்

*கணவன் – மனைவியர் விளக்கொளியில் புணர்ந்து இன்புறுவர் என்னும் குறிப்புக் காணப்படுகின்றது. இப்பாடலில் 'மென்பூஞ் சேக்கை நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கம்' என்னும் பகுதியோடு ஆண்டாளின் 'குத்துவிளக் கெரியக் கோட்டுக்காற் கட்டில்மேல் மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி' என்னும் பாசுரத்தின் பாடல்வரிகளை ஒப்பிடலாம்.*

**பரணர்**

*சிறப்பித்துப் பேசப்படும் பரந்த புகழ் கொண்ட சங்கப் புலவர்களில் பரணரும் ஒருவர் ஆவார். கபிலரைப் போல இப்புலவரும் புலவரால் பாடப்பெற்றவர் ஆவார். பரணர் 62 அகப்பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் 33 பாடல்கள் களவிற்கு உரியவை. 29 பாடல்கள் கற்பிற்குரியவை. அகநானூற்றில் மட்டும் 34 பாடல்கள் உள்ளன.*

**வரலாற்றறிவு**

*பரணர் வரலாற்றுப் புலமை மிக்குடையவர். அவர் இயற்றி அறுபத்துயிரண்டு பாடல்களில் ஐம்பத்தொரு பாடல்களில் வரலாற்றுக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவற்றுள் முப்பத்தியிரண்டு அகநானூற்றுப் பாடல்களில் வரலாற்றுக் குறிப்புக்கள் செறிவாக அமைந்துள்ளன. ஆதலால், பரணரின் அகப்பாடல்களை மேலோட்டமாக வாசிப்பவர்கள் கூட அவளுடைய இலக்கிய உள்ளத்தைக் காட்டிலும் வரலாற்று உணர்வு சிறப்பானது எனக் கண்டறிவர். சங்க அகப்புலவர்களில் பரணர் மட்டுமே இப்புனைவுகளில் முதன்மையராக விளங்குகின்றார்.*

*புலவர் ஒரு கருத்துக்கு இயற்கைச் சூழ்நிலையைத் தக்க பின்புலமாக அமைத்துக் காட்டுகின்றார். அவ் இயற்கைச் சூழல் கருத்திற்கு நேர் தொடர்பில்லாமலும் புறம்பானதாகவும் அமைந்திருந்தால் இயற்கை என்பதற்காக அப்பின்னணியை ஏற்பதில்லை. பாட்டின் முதன்மையான மையக் கருத்தினை நோக்கி அனைத்துப் பாடல்களும் செல்லுதல் வேண்டும். பரணரின் அகப்பாடல் அமைப்புக்கள் உரிப்பொருளோடு பொருத்தமான உறவில்லாதவை. பெண்ணின் உறுப்பு வனப்புக்களுக்கு உவமைகளாகப் பரணர், குட்டுவனது மாந்தை, வஞ்சி, அழிசியின் ஆர்க்காடு, விரானது இருப்பை ஆகிய ஊர்களைத் தம் ஏழு பாடல்களில் குறித்துள்ளார். அவர் ஊர்களை உவமையாக்கும்போது அந்த ஊர்களின் உடைமையாளர்களையும் அவர்களது சிறப்புக்களையும் மேலும் சிறப்பித்துக் கூறுகின்றார். இவ்வாறு புனையப்படும் அவரது பாடல்களில் கிளவித் தலைவனைக் காட்டிலும், ஊர்த் தலைவர்கள் கற்போர் உள்ளத்தை ஈர்க்கின்றனர்.*

ஒரு பரத்தமைத் தொடர்புடைய தலைவனுக்குத் தோழி வாயில் மறுக்கின்றாள். தலைவியின் பேரழகு அழிசி என்பவனின் ஆர்க்காடு என்னும் நகரத்தைப் போன்றது. அப்பாடல் வருமாறு:

***“வாரல் எம் சேரி தாரல்நின் தாரே***
***அலரா கின்றால் பெரும காவிரிப்***
***பலர்ஆடு பெருந்துறை மருதொடு பிணித்த***
***ஏந்துகோட்டு யானைச் சேந்தன் தந்தை***
***அரியல்அம் புகவின் அம்தோட்டு வேட்டை***
***நிரைய ஒள்வாள் இளையர் பெருமகன்***
***அழிசி ஆர்க்காடு அன்னஇவள்***
***பழிதீர் மாண்நலம் தொலைதல் கண்டே”*** ***(குறுந்.258)***

‘அழிசி’ என்பவன் ஆர்காட்டைச் சிறப்பாக ஆண்டு வந்தவன் ஆவான். அவன் காவிரித்துறைகளில் வளர்த்த மருதமரங்களில் யானைகளைக் கட்டினான். சேந்தனுக்குத் தந்தை வீரக்கள் உண்பவன். பெருவேட்டையாடித் தம் பகைவர்களுக்கு நரக வாழ்வு தரும் வாளுடையவன்; வீரர் தலைவன் என்று மேலும் பல செய்திகளை அடுக்கிக் கூறுகின்றார் பரணர். இக்குறுந்தொகைப் பாடல் அழிசிக்குப் பாடியதைப் போன்று தோன்றுகின்றது.

தலைவன் வரைவை நீட்டித்தாலும் களவில் அலர் தோன்றும்; அவனது பரத்தமையால் கற்பில் அலர் ஏற்படும். ஊர்ப்பெண்கள் கூடிப்பேசும் அலரின் ஆரவாரத்திற்குப் பரணர் கூடற் போர்க்களத்தில் சேர, சோழப் படைகள் புறங்காட்டி ஓடியபோது பாண்டியனது மறவர்கள் செய்த ஆர்த்த ஆரவாரம்; தித்தனோடு போரிட எண்ணிய கட்டியும் பாணனும், அவனது உறந்தைக் கிணைப்பறையைக் கேட்ட அளவில் அஞ்சி ஓடிய காலத்து எழுந்த ஆரவாரம்; வெண்ணிப்பறந்தகையில் கரிகால் வளவன் வேளிரையும் பிறவேந்தரையும் போரிட்டுத் தொலைத்த ஞான்று அழுந்தூரார் போரவாரம் செய்தது; ஒன்னாரை முறியடித்த பின்னர் எவ்வியின் வீரர்கள் உறத்தூரில் கள்ளுண்டு கவ்வை எழுப்பியது; விச்சியர்கோன் வேந்தரொடு செய்த போர்க்களத்தில் குறும்பூர் மக்கள் பெரிதும் முழங்கியது; வாகைப் போர்க்களத்தில் அதிகன் மாய்ந்த நிலையில் கொங்கர் வெற்றிக்குரல் எழுப்பிய ஆரவாரம் ஆகிய போர்க்கள ஆரவாரங்களை விரிவாகக் கூறி, காதல் அலர்களுக்கு அவற்றை உவமைகளாக்கியுள்ளார். இதனைத் தவிரப் பரணரின் அகப்பாடல்களில் நன்னன், அன்னி மிஞிலி, ஆட்டனத்தி, ஆதிமந்தி, தழும்பன், ஆய், அகுதை,

கோசர் ஆகியோரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களும் பரவலாகப் பயின்று வந்துள்ளன.

*“செய்வினை மருங்கில் சென்றோர் வல்வரின்*
*விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்*
*வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த*
*பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்*
*சூடா வாகைப் பறந்தலை ஆடுபெற*
*ஒன்பது குடையும் நண்பகல் ஒழித்த*
*பீடில் மன்னர் போல*
*ஓடுவை மன்னால் வாடை நீ யெமக்கே” (அகம்.125:15–22)*

இப்பாடல் வாடையைக் கண்டு கலங்கிய தலைவியின் பாட்டாகும். கரிகாற் சோழனொடு போரிடுவதற்காக ஒன்பது மன்னர்கள் வாகைக் களத்திற்குச் சென்று செருக்குற்றனர். படை வளத்துடன் கரிகாற் சோழன் வருகின்றான் எனக் கேள்விப்பட்டதும் அவன் முன்னிற்க இயலாமல் ஒன்பது அரசர்களும் தம் குடைகளைப் போட்டுவிட்டுத் தப்பினர். அதைப்போல ‘வாடையே தருக்குற்று என்னைக் கொடுமைப்படுத்தும் நீ, என் தலைவன் விரைந்துவரின் ஓடவேண்டிவரும். தோற்று ஓடாமல் பெருமிதமாக இப்போதே ஓடியொழிக’ எனத் தலைவி, வாடைத் தோல்விக்கு மன்னர் தோல்வியை உவமை கூறுகின்றாள். இவ்வாறு வரலாற்றுச் செய்திகள் மிகுதியாக வருவதால் பரணரின் அகப்பாடல்களில் இயற்கை வளம் குறைந்து காணப்படுகின்றன. இதனால் முதல், கருப்பொருள்கள் உரிப்பொருள்களுக்கு உணர்ச்சியூட்டும் வகையில் புனைவுபெறவில்லை.

புறவரலாறு அகஇலக்கியத்தைச் சிறப்பிக்காது; வரலாற்றைப் புனையும் புலவன் அகப்புலவனாக ஒளிர இயலாது; வரலாற்றின் ஓட்டம் பாடல்களின் இயல்பான எளிய கற்பனையோட்டத்தைத் தடை செய்யும் என்பதைப் பரணரின் பாடல்களை ஆய்வு செய்வதன் வாயிலாக அறியலாம்.

சுட்டி ஒருவர் பெயர் சுட்டாத அக இலக்கியத்திற்கு இயற்கை உவமைகளும் இயற்கைச் சூழல்களுமே சிறப்பளிப்பதைப் பெரும்பான்மையான அகப்புலவர்களின் பாடல்கள் காட்டுகின்றன; இதற்கு எதிர்மறையாக வரலாற்றுக் குறிப்புக்கள் மிகுந்த பரணர் போன்றோரின் அகப்பாடல்கள் அமைந்திருக்கின்றன.

**பரணர் பாடிய துறைகள்**

*பரணர் தம் அகப்பாடல்களில் பல அரிய, புதிய துறைகளையும் பாடியுள்ளார். "தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறியது" என்ற ஒரே துறையில் களவும் கற்பும் உட்கொண்ட 17 பாடல்களை இயற்றியுள்ளார். இரவுக்குறி வந்து நீங்கும் போதும், அல்லகுறிப்பட்டு அயர்ந்து செல்லும் போதும், இற்செறிப்பைக் கேட்ட போதும், வரைவு மறுக்கப்பட்ட போதும், இடைச்சுரத்தில் திரும்ப நினைக்கும் போதும், தலைவி மிக்க ஊடல் கொண்ட போதும் பரணரின் அகப்பாடல் தலைவர்கள் தம் நெஞ்சினை முன்னிலைப் படுத்திப் பேசுகின்றனர். பரணரின் ஐந்து பாடல்களில் தலைவியின் பாங்காயினர் கேட்குமாறு பரத்தை கூற்றுக்கள் துறைகளாக உள்ளன.* ***"ஊடல் மறுத்த தலைமகள் சொல்லியது" (நற்.260) என்பது பரணர் வகுத்த ஓர் புதிய துறையாகும்.***

**பரணரின் காதலர்கள்**

*பரணரின் அகப்பாடல்களின் தலைவன் களவிலும் கற்பிலும் காமக்களியனாக விளங்குகின்றான். அவன் நாள்தோறும் தலைவியைத் தழுவவேண்டும் என்னும் ஆர்வம் உடையவன். அவன் தலைவிக்கு முன்னர்த் தன் காமப் பெருமையைத் தானே எடுத்துரைக்கின்றான். பரணரின் களவுத் தலைவன் ஒருவன்,*

***"உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல***
***நாணுவரை நில்லாக் காம நண்ணி***
***நல்கினள் வாழியர் வந்தே ஓரி"*** ***(அகம்.208:19–21)***

*என்கின்றான். உப்புச்சிறை நில்லா வெள்ளம்போல நாணுவரை நில்லாக்காமம் என்பது அவன் கூற்றாகும். வெள்ளத்தை உப்புக்கரை தடுத்து விடுமா? காமத்தை மெல்லிய காமம் மறைக்க முடியுமா? என்பது அக்களவுத் தலைவனின் வினாவாகும்.*

*பரணரின் தலைவன் இரவுப் புணர்ச்சியில் நாட்டமுடையவன்; அவரது களவுப் பாடல்கள் பல இரவுப் புணர்ச்சியைப் புனைவன. அல்ல குறித்துறைகளும் இரவுக் காலத்திற்குரியன. குறித்த இடத்தில் தலைவியைக் காணாமல் தலைவன் வருந்தி அல்லல்படுவதும், தலைவியைக் கண்டபோது பன்மடங்கு இன்பம் பெறுவதும் ஆகிய முரண் உணர்ச்சிகள் பரணர் பாடல்களில் ஆழமாகக் காணப்படுகின்றன. இரவுக் குறியில் தலைவியுடன் புணர்ந்து நீங்கும் தலைவன்,*

*"இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து"* *(அகம். 142 : 22)*

*"நெஞ்சுநடுங் கரும்படர் தீரவந்து"* *(அகம். 152 : 1)*

*"அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து"* *(அகம். 198 : 10)*

*"நல்கினள் வாழியர் வந்தே"* *(அகம். 208 : 21)*

*"அந்தீங் கிளவி வந்த மாறே"* *(அகம். 262 : 18)*

என அன்புற்று மகிழ்ந்து கூறுகின்றான். பரணரின் தலைவியும் காம உணர்வு கொண்டவளே; அவள் தலைவனின் கைகடந்த காமத்தை ஏற்கும் நல்ல துணையாகின்றாள். தலைவன் இரவுக்குறியில் வருவதைத் தோழியும் தலைவியும் விரும்புவதில்லை என்றே மரபாக அகப்புலவர் பலர் பாடல்களை இயற்றியுள்ளனர். ஆயினும் பரணரின் தலைவியர் இரவுக்குறிக்கு அஞ்சவில்லை. ஆதலால் பரணரின் களவுக் காதலர் இருவரும் ஒத்த காமத்தினராகின்றனர்.

*"அரைநாள் யாமத்து விழுமழை கரந்து*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து*
*வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்*
*அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து*
*துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்*
*ஆன்ற கற்பில் சான்ற பெரிய*
*அம்மா அரிவையோ அல்லள் தெனாஅது"* *(அகம்.198:4–12)*

தலைவி நடு யாமத்து மழையையும் பொருட்படுத்தவில்லை. மழை அவள் மறைந்து வருவதற்குத் துணையாயிற்று. வரும்போது இடையில் மலர் பறித்துச் சூடி வருகின்றாள். சிலம்பின் ஓசை கேட்காதவாறு அதனைக் கட்டினாள். ஊரும் வீடும் அயர்ந்து உறங்கும் வரை காத்திருந்து, வந்த காதலனுடன் புணர்ந்து மகிழ்ந்து ஊர்விழித்துக் கொள்ளும் முன்னர்த் திரும்பிவந்து படுத்துக் கொள்கின்றாள். இவ்வாறு பரணரின் களவுத் தலைவிக்கு இருக்கும் காதல் ஆர்வமும் துணிச்சலும் ஒட்பமும் மருளத்தக்கவை. ஆதலின் தலைவன் தலைவியை மிகப் பெரியவள் என்று தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

**கற்பு வாழ்வில் பரத்தை**

காமம் ஒத்த களவுக் காதலர்களைப் படைத்துக் காட்டிய பரணர், கற்பு வாழ்க்கையில் அவர்களை முரண்பட்டவர்களாகக் காட்டியுள்ளார். தலைவன் தண்டாப் பரத்தனாக அலைகின்றான். அவனது பரத்தை வேட்கை,

*“விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்*
*களிற்றுச்செவி அன்ன பாசடை தயங்க*
*உண்துறை மகளிர் இரியக் குண்டுநீர்*
*வாளை பிறழும் ஊரற்கு நாளை*
*மகட்கொடை எதிர்ந்த மடம்கெழு பெண்டே” (நற்.310:1–5)*

எனப் பரணரின் நற்றிணைப் பாடலில் கூறப்பெற்றுள்ளன.

தலைவனது பெரும் பரத்தமைத் தொடர்பால் தலைவியை எதிர்த்து வஞ்சினம் கூறும் துணிவு ஒரு பரத்தைக்கு வந்துவிட்டது. அகநானூற்றில் அப்பரத்தையின் வஞ்சினம் வருமாறு:

*“வருகதில் அம்மஎஞ் சேரி சேர*
*அரிவேய் உண்கண் அவன்பெண்டிர் காணத்*
*தாரும் தானையும் பற்றி ஆரியர்*
*பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்*
*தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்*
*மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்று*
*இரந்தோர்க் கீயாது ஈட்டியோன் பொருள்போல்*
*பரந்து வெளிப்படா தாகி*
*வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே” (அகம்.276:7–15)*

இது சங்கப் பாடல்களில் அரியது. அகத்திணையில் வஞ்சினம் கூறுவது மரபுக்கு ஊறில்லை என்பதையும், அகவிலக்கியம் சில நெகிழ்ச்சிகளைக் கொண்டது என்பதையும் இதனால் அறியலாம். சென்ற தலைவன் எம்சேரிக்கு வரட்டும்; அவனைக் கற்புடைய பெண்கள் காண அவனது மாலையையும் மேலாடையையும் பற்றி இழுப்பேன். ஆரியர் அதற்கென்று பழக்கிய பெண்யானை ஆண்யானையை மடக்குவதைப் போல தாய் பழக்கிய நான் என் கூந்தல் கயிற்றால் அவன் தோளைப் பிணித்து அவனுடைய மார்பைப் பிறர் யாரும் நெருங்காதபடி சிறை செய்வேன். செய்யேனாயின் என் தாய் பலர்க்கெனப் போற்றி வளர்த்த இவ்வழகு யார்க்கும் பயன்படாது ஒழிக. இரந்தவர்க்குக் கொடுக்காது ஈட்டியவன் பொருள் அவனிடத்தே தங்கி அழிவதைப் போல என் உடல்நலமும் துய்ப்பார்க்குப் பயனின்றி வீணே கழிக. என் தாய் வேண்டியபடி பரத்தையாகாது கற்புடையவளாக இழிவேனாகுக' என்பது பரத்தையின் வஞ்சினமாகும். அவன் பெண்டிர் எனப் பரத்தை பன்மையிற் கூறுவதால் அவனுக்கு மனைவியர் பலர் என்பது பொருளல்ல;

மனைவி ஒருத்தியே; வஞ்சினப் பரத்தை அவளை உயர்த்திப் பேசுவதைப் போல இழித்துப் பேசுகின்றாள்.

**தலைவிக்குப் பகையாகாப் பரத்தை**

தலைவனின் பரத்தமைக்குத் தலைவியே காரணம் என்பதைப் போன்று பரணரின் சில அகப்பாடல்கள் உள்ளன. அவரது ஒரு மனைவி வரைவின் மகளிர் தீண்டிய கணவனது மார்பைத் தொட மறுக்கின்றாள்.

*"தொடுகலம் குறுக வாரல்" (அகம்.196:8)*

என்பது அம்மனைவியின் கூற்றாகும். மற்றொரு மனைவி இளம் பெண்களோடு நீராடையணிந்து புதுப்புனல் ஆடினாய்; நாணிழந்தாய் என்று கணவனை நேரடியாகவே இடித்துரைக்கின்றாள்.

***"இளந்துணை மகளிரொடு ஈரணிக் கலைஇ***
***நீர்பெயர்ந்து ஆடிய ஏந்தெழின் மழைக்கண்***
***நோக்குதொறும் நோக்குதொறும் தவிர்விலை யாகிக்***
***காமங் கைமிகச் சிறத்தலின் நாணிழந்து***
***ஆடினை என்ப மகிழ்ந அதுவே" (அகம்.266:5-9)***

இதனைத் தவிர ஒரு பரத்தை,

***"யாந்தன் பகையேம் அல்லேம் சேர்ந்தோர்***
***திருநுதல் பசப்ப நீங்கும்***
***கொழுநனுஞ் சாலுந்தன் உடனுறை பகையே" (அகம்.186:18-20)***

என்கின்றாள். இதிலிருந்து **மனைவிக்குப் பகை பரத்தையில்லை; உண்மையில் அவள் கணவனே என்னும் பேருண்மையைப் பரணர் பரத்தை வாயிலாக வெளிப்படுத்துவதை அறியலாம்.** தன் கணவன் பன்முகப் பரத்தனாயினும் மனைவி பொறுக்க வேண்டும்; இல்லறம் நடத்துவதும் தலைவனை வரவேற்று ஏற்பதும் திருத்துவதும் மனைவியின் கடமையாகும்.

***"ஒலிபல் கூந்தல் நலம்பெறப் புனைந்த***
***முகைஅவிழ் கோதை வாட்டிய***
***பகைவன்மன் யான் மறந்து அமைகலனே" (நற்.260:8-10)***

நட்பாகி என் கூந்தலுக்கு மலர்சூட்டிய அவனே இப்போது அம்மாலை வாடும்படியாகச் செய்கின்றான்; இளமை இன்பத்திற்குப் பகைவன் ஆயினான்; அவன் கைவிட்ட செயலை எப்படி மறப்பேன் எனக் கடுமையாகச் சாடுகின்றாள் இப்பாடலின் மனைவி. இத்தகைய கூற்றுக்களால் மனைவியை அன்பில்லாதவள்

எனக் கூற இயலாது. அவளது உள்ளம் தூயது; பற்று உடையது. ஆயினும் தன் கணவனின் பரத்தமையொழுக்கத்திற்காகவே இவ்வாறு பேசுகின்றாள்.

மனைவியின் இத்தகைய வல்லுரைகளை நல்லுரைகளாகக் கொண்டு வணங்கியும் ஒடுங்கியும் நாணியும் கணவன் ஊடிக் கூடி மகிழ்வான் என்பதற்கு குறுந்தொகைப் பாடல் சான்றளிக்கின்றது.

*“நினைமதி வாழிய நெஞ்சே மனைமரத்து*
*தெல்லுறு மௌவல் நாறும்*
*பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே?”* *(குறுந்.19:3–5)*

எனக் கணவன் யாது செய்வது என்று ஆற்றாமல் தன் நெஞ்சை நோக்கி இரங்கும் போது அவன் கழிவிரக்கத்தைக் காணும் மனைவி பிணக்கு நீங்குகின்றாள்.

**மனைவிக்கு வேண்டிய காம அறிவு**

தலைவனது முதல் பரத்தமையைக் கேட்டு ஓர் இளம் மனைவி நிலத்தில் விழுந்து புரண்டு கூந்தல் புழுதிபடத் துடித்து அழுதாள். வீடு நோக்கி வந்த அக்கணவனுக்குத் தோழி வாயில் நேர்ந்தாள். அத்தோழிக்குத் தலைவன் மீதும் சினம்; தலைவி மீதும் பெருஞ்சினம். மனைவிக்கு அழகு இருந்தும் தன் கணவனைப் பிணிக்கும் அறிவு இல்லை.

*“அணித்தகை யல்லது பிணித்தல் தேற்றாப்*
*பெருந்தோள் செல்வத்து இவளினும் எல்லா”* *(நற்.270:5–6)*

எனத் தோழி தலைவியை இடித்துரைக்கின்றாள். எனவே கணவனது பரத்தமைக்குக் காரணம் ஓரளவு மனைவியே என்பதும், கணவனது காமத்தின் அளவினை அறிந்து அதற்கேற்ப நடந்துகொள்ளாத இன்பக் குறைவு என்பதும் பரணர் கருத்தாக உள்ளது.

தலைவன் பெருங்காம உணர்வு கொண்டவன் என்பதைப் புரிந்து கொண்டேன். அதற்கேற்ப இன்பத்துறையில் ஒழுகினேன். அவனைப் பரத்தமைக் குற்றம் சொல்வதிலிருந்து நல்ல காலமாகப் பிழைத்தேன் என்று மெய்யறிவு பெற்ற ஒரு மனைவி கூறுவதையும் பரணர் சுட்டிக்காட்டியுள்ளார்.

*“பனிபடு சாய்ப்புறம் பரிப்பக் கழனிக்*
*கருங்கோட்டு மாஅத்து அலங்குசினைப் புதுப்பூ*
*மயங்குமழைத் துவலையில் தாஅம் ஊரன்*

*காமம் பெருமை யறியேன் நன்றும்*
*உய்ந்தனென் வாழி தோழி யல்கல்"          (அகம்.236:6–10)*

பரணரின் கற்புப் பாடல்கள் மருதத்திணையில் பரத்தைத்துறையில் அமைந்துள்ளன. இவற்றைப் படிக்கும் அவர் இயற்றிய புறப்பாடல்கள் இரண்டு நினைவுக்கு வருகின்றன. பேகன் தன் மனைவி கண்ணகியைத் துறந்து நல்லூரில் பரத்தை வசப்பட்டிருந்தான். அவனை மீட்பதற்காகப் பாடிய புலவர் நால்வருள் பரணரும் ஒருவர் ஆவார். ஏனைய மூவரும் ஆளுக்கொரு பாடலைப் பாட, பரணர் மட்டும் இரண்டு பாடல்களைப் பாடி ஒழுங்காக இல்லறம் நடத்துமாறு பேகனை வேண்டினார்.

**தொகுப்புரை**

- தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள்வயிற் பிரிவில் செல்லும் பொருண்மையில் 422 பாலைப் பாடல்களும், தலைவி தன் பெற்றோரை நீங்கித் தலைவனோடு சென்று தலைவனை அவனது ஊரில் மணந்து கொள்ளும் உடன்போக்குத் துறையில் 108 பாலைப் பாடல்களும் உள்ளன. இப் பாலைத் திணைப் பாடல்களை இருநூறுக்கும் மேற்பட்ட புலவர்கள் இயற்றியுள்ளனர்.
- எட்டுத்தொகை நூல்களில் பாலை அமைந்தவற்றில் பாடிய பெருங்கடுங்கோ 67 அகப்பாடல்களை இயற்றியுள்ளார். அவர் பாலைக்கலியில் களவுத்துறைக்கு இடமளிக்கவில்லை. அவர் உடன்போக்குத் துறையில் தாயின் கூற்றாக அமையும் பாடல்களை இயற்றவில்லை. முக்கோற்பகவர் அறங்கூறும் களவுத்துறையில் மட்டுமே தாய் இடம்பெறுகின்றாள். மருதன் இளநாகனார், ஓதலாந்தையார், பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆகிய மூன்று புலவர்களும் உடன்போக்கில் தலைவியைத் தலைவன் மகிழ்ச்சிப்படுத்துவதாகப் பாடல்களை இயற்றியுள்ளனர்.
- பாலை பாடிய பெருங்கடுங்கோவின் அனைத்துப் பாடல்களிலும் இளமையின் வளமை சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளன. அவரது அனைத்துப் பாடல்களிலும் புணர்ச்சி மயக்கம் உள்ளன. வெள்ளிவீதியார் பதின்மூன்று அகப்பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் 5 பாடல்கள் களவிற்கும் 8 பாடல்கள் கற்பிற்கும் உரியன. களவு, கற்புப் பாடல்களில் இடம்பெறும் வெள்ளிவீதியாரின் அகமாந்தர்கள் காம உணர்வு மிக்கவர்கள்.

- ஓதலாந்தையார் அகத்திணையில் 103 பாடல்களை இயற்றியுள்ளார்; இவர் புறத்திணைப் பாடல்களை இயற்றவில்லை. இவருடைய மொத்தப் பாடல்களில் 38 பாடல்கள் களவிற்கும் 65 பாடல்கள் கற்பிற்கும் உரியன. இவர் களவுப் பாலையையும் கற்புப் பாலையையும் அறமும் திறமும் சிறக்க இயற்றியுள்ளார். ஓதலாந்தையாரின் பாலைப் பாடல்களில் தலைவனது பெற்றோர், தலைவரது காதலொழுக்கம் குறித்த செய்திகள் சிறப்பாகக் காணப்படுகின்றன.
- 33 புறப்பாடல்களை இயற்றிய ஔவையார், 26 அகப்பாடல்களையும் இயற்றியுள்ளார். அகப்பாடல்களுள் எட்டுப் பாடல்கள் களவிற்கும் பதினெட்டுப் பாடல்கள் கற்பிற்கும் உரியவை. ஔவையாரின் அகத்தலைவி அடக்கவியலாத காமவேட்கைக்கு ஆட்பட்டவள். ஔவையார் அகத்திணைக் காதல்மரம் ஒன்றை நுணுக்கமான உருவகமாகப் படைத்துக் காட்டியுள்ளார். ஆயினும் அவரது அகப்பாடல்களுள் பல பெருந்திணையின் பாற்படுவன.
- எட்டுத்தொகை நூல்களில் ஒரோடகத்துக் கந்தரத்தனார் 8 அகப்பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் 3 பாடல்கள் களவிற்கும், 5 பாடல்கள் கற்பிற்கும் உரியவை. மகள் இல்லத் தலைவியாகிய நிலையில் கற்பியலில் நற்றாயின் பேச்சுக்கு வாய்ப்பே இல்லை. ஆயினும் ஒரோடகத்துச் சுந்தரத்தனார், கல்லாடனார், நக்கீரர் ஆகிய மூன்று புலவர்களும் தாயை அகப்படுத்தியே தம் அகப்பாடல்களை இயற்றியுள்ளனர்.
- கயமனார் எட்டுத்தொகையின் அகநூல்களில் 22 பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் 21 பாடல்கள் களவிற்கு உரியன. 20 பாடல்கள் உடன்போக்குத்துறை பற்றியன. 17 பாடல்களில் கயமனார் செவிலி, நற்றாய் கூற்றுக்களில் அவர்தம் புலம்பல்களை வெளிப்படுத்தியுள்ளார். உடன்போக்கு என்னும் ஒரே துறையில் அவர் பதினேழு தாயர்களின் மனநிலைகளை நுட்பமாக வெளிப்படுத்தியுள்ளார். இவர் புறநானூற்றுப் பாடலில் (புறம்.254) கற்பில் கணவனும் மனைவியும் உடன்போக்குச் செல்கின்றனர். கணவன் இடைச்சுரத்தில் இயல்பாக இறந்து விடுகின்றான். அகத்திலும் புறத்திலும் உடன்போக்கைப் பாடிய கயமனார் உடன்போக்குப் பாடியபுலவர் என்றழைக்கப்படுகின்றார்.

* *கல்லாடனார் வரலாற்றுக் குறிப்புக்களை மிகுதியாகப் புனைந்து பாலைத் திணையின் கற்பியலில் எட்டு அகப்பாடல்களை இயற்றியுள்ளார். கழார்க்கீரன் எயிற்றியார் என்னும் பெண்பாற் புலவர் பாலைப் புனைவிற்கு மருதத்தையும் வாடைக் காலத்தையும் பின்புலமாகக் கொண்டுள்ளார். இவரது பாடல்கள் உரிப்பொருளால் மட்டுமே பாலையாகும்.*
* *காவன்முல்லைப் பூதனார் இயற்றிய எட்டு அகப்பாடல்களும் கற்பியலில் பாலைத்திணைக்கு உரியவை. இவரது பாடல்களின் அகத்திணைத் தலைவி தானே ஆறுதல் அடைபவள்.*
* *குடவாயில் கீரத்தனார் தொகைநூல்களில் களவில் 5 பாடல்களையும் கற்பில் 12 பாடல்களையும் இயற்றியுள்ளார். இவரது பாடல்களின் தாய் தன் மகளை இற்செறிக்கும் மனப்பாங்கு உடையவள். இவரது பல பாடல்களில் தலைவியர் களவிலும் கற்பிலும் உடன்போக்குச் செல்கின்றனர். ஆயினும் இல்லறத்தார் உடன்போக்கு குறிஞ்சியாகும். இதனால்தான் கற்புத்தலைவி உடன்போக்குச் சென்றதாகப் பிறபுலவர்கள் பாடல்களை இயற்றவில்லை.*
* *நக்கீரரின் 17 அகநானூற்றுப் பாடல்களில் 15 பாடல்கள் மூவேந்தர்களையும் குறுநில மன்னர்களையும் பற்றிய குறிப்புக்களைக் கொண்டுள்ளன. உவமை நயங்கள், பெண் வருணனைகள், புணர்ச்சிப் புனைவுகளில் நக்கீரர் பாடல்கள் தனிச்சிறப்புடையன.*
* *சுட்டி யொருவர் பெயர் சுட்டாத அகப்பாடல்களுக்கு இயற்கை உவமைகளும் இயற்கைச் சூழல்களுமே சிறப்பளிக்கின்றன. இதற்கு நேர்மாறாக வரலாற்றுக் குறிப்புக்கள் மிகுந்த பரணரின் அகப்பாடல்கள் அமைந்துள்ளன. பரணரின் அகப்பாடல்களின் தலைவன் களவிலும் கற்பிலும் காமக்களியனாக விளங்குகின்றான். காமம் ஒத்த களவுக் காதலர்களைப் படைத்த பரணர், கற்பு வாழ்க்கையில் அவர்களை முரண்பட்டவர்களாகக் காட்டியுள்ளார். கற்பில் தலைவன் தண்டாப் பரத்தனாக அலைகின்றான். பரணரின் அகப்பாடல்களில் தலைவனின் பரத்தமைக்குத் தலைவியே காரணமாகின்றாள். மனைவிக்குக் காம அறிவு வேண்டும் எனப் பரணரின் பாடல்கள் அறிவுறுத்துகின்றன.*

**குறிப்புக்கள்**

1. *தொல்.அகத்.இளம் (உ.ஆ), நூற்.41*
2. *தொல்.பொருள்.நச்சி (உ.ஆ), நூற்.54*
3. *தொல்.பொருள்.அகத்.இளம். (உ.ஆ.), நூற்.41:3–6*
4. *தொல்.பொருள்.இளம் (உரை.ஆ), கற்பு. நூற். 1094:1*

# இயல் : 4

# நில மக்களின் தொழில்கள்

**முன்னுரை**

*பாலை நிலத்தில் வாழும் மக்கள் 'மறவர்' என்றும், 'எயினர்' என்றும் அழைக்கப்பெறுகின்றனர். வழிப்பறியும் கொள்ளையடித்தலுமே ஆறலைக் கள்வர்களாகிய இவர்களது தொழில்களாகும். எயிற்றியர் உணவிற்காகப் புல்லரிசியைச் சேகரிக்கும் தொழில் செய்தனர். பாலைநில மக்களின் தொழில்கள் என்னும் இவ்இயலில் பாலைத் திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள தொழில்கள் குறித்த செய்திகள் ஆராய்ந்து விளக்கப்பெறுகின்றன. வாணிகம் செய்தல், உப்பு விற்றல், பண்டமாற்று வாணிகம், யவனர்களுடன் வாணிகம், மறவரின் வழிப்பறிக்கொள்ளை, ஆறலைக் கள்வர்களின் கொலைத்தொழில், எயினர் தொழில், வேட்டைத்தொழில், உழவுத்தொழில், முத்தெடுத்தல், சாணைக்கல் செய்தல், கிணறு தோண்டல், ஆடை வெளுத்தல், பூ விற்றல், கள் விற்றல், ஓவியத்தொழில், பானை செய்தல், தூது செல்லல், மருத்துவம் முதலாயின குறித்த செய்திகள் பாலைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன. இவற்றுச் சில தொழில்கள் பாலைநில மக்களுக்கே உரியனவாகவும், சில தொழில்கள் பிற நில மக்களுக்கும் உரியனவாகவும் உள்ளன. பாலைப் பாடல்களில் உவமை வாயிலாகவும், வருணனைகள் வாயிலாகவும் தொழில்கள் கூறப்பெற்றுள்ளன. ஆயினும் இத்தொழில்கள் பாலைநிலப் பின்புலம் தழுவியே நடைபெறுவதாகக் கூறப்பெற்றுள்ளன.*

**பாலை நில மறவர்கள்**

*'பாலை' என்பது ஒரு தனிநிலமாக இல்லை; முல்லை, குறிஞ்சி நிலங்கள் வெயிலின் கொடுமையால் தன் இயற்கை வளத்தை இழந்து நிற்கும்போது அது பாலைநிலமாக ஆகின்றது. இதனைச் சங்க இலக்கியத்தின் அகப்பாடல்களும், புறப்பாடல்களும் சுட்டிக்காட்டுகின்றன. தமிழகத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நால்வகை நாட்டுப்பகுதிகள் ஏற்கப்பட்டுள்ளன. எனினும் வளம் குன்றி நிற்கும் நிலையில் பாலை சார்ந்த நாட்டுப்பகுதியும் மக்களால் ஏற்கப்பட்டுள்ளன. பாலையில் வெயிலின் தாக்கம் மிகுதியாதலால் மரங்களும் செடி கொடிகளும் கரிந்து, விலங்குகள் உணவும் நீரும் தேவையான அளவு கிடைக்காததால் ஓய்ந்து காணப்படுவதால் பாலை நிலப்பகுதி 'சுரம்' என*

அழைக்கப்பெறும் என்பர்.[1] இப்பகுதியில் காணப்பெறும் பரல்கற்கள் வேல் போன்று அதில் நடப்பாரின் கால்களை வருத்தும்.

பாலை நிலத்தில் தோன்றும் கானல் நீர் என மயங்கிக் காட்டு விலங்குகள் அங்குமிங்கும் ஓடியலைந்து சோர்வடையும், பாலையில் தோன்றும் கானல், "உருஇல் பேய் ஊராத்தேர்" (அகம்.67: 15–17) எனவும், "இலங்குதேர்" (கலி.26:10) எனவும், பேய்த்தேர் எனவும் பலவாறாகச் சங்கப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன. இது பார்வைக்கு நீர் போன்று தோன்றுவதால்தான் விலங்குகள் இவற்றைக் கண்டு நீரென மயங்குகின்றன. புயல்துளி மாறியதனால் நீர்வளம் அற்று யானை மெலிந்து சேற்று நீரைக் குடித்து தன் உயிரைத் தக்கவைத்திருக்கும் நிலை கலித்தொகையின் பாலைப் பாடலில் கூறப்பெற்றுள்ளது.

***"உரல்போ லடிய வுடம்புயங் கியானை***
***யூறுநீ ரடங்கலி னுண்கயங் காணாது***
***சேறு சுவைத்துத்தஞ் செல்லுயிர் தாங்கும்***
***புயறுளி மாறிய போக்கரு வெஞ்சுரம்" (கலி.13:6–9)***

பாலை நிலத்தின் வழிச் செல்வோரின் கடத்தற்கரிய இடர்ப்பாடு நோக்கிப் பெரும்பாணாற்றுப்படை பாலை வழியினை 'அருஞ்சுரம்' என்கின்றது.

***"கடுங்கண் கானவர் கடறுகூட் டுண்ணும்***
***அருஞ்சுரம் இறந்த அம்பர் பருந்துபட"*** [2]

பொதுவாக வளம் இழந்து வறண்டு கிடக்கும் பாலைநிலத்தைப் 'புன்புலம்' என்று சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

பாலைநிலத்தில் வாழும் மக்கள் **'மறவர்'** என்றும், **'எயினர்'** என்றும் அழைக்கப்படுகின்றனர். இம்மக்கள் வாழும் ஊர் **'குறும்பு'** எனப்படும். இதனை அகநானூற்றுப் பாடல் "கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின்" (அகம்.87:7) எனக் குறிப்பிடும். பரல்கற்கள் நிரம்பிய பகுதியில் குறும்பு அமைந்திருந்தமையை இவ் அகநானூற்றுப் பாடலடியால் அறியலாம். இவர்தம் 'குடிசை' ஈந்தின் இலையகளால் வேயப்பட்டிருந்தன. இதனால் அவை முள்ளம்பன்றியின் முதுகு போல காட்சி தந்தன. முள்ளம்பன்றி எனப் பயந்த அணிலும் எலியும் மறவர்களின் இக்குடிசைகளை நெருங்குவதில்லை. இக்குடிசை வீடுகளில் நாணைக் கோத்தமைத்த வில்லும் அம்பும் இருக்கும். அம்புகட்டும் துடியும் துங்கும் பந்தரும் இருக்கும். இக்குடிசைகளில் நாய்களைச் சங்கிலியால் கட்டி

வைத்திருப்பர். இதனால் இக்குடிசை வீடுகளைப் பிறர் எளிதில் நெருங்க இயலாது. **ஊகம்புல்லால் வேய்ந்த** உயர்ந்த மதிலும் இங்குக் காணப்பெறும். இவர்களின் ஊர்களைச் சுற்றிலும் முள் வேலிகளும் காவற்காடும் பாதுகாப்பாக அமைந்திருக்கும். ஊரின் நுழைவாயிலில் கூர்மையான கழுக்களை வரிசையாக வைத்திருப்பர். இதனைப் பெரும்பாணாற்றுப்படை,

***"நீள்அரை இலவத்து அலங்குசினை பயந்த***
***பூளைஅம் பசுங்காய் புடைவிரிந் தன்ன***
***வரிப்புற அணிலொடு கருப்பை ஆடாது***
***யாற்றுஅறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்***
***வேற்றலை அன்ன வைந்நுதி நெடுந்தகர்***
***ஈத்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை"*** [3]

என எயினர்களின் 'குரம்பை' ஆகிய சிறு வீடுகளும்,

***"…. …. …. …. பருந்துபட***
***ஒன்னாத் தெவ்வர் நடுங்க ஓச்சி***
***வைந்நுதி மருங்கிய புலவுவாய் எஃகம்***
***வடிமணிப் பலகையொடு நிரைஇ முடிநாண்***
***சாபம் சார்த்திய கணைதுஞ்சு வியல் நகர்***
***ஊகம் வேய்ந்த உயர்நிலை வரைப்பின்***
***வரைத்தேன் புரையும் சுவைக்கடைப் புதையொடு***
***கடுந்துடி தூங்கும் கணைக்காற் பந்தர்***
***தொடர்நாய் யாத்த துன்னருங் கடிநகர்***
***வாழமுள் வேலிச் சூழ்மிளைப் படப்பைக்***
***கொடுநுகம் தழீஇய புதவின் செந்நிலை***
***நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயில்***
***கொடுவில் எயினக் குறும்பில் சேப்பின்"*** [4]

என எயினர்களின் **குரம்பைச்** சிறுகுடில்களில் உள்ள பல்வேறு பொருட்களும் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளன.

பாலை நிலத்தில் வாழும் எயினர்களாகிய மறவர்களின் தோற்றம் பாலைக்கலிப் பாடலில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. மறவர்கள் உடல் வலிமை படைத்தவர்கள்; வன்மைமிக்க உடலினைக் கொண்டவர்கள். வளர்ந்த மயிரினை உடையவர்கள்; கலைமானின் கொம்பு போன்ற முறுக்குண்டு தாழ்ந்த தாடியினைக் கொண்டவர்கள். அவர்கள் சிலைமரத்தால் செய்த வில்லினைக்

கைக்கொண்டிருப்பர் (கலி.4:1–5, கலி.15:1–7) இவர்தம் ஆடை செந்நிறம் கொண்ட **செந்துவர் ஆடை** (ஐங்.363, நற்.33) ஆகும். மறவர்கள் தம் கால்களில் தோல் செருப்புக் கொண்டிருப்பர் [5] என மதுரைக்காஞ்சி கூறுகின்றது.

மறவர்தம் தொழில் வழிச்செல்வோரைத் துன்புறுத்தி அவர்தம் பொருட்களை வழிப்பறி செய்தலாகும். கொள்ளையடித்தலும் இவர்தம் முதன்மைத் தொழிலாகும். எனினும் அவர்கள் வேட்டையாடுவதையும் தம் தொழிலாகக் கொண்டிருந்தனர். மழையற்ற காலங்களில் நீருக்காகத் தோண்டிய ஊற்றுக்களின் பக்கத்திலுள்ள குழிகளில் மறைந்திருந்து இரவில் அங்கு நீருண்ண வரும் பன்றிகளைக் கொன்று பிடிப்பதற்கு இம் மறவர்கள் காத்திருப்பர். பன்றி வேட்டையோடு பகலில் புதர்களில் வலைகளை மாட்டி நாய்களுடன் சென்று அவற்றைக் கலைத்து அங்குள்ள முயல்களை வளைத்து பிடிப்பர் [6] ஆநிரைகளைக் கவர்வதும் இவர்களது தொழில் (அகம்.297:16–18, அகம்.277:5.) ஆகும். பாலைநிலத்தின் காட்டுவழிகளில் பதுங்கியிருந்து அவ்வழிச் செல்வோரைத் துன்புறுத்தி அவர்தம் பொருட்களைப் பறித்துக்கொள்வர். இதனால் இவர்களை அகநானூற்றின் பாலைத்திணைப் பாடல் "கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழில் மறவர்" (அகம்.363:10) எனக் குறிப்பிடுகின்றது. வழிச் செல்வோரிடம் தாம் கொள்வதற்கு ஏற்ற பொருள் இல்லையாயினும் தங்கள் அம்புபட்டு அவர்கள் பதைபதைத்துத் துடிப்பதைக் கண்டு அவர்கள் உயிரைக் கொல்வதாகப் (கலி.4:3–6) பாலைக்கலிப் பாடல் கூறுகின்றது. இத்தகைய மறவர்களைப் பெரும்பாணாற்றுப்படை,

***"அத்தம் செல்வோர் அலறத் தாக்கிக்***
***கைப்பொருள் வௌவும் களவுஏர் வாழ்க்கைக்***
***கொடியோர் இன்று, அவன் கடியுடை வியன்புலம்"*** [7]

எனவும்,

அகநானூறு,

***"வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்" (அகம்.35:6)***

எனவும்,

***"கான்உயர் மருங்கில் கவலை யல்லது***
***வானம் வேண்டா வில்லேர் உழவர்" (அகம்.193:1–2)***

எனவும் மறவர்களின் கொடுந்தொழிலைச் சுட்டிக்காட்டிப் பேசுகின்றன. மறவர்கள் கொள்ளையிடும்போது துடியினை ஒலித்தனர் (கலி.15:4) ஆநிரை

கவரும்போது தண்ணுமையை (அகம்.297:16) முழக்கினர். துடி ஒலியைக் கேட்கும்போது பாலைவழிச் செல்வோர் நெஞ்சம் துண்ணென நடுக்கம் கொள்வதை (அகம்.87:8–9) அகநானூற்றுப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

**எயிற்றியர்**

மறவர்களாகிய எயினர்களின் பெண்களாகிய எயிற்றியர் கரம்புகளில் எறும்புகள் சேர்த்து வைத்திருக்கும் புல்லரிசியைத் தோண்டி எடுத்து வருவர். குழந்தைகளைப் பெற்ற எயிற்றியர் தம் குரம்பைக் குடில் மான்தோல் படுக்கைகளில் இருப்பர். ஏனைய எயிற்றியர் கரம்பையைத் தோண்டிக் கிளைப்பதற்கு இரும்பைத் தலையில் கொண்ட கருவிகளுடன் செல்வர். அவர்கள் புல்லரிசி இருக்கும் இடத்தை நன்றாகத் தெரிந்துகொண்டு கரம்பைக் கிளைத்து அதனுள்ளே இருக்கும் புல்லரிசிகளைச் சேகரித்துக்கொண்டு வருவர். அதனைக் கொண்டுவந்து பார்வைமான் கட்டிவைக்கப்பட்டுள்ள தம் முற்றத்தில் விளாமரத்தின் அடியிலுள்ள நில உரலில் பெய்து உலக்கையால் குற்றுவர்; ஆழ்ந்த கிணற்றில் இல்லூற்றாக ஊறும் நீரை முகந்துவந்து பழைய பானையில் வார்த்துச் சோறு சமைப்பர். வாடிய ஊனாகிய உப்புக்கண்டத்தையும் சமைப்பர். இவ் உணவை விருந்தினர்க்குத் தேக்கிலையில் கொடுப்பர் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை,

***“மான்தோல் பள்ளி முகவொடு முடங்கி***
***ஈன்பிணவு ஒழியப் போகி நோன்காழ்***
***இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்***
***உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி***
***இருநிலக் கரம்பைப் படுநீறு ஆடி***
***நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்***
***பார்வை யாத்த பறைநாள் விளவின்***
***நீழல் முன்றில் நிலஉரல் பெய்து***
***குறுங்காழ் உலக்கை ஓச்சி நெடுங்கிணற்று***
***வல்ஊற்று உவரி தோண்டித் தொல்லை***
***முரவுவாக் குழிசி முரிஅடுப்பு ஏற்றி***
***வாராது அட்ட வாடுஊன், புழுக்கல்***
***வாடாத் தும்பை வயவர் பெருமகன்***
***ஓடாத் தானை ஒண்தொழிற் கழற்கால்***
***செவ்வரை நாடன் சென்னியம் எனினே***
***தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ நும்***

*பைதீர் கரும்பொடு பதம்மிகப் பெறுகுவிர்”* [8]

என விளக்கமாகக் கூறுகின்றது. மற்றும் சிலர் மேட்டு நிலங்களில் விளைந்த நெற்சோற்றுடன் நாயினால் பிடித்துக் கொண்டுவரப்பட்ட உடும்பின் தசைக்கறியுடன் உணவு கொள்வர்.[9] தினையிலிருந்து செய்யப்பட்ட ஒருவகைக் கள்ளையும் உண்பர்.

*“தினைக்கள் ளுண்ட தெறிகோல் மறவர்*
*விசைத்த வில்லர் வேட்டம் போகி” (அகம்.284:9–10)*

எயிற்றியர் எறும்பு சேர்த்த புல்லரிசியைக் கொண்டு உணவு சமைப்பதும், மறவர் ஆநிரை கவர்வதும் மாறோக்கத்துக் காமக்கனி நப்பாலத்தனார் என்னும் சங்கப் புலவர் அகநானூற்றில் இயற்றிய பாலைத்திணைப் பாடலில்,

*“கோடை நீடலின் வாடுபுலத் துக்க*
*சிறுபுல் லுணவு நெறிபட மறுகி*
*நுண்பல் எறும்பி கொண்டளைச் செறித்த*
*வித்தா வல்சி வீங்குசிலை மறவர்*
*பல்லூழ் புக்குப் பயன்நிரை கவரக்” (அகம்.377:1–4)*

எனக் கூறப்பெற்றுள்ளன.

**வாணிகம்**

சங்க இலக்கியத்தில் மதுரைக்காஞ்சியிலும் பட்டினப்பாலையிலும் வாணிகம் குறித்த செய்திகள் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. நகரங்களில் நாளங்காடி, அல்லங்காடிகளில் நிலையாக இருந்த வாணிகக்கடைகளில் பல்வகைப் பொருள்களையும் விற்பனை செய்தோர் இருந்துள்ளனர். இவ்வாணிகர்களை மதுரைக்காஞ்சி,

*“முந்தை யாமம் சென்ற பின்றை*
*பணிலம் கலிஅவிந்து அடங்க காழ்சாய்த்து*
*தொடைநவில் நெடுங்கடை அடைத்து மடமதர்”* [10]

எனக் குறிப்பிடுகின்றது. துறைமுக நகரங்களில் பெரிய பண்டக சாலைகளை அமைத்துக்கொண்டு பெரிய அளவில நீர், நில வாணிகம் செய்தோரைப் பட்டினப்பாலை,

*“வைகல் தொறும் அசைவு இன்றி*
*உல்கு செயக்குறை படாது”* [11]

எனக் கூறுகின்றது. கடைத்தெருக்களில் பல்வேறு விற்பனைப் பொருட்களின் விற்பனையைக் குறிக்கும் கொடி அடையாளம் வைக்கப்பட்டிருந்தன. இத்தெருவை 'ஆவணம்' என வழங்கினர். ஆவணத்தில் வெறியாட்டு விழாவும் நடைபெற்றது. கள் முதலான போதைப் பொருள்களை விற்ற கடைகளும் இருந்தன. இவர்களைக் கள்ளோர், பழையர் என அழைத்தனர்.

***"பல்வேறு பண்ணியக் கடைமெழுக்கு உறுப்பக்***
***கள்ளோர் களிநொடை நுவல இல்லோர்" [12]***

எனவும்,

***"தழையணி பொலிந்த கோடுஏந்து அல்குல்***
***பழையர் மகளிர் பனித்துறைப் பரவ" (அகநானூறு.201-202)***

எனவும் மதுரைக்காஞ்சியும், அகநானூறும் சுட்டிக்காட்டுகின்றன.

சங்க காலத்தில் வாழ்ந்த வாணிகருடைய முக்கியத் தொழில் வணிகம். வாணிகர் வாழ்ந்த இல்லங்கள் மலையைப் போன்று உயர்ந்து காணப்பெற்றன. பலவகையான வாணிபத் தொழில்கள் சிறப்புப் பெற்றிருந்தன. வாணிகர்கள் அறநெறி பிழையாமல் இல்லறம் நடத்தினர். பலவகையான விற்பனைப் பொருட்களும் உணவுப்பொருட்களும் இவர்கள் இல்லங்களில் நிறைந்திருந்தன. மலை, நிலம், நீர் இவைகளிலிருந்து கிடைக்கும் பலவகைப் பொருட்களையும் இவர்கள் விற்றனர். இதில் மணி, முத்து, பொன் ஆகியனவும் அடங்கும் [13] உண்ணுபவை, பூசுபவை, பூண்பவை, உடுப்பவை முதலான பொருட்களும் வாணிகத்தில் இருந்தன. நடுநிலைமை தவறாத சங்ககால வாணிகர்கள் கொடுப்பதிலும் கொள்வதிலும் குறைவின்றி நேர்மையாக வாணிகத்தைப் போற்றினர். இவர்கள் பட்டினப்பாலையில், "புண்ணியம் முட்டா தண்நிழல் வாழ்க்கை" [14] உடையவர்கள் எனச் சிறப்பித்துப் போற்றப்பெற்றுள்ளனர். வாணிகர் வாழ்ந்த தெருக்கள் பரிபாடலில்,

***"ஆங்குஓர்சார் உண்ணுவ பூசுவபூண்ப உடுப்பவை***
***மண்ணுவ மணிபொன் மலைய கடல்***
***பண்ணியம் மாசுஅறு பயம்தரு கருகப்***
***புண்ணிய வணிகர் புனைமறுகு ஒருசார்" (பரிபாடல்,22-25)***

எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளது.

**கடல் வாணிகம்**

பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் சங்கப் புலவர் இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் கடல் வாணிகம் குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது.

நீண்ட பெரிய கடலில் பெருங்காற்றுக் கலத்தைச் சிதற அடித்தலால் வாணிக முயற்சி நிமித்தமாக நெஞ்சழிந்தார் போல என்ற உவமை வாயிலாகக் கடல் வாணிகம் கூறப்பெற்றுள்ளது. அகப்பாடலடிகள் வருமாறு:

*"நீளிரு வளிகலன் வெளவலின்*
*ஆள்வினைக்கு அழிந்தோர் போறலல்லதைக்" (கலி.5:6–7)*

**இடம்பெயர்ந்து வாணிகம் செய்தல்**

ஓதலாந்தையார் என்னும் சங்கப் புலவர் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றின் பாலைத்திணைப் பாடலில் இடைச்சுரப்பத்தில் வாணிகர் இடம்பெயர்ந்து செல்லும்நிலை கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*"ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை*
*வெம்முனை யருஞ்சுரம் நீந்தி நம்மொடு*
*மறுதரு வதுகொ றானே செறிதொடி" (ஐங்.329:1–3)*

இடைச்சுரத்தில் தலைவன் தன் நெஞ்சிற்கு இவ்வாறு கூறுகின்றான். பாலை வழியில் நிழலும் நீரும் இன்மையாலும் அது நீண்ட பெருவழியாக இருப்பதாலும் தலைவன் 'பாழ்படு நனந்தலை' என்கின்றான். இதிலிருந்து ஆங்காங்கு இருந்த குடியிருப்புக்களும் பாழ்பட்டமையை அறியலாம். பாழ்நிலமாதலின் மக்கள் அங்குத் துணிந்து செல்லமாட்டார்கள். இதனால் தலைவன் 'ஆள்வழக்கற்ற' என்கின்றான். இங்கு 'ஆள்' என்பது இடம்பெயர்ந்து செல்லும் வாணிகர்களைக் குறிக்கும். 'வெம்முனை' என்பது பாலைவழிச் செல்லும் வாணிகச் சாத்துக்களுக்கும் ஆறலைக் கள்வராகிய மறவர்களுக்கும் போர்நடைபெறும் இடமாகும்.

இதிலிருந்து சங்ககாலத்தில் வாணிகத்திற்காக பாலைவழியில் இடம்பெயர்ந்து செல்லும் வாணிகர்களுடன் ஆறலைக் கள்வர் போரிட்டு அவர்தம் வாணிகப் பொருட்களைக் கொள்ளையடித்தனர் என்பதை அறியலாம்.

**வாணிகச் சாத்தர்**

மதுரைச் செங்கண்ணனார் என்னும் சங்கப் புலவர் அகநானூற்றின் பாலைத்திணையில் இயற்றியுள்ள பாடலில் சுரவழிச் செல்லும் வாணிகச் சாத்தர் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. அப்பாடலடிகள் வருமாறு:

*"…. …. …. …. நெடுநிலை*
*முளிபுல் மீமிசை வளி சுழற் றுறாஅக்*

*காடுகவர் பெருந்தீ யோடுவயின் ஓடலின்*
*அதர்கெடுத் தலறிய சாத்தொ டொராங்கு*
*மதர்புலி வெரீஇய மையல் வேழத்” (அகம்.39:7–11)*

மூங்கில் நிறைந்த பாலை வழியில் சருகுகள் எரியுமாறு பெருந்தீ மூண்டெழுந்தது. செங்குத்தாய் நின்ற உலர்ந்த ஊகம்புல் மீது காற்றுச் சுழன்றடித்ததால் அப்பெருந்தீ காடு முழுவதும் பரவியது. அச் சுரவழிச் சென்ற வாணிகச் சாத்தர் அவ்வழியினைத் தவறவிட்டு வழி தெரியாமல் அலறி ஓடினர். இப்பாடலடிகளில் பாலைநிலத்தின் சுரவழியில் வாணிகத்திற்காகச் செல்லும் வாணிகர் ‘சாத்து’ எனக் குறிக்கப் பெற்றுள்ளனர். சங்ககாலத்தில் பாலைநிலத்தின் சுரவழியைக் கடந்து சென்று வாணிகம் செய்தமை பற்றி அறியலாம்.

**உப்பு வாணிகர்**

தலைவனின் பொருள்வயிற் பிரிவில் ஆற்றாமையால் வேறுபட்ட தலைவிக்குத் தோழி கூறுவதாக மாமூலனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் பாலைநிலத்தில் பரற்கற்கள் நிறைந்த வழியே உப்பு வாணிகத்திற்காக உப்பு வணிகர் கூட்டம் செல்லும் செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*“ஓங்கல் யானை யுயங்கிமதந் தேம்பிக்*
*கடல்நீர் உப்பின் கணஞ்சால் உமணர்*
*உயங்குபக டுயிர்ப்ப அசைஇ முரம்பிடித்து*
*அகலிடங் குழித்த அகல்வாய்க் கூவல்*
*ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும்” (அகம்.295:6–10)*

கொடிய பரற்கற்கள் பரவிய வழியினைக் கடந்து, கடலில் விளைந்த உப்பினைப் பிற நிலங்களில் வாழும் மக்களுக்கு விற்பனை செய்வதற்காக உப்பு வாணிகராகிய உமணர் கூட்டம் சென்றது. உப்புச்சுமையினை ஏற்றிய வண்டிகளை இழுத்து வருந்திய எருதுகள் இளைப்பாறுவதற்காக ஓரிடத்திதே தங்கிய உமணர்கள் வன்நிலமாகிய முரம்பினை இடித்துத் தோன்றிய அகன்ற வாயினையுடைய கிணறு (கூவல்) ஊறின. அது வழிச்செல்வோரின் நீர் வேட்கையைப் போக்கியது. இதன்வழி சங்ககாலத்தில் உமணர்கள் நிலம் கடந்து உப்பு வாணிகம் செய்தமையை அறியலாம்.

ஆமூர்க் கவுதமன் சாதேவனார் அகநானூற்றின் பாலைத்திணையில் இயற்றியுள்ள பாடலில் உப்பு வாணிகராகிய உமணர்கள் உப்பினை விலைகூறி விற்கும் செய்தி கூறப்பெற்றுள்ளது:

*“தெண்கழி விளைந்த வெண்கல் உப்பின்*
*கொள்ளை சாற்றிய கொடுநுக ஒழுகை*
*உரனுடைச் சுவல பகடுபல பரப்பி*
*உமண்உயிர்த்து இறந்த ஒழிகல் அடுப்பின்” (அகம்.159:1–4)*

தெளிந்த உப்பங்கழியிடத்து விளைந்த வெண்மையான கல் உப்பினைப் பலர் அறிய விலை கூறி விற்ற உப்பு வாணிகர்கள் வளைந்த நுகத்தையுடைய வண்டிகளில் பூட்டிய வலிமைமிக்க பிடரியினை உடைய எருதுகளைப் பரந்து மேயுமாறு அவிழ்த்துவிட்டு அவ்விடத்தே சமைத்து உண்டு இளைப்பாறினர், பின்னர் அவ் அடுப்புக்களை அங்கேயே விட்டுச்சென்றனர்.

மதுரை மருதன் இளநாகனார் அகநானூற்றின் பாலைத்திணையில் இயற்றியுள்ள பாடலொன்றில் உப்பு வாணிகர்கள் தம் வாணிகத் தொழிலுக்குக் கழுதைகளைப் பயன்படுத்தும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“மரம்கோள் உமண்மகன் பெரும் பருதிப்*
*புன்தலை சிதைத்த வன்தலை நடுகல்*
*கண்ணி வாடிய மண்ணா மருங்குல்*
*கூர்உளி குயின்ற கோடுமாய் எழுத்தவ்*
*வாறுசெல் வம்பர் வேறுபயம் படுக்கும்*
*கண்பொரி கவலைய கானத் தாங்கண்*
*நண்தலை யாஅத்து தந்தளிர்ப் பெருஞ்சினை*
*இல்போல் நீழற் செல்வெயில் ஒழிமார்*
*நெடுஞ்செவிக் கழுதைக் குலுங்கால் ஏற்றைப்*
*புறம்நிறை பண்டத்துப் பொறையசாஅக் களைந்த” (அகம்.343:4–12)*

பாலைவழியின் பாறையிலுள்ள நடுகல்லை அவ்வழிச் செல்லும் உப்பு வாணிகரது வண்டிச் சக்கரத்தின் பூண் சிதைக்கும். அந்நடுகல்லில் சூட்டப்பெற்ற மாலை வாடப்பெற்றதும் கழுவித் தூய்மை செய்யப்பட்டதுமாகிய இடத்தில் உரிய உளியால் செதுக்கப்பெற்ற கோடுகள் தேய்ந்து அழிந்து, எழுத்துக்கள் அவ்வழிச் செல்லும் புதிய வழிப்போக்கர்களுக்கு உண்மைக்கு மாறான செய்தியை அறிவிக்கும். இத்தகைய பாலைவழியில் பாமரங்கள் மிகுந்து காணப்பெறும். வழிப்போக்கர்கள் அம்மரங்களில் நிழலில் தங்கி வெப்பத்தைத் தணித்துக் கொள்வர். வாணிகர்கள் நீண்ட செவியினையும் குட்டையான கால்களையும் கொண்ட ஆண் கழுதைகளின்மீது ஏற்றிவந்த வாணிகப் பொருட்களை இறக்கி வைத்துப் பாரத்தைக் குறைத்து அக்கழுதைகளின் தளர்ச்சியைப் போக்கினர் என்பன மேற்குறித்த பாடலடிகளின் செய்திகள்.

**உப்பு வாணிகம்**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ குறுந்தொகையின் பாலைத் திணையில் இயற்றிய பாடலில் உப்பு வாணிகர் தம் தொழிலும் செயலும் கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:*

***"உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்தலை***
***ஊர்பாழ்த் தன்னா ஓமைஅம் பெருங்காடு" (குறுந்.124:1–2)***

*உப்பு வாணிகர்கள் பலர்கூடித் தங்கள் பொருட்களுடன் கூட்டம் கூட்டமாகப் பல ஊர்களுக்கு இடம்பெயர்ந்து செல்வர்; உப்பு வண்டிகளைத் தாங்கள் தங்கும் இடங்களில் நிறுத்துவர்; வண்டிகளை இழுக்கும் எருதுகளைத் தறிகளில் பிணிப்பர்; இரவு அங்கு தங்கி உணவு உண்டு மகிழ்ந்து பின்னர் பிற ஊர்களை நாடிச் செல்வர். அவ்வாறு அவர்கள் நீங்கிச் சென்ற இடங்களும் ஊர்களும் பாழ்பட்டது போலக் காணப்படும் என்பதான செய்திகள் கூறப்பெற்றுள்ளன.*

**பண்டமாற்று வாணிகம்**

*சங்க காலத்தில் பண்டமாற்று வாணிகமே நடைபெற்றுள்ளன. இதனைக் கல்லாடனார் என்னும் சங்கப்புலவர் அகநானூற்றில் இயற்றியுள்ள பாலைத்திணைப் பாடலடிகளால் அறியலாம்.*

***"களிற்றுக்கண் றொழித்த உவகையர் கலிசெறிந்து***
***கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து***
***பெரும்பொளி வெண்ணார் அழுந்துபடப் பூட்டி***
***நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்***
***நறவுநொடை நல்லில் புதவுமுதற் பிணிக்குங்" (அகம்.83:4–8)***

*வேடர்கள், இளைய பெண்யானை காட்டில் பிரிந்து அலறுமாறு அதன் ஆண் கன்றாகிய களிற்றினை அதின்றும் பிரித்துக்கொண்டு வந்த மகிழ்ச்சியில் செருக்குற்று வலிமைமிக்க அடிமரத்தினைக் கொண்ட வெண்கடம்பின் கொம்பினைப் பிளப்பர். பிளந்து அதிலிருந்து பெரிதாக உரித்தெத்த வெண்மையான நார்க் கயிற்றால் அக்களிற்றினை இறுக்கமாகக் கட்டி, கொடிகள் அசையும் கடைத் தெருக்களைக் கொண்ட பழைமையான ஊரில் 'கள்' விற்கும் வீட்டின் வாயிலில் கள்ளிற்கு விலையாக அக்களிற்றுக் கன்றினைக் கொண்டு வந்து கட்டுவர்.*

*இப்பாடலடிகள் 'நியமயம்' என்பது கடைத்தெருவைக் குறிக்கும். 'நறவு நொடை' என்பதால் கள்ளிற்கு விலையாக களிற்றுக்கன்று விற்கப்பட்டதை*

அறியலாம். இதிலிருந்து சங்க காலத்தில் பண்டமாற்று முறையில் வாணிகம் நடைபெற்றது தெரியவருகின்றது.

**யவனர்களுடன் வாணிகம்**

சங்ககாலத்தில் சேரநாட்டிற்கும் யவனர்களுக்கும் இடையே நடைபெற்ற பண்டமாற்று வாணிகம், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

***"யவனர் தந்த வினைமாண் நன்கலம்***
***பொன்னொடு வந்து கறியொடு பெயரும்***
***வளங்கெழு முசிறி ஆர்ப்பெழ வளைஇ" (அகம்.149:9–11)***

'சுள்ளி' என்னும் பெயர் கொண்ட பேரியாறு சேர மன்னர்க்கு உரியது. அவ் ஆற்றினது வெண்ணிற நுரை சிதறுமாறு தொழில் சிறப்புடைய யவனர்கள் கொண்டுவந்த நல்ல மரக்கலம் (படகு, கப்பல்), பொன்னைக் கொண்டுவந்து விலையாகக் கொடுத்துவிட்டு 'கறி'யாகிய மிளகை ஏற்றிச்செல்லும்.

'யவனர்' என்பது 'சோனவர்' என்னும் வாணிக இனத்தவரைக் குறிக்கும்; இவர்கள் எகிப்து, கிரேக்கம் முதலிய நாடுகளிலிருந்து வாணிகத்திற்கு வருபவர்கள். சங்க காலத்தில் யவனர்கள் சேரநாட்டு முசிறியில் பொன்னைக் கொண்டுவந்து விலையாகக் கொடுத்துவிட்டு மிளகை ஏற்றிச்சென்றனர் என்பதால் சேரநாட்டின் வாணிகச் சிறப்பை அறியலாம். 'முசிறி' என்பது சங்ககாலத்தில் சேரநாட்டின் துறைமுகப் பட்டினமாக அமைந்திருந்ததால் அறியப்படுகின்றது.

**வழிப்பறிக் கொள்ளை**

பாலை நிலத்தில் வாழும் மறவர்களின் முக்கியத் தொழில் அந்நிலத்தின் வழிச் செல்வோரிடம் வழிப்பறி செய்தலும் கொள்ளையடித்தலும் ஆகும். பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் இத்தகைய ஓடாமறவரின் வீரமும், வழிப்பறி, கொள்ளையடித்தல் ஆகிய தொழல்களும் விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

***"அரிமா ணிடித்தன்ன அஞ்சிலை வல்விற்***
***புரிநாண் புடையிற் புறம்காண்ட லல்லால்***
***இணைப்படைத் தானை யரசோ டுறினுங்***
***கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பின்***

*எருத்துவலிய எறும் நோக் கிரலை*
*மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி*
*உருத்த கடுஞ்சினத் தோடா மறவர்*
*பொருள்கொண்டு புண்செயி னல்லதை யன்போ*
*டருள்புறம் மாறிய வாரிடை யத்தம்"* *(கலி.15:1–9)*

துணைப் படைகளைப் பெற்ற படைகளோடு மன்னர்கள் வந்தாலும் அஞ்சாது வலிமைமிக்க சிலைமரத்தால் செய்யப்பெற்ற வில்லினது முறுக்குதலை உடைய நாணில் எழும், சிங்கம் இடித்தாற்போன்ற நாண் ஒலியால் மன்னர்களைப் புறமுதுகிடச் செய்பவர்கள் மறவர்கள். அவர்கள் வில்லில் அம்பைத் தொடுப்பது நாணும் செயல் எனக் கருதுவர். கடிய துடியினது ஆரவாரத்தையும் வலிய பார்வையினையும் வலிமைமிகுந்த கழுத்தினையும் கொண்ட கலைமானின் கொம்பினைப் போன்று முறுக்குண்ட தாடியினையும் கொண்டவர்கள் பாலைநில மறவர்கள். கடும் சினம் கொண்ட அவர்கள் புறங்கொடாத ஆண்மையாளர் ஆவர். இம்மறவர்கள் பாலைநில வழிச்செல்வோரிடம் பொருட்களைப் பறித்தும், கொள்ளையிட்டும், அதற்கு ஈடாக வழிப்போக்கர்க்குப் புண்களைக் கொடுத்தும் விடுப்பர்.

இத்தகைய கொடிய மறவர்களிடம் அன்பையும் அருளையும் எதிர்நோக்க இயலாது. இவ்வாறு இப்பாலைக் கலிப்பாடலில் ஓடா மறவரின் வீரமும் வழிப்பறி, கொள்ளையடித்தல் ஆகிய தொழில்களும் கூறப்பெற்றுள்ளன.

**மறவர் தொழில்**

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் மற்றொரு பாலைக்கலிப் பாடலில் மறவர்களின் கொடுந்தொழிலாகிய கொலைத்தொழில் கூறப்பெற்றுள்ளன. பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவனின் செலவினைத் தவிர்க்க விரும்பிய தோழி, வரிச்சுற்று அமைந்த வில்லினையும் கடைகுழன்று வளர்ந்த மயிரினையும் பிறர்க்குத் துன்பம் செய்தலை எதிர்நோக்கி இருக்கும் உடல் வலிமையையும் போலி போன்ற பார்வையினையும் கொண்டவர்கள் தறுகண்மை உடைய மறவர்கள் ஆவர். அவர்கள் பாலை நிலத்தின் வழியே செல்லும் புதிய வழிப்போக்கர்களிடம் தாம் பெறுவதற்குரிய பொருள் இல்லையாயினும், தங்களது அம்பினால் அவர்கள் வதைப்பட்டுத் துடிப்பதைக் கண்டு மனமகிழ்ச்சி கொள்வதற்காகத் தொடர்ந்து சென்று வம்பலர் தம் உயிரைப் பறிப்பர். இதனால் அப்பாலை வழிகளில் பறவைகளும் பறப்பதற்கும் அஞ்சும். இத்தகைய கொடிய பாலை வழியில் வேலினை வலக்கையில் ஏந்தி பொருள் தேடிச் செல்லும் பிரிவினைத் தவிர்ப்பாயாக எனத் தலைவனிடம் தோழி கூறுகின்றாள்:

*“வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்*
*சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய*
*ரற்றம் பார்த்தல்குங் கடுங்கண் மறவர்தாங்*
*கொள்ளும் பொருளிலர் ஆயினும் வம்பலர்*
*துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்*
*புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை*
*வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கையின்*
*உள்ளினர் ரென்ப தறிந்தன ளென்றோழி” (கலி.4:1–8)*

இவ்வகையில் பாலைநில மக்களாகிய மறவர்களின் வழிப்பறி மற்றும் கொலைத் தொழிலினை அறியலாம்.

**ஆறலைக் கள்வர்களின் கொலை செய்தல்**

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் மற்றொரு பாலைக்கலிப் பாடலிலும் ஆறலைக் கள்வர்களாகிய மறவர்களின் கொலைத்தொழில் தலைவியின் கூற்றில் விளக்கப்பெற்றுள்ளன. தலைவி தலைவனிடம் ‘மழை வறண்டமையால் காட்டுப் பசுக்கள் மரலைத் தின்று உயிர் வாழும். இத்தகைய உயர்ந்த மலைகளைக் கொண்ட காட்டின் கொடிய பாலை வழியில் செல்வோரின் மீது கொலைத்தொழிலைச் செய்யும் ஆறலைக் கள்வர்களாகிய மறவர்கள் மூட்டுவார் பொருந்திய தம் அம்புகளைச் செலுத்துவர். இதனால் வழிச்செல்வோர் உடல்சுருங்கி உடலினுள் இருந்த நீர் வறண்டு உலர்ச்சியால் வாடுகின்ற நாவினுக்குத் தண்ணீர் கிடைக்காமல், தடுமாற்றம் கொள்ளும் அவர்களுடைய துயரத்தை அவர்களது கண்ணீர் நனைத்து நீக்கும் கடுமையை உடையது நீ பொருள்வயிற் விருப்பத்தில் செல்லும் காட்டுவழி’ என்கின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

*“மரையா மரல்கவர மாரி வறப்ப*
*வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்*
*சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்*
*உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்*
*தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்*
*கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றால்” (கலி.6:1–6)*

பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆறலைக் கள்வர்களின் கொலைத்தொழிலை பாலைக்கலிப்பாடலில் மேலும் விரிவாகச் சுட்டிக்காட்டி உள்ளார். கொலைஞர் ஆகிய ஆறலைக்கள்வர் தம் வில்லால் பாலைவழிச் செல்வோரைக் கொல்வர். கொல்லப்பட்டோரின் உடல்களை மறைக்க இலைக் குவியல்களை இடுவர்.

அவ்வாறு பிணங்களை மறைத்த இலைக்குவியல்கள் காட்டு முற்களால் இடப்பட்ட நெடிய முள்வேலி போலத் தோன்றும். இத்தகைய குன்றங்களைக் கொண்டது பாலைவழி. அப்பாடலடிகள் வருமாறு:

***"இடுமு ணெடுவேலி போலக் கொலைஞர்***
***கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த***
***கடுநவை யாராற்று றறுசுனை முற்றி***
***யுடங்குநீர் வேட்ட உடம்புஉயங் கியானை***
***கடுந்தாம் பதிபா ங்குக் கைதெறப் பட்டு***
***வெறிநிரை வேறாகச் சாரச் சார லோடி***
***நெறிமயக் குற்ற நிரம்பா டத்தஞ்" (கலி.12:1–7)***

இப்பாடலடிகளில் தோழி காட்டுவழியில் கொடுமையைத் தலைவனுக்கு நன்கு எடுத்துக்காட்டி அவனது பொருட்பிரிவைத் தடுக்கின்றாள். நீரற்ற வெம்மையுடைய சுனையில் தம் துதிக்கையை விட்டுச் சுடப்பெற்ற யானைகள் திசைதடுமாறி ஓடுகின்றன. பாலைநிலத்தின் வெம்மையைச் சுட்டும் தோழி, ஆறலைக் கள்வரின் கொலைத் தொழிலையும் தலைவனுக்கு எடுத்துரைத்து அவனது பொருட்பிரிவைத் தடுக்கின்றாள்.

**கொடுவில் எயினர் தொழில்**

ஓதலாந்தையார் கொலை செய்தல் ஐங்குறுநூற்றின் பாலைத் திணையில் முன்னிலைப்பத்தில் இயற்றியுள்ள பாலைப் பாடலில் கொலைவில் எயினரின் கொலைத்தொழில் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளது. தலைவன் தன் தலைவியை உடன்கொண்டு செல்லும் பாலை வழியின் இடைச்சுரத்தில் தன் தலைவியின் நலம் பாராட்டும்போது,

***"சிலைவிற் பகழிச் செந்துவர் ஆடைக்***
***கொலைவில் எயினர் தங்கை நின் முலைய!" (ஐங்.363:1–2)***

என்கின்றான். இதனால் அவன் தலைவி எயினர் குடியினள் என்பதை அறியலாம். 'எயினர்' என்போர் பாலை நிலத்தில் வாழும் குடிமக்கள் ஆவர். ஆறலைத்தல் இவர்தம் தொழில் ஆகும். இவர்கள் பாலை நிலத்தில் குறும்புகளை அமைத்து வாழ்ந்தனர் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை விரிவாகக் கூறுகின்றது. எயினர்கள் பயன்படுத்தும் வில், சிலை என்னும் ஒருவகை மரத்தினால் உறுதியாகச் செய்யப்பட்டமையால் தலைவன் 'சிலைவில்' என்றான். 'சிலை' என்பது வாகை இனத்தைச் சேர்ந்த ஒரு மரமாகும். இலைமலையும் ஆதலின் கல்லைப் போன்ற உறுதிபடைத்த 'வில்' எனக் கொள்ளலாம்.

எய்யப்பட்ட மனிதர் உடலையும் விலங்குகளின் உடலையும் பகுத்துக்காட்டும் தொழிலைச் செய்யும் அம்பு ‘பகழி’ ஆயிற்று.

குடவாயிற்கீரத்தனார் பாடிய அகநானூற்றில் அமைந்த பாலைப் பாடலிலும் கொடுவில் எயினரின் கொலைத்தொழில் சுட்டிக் காட்டப் பெற்றுள்ளது. பொருள்வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குப் பின்வருமாறு கூறுகின்றான்.

***“கொடுவில் எயினர் கோட்சுரம் படர***
***நெடுவிளி பயிற்றும் நிரம்பா நீளிடை***
***கல்பிறங் கத்தம் போகி***
***நில்லாப் பொருட்பிணிப் பிரிந்த நீயே” (அகம்.79:14–17)***

ஆடும்போதெல்லாம் ஒலிக்கும் வாயினை உடைய அச்சத்தைச் செய்யும் துடியினையும், வளைந்த வில்லையும் கொண்ட எயினர்கள் பாலைவழிச் செல்வோரை அலறத்தாக்கி அவர்களுடைய கைப்பொருள்களைக் கொள்ளையடிக்கும் நோக்கத்துடன் சுரவழியில் செல்வர் எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

**வில்லேர் உழவர் தொழில்**

மதுரை மருதன் இளநாகனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் வில்லை ஏராகக் கொண்ட ஆறலைக் கள்வரின் கொலைத்தொழில் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளது. பொருள் விரும்பிய உள்ளத்திற்குத் தலைவன் ஆறலைக் கள்வரின் கொலைத்தொழிலைக் கூறிச் செலவழுங்குவிப்பதாக பாடலடிகள் சுட்டுகின்றன.

***“கானுயர் மருங்கில் கவலை யல்லது***
***வானம் வேண்டா வில்லேர் உழவர்***
***பெருநாள் வேட்டம் கிளையெழ வாய்த்த” (அகம்.193:1–3)***

என்பன அப்பாடலடிகள் ஆகும். வில்லையே ஏராகக் கொண்ட உழவராகிய ஆறலைக் கள்வர், உயர்ந்த காட்டிலுள்ள கவர்த்த வழிகளையே விரும்புவர். அவர்கள் மழை வளத்தை விரும்பாதவர்கள். தமக்கு வேட்டை வாய்க்கப்பெற்ற நல்ல நாளில் தம் சுற்றத்தாருடன் கூடிச்சென்று வழிச்செல்வோரிடம் போரிட்டு அவர்களைக் கொன்று வீழ்த்தி அவர்தம் கைப்பொருள்களைக் கொள்ளையடிப்பதை மதுரை மருதன் இளநாகனார் சுட்டிக்காட்டியுள்ளார்.

தலைவனது பொருட்பிரிவை அறிந்து ஆற்றாமை கொண்ட தலைவிக்குத் தோழி கூறுவதாக வாடாப்பிரமந்தன் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலிலும் கொடுஞ்சிலை மறவரின் கொலைத்தொழில் கூறப்பெற்றுள்ளது.

*“நெடுங்கழை திரங்கிய நீர்இல் ஆர்இடை*
*ஆறுசெல் வம்பலர் தொலைய மாறுநின்று*
*கொடுஞ்சிலை மறவர் கடறுகூட் டுண்ணும்*
*கடுங்கண் யானைக் கானம் நீந்தி*
*இறப்பர்கொல் வாழி தோழி நறுவடிப்”* *(குறுந்.331:1–5)*

பாலை நிலத்தில் நீரின்மையால் மூங்கில்கள் உலர்ந்து காணப்பட்டன. அந்நிலத்தின் நிலையான பொருட்கள் உலர்ந்தமையைச் சுட்டி பாலை நிலத்தின் வறுமையும் கேடும் கூறப்பெற்றன. மறவர்கள் வழிப்போக்கர்களாகிய வம்பலர்களைத் துன்புறுத்திக் கொலை செய்து அவர்களது பொருள்களை வெளவி உண்ணும் தொழில் வாயிலாகப் பாலைநில மக்களின் கொடுமை கூறப்பெற்றுள்ளது. மறவரோடு போரிட்டுத் தப்பிச் சென்றாலும் பொருள் ஈட்டச் செல்வோர் கடுங்கண் யானையால் வரும் துன்பத்தையும் எதிர்கொண்டதாகவும் கூறப்பட்டுள்ளது.

**வணிகர் பொருளைக் கொள்ளையடித்தல்**

கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்னும் சங்கப்புலவர் அகநானூற்றின் பாலைத் திணைப் பாடலில் பாலைநிலத்தில் வாழும் எயினர்களாகிய மறவர்கள், பாலைநிலத்தின் வழியே செல்லும் வணிகர் கூட்டத்தினரைக் கொன்று அவர்தம் பொருட்களைக் கொள்ளையடிக்கும் தொழில் கூறப்பெற்றுள்ளது.

*“.... .... .... .... நாளைப்*
*பொருந்தாக் கண்ணேம் புலம்புவந் துறுதரச்*
*சேக்குவங் கொல்லோ நெஞ்சே! சாத்தெறிந்து*
*அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்*
*கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ”* *(அகம்.167:5–9)*

துன்பத்தைச் செய்யும் அம்பினையும் வளைந்த வில்லினையும் கொண்ட மறவர்கள் பாலைவழிச் செல்லும் வணிகர் கூட்டத்தினரைக் கொன்று, அவர்கள் கொண்டுசெல்லும் பொருள்களைக் கொள்ளையிட்டு உண்பர். மறவர்களின் பகைக்கு அஞ்சிய மக்கள் குடிபெயர்ந்து சென்றனர்.

**வேட்டையாடல்**

*சிறைக்குடி ஆந்தையார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் வேட்டைச் செந்நாய் மான், பன்றி, முயல் ஆகியவற்றை வேட்டையாடி உண்ணும் செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:*

***"வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்***
***குளவி மொய்த்த அழுகற் சின்னீர்***
***வளையுடைக் கைய ளெம்மோ டுணீஇயர்"          (குறுந்.56:1–3)***

*இப்பாடலடிகளில் வேட்டையாடுவதில் வல்லமையுடைய வேட்டச் செந்நாய் மான், பன்றி, முயல் முதலான விலங்குகளை வேட்டையாடித் தின்று, அவற்றின் எஞ்சிய இறைச்சியை நிலத்தில் குழியைத் தோண்டிப் புதைத்துவிட்டுச் செல்வதும், அந்நாய் தன் கால்களால் நிலத்தைத் தோண்டி அதில் கிடைக்கும் நீரைக் குடிப்பதும் ஆகிய செய்திகள் கூறப்பெற்றுள்ளன. பாலை நிலத்தின் வழியே பொருளீட்டச் செல்லும் தலைவனுக்குப் பசி தணிய செந்நாய் வேட்டையாடி உண்ட மான், பன்றி, முயல் ஆகியனவற்றின் எஞ்சிய இறைச்சியும், தாகம் தணிய அந்நாய் உண்டு எஞ்சிய நீருமே கிடைக்கும் என்பனவான செய்திகள் இப்பாடலடிகளில் கூறப்பெற்றுள்ளன.*

**உழவு செய்தல்**

*பொருள்வயிற் பிரிந்த தலைவன் குறித்த பருவம் தொடங்கியதும் தலைவியை நினைத்து இரங்கித் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்த அகநானூற்றின் பாலைத்திணையில் குன்றியனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள பாடலில் உழவுத்தொழில் மற்றும் நெல்வேளாண்மை குறித்த செய்திகள் கூறப்பெற்றுள்ளன.*

***"வைகுபுலர் விடியல் மைபுலம் பரப்பக்***
***கருநனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்***
***எரிமருள் பூஞ்சினை இனைச்சிதர் ஆர்ப்ப***
***நெடுநெல் அடைச்சிய கழனியேர் புகுத்துக்***
***குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர***
***அரிகால் போழ்ந்த தெரிபகட் டுழவர்***
***ஓதைத் தெள்விளி புலந்தொறும் பரப்பக்***
***கோழிணர் எதிரிய மரத்த கவினிக்"          (அகம்.41:1–8)***

நெடிதாகத் தங்கிய இருள் புலருகின்ற கைகறைப் பொழுதில் எருமைகள் நிலத்தே பரந்து சென்றன. முருக்க மரத்தின் பெரிய அரும்புகள் கட்டவிழ்ந்து மலர்ந்தன. நெருப்பைப் போன்ற மலர்ந்த பூக்களையுடைய அம் மரக்கிளைகளில் வண்டுகள் கூட்டமாய் ஒலித்தன. தேர்ந்தெடுத்த எருதுகளைக் கொண்ட உழவர்கள் நெடிய நெற்பயிரினை நட்ட வயல்களிலுள்ள ஏர்களைக் குடுமிகளையுடைய கட்டிகளைக் கொண்ட தோட்டத்தில் சேர்த்து மண் பிறழுமாறு அரிதாளையுடைய நிலம் பிளவுபடுமாறு உழுதனர். அவர்கள் ஏரேட்டும் போது எழுப்பும் ஓசையாகிய தெளிந்த ஒலி இடந்தோறும் ஒலித்தது. இவ்வாறு இப்பாலைப்பாடலில் நெல்வேளாண்மையும், பகடுகளாகிய எருமைகளைக் கொண்டு நிலத்தை உழும் உழவுத்தொழிலும் விரிவாகப் பேசப்பெற்றுள்ளன.

**முத்தெடுத்தல்**

மாமூலனார் என்னும் சங்கப்புலவர் அகநானூற்றின் பாலைத் திணையில் இயற்றிய பாடலொன்றில் கொற்கைத் துறைமுகத்தில் முத்தெடுக்கும் தொழில் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

***"…. …. …. …. பொன்னின்***
***அவிரெழில் நுடங்கும் அணிகிளர் ஓடை***
***வினைநவில் யானை விறல் போர்ப் பாண்டியன்***
***புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்துறை***
***அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து" (அகம்.201:1–5)***

'கொற்கை' என்பது பாண்டிய நாட்டில் தாமிரபரணியாற்றின் சங்கமுகத்தில் அமைந்த பழைய துறைமுகப்பட்டினம் ஆகும். கொற்கைத்துறையில் கடலில் குளித்தெடுக்கும் முத்தே சிறந்ததாகலின் 'புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்றுறை அவிர்கதிர்முத்தம்' எனக் கூறப்பெற்றுள்ளன.

**சாணைக்கல் செய்தல்**

மாமூலனார் என்னும் சங்கப்புலவர் அகநானூற்றின் பாலைத்திணையில் இயற்றிய பாடலொன்றில் சங்ககாலத்தில் சாணைக்கல் செய்யும் தொழில் நடைபெற்ற செய்தி கூறப்பெற்றுள்ளது.

***"…. …. …. …. ஒண்கழல்***
***உருவக் குதிரை மழவர் ஓட்டிய***
***முருகன் நற்போர் நெடுவே ளாவி***
***அறுகோட்டி யானைப் பொதினி யாங்கண்***
***சிறுகா ரோடன் பயனொடு சேர்த்திய***

*கல்போல் பிரியலம் என்ற சொற்றாம்*
*மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த"* (அகம்.1:1–7)

ஆவி என்பவன் பொதினி மலைக்குரியவன். அவன் முருகனைப் போன்றே வெற்றிச் சிறப்பினைக் கொண்டவன். வண்டுபடுதலால் மலர்ந்த மலர்களால் ஆகிய கண்ணியினையும், ஒளிமிக்க வீரக்கழலினையும் உடையவன். அஞ்சத்தக்க குதிரைகளைக் கொண்ட மழவரைப் புறங்காட்டி ஓடச்செய்தவன். அறுத்துத் திருத்தய தந்தங்களைக் கொண்ட களிறுகளைக் கொண்ட அவனது பொதினி மலையிலிருந்து தோல்துன்னும் சிறுதொழில் செய்வோனாகிய சாணைக்கல் இயற்றுவோன் அரக்கோடு சேர்த்துச் செய்த சாணைக்கல்லைப் போல நின்னைப்பிரியேன் என்று அன்று சொன்ன தலைவன் தான் சொன்ன சொல்லை மறந்துவிட்டான் என்று தலைவன் பொருட்பிரிவில் ஆற்றாளாகிய தலைவி தோழியிடம் கூறுகின்றாள். "காரோடன்' என்பவன் சாணைக்கல் செய்வோன் ஆவான்.

**கிணறு தோண்டுதல்**

குடவாயிற்கீரத்தனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைப் பாடலில் சங்ககாலத்தில் கிணறு தோண்டும் தொழில் நடைபெற்றமை கூறப்பெற்றுள்ளது.

*"தோட்பதன் அமைத்த கருங்கை ஆடவர்*
*கனைபொறி பிறப்ப நூறி வினைப்படர்ந்து*
*கல்லுறுத் தியற்றிய வல்லுவர்ப் படுவில்*
*பாருடை மருங்கின் ஊறல் மண்டிய*
*வன்புலம் துமியப் போகிக் கொங்கர்"* (அகம்.79:1–5)

வலிமைமிக்க கையினைக் கொண்ட ஆடவர்கள் தம் தோள்களின் சோற்று முடிச்சு தொங்க, கிணறு வெட்டும் தொழிலில் ஈடுபட்டனர். அவர்கள் தீப்பொறி பறக்கப் பாறைகளை வெட்டி மிக்க உவரைக் கொண்ட கிணற்றைத் தோண்டினர். கிணறு வெட்டும் ஆடவர்கள் பகல் உணவிற்காகத் தோள்களில் தொங்கவிட்டிருக்கும் கட்டுச்சோற்று முடிச்சே 'தோட்பதம்' ஆகும். பாலைநிலம் வன்மைமிக்க நிலமாதலின் இப்பாடலில் அது 'வன்புலம்' எனக் குறிக்கப் பெற்றுள்ளது. 'உவர்ப்படு' என்பது உவர்நீரைக் கொண்ட கிணற்றைக் குறிக்கும்.

**ஆடை வெளுத்தல்**

மகட்போக்கிய செவிலித்தாய் வருந்திக் கூறுவதாக மதுரைக்காஞ்சிப் புலவர் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில்

ஆடைகளை வெளுப்பதற்குக் காழியராகிய வண்ணார் உவர் மண் எடுக்கும் தொழில் சார்ந்த செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“சிள்வீடு கறங்கும் சிறியிலை வேலத்*
*தூழுறு விளைநெற் றுதிரக் காழியர்*
*கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழியக்*
*களரி பரந்த கல்நெடு மருங்கின்”* *(அகம்.89:6–9)*

பாலை வழியில் சிறிய இலைகளை உடைய வேலமரத்தின் முற்றி விளைந்த நெற்றுக்கள் எங்கும் உதிர்ந்து கிடக்கின்றன. அம்மரத்தில் காணப்படும் சிள்வீடு என்னும் வண்டுகள் ஒலிக்கும் ஆரவாரம் மிக்க நிலப்பரப்பினைக் கொண்டதும், வண்ணார்கள் ஆடைகளை வெளுப்பதற்கு எடுக்கும் உவர்மண் ஒழியக் களர்நிலம் விரிந்து கிடப்பதுமான கற்களைக் கொண்ட பாலைவழி என்கின்றாள் இப்பாடலில் குறித்த செவிலித்தாய், இதனால் ஆடைவெளுக்கும் தொழிலைச் செய்யும் காழியர் என்னும் வண்ணார்களுக்குப் பாலைநிலத்தின் உவர்மண் பயன்படும் செய்தியை அறியலாம்.

உவர் மண்ணைச் சுமந்ததால் தேய்ந்துபோன ஊன் பொருந்திய தலைகளைக் கொண்ட சிறுவர்களுடன் கூர்மையான நகத்தினையும், கஞ்சிப்பசையுடன் கூடிய விரல்களையும் உடைய வண்ணாத்தி (புலைத்தி) நீண்ட நேரம் கஞ்சி ஊட்டிய அழகிய ஆடை விளங்குகின்ற பொன்வடம் அணிந்த அல்குல் இடத்துத் தேமல் அழிந்து காணப்படும் நிலையை மதுரை மருதன் இளநாகனார் என்னும் சங்கப்புலவர் தான் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் சுட்டிக்காட்டியுள்ளார்.

*“உவருணப் பறைந்த ஊன்றலைச் சிறாஅரொடு*
*அவ்வரிக் கொன்ற கறைசேர் வள்ளுகிர்ப்*
*பசைவிரற் புலைத்தி நெடிதுபிசைந் தூட்டிய*
*பூந்துகில் இமைக்கும் பொலன்காழ் அல்குல்”* *(அகம்.3874–7)*

**‘பூ’ விற்றல்**

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள நற்றிணையில் அமைந்த பாலைத் திணைப் பாடலில் பாதிரிப்பூக்களை விற்கும் பெண்ணின் தொழில் கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

*“ஓவ மாக்கள் ஒள்ளரக்கு ஊட்டிய*
*துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி*

*வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்*
*புதுமலர் தெருவுதொறு நுவலும்”* *(நற்.118:7–10)*

தொழில் திறமைமிக்க ஓவியர் ஒளி பொருந்திய அரக்கினில் தோய்த்த எழுதுகோல் போன்றுள்ள தலையில் நுண்ணிய பஞ்சினைக் கொண்ட பாதிரிப்பூக்கள் மலர்ந்தன. அப்பாதிரியின் வெண்மையான இதழ்களைக் கொண்ட புதிய மலர்களை வண்டுகள் மொய்க்குமாறு சுமந்து சென்று பூவிற்கும் பெண் தெருக்கள்தோறும் விலைகூறி விற்றாள் என்று பருவம் கண்டு ஆற்றாளாகிய தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

மாமூலனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் எயினர் பெண்கள் இருப்பைப் பூவைத் தெருக்களில் விலைகூறி விற்கும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“நீடுநிலை அரைய செங்குழை இருப்பைக்*
*கோடுகடைந் தன்ன கொள்ளை வான்பூ*
*ஆடுபரந் தன்ன ஈனல் எண்கின்*
*சேடுசினை யுரீஇ உண்ட மிச்சில்*
*பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்*
*கண்டிரள் நீளமைக் கடிப்பிற் றொகுத்துக்*
*குன்றாகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகுஞ்*
*சீறூர் நாடு பல பிறக் கொழியச்”* *(அகம்.331:1–8)*

நீண்ட அடிமரத்தினையும் சிவந்த தளிர்களையும் கொண்ட இருப்பை மரங்களின் பூக்கள், யானையின் தந்தத்தினைக் கடைந்தது போல வெண்மையாகக் காணப்பெறும். இருப்பைப் பூக்களை ஆடுகள் பரந்து சென்றாற் போன்ற குட்டிகளைக் கொண்ட கரடிக் கூட்டம் இருப்பை மரத்தின் கிளைகளில் ஏறி அவற்றைப் பறித்துத் தின்னும். அவை உண்டதுபோக எஞ்சிய இருப்பைப் பூக்களைத் தழையாடை அணிந்த எயினர் பெண்கள், கணுக்கள் திரண்ட நீண்ட மூங்கில் குழாய்களில் இருப்பைப்பூக்களை அடைத்துக் குன்றின்கண் உள்ள சிற்றூர்களின் தெருக்களில் சுற்றிச் சுழன்று விலை கூறி விற்பர் எனத் தலைவனின் பொருட்பிரிவில் தலைவிக்குத் தோழி கூறுகின்றாள்.

**‘கள்’ விற்றல்**

தலைவனின் பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைவி கூறுவதாக வேம்பாற்றூர்க் குமரனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றுப்

பாலைத்திணைப் பாடலில் சங்ககாலப் பெண்கள் கள் விற்றது பற்றிக் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

***"அரியற் பெண்டிர் அல்கிற் கொண்ட***
***பகுவாய்ப் பாளைக் குவிமுலை கரந்த***
***அரிநிறக் கலுழி ஆரமாந்திச்***
***செருவேட்டுச் சிலைக்கும் செங்கண் ஆடவர்" (அகம்.157:1–4)***

இப்பாடலடிகளில் 'அரியல்' என்பது கள்ளைக் குறிக்கும். 'அரியல் பெண்டிர்' என்பது கள்விற்கும் பெண்களைக் குறிக்கும். 'பாளை' என்பது தென்னை, பனை மரங்களின் பூக்களை மூடிய மடலைக் குறிக்கும். கள்விற்கும் பெண்கள் தாம் தங்கிய மனையிடத்துக் கொண்ட அகன்ற வாயை உடைய பாளையின் குவிந்த முனை சொரிந்த பன்னாடையால் அரிக்கப்பெற்ற நல்ல நிறமுடைய கள்ளின் வண்டலைப் போரை விரும்பி ஆரவாரம் செய்யும் சிவந்த கண்களைக் கொண்ட வீரர்கள் விரும்பி நிறையக் குடித்தனர் எனக் கூறப்பட்டுள்ளது.

**ஓவியம் வரையல்**

எயினந்தை மகன் இளங்கீரனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் பொருள்வயிற் பிரிவைக் கருதிய தலைவன் அதைத் தலைவியிடம் சொல்வதற்காக அவள் அருகில் செல்கின்றான். அவனது பிரிவைக் குறிப்பால் உணர்ந்த தலைவி வருந்தி அவன்மீது சாய்ந்து கலங்குகின்றாள். தலைவியின் வருத்தத்தை உணர்ந்த தலைவன் பொருட்செலவினைத் தவிர்த்துத் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்த இப்பாடலில் உவமை வாயிலாக ஓவியத்தொழில் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

***"வினவலும் தகைத்தலும் செல்லா ளாகி***
***வெறிகமழ் துறுமுடி தயங்க நல்வினைப்***
***பொறியழி பாவையிற் கலங்கி நெடிதுநினைந்து***
***ஆகம்அடைதந் தோளே அதுகண்டு" (நற்.308:5–8)***

நறுமணம் வீசும் நெருங்கிய குழல்முடித்த கொண்டையுடன் விளங்கும் தலைவி, சிறந்த சித்திரத்தொழில் அமைந்த பாவையொன்று இயந்திரம் அற்றுக் கீழே விழுந்தாற் போலக் கலங்கி நெடும்பொழுது நினைத்து நின்று தலைவன் மார்பில் சாய்ந்து விழுந்தாள் எனக் கூறப்பட்டுள்ளது.

**கிணறு தோண்டுதல்**

*சங்க காலத்தில் கோவலர்களாகிய ஆயர்கள் தங்களுடைய பசுக்கூட்டம் நீர் குடிப்பதற்காக, விளைச்சல் இன்றி விடப்பட்ட தரிசு நிலங்களின் பாறைக்கற்களை உடைத்து நீர்பிலிற்றும் ஊற்றுக் கண்களைக் கொண்ட கிணறுகளைத் தோண்டியுள்ளனர். நீர் வேட்கையுடைய கன்றினைக் கொண்ட கரிய பிடியானைகள் தம் களிற்று யானைகளுடன் கூடி அக் கிணற்றினைத் தடவிப் பார்த்தன. இதனைக் கயமனார் என்னும் சங்கப்புலவர் பாடிய அகநானூற்றில் அமைந்த பாலைத்திணைப் பாடலில் சுட்டிக்காட்டியுள்ளார். அப்பாடலடிகள் வருமாறு:*

***"படுமணி இனநிரை உணீஇய கோவலர்***
***விடுநிலம் உடைத்த கலுழ் கட் கூவல்***
***கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்" (அகம்.321:7–9)***

**செம்பினால் பானை செய்தல்**

*தனிமகனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் கம்மியர் செம்பினால் பானை செய்யும் தொழில் உவமை வாயிலாகக் கூறப்பெற்றுள்ளது.*

***"குணகடல் முகந்து குடக்கேர்பு இருளி***
***மண்திணி ஞாலம் விளங்க கம்மியர்***
***செம்புசொரி பானையின் மின்னிளவ் வாயும்***
***தன்தொழில் வாய்த்த இன்குரல் எழிலி" (நற்.153:1–4)***

*கீழைக் கடலில் நீரை முகந்துசென்று மேலே இயங்கும் மேகம் எங்கும் இருள் பரவுமாறு இருண்டு மண் செறிந்த உலகம் செழித்து வாழுமாறு கம்மியர் செம்பினால் செய்த பானையைக் கடைந்ததைப் போன்று மின்னி எங்கும் இடி முழங்குதலாகிய குரலோடு மழையைப் பெய்து முடித்துத் தெற்குத் திசையை நோக்கிச் செல்லும் எனக் கூறப்பட்டுள்ளது.*

**தூதுத் தொழில்**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் சங்கப்புலவர் பாடிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் பார்ப்பான் தூது செல்லும் தொழில் கூறப்பெற்றுள்ளது.*

***"…. …. …. …. றுமணர்***
***கணநிரை யன்ன பல்கால் குறும்பொறைத்***

*தூதொய் பார்ப்பான் மடிவெள் ளோலைப்*
*படையுடைக் கையர் வருதொடர் நோக்கி*
*உண்ணா மருங்குல் இன்னோன் கையது*
*பொன்னா குதலும் உண்டெனக் கொன்னே*
*தடிந்துடன் வீழ்த்த கடுங்கண் மழவர்" (அகம்.337:5–11)*

உப்பு வணிகரது கழுதைக்கூட்டம் போன்ற குறும்பாறைகளைக் கொண்ட பாலை வழியில் பலமுறை தூது செல்லும் பார்ப்பான் (அந்தணன்) ஒருவன் தன் கையில் வெண்ணிற ஓலைச் சுருளுடன் வந்தான். அவனைக் கண்ட ஆறலைக் கள்வர்கள் அவன் கையில் இருப்பது பொன்னாகவும் இருக்கலாம் எனக் கருதி அவனை அவ்விடத்திலேயே கொன்றுபோட்டனர். அப் பார்ப்பான் வறுமை காரணமாக உண்ணாமல் வாடிய விலாவினையும், உடுத்தியிருந்த கிழிந்த ஆடையினையும் கண்டு, குருதி படிந்த அம்பினை உடைய ஆறலைக் கள்வர்கள் அவன் கையில் இருப்பது பொன்கானம் இல்லை என்பதை அறிந்து தன் செயல் பயனற்றுப் போனமைக்குக் கையை நொடித்து அவ்விடத்தைவிட்டு அகன்றனர்.

**பாலைநிலக் கள்வர்**

பாலைத்திணைப் பாடல்களில் பாலைநிலத்தின் கொடுமையும், கள்வர்களின் வழிப்பறி, கொள்ளையடித்தல், கொலை முதலான தொழில்களுமே மிகுதியும் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளன. ஏவின தொழிலைச் செய்யும் மறவர்கள் தாம் குறித்த இலக்குத் தவறுமானால் அம்பினைத் தொடுத்த தம் கைவிரலைக் கடித்துக் கொள்ளும் பழக்கவழக்க முடையவர்கள். அம்மறவர்கள் வில்லைக் கையிலேந்திய மாறாத வீரத்தையும் உலைக்களத்தில் நன்கு திருத்தமாகச் செய்யப்பட்ட அம்பினையும் கொண்டவர்கள்; அவர்கள் பாலை நிலத்தில் செல்லும் வழிப்போக்கரைக் கொன்று பிணங்களைக் கற்களைக் கொண்டு மூடிவைப்பர். கண்டார்க்கு அச்சத்தைத் தரும் அக் கற்குவியல்களில் கூர்மையான அலகினைக் கொண்ட சிவந்த வாயினையுடைய ஆண் பருந்துகள் ஒன்றாகக் கூடி இறந்துபட்ட பிணங்களின் பசிய தலைகளைப் பெயர்த்தெடுத்து அவற்றின் தலையிலுள்ள கண்களைப் பெயர்த்தெடுத்துத் தம் பெண் பருந்துகளுக்கு உணவாகக் கொடுக்கும் என பாலைநிலத்தின் கொடுமை கூறப்பெற்றுள்ளது.

*"கடுத்தது பிழைக்குவ தாயின் தொடுத்த*
*கைவிரல் கவ்வுங் கல்லாக் காட்சிக்*
*கொடுமரம் பிடித்த கோடா வன்கண்*

*வடிநவில் அம்பின் ஏவல் லாடவர்*
*ஆளழித் துயர்ந்த அஞ்சுவரு பதுக்கைக்*
*கூர்நுதிச் செவ்வாய் எருவைச் சேவல்*
*படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ*
*மல்லல் மொசிவிரல் ஒற்றி மணிகொண்டு*
*வல்வாய்ப் பேடைக்குச் சொரியும் ஆங்கண்" (அகம்.215:7–15)*

இப்பாடல்வரிகள் பாலைநிலத்தின் கொடுமையை யதார்த்தமாகவும் அப்பட்டமாகவும் காட்சிப்படுத்தியுள்ளன. இதுவே சங்க காலத்தின் உண்மையான சமூகப் பின்புலமாகும். ஆறலைக் கள்வர் பாலைச்சுரத்தின் வழிச்செல்வோரைக் கொன்று குவிக்கும் கொலைத் தொழில் நற்றிணையின் பாலைத்திணைப் பாடலில் பின்வருமாறு கூறப்பெற்றுள்ளது.

*"செங்கோல் வாளிக் கொடுவில் ஆடவர்*
*வம்ப மாக்கள் உயிர்த்திறம் பெயர்த்தென" (நற்.164:6–7)*

ஆறலைக் கள்வராகிய பாலை நிலத்தின் மறவர்கள் வளையாத கோலின் வடிவமாகிய அம்பினால் வளைந்த வில்லைக் கொண்டு பாலை வழியில் செல்லும் ஏதிலாளரைக் கொன்று அவர்தம் உயிரைப் போக்குவர். இது ஆறலைக் கள்வரின் இயல்பான தொழிலாகும்.

உருத்திரன் என்பார் குறுந்தொகையில் இயற்றியுள்ள பாலைத்திணைப் பாடலில் ஆறலைக் கள்வர்தம் தொழிலும், பாலைநிலத்தின் இன்னாமையும் பின்வருமாறு கூறப்பெற்றுள்ளன.

*"புறவுப் புறத்தன்ன புன்கால் உகாஅய்க்*
*காச்சினை அன்ன நளிகனி உதிர*
*விடுகணை வில்லொடு பற்றி கோடுஇவர்பு*
*வருநர்ப் பார்க்கும் வன்கண் ஆடவர்*
*நீர்நசை வேட்கையின் நார்மென்று தணியும்*
*இன்னாக் கானமும் இனிய பொன்னொடு" (குறுந்.274:1–6)*

வன்கண்மையுடைய ஆறலைக் கள்வர்கள் அவ்வழி வருவோரைக் கொன்று அவர்தம் உடைமைகளை வெளவுவதற்காக மரங்களின் மேல் அமர்ந்து நாண் பூட்டி அம்பு செறிந்த வில்லுடன் காத்திருப்பர். அவர்கள் அம்பினை எய்யும் அதிர்வினால் உகாய் மரத்தின் பழங்கள் உதிரும். பாலையின் நீரற்ற அருவழிகளில் மரத்தின் பட்டையை மென்று சுவைத்து நீர் வேட்கையைத்

தணித்துக்கொள்வது ஆறலைக் கள்வர்க்கும் பாலைவழிப் போக்கர்களுக்கும் பொதுவான இயல்பாகும்.

**ஓரேர் உழவன் தொழில்**

ஓரேருழவனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள குறுந்தொகையின் பாலைத்திணைப் பாடலில் ஓரேர் உழவனின் தொழில் ஆர்வமும், உழவுத் தொழிலில் உள்ள தொழில் துயரமும், உழவனின் வறுமை வாழ்க்கையும் பொருத்தமான உவமையால் விளக்கப்பெற்றுள்ளன.

*"ஈரம்பட்ட செவ்விப் பைம்புனத்து*
*ஓரேர் உழவன் போல*
*பெருவி துப்பு உற்றன்றால் நோகோ யானே" (குறுந்.131:4–6)*

'புனம்' என்பது புன்செய் நிலத்தைக் குறிக்கும். புனத்தில் மழையை நம்பியே வேளாண்மைத் தொழிலைச் செய்ய இயலும். புனத்தில் மழை பெய்த ஈரம் காய்வதற்குள் உழுது பயன்கொள்ள வேண்டும். ஆதலால் ஓரேர் உழவன் ஆர்வத்துடன் மழை பெய்த ஈரம் காய்வதற்குள் அந்நிலத்தை உழுவதற்கு விரைவான். ஓரேர், அதனால் உழப்படும் நிலமாகிய புனம், உழுவதற்கேற்ற பருவமாகிய (செவ்வி) மழை, நிலத்தை உடைய உழவனின் ஆர்வம், அவனுடைய முயற்சி ஆகியனவற்றைச் சிறப்பித்துக் கூறியமையால் இப்பாடலாசிரியர் ஓரேருழுவனார் என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றுள்ளார். சங்ககாலத்தில் ஓரேர் உழவனின் தொழிலும் வாழ்க்கையும் வறுமைக்கு ஆட்பட்டதாகவே இருந்ததை இப்பாடலால் அறியமுடிகின்றது.

**மருத்துவம்**

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் பொருள்வயிற் பிரிவை மேற்கொண்ட தலைவனின் செயலைத் தடுத்ததாகத் தோழி தலைவியிடம் கூறும் பாடலில் உவமை வாயிலாக அக்காலத்தில் மருத்துவத் தொழிலும் சிறந்து விளங்கியமை கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*"பொருந்தி, யான்தான் வேட்ட பொருள்வயின் நினைந்தசொல்*
*திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய*
*மருந்துபோல் மருந்தாகி மனன்உவப்பப்*
*பெரும்பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே" (கலி.17:18–21)*

தோழி தலைவியிடம் யான் தலைவன் விரும்பிய பொருளார்வத்தினால் விளையும் கேடுகளைப் பொருத்தமாகவும் அவன் ஏற்குமாறும் எடுத்துக் கூறினேன். அவற்றைத் தலைவன் கூர்மையாகக் கேட்டனன். நல்வினையால் மருத்துவன் திருந்திய யாக்கையினுள் செலுத்திய மருந்தினைப் போல என்சொல் அவன் மனமாசு போக்கும் மருந்தாயிற்று. ஆதலால் தலைவன் பொருள்வயிற் பிரிவைத் தவிர்த்தான் என்று தோழி தலைவியிடம் உவமை கூறுவதிலிருந்து அக்காலத்தில் மருத்துவத் தொழிலும் சிறந்திருந்ததை அறியலாம்.

**தொகுப்புரை**

❖ பொதுவாக வளம் இழந்து வறண்டு கிடக்கும் பாலைநிலத்தைப் 'புன்நிலம்' என்றே சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இத்தகைய பாலைநிலத்தில் வாழும் மக்கள் 'மறவர்' என்றும், 'எயினர்' என்றும் அழைக்கப்படுகின்றனர்.

❖ கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழில் மறவர்தம் தொழில் பாலை நிலத்தின் வழிச் செல்வோரைத் துன்புறுத்தி அவர்தம் பொருட்களை வழிப்பறி செய்தலாகும். கொள்ளையடிப்பதும் இவர்தம் முக்கியத் தொழிலாகும். இதனால்தான் பாலைப் பாடல்கள் மறவர்களை 'ஆறலைக் கள்வர்' எனக் குறிப்பிடுகின்றன. இம்மறவர்கள் பன்றி, முயல் முதலானவற்றை வேட்டையாடுவதையும் தம் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

❖ ஆநிரைகளைக் கவர்வதும் ஆறலைக் கள்வர்களாகிய மறவர்களின் முக்கியத் தொழிலாகும். மறவர்களாகிய எயினர்களின் பெண்களாகிய எயிற்றியர் கரம்புகளில் எறும்புகள் சேர்த்து வைத்திருக்கும் புல்லரிசியைச் சேகரிப்பதையும் தம் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

❖ பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் உவமை வாயிலாகச் சங்ககாலத்தில் கடல் வாணிகம் நடைபெற்ற செய்தி கூறப்பெற்றுள்ளது. வாணிகத்திற்காகப் பாலை வழியில் இடம்பெயர்ந்து செல்லும் வாணிகர்களுடன் ஆறலைக் கள்வர் போரிட்டு அவர்தம் பொருட்களைக் கொள்ளையடித்தனர். சங்ககாலத்தில் வாணிகச்சாத்தர் பாலை வழியில் வாணிகத்திற்காகப் பயணம் மேற்கொண்டனர்.

❖ கடலில் விளைந்த உப்பினைப் பிற நிலங்களில் வாழும் மக்களுக்கு விலைகூறி விற்பனை செய்வதற்காக உமணர் கூட்டம் பாலைநிலத்தின் வழியே சென்றன. உப்பு வாணிகர் தம் வாணிகத் தொழிலுக்குக்

*கழுதைகளைப் பயன்படுத்தினர். சங்க காலத்தில் பண்டமாற்று வாணிகம் நடைபெற்றுள்ளது. கள்ளிற்கு விலையாகக் களிற்றின் கன்றுகள் கொடுக்கப்பட்டன.*

- *சங்க காலத்தில் யவனர் என்னும் சோனவர் இனத்தவர் எகிப்து, கிரேக்கம் முதலிய நாடுகளிலிருந்து வாணிகத்திற்காக வந்து சேரநாட்டின் முசிறியில் பொன்னை விலையாகக் கொடுத்துவிட்டு மிளகை ஏற்றிச் சென்றுள்ளனர்.*
- *பாலைத்திணைப் பாடல்களில் மறவரின் வழிப்பறிக் கொள்ளை, அவர்களது கொடுந்தொழிலாகிய கொலைத்தொழில், கொடுவில் எயினரின் கொலைத்தொழில் (ஐங்.311), வில்லேர் உழவராகிய ஆறலைக் கள்வரின் வழிப்பறி மற்றும் கொலைத்தொழில், எயினர்கள் வாணிகர் கூட்டத்தைக் கொள்ளையடித்தல், மறவர்களின் வேட்டைத் தொழில், உழவுத்தொழில், முத்தெடுக்கும் தொழில், சாணைக்கல் செய்யும் தொழில், கிணறு தோண்டும் தொழில், ஆடை வெளுக்கும் தொழில், பூவிற்கும் தொழில், கள் விற்கும் பெண்கள் தொழில், ஓவியத்தொழில், செம்பினால் பானை செய்யும் தொழில், தூதுத்தொழல், ஓரேர் உழவன் தொழில், மருத்துவத் தொழில் முதலான பாலைநில மக்களின் தொழில்கள் பரவலாகச் சுட்டிக் காட்டப்பெற்றுள்ளன.*

# குறிப்புக்கள்

1. மு.சண்முகம்பிள்ளை, சங்கத்தமிழர் வாழ்வியல், ப.65
2. பெரும்பாண்.116–117
3. பெரும்பாண்:83–88
4. பெரும்பாண்.118–22.
5. மதுரைக்.265
6. பெரும்பாண்.106–116.
7. பெரும்பாண்.39–41
8. பெரும்பாண்.96–105.
9. பெரும்பாண்.130–133.
10. மதுரைக்.620–622.
11. பட்டினப்.125–126.
12. மதுரைக்.661–662.
13. பட்டினப்.194–212.
14. பரி.1:22–25.

# இயல் : 5

# நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும்

**முன்னுரை**

*பாலைநில மக்கள் வறட்சியான வன்புலமாகிய பாலைநிலம் சார்ந்து தம் வாழ்க்கைத் தொழில்களை அமைத்துக்கொண்டு அதற்கேற்றவாறு எளிமையான வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். எயினரும் மறவருமாகிய அப்பாலை நிலமக்கள் தங்களுக்கென்று சில தனித்த நம்பிக்கைகளையும் பழக்க வழக்கங்களையும் கொண்டிருந்தனர் என்பதற்குச் சங்க இலக்கியத்தில் பாலைத்திணைப் பாடல்களில் மிகுதியான சான்றுகள் கிடைக்கின்றன. 'பாலைநில மக்களின் நம்பிக்கைகள், நிமித்தங்கள், பழக்கவழக்கங்கள்' என்னும் இவ் இயலில் பாலைநில மக்களின் நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும் சங்ககாலச் சமூகப் பண்பாட்டியல் பார்வையில் ஆராய்ந்து விளக்கப்படுகின்றன.*

**நம்பிக்கைகள்**

*ஒரு சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்கவல்லன அச்சமுதாயத்தின் நம்பிக்கைகளேயாகும். நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் பின்பற்றப்படுவன. அந்நம்பிக்கைகள் சமூகத் தேவைகள் மற்றும் குறிக்கோள்களின் அடிப்படையில் தோன்றியன. மனிதனின் தன்னலமும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன. நம்பிக்கைகள் மனிதர்களின் அச்ச உணர்வில் தோன்றியன. அவை காலங்காலமாகத் தொடர்ந்து மரபு வழியே தலைமுறை தலைமுறையாக மக்களால் பின்பற்றப்பட்டு வருகின்றன. இயற்கையின் புதிரான செயல்களை உணர இயலாதபோதும், மனித வாழ்வின் துன்பங்களுக்குக் காரணம் கற்பிக்க இயலாத நிலையிலும், மனிதமனம் சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கின்றது. அவையே நம்பிக்கைகளாக வடிவம் பெறுகின்றன.*

**நம்பிக்கைகளின் தோற்றம்**

*மனித மனத்தின் விழைவால் நம்பிக்கை தோன்றுகின்றது. இயற்கையால் படைக்கப்பட்டுள்ள பொருட்களுக்கும் மனிதனின் செயல்களுக்கும் தொடர்புண்டு என்னும் கருத்தோற்றத்தின் அடிப்படையில் நம்பிக்கைகள் தோன்றின. 'அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும்*

இயற்கையின் செயற்பாடுகளையும் தமது வாழ்வியல் நடப்புக்களோடு இயைத்துப் பார்த்த நிலையில் நம்பிக்கைகள் தோன்றின. அத்துடன் நன்மையே விளைய வேண்டுமென்ற மனிதனின் விருப்பவாவும் இணைந்துகொண்ட நிலையில் நம்பிக்கைகளின் எல்லையும் விரிந்தன. இவ் நம்பிக்கைகள் மனித சமுதாயத்தில் காலங்காலமாக நிலைகொள்வதற்கு மரபே முக்கியக் காரணமாகும். தீமைகளிலிருந்து தம்மைப் பாதுகாத்துக்கொள்ள முயலும் தற்காப்பு முயற்சியும், நன்மையே வேண்டுமென்ற விருப்பவாவும் நம்பிக்கைகளை நிலைநிறுத்துகின்றன. மனிதனின் நலவுணர்வு காரணகாரியத்தைக் காண்பதில்லை. ஆதலால் மனித மனம் நம்பிக்கைகளை ஏற்கின்றது. பொதுவாக நம்பிக்கைகள் உள உருவாக்கம்[1] என்பர்.

தீமைகளிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும், நன்மைகளையே எதிர்பார்த்தும் மனத்தின் இயல்பு என்ற நிலையில் மனித மனம் சில கற்பிதங்களை ஏற்படுத்திக்கொண்டு செயலில் முனைந்து ஈடுபாடு கொள்கின்றது. அச்செயல்களில் வெற்றி கிடைத்தால் நன்மையாகவும், தோல்வி கிடைத்தால் தீமையாகவும் கருதி நிமித்தங்களையும் நிமித்தக் கூறுகளையும் கற்பித்து நம்பிக்கைகளை உருவாக்கிக் கொள்கின்றது. இந்நம்பிக்கைகள் மக்களிடையே செவிவழியாகவும் இயற்கையாகவும் பரவும்போது நன்மையை எதிர்நோக்கும் மனித உள்ளம் சோதனைக்கு ஆட்படாமல் அதனை ஏற்கின்றது. பின்னர் சமுதாயச் செல்வாக்கைப் பெற்றுக் காலப்போக்கில் அவை மக்கள் நம்பிக்கைகளாக நிலைத்த வாழ்வினைப் பெறுகின்றன. எனவே நம்பிக்கைகளை உள உருவாக்கம் என உளவியலார் விளக்குவது பொருத்தமாகின்றது. மக்களால் உருவாக்கப்பட்ட நம்பிக்கைகள் வழக்கில் மிகுதியாகவும் இலக்கியங்களில் குறைந்தும் காணப்படுகின்றன. இலக்கியங்களில் இடம்பெறும் நம்பிக்கைகள் பெரும்பாலும் அன்றைய மக்களிடையே சமுதாயச் செல்வாக்குப் பெற்ற குறிப்பிடத்தக்க நம்பிக்கைகளாக மட்டுமே இருக்க இயலும். ஒரு சமுதாயத்தின் நம்பிக்கைகளைக் கொண்டு அச்சமுதாயத்தின் அறிவுத்திறனை அளவிட இயலும். சிந்தனைத் திறன்மிக்க சமுதாயத்தில் நம்பிக்கைகள் குறைவாகவும், சிந்தனைத்திறன் குறைந்த சமுதாயத்தில் மூடநம்பிக்கைகள் மிகுதியாகவும் காணப்படுவது இயல்பாகும். இதனை நகர் மற்றும் கிராமப்புற மக்களின் வாழ்வியல் நம்பிக்கைகளைக் கொண்டு அறியலாம்.

மரபுவழியில் தலைமுறை தலைமுறையாகப் பரப்பப்படும் நம்பிக்கைகள் முன்னோர்களின் வாழ்வியல் நெறிகளை நினைவுபடுத்துகின்றன. மக்கள் பிறப்பு முதல் இறப்பு வரையில் பலவிதமான நம்பிக்கைகளைக் கொண்டிருக்கின்றனர்.

இந்நம்பிக்கைகளே மக்கள் வாழ்க்கையை இயக்குகின்றன. 'ஒரு வளர்ச்சியடைந்த மனிதனிடம் பத்தாயிரக் கணக்கான நம்பிக்கைகளும் நூற்றுக்கணக்கான வழக்கங்களும், எண்ணிக்கைக்குட்பட்ட சில குறிக்கோள்களும் இருப்பதாகச் சமூக அறவியல் கலைக்களஞ்சியம்'[2] குறிப்பிடுகின்றது. இலக்கியத்தில் இடம்பெறும் நிமித்தங்களும் நம்பிக்கைகளும் பொதுவாக மனிதமனம் கிளர்ச்சிக்கு உள்ளாக்கப்பட்டுள்ள தடுமாற்ற நிலைகளிலும் நன்மையே வேண்டுமென்ற விருப்பத்தின் காரணமாகத் தோன்றியவைகளாகும். இதனைத் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை, அவள் நன்நிமித்தங்களை எதிர்நோக்கிக் காத்திருத்தல் ஆகியவற்றால் அறியலாம்.

நம்பிக்கைகள் காரணகாரியத் தொடர்புக்கு உட்பட்டவை. காரணகாரியத் தொடர்புகட்கு உட்படுத்திச் சான்றுகளின் வாயிலாக நிறுவ முடிவதை நம்பிக்கை என்றும், சான்றுகளின் அடிப்படையிலும் காரண காரியத் தொடர்பின் வாயிலாகவும் விளக்க இயலாதனவற்றை மூடநம்பிக்கை [3] என்றும் வகைப்படுத்துவர். ஒரு சமுதாயத்தின் நம்பிக்கை, மற்றொரு சமுதாயத்தில் கணிப்பில் மூடநம்பிக்கையாகலாம். அதேபோல் ஒரு சமுதாயத்தின் மூடநம்பிக்கை மற்றொரு சமுதாயத்தின் பார்வையில் நம்பிக்கையாகலாம். ஆதலால் நம்பிக்கைகளை காரணகாரியத் தொடர்போடு நிறுவப்படுவன, நிறுவப்படாதன எனப் பகுத்துக் காண்பதே சிறப்பாகும். அறிவு வளர்ச்சியினால் அன்றைய சமூகத்தின் பெரும்பாலான நம்பிக்கைகள் இன்று மூடநம்பிக்கைகளாகக் கருதப்படுகின்றன. ஆய்வறிஞர் க.கைலாசபதி நம்பிக்கைகளுக்குக் காரணம் காணுதல் இலகுவன்று என்னும் கருத்தை [4] முன் வைத்துள்ளார். அவரது கூற்றிற்கேற்ப இன்று மனித சமுதாயத்தில் வழக்கிலிருக்கும் பெரும்பாலான நம்பிக்கைகளுக்குக் காரணம் காட்ட இயலவில்லை. ஆயினும் இன்றைய மனித சமுதாய வாழ்க்கை நம்பிக்கை வயப்பட்டுச் செயல்படுவதையே நடைமுறையில் காணலாம்.

உளவியலார், மூடநம்பிக்கைகளை மனிதனது மனநலத்திற்கும் சமுதாயத்தின் கட்டுக்கோப்பிற்கும் இன்றியமையாத ஒன்றாகக் கருதுவர் [5] மூடநம்பிக்கை பெரும்பாலும் மக்களின் அறிவுவளர்ச்சி நிலையினைக் கொண்டே அமையும். அது மக்களின் அறியாமையின் அளவினையும் வெளிப்படுத்தும். சிந்தனைத் திறனற்ற மக்கள் மூடநம்பிக்கைகளையே நம்பிக்கைகளாகக் கருதுகின்றனர். எனினும் சிந்தனைத் திறனுள்ள மக்களிடமும் பல மூடநம்பிக்கைகள் காணப்படுகின்றன. இம்மூடநம்பிக்கைகள் காலம், இடம், மக்களின்

மனப்பாங்கிற்கேற்ப மாறக்கூடியன. ஆதலால் இதுதான் மூடநம்பிக்கை என வரையறுத்துக் கூறுவதிலும் சிக்கல்கள் உள்ளன. அது மக்களுடைய அறிவு வளர்ச்சிக்கும் சிந்தனைத் திறனுக்கும் ஏற்ப மாறக்கூடியது. ஒருவன் வாழும் சமுதாயத்தின் அறிவு வளர்ச்சிக்குப் பொருந்தாத பொருளற்ற நம்பிக்கைகளையும் சடங்குகளையுமே மூடநம்பிக்கை [6] எனக் குறிப்பிடுவர். இதனை ஏற்கும் வகையில் சமூகவியலார் காரணகாரியத் தொடர்பற்றிருக்கும் பொழுது பகுத்தறிவுக்குப் புறம்பான வகையில் ஒரு நடவடிக்கை நிகழும் என நம்புகின்ற தன்மையையே மூடநம்பிக்கை எனக் கொள்கின்றனர்.

நம்பிக்கைகளைத் தனிமனித நம்பிக்கைகள், சமுதாய நம்பிக்கைகள் எனப் பகுத்துக் காணலாம். எனினும் தனிமனித நம்பிக்கைகளே காலப்போக்கில் பலராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுச் சமுதாய நம்பிக்கைகள் ஆகின்றன. எனவே தனிமனித நம்பிக்கைகள் எனப் பகுப்பது பொருளற்றது. இனத்தை அடிப்படையாகக் கொண்ட மொழிவழிச் சமுதாயத்தின் பொது நம்பிக்கைகளைச் சமுதாய நம்பிக்கைகள் எனக் கருதிப் பகுத்து நோக்குவதே பொருத்தமாக அமைகின்றது.

ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் நம்பிக்கைகளைக் காண, சமுதாய நம்பிக்கைகளே ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. நம்பிக்கைகளின் நம்பகத்தன்மை, பயன்பாடு, தோற்ற வளர்ச்சி நிலைப்பாட்டு நிலைகளை ஆராய்ந்து உண்மைகளைக் காண மானிடவியல், சமுதாயவியல், உளவியல் மற்றும் அறிவியல் துறைகளின் சிந்தனைகள் பெரிதும் துணை செய்கின்றன.

**பாலைநில மக்களின் நம்பிக்கைகள்**

பாலைத்திணைப் பாடல்களில் வழிபடு தெய்வம், தெய்வ வழிபாடு, கடவுளுக்குப் பலியுணவு படைத்தல், இறைவனுக்கு நாட்பலி, வேப்பமரத்தில் உறையும் தெய்வத்திற்குப் பலியிடல், பலி வழிபாடு, கொற்றவைக்குப் பலிக்கடன், கானமர் செல்வியாகிய கொற்றவை வழிபாடு, அறக்கடவுள், கடல்நீரின் பரப்பில் தெய்வம் உறைதல், பாலைநிலத்தில் ஓமை மரத்தில் தெய்வம் உறைதல், தெய்வம் விரும்பி உறையும் சூர்புகல் அடுக்கமாகிய மலைப்பக்கம், சிவன் ஆலமுற்றத்தில் உறைதல் என்பன குறித்த இறைநம்பிக்கைகள் பரவலாகக் குறிக்கப்படுகின்றன.

பேய்கள் உணவு கொள்ளல்; ‘கழுது’ என்னும் பேய், பெண் பேய்மகளாகிய கழுது, அணங்கும் சுணங்கும், உருஇல் பேய், பேய்கள் கனவு காணல், பழூஉப்பல் பேய் என்பன குறித்த பேய் நம்பிக்கைகளும் பாலைத்திணைப் பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன.

*நல்வினை, தீவினை ஊழ், ஊழ் என்னும் பால், தொல்வினைப் பயன், நல்வினைப் பயன் என்பன குறித்த நம்பிக்கைகளும் பாலைத்திணைப் பாடல்களில் பரவலாகக் கூறப்பட்டுள்ளன.*

*கூற்றம், கூற்றுவன் என்னும் எமன் குறித்த நம்பிக்கைகளும் நரகம், பிறப்பு, மறுபிறப்பு, இம்மை, மறுமை, பழியஞ்சல், தவம், தவசியர், நிரையப் பெண்டிர் குறித்த நம்பிக்கைகளும் பாலைத்திணைப் பாடல்களில் குறிக்கப்பெற்றுள்ளன.*

*பொய்ச்சாட்சி கூறல், நல்லோர் பொய் கூறாமை, முன்னோர்க்குத் தென்புலக்கடன் செய்தல், நற்சொல் கேட்டல், வேள்விக் குண்டம் என்பன குறித்த நம்பிக்கைகளும், கனவு, வேங்கைமலர் கொய்யும் மகளிர் 'புலி புலி' எனக் கூச்சலிடுதல், காக்கை கரைதல் என்பன குறித்த நம்பிக்கைகளும் நிமித்தங்கள் குறித்த மக்கள் நம்பிக்கைகளும் பாலைத்திணைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன.*

**'வழிபடு தெய்வம்'**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய நற்றிணையின் பாலைத் திணைப் பாடலில் உடன்போக்கில் தலைவியை அழைத்துச் செல்லும் தலைவன் தலைவியிடம், ஆர்வமுடைய மக்கள் தம் வழிபடு தெய்வத்தைக் கண்டு வணங்கி வழிபட்டுத் தாம் விரும்பிய வரத்தைப் பெற்றதைப் போலத் தலைவன் தான் விரும்பிய தலைவியின் தோள்களைப் பெற்றதாகக் கூறுகின்றான்.*

***"அழிவில முயலு மார்வ மாக்கள்***
***வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்***
***கலமரல் வருத்தந் தீர யாழநின்***
***னலமன் பணைத்தோ ளெய்தின மாகலின்"*** ***(நற்.9:1–4)***

*இப்பாடலடிகளில் பாலைநில மக்களின் வழிபடுதெய்வம் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றிருப்பதை அறியலாம்.*

**'தெய்வ வழிபாடு'**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய பாலைக்கலிப் பாடலொன்றில் அக்கால மக்களின் தெய்வ வழிபாடு குறித்த நம்பிக்கை இடம்பெற்றுள்ளது. தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள்வயிற் பிரிவை மேற்கொண்டான். அவன் சென்ற பாலைச் சுரத்தின் கடுமையை நினைத்துத் தலைவி ஆற்றாதவள் ஆயினாள். தலைவனின் நலம் வேண்டித் தலைவி மழையையும் கனலினையும் காற்றினையும் வழிபட விரும்பினாள். அத்தலைவிக்குத் தோழி அவ்வாறு*

வழிபடுவது கற்புடையை பெண்ணிற்குப் பெருமை சேர்க்காது; தலைவனுக்கு அறக்கடவுளே துணையாக நின்று உதவும் என்கின்றாள். இப்பாடலில் பெண்ணின் கற்பின் பெருமையும் ஆற்றலும் சிறப்பித்துப் பேசப்பட்டுள்ளன.

***"செய்பொருட் சிறப்புஎண்ணிச் செல்வர் மாட், டினையன***
***தெய்வத்துத் திறன்நோக்கித் தெருமர றேமொழி!***
***வறனோடின் வையத்து வான்தருங் கற்பினாள்***
***நிறன்ஓடிப் பசப்பூர்த லுண்டெ'ன***
***அறனோடி விலங்கின்ற ராள்வினைத் திறத்தே" (கலி.16:17–22)***

இப்பாடலடிகளில் அக்கால மக்களின் தெய்வ வழிபாடு குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளன.

**பலி வழிபாடு**

'ஆலமரத்தில் கடவுள் உறையும்; அங்கு அக்கடவுளுக்குப் படைத்த பலியுணவினைக் காக்கைகள் உண்ணும்' என்னும் மக்கள் நம்பிக்கை கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் என்னும் சங்கப்புலவர் இயற்றிய நற்றிணைப் பாலைப்பாடலில் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

***".... .... ஆபுறந் தீண்டும்***
***நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து***
***உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை***
***புன்கண் அந்திக் கிளைவயிற் செறிப்" (நற்.343:3–6)***

சங்க இலக்கியத்தில் ஆலமரம் கடவுளோடு சேர்த்துப் பேசப்படுவதற்குச் சான்றுகள் பல உள்ளன. புறநானூற்றில்,

***"ஆலமர் கடவு ளன்னநின் செல்வம்" (புறம்.198:9)***

எனவும், சிறுபாணாற்றுப்படையில்,

***"ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுப்ப"*** [7]

எனவும், வரும் பாடலடிகளால் இதனை அறியலாம். காக்கை, கடவுளுக்குப் பலியாகப் படைக்கப்பட்ட உணவினை உண்ணுவதைப் பொருநராற்றுப்படை,

***".... .... .... .... செஞ்சோற்றுப்***
***பலிமாந்திய கருங்காக்கை"*** [8]

எனவும், குறுந்தொகை,

*"விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"* *(குறுந்.210:6)*

எனவும் குறிப்பிடுவதால் அறியமுடிகின்றது. ஆதலால் அக்கால மக்கள் ஆலமரத்தில் உறையும் கடவுளுக்குப் பலியாகப் படைப்பதை நம்பிக்கையாகக் கொண்டிருந்தனர் என்பதையும், அப்பலியுணர்வைக் காக்கைகள் உண்டன என்பதையும் அறியமுடிகின்றது.

குடவாயிற் கீரத்தனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் இறைவனுக்கு நாட்பலி இடுவதால் நன்மை விளையும் என்ற நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. இதனால் ஊரில் நல்ல மழை பெய்யும் என்பது மக்களது நம்பிக்கையாகும். சிற்றூர்களில் வாழும் மக்கள் வான் பொய்த்தமையால் நாள்தோறும் விடியற்காலையில் இறைவனுக்கு இடுகின்ற நாட்பலியை மறந்தனர். அதனால் இறைவனின் பலிபீடம் பொலிவின்றிப் பாழ்பட்டுக் கிடக்கின்றது எனக் கூறப்பெற்றுள்ளது.

***"சுரையிவர் பொதியில் அம்குடிச் சீறூர்***
***நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகைப்***
***புரிசை மூழ்கிய பொரிபரை ஆலத்து"*** ***(அகம்.287:5-7)***

புறநானூற்றுப் பாடலிலும் நாட்பலி இடுதற்குரிய கந்தின்கண் இறைவன் வாழ்தலும், பலியிடுவாரின்றி அது பாழ்பட்டுக் கிடத்தலும் கூறப்பட்டிருப்பது ஒப்புநோக்கத்தக்கதாகும்.

***"கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்***
***பலிகண் மாறிய பாழ்படு பொதியில்"*** ***(புறம்.52:12-13)***

என்பது அப்பாடலடிகளாகும்.

கயமனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் வயது முதிர்ந்த குயவன் தான் இடுகின்ற பலியைத் தெய்வம் உண்ணும் என்னும் நம்பிக்கையைக் கொண்டிருக்கின்றான். நீலமணி போன்ற பூங்கொத்துக்களைக் கொண்ட நொச்சி மாலையைச் சூடிப் பலிகளை இடுகின்ற செயலினைச் செய்யும் வயது முதிர்ந்த குயவன் தான் இடுகின்ற பலியை உண்ணுவதற்காகத் தெய்வங்களையும் காக்கைகளையும் அழைக்கின்றான். அத்தகைய அகன்ற இடத்தினைக் கொண்ட மன்றத்தில்தான் அப்பழமையான ஊரில் மக்கள் திருவிழாவினைக் கொண்டாடத் தொடங்குவர் என்பது பாடலில் குறித்த செய்தி.

***"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்***
***பலிகள் ஆர்கைப் பார்முது குயவன்***

*இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து*
*விழவுத்தலைக் கொண்ட பழவிறல் மூதூர்ப்" (நற்.293:1–4)*

இப்பாடலடிகளில் காக்கைகள் இறைவனுக்குப் படைக்கப்பட்ட பலியுணர்வை உண்ணும் என்னும் செய்தியும் கூறப்பெற்றுள்ளது.

**வேப்பமரத்திற்குப் பலியிடல்**

கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் வெட்சி வீரர்கள் வேப்பமரத்தில் உறையும் தெய்வத்திற்குப் பலியிடும் நம்பிக்கையைக் கொண்டிருந்தனர் என்பதைப் புலப்படுத்துகின்றது. பால் தரும் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துகொண்ட அச்சமில்லாத வெட்சி வீரர்கள் தம்மோடு போரிட்ட கரந்தை வீரர்களை வலிமையான வாள் கொண்டு வீசியும் அம்புகளை வில்லில் தொடுத்து எய்தும் வலிய காட்டுப்பகுதியில் நெடுந்தொலைவு விரட்டினர். பின்னர் தெய்வம் வாழும் பருத்த அடிமரத்தைக் கொண்ட வேப்பமரத்து அடியில் தாம் கவர்ந்து கொண்டு வந்த பசுக்களுள் கொழுவிய ஆவினைக் கொன்று அதன் குருதியை வேப்பமரத்தின் மேல் தெளித்துப் பலியிட்டு அதன் இறைச்சியைச் சமைத்து உண்டனர்.

*"வயவாள் எறிந்து வில்லின் நீக்கி*
*பயநிரை தழீஇய கடுங்கண் மழவர்*
*அம்புசேட் படுத்து வன்புலத் துய்த்தெனத்*
*தெய்வஞ் சேர்ந்த பராரை வேம்பிற்*
*கொழுப்பா எறிந்து குருதி தூஉய்ப்*
*புலவுப் புழுக்குண்ட வான்கண் அகலறைக்" (அகம்.309:1–6)*

என்ற இப்பாடலடிகளில் மழவர், வேப்பமரத்தின் அடியில் தெய்வம் உறையும் என்ற நம்பிக்கையைக் கொண்டிருந்தனர் என்பது கூறப்பெற்றுள்ளது. அத்தெய்வத்திற்கு அவர்கள் பசுவின் குருதியைப் பலியாகப் படைத்ததோடு, பசுவின் இறைச்சியைச் சமைத்து உண்ட செய்தியும் குறிக்கப்பெற்றுள்ளது.

கடியலூர் உருத்திரங்கண்ணனார் இயற்றிய அகநானூற்றின் பாலைப் பாடலில் சுவரில் சித்திரமாக எழுதப்பட்ட கடவுளுக்கு இடைவிடாமல் பலி வழிபாடு நடத்தப்பட்ட செய்தியும், இந்நம்பிக்கையால் மக்கள் பெற்ற நன்மையும் கூறப்பெற்றுள்ளன. துன்பத்தைச் செய்யும் அம்பினையும் வளைந்த வில்லினையும் கொண்ட மறவர்கள் பாலை வழிச் செல்லும் வணிகர் கூட்டத்தினரைக் கொன்று அவர் பொருளைக் கொள்ளையடித்து உண்டனர். அவர்களது பகைக்கு அஞ்சிய மக்கள் குடிபெயர்ந்து சென்றனர். அதனால் வளமற்ற நாட்பட்ட

பாழ் இடத்தில் பீர்க்குக்கொடி படர்ந்திருந்தது. முருங்கை மரத்தினை முறித்துத் தின்ற யானையின் முதுகினின்றும் உயர்ந்துள்ள பிடரி உராய்தலால் செங்கல்லாலான நீண்ட சுவரிலுள்ள விட்ட மரங்கள் அசைந்து வீழ்ந்தன. அங்கு வாழ்ந்திருந்த மணிப்புறாக்கள் அவ்விடத்தை விட்டு நீங்கிப் பறந்தோடின. அப்புறாக்கள் விட்டுச்சென்ற மாடங்களில் மரங்கள் அனைத்தும் உதிர்ந்து கிடந்தன. அம்மாடங்களின் சுவர்களில் சித்திரமாக எழுதப்பட்ட கடவுளர் அவ்விடம் விட்டு நீங்கிச் சென்றமையால் அவ்விடம் பொலிவற்றுக் காணப்பட்டது. இடைவிடாது அக்கடவுளர்க்கு நடத்தப்பெற்ற நாட்பலி வழிபாடும் மறுக்கப்பட்டது. சாணத்தால் மெழுகப்படாத பொலிவழிந்த திண்ணையில் ஈன்று அணியையுடைய நாய், இடத்தை மறித்துக்கொண்டு கிடந்தது. இவை பற்றிக் கூறும் பாடலடிகள் வருமாறு:

*“.... .... .... .... சாத்தெறிந்து*
*அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்*
*கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ*
*ஊரெழுந்து உலறிய பீரெழு முதுபாழ்*
*முருங்கை மேய்ந்த பெருங்கை யானை*
*வெரிந்ஓங்கு சிறுபுறம் உரிஞ ஒல்கி*
*இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென*
*மணிப்புறாத் துறந்து மரஞ்சோர் மாடத்து*
*எழுதணி கடவுள் போகலிற் புல்லென்று*
*ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணைப்*
*பால்நாய் துன்னிய பறைக்கண் சிற்றில்”* *(அகம்.167:7–17)*

**கொற்றவை வழிபாடும் பலிக்கடனும்**

கொற்றன் என்னும் சங்கப்புலவர் இயற்றிய குறுந்தொகைப் பாலைப்பாடலில் கொற்றவைக்கு நேர்த்திக்கடன் நேர்ந்து பலிக்கடன் கொடுக்கும் பாலைநில மக்களின் நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. பிரிவிடை ஆற்றாள் என ஆற்றுவித்த தோழிக்குத் தலைவி பிளவுகளையும் குகைகளையும் உடைய மலைப்பக்கத்தில் உள்ள வெற்றியுடைய கொற்றவைக்கு நேர்த்திக்கடன் நேர்ந்து கொள்ளுதல், காப்புநாண் அணிதல், நிமித்தம் பார்த்தல், விரிச்சி கேட்டல், இவற்றின் பலன்களை ஆராய்தல் ஆகியன தலைவன் உயிரைத் தம் உயிரின் வேறாகக் கருதி அவன் குறித்த பருவம் கடந்த பின்னரும் வாராமையால் உயிர்வாழும் விருப்பமுடையார் செய்யும் செயல்களாகும். தான் வேறு அவன் வேறு அல்லர்; இருவரும் ஒருயிர் என்னும் மந்திரவிதியால்

கூட்டப்பட்டமையின் தலைவியின் உள்ளத்தில் ‘தெய்வம் அஞ்சுதல்’ என்ற உணர்வு தோன்றாது. இப்பாடலின் தலைவி, தலைவன் தன்னைப் பிரிந்து வேற்றிடத்தில் தங்கியமைக்காக வருந்தவில்லை; அவன் தன்னை மறந்து வாழ்வதற்கே வருந்துகின்றாள். தலைவன் தன்னை மறவாமை ஒன்றே தான் உயிர் வாழ்வதற்குக் காரணம் என்கின்றாள். எனவே தலைவி கொற்றவைக்கு நேர்த்திக்கடன் நேர்ந்து பலிக்கடன் செலுத்த வேண்டியதில்லை எனத் தோழியிடம் கூறுகின்றாள்.

***“விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்***
***கடனும் பூணாம்; கைந்நூல் யாவாம்;***
***புள்ளும் ஓராம்; விரிச்சியும் நில்லாம்***
***உள்ளலும் உள்ளாம் அன்றே தோழி” (குறுந்.218:1–4)***

என்பன அப்பாடலடிகளாகும். இதிலிருந்து பாலைநிலமக்கள் கொற்றவைக்கு நேர்த்திக்கடன் நேர்ந்து பலிக்கடன் கொடுத்தனர் என்பதை அறியமுடிகின்றது.

குடவாயிற் கீரத்தனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் கானமர் செல்வியாகிய கொற்றவை வழிபாடு குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது. தலைவி தோழியிடம் வானம் மழை பொழிந்ததால் வெம்மை நீங்கி நிலம் குளிர்ந்தது; ஆதலால் தலைவனிடம் பொருள்வயிற் பிரிவில் தன்னையும் உடனழைத்துச் செல்ல வேண்டினாள். எழிற்குன்றம் மேகங்கள் கூட்டமாகப் படிந்துகிடக்கும் தன்மையுடையதாகும். புகழுடைய கொற்றவை அருள்கூர்ந்து அளித்ததால் வெண்மையான காலினைக் கொண்ட குதிரைகளைப் பரிசிலாகப் பெற்றவனும், பழைமைப் புகழினையும் நுட்பமான செய்யுட்கள் பலவற்றை இயற்றியவனுமாகிய புலவர் பெருமகனால் பாடப்பெற்ற சிறப்பினைக் கொண்டது எழில்குன்றம் ஆகும்.

‘எழில்குன்றம்’ என்பது ஒரு மலைப்பகுதியாகும். இம்மலை கொன்கானத்தில் நன்னனது நாட்டில் உள்ளது. இக்குன்றினைச் சிறப்பாகப் பாடிய புலவன் ஒருவனுக்கு கானமர் செல்வியாகிய கொற்றவை குதிரைகளைப் பரிசிலாக அளித்த செய்தியைக் குடவாயிற் கீரத்தனார் கூறியுள்ளார். கொற்றவையை வழிபடுவோர்க்குக் கொற்றவை அருள்புரிந்து நல்வாழ்வு அளிப்பாள் எனக் கொற்றவை வழிபாடு குறித்த நம்பிக்கை பின்வரும் பாடலில் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

***“…. …. …. …. ஓங்குபுகழ்க்***
***கானமர் செல்வி அருளலின் வெண்காற்***

*பல்படைப் புரவி எய்திய தொல்லிசை*
*நுணுங்குநுண் பனுவற் புலவன் பாடிய*
*இனமழை தவழும் எழிற் குன்றத்துக்" (அகம்.345:3–7)*

கொற்றவை அருளினால்தான் நல்வாழ்க்கையைப் பெறமுடியும் என்பது பாலைநில மக்களின் நம்பிக்கையாகும்.

**அறக்கடவுள்**

ஐங்குறுநூற்றின் பாலைத் திணையில் மறுதரவுப் பத்தில் ஓதலாந்தையார் இயற்றிய பாடலில் 'அறக்கடவுள்' குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. உடன்போக்குச் சென்ற தலைவி மீண்டு வந்தபோது அயலோர் அத்தலைவியின் தாய்க்குக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. பிறந்த நாள் முதல் சிறந்தன செய்து வளர்ந்த தன் அன்பு மகளைத் தன்னிடமிருந்து பிரித்த வன்கண்மையினால் தலைவியின் தாய் அறக்கடவுளைப் புலந்து பழித்துக் கூறுகின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

*"பறம்புலந்து பழிக்கும் மண்கணாட்டி*
*யெவ்வ நெஞ்சிற் கேமம் மாக" (ஐங்.393:2–3)*

**கடல்நீர்ப் பரப்பில் தெய்வம் உறைதல்**

மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் 'கடல்நீர்ப் பரப்பில் தெய்வம் உறையும்' என்ற நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது.

*"அணங்குடை முந்நீர் பரந்த செறுமின்" (அகம்.207:1)*

'அணங்கு' என்பது தெய்வத்தையும், சூரர மகளிராகிய நீரர மகளிரையும் குறிக்கும். ஆதலால் கடல்நீரின் பரப்பில் பெண் தெய்வம் உறையும் என மக்கள் நம்பினர் என அறியமுடிகின்றது.

**ஓமை மரத்தில் தெய்வம் உறைதல்**

மதுரை மருதன் இளநாகனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் ஓமை மரத்தில் தெய்வம் வாழும் என்ற நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது.

*"சூர்முத லிருந்த ஓமையம் புறவின்*
*ஈர்முள் வேலிப் புலவுநாறு முன்றில்" (அகம்.297:11–12)*

'ஓமை' என்பது ஒருவகை மரமாகும். அம்மரத்தில் அச்சம் தரும் தெய்வம் வாழும் என்பது பாலைநில மக்களின் நம்பிக்கையாகும்.

**சூர்புகல் அடுக்கம்**

மாமூலனார் என்னும் சங்கப்புலவரின் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் 'தெய்வம், சூர்புகல் அடுக்கமாகிய மலைப்பக்கத்தில் விரும்பி வாழும் என்னும் மக்களின் நம்பிக்கை' உவமை வாயிலாகக் கூறப்பெற்றுள்ளது.

*"…. …. …. …. முனாஅது*
*அருஞ்சுரக் கவலை யசைஇய கோடியா*
*பெருங்கல் மீமிசை இயமெழூந் தாங்கு*
*வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை*
*சூர்புகல் அடுக்கத்து மழைமாறு முழங்கும்" (அகம்.359:7–11)*

பாலை நிலத்தின் கவர்ந்த வழிகளில் தங்கியிருக்கின்ற கூத்தர்கள் முழக்கிய வாத்திய ஒலியானது பெரியமலையில் எதிரொலித்தால் போன்று, தான் பெரிதும் விரும்பும் பிடியினைக் காணாமல் களிறானது தெய்வம் விரும்பி வாழும் மலைப்பக்கத்தே இடியொடு மாறுபட்ட பேரொலியை எழுப்பும் என்பதாகக் கூறப்பட்டுள்ளது. இப்பாடலடிகளில் '**சூர்புகல் அடுக்கம்**' என்பது தெய்வம் விரும்பி வாழும் மலைப்பக்கத்தைக் குறிக்கும்.

**'சிவன்' ஆலமுற்றத்தில் வாழ்தல்**

பரணரின் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் சிவனைப் பற்றிய குறிப்பும் நம்பிக்கையும் கூறப்பெற்றுள்ளன. மகரக்கொடியை உச்சியில் கொண்ட வானைத் தொடும் மதிலையும், உச்சியைக் காண இயலாதவாறு ஓங்கி உயர்ந்துள்ள மாடங்களையும் உடைய காவிரிப்பூம்பட்டினத்தைக் கொண்டது சோழநாடாகும். அந்நாட்டில் ஆலமுற்றம் என்னும் பகுதி புது வருவாயினை உடைய பல ஊர்களைக் கொண்டதாகும். அப்பகுதி சோழ மன்னர்களால் பாதுகாக்கப்படும் சிறப்பினைக் கொண்டது. பூக்கள் விரிந்தகன்ற துறையினையுடைய காவிரி என்னும் பெரிய ஆற்றில் மிகுந்த வேகத்துடன் ஆழ்ந்து ஓடுகின்ற நீரானது நுண்மணலைக் கொண்டுவந்து குவித்து மேடாக்கிய மணற்குவியல்களைக் கொண்டது ஆலமுற்றம் என்னும் பகுதியாகும். உலகம் யாவும் போற்றும் நல்ல புகழை உடைய நான்கு வேதங்களைக் கொண்ட பழம்பெரும் நூலைத் தந்தருளிய மூன்று கண்களையுடைய சிவபெருமான் ஆலமுற்றத்தில் எழுந்தருளிச் சிறப்புச் செய்கின்றான் எனக் கூறப்பட்டுள்ளது.

*"பூவரி அகன்துறைக் கனைவிசைக் கடுநீர்க்*
*காவிரிப் பேர்யாற்று அயிர்கொண்டு ஈண்டி*
*எக்கர் இட்ட குப்பை வெண்மணல்*

*வைப்பின் யாணர் வளம்கெழு வேந்தர்*
*ஞாலம் நாறும் நலம்கெழு நல்லிசை*
*நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்*
*ஆல முற்றம் கவின்பெறத் தைஇய"* *(அகம்.181:11–17)*

ஆதலால், வேதவழிப்பட்ட வைதிக நெறியிலான சிவ வழிபாடும் சங்ககால மக்களிடம் இருந்தது என்பதை இப்பாடலடிகளால் அறிய முடிகின்றது.

**'பேய்' நம்பிக்கைகள்**

சங்க இலக்கியத்தின் பாலைத்திணைப் பாடல்களில் பேய்கள் குறித்த நம்பிக்கைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**பேய்கள் உணவு கொள்ளல்**

மூலங்கீரனார் இயற்றிய நற்றிணைப் பாலைப்பாடலில் பேய்கள் உணவு கொள்ளுதல் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. கோடைக்காலத்தில் செம்முருக்க மரத்தின் பூங்கொத்தில் காய்த்துப் பழுத்து முற்றிய நெற்றுப் போன்ற மாட்சிமையற்ற விரல்களைக் கொண்ட வலிய வாயை உடைய பேய்கள் வளமைமிக்க பழைமையான ஊரிடத்தே தெய்வத்திற்கு வழிபாட்டோடு படைக்கப்படும் ஊன் கலந்த பலிச்சோற்றை உண்ணுவதற்காகத் தாம் வாழும் பாழான மன்றங்களை இடித்துக்கொண்டு எழுகின்றன என்பது பாலைநில மக்களின் நம்பிக்கையாகும். இது குறித்த பாடலடிகள் வருமாறு:

*"வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன*
*மாணா விரல வல்வாய்ப் பேஎய்*
*மல்லல் மூதூர் மலர்ப்பலி உணீஇய*
*மன்றம் போழும் புன்கண் மாலைத்"* *(நற்.73:1–4)*

என்பதிலிருந்து அக்கால மக்கள் இறைவனுக்குப் படைக்கப்பட்ட பலி உணவினைப் பேய்கள் உண்ணும் என்ற நம்பிக்கையைக் கொண்டிருந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

**'கழுது'ப் பேய்**

நற்றிணையின் மற்றொரு பாலைப்பாடலில் 'கழுது' என்னும் 'பேய்' குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. 'கழுது' என்னும் பேய் நடுயாமத்தில் நிலைகொண்டு அலைந்து திரியும் என்பது பாலை நில மக்களின் நம்பிக்கையாகும்.

*"கழுதுகால் கொள்ளும் பொழுதுகொள் பானாள்" (நற்.171:9)*

மாமூலனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலிலும் 'கழுது' என்னும் பேய் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளன. இப்பாடலில் பேய்கள் நள்ளிரவில் அலைந்து திரியும் என்னும் மக்களின் நம்பிக்கை இடம்பெற்றுள்ளது.

'கழுது' என்பதைப் 'பெண்பேய்' என்றும், 'பேய்' வகைகளில் ஒன்று என்றும், 'அடிமைப்பேய்' என்றும், பேயின் 'ஊர்தி' என்றும் உரையாசிரியர்கள் பலவாறு பொருள் கொண்டுள்ளனர். ஐங்குறுநூற்றின் பாலைத்திணையில் செலவுப் பத்தில் ஓதலாந்தையார் இயற்றிய பாடலொன்றில் 'கழுது' என்னும் இப்பெண்பேய் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

***"அவிர்தொடி கொட்ப கழுதுபுக வயர***
***கருங்கட் காக்கையொடு கழுகு விசும்பகவச்" (ஐங்.314:1–2)***

இப்பாடலடிகளில் கூறப்பெறும் 'கழுது' என்னும் 'பேய்' நிணம் தின்னும் பேயாகும். பேய்கள் நிணம் தின்னும் வெறியில் சுற்றித் திரிவதனால் அவை அணிந்த வளையல்கள் சுழன்றன. வளையல் அணிந்த பேய்கள் எனக் கூறப்படுவதால் அப்பேய்களைப் பெண்பேய்கள் எனக் கொள்ளலாம். காக்கைகளும் கழுகுகளும் தமக்குரிய நிணமாகிய உணவினைக் கண்ட பொழுது கூடிச் சுழலும் எனக் கூறப்படுவதனால் நீண்ட கடத்தற்கரிய பாலைவழியின் கொடுமையினை அறியலாம்.

***"உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்***
***குருதியாடிய கூருகிர்க் கொடுவிரல்***
***கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை"*** [9]

எனக் கூறப்பட்டிருப்பதும் ஒப்புநோக்கத்தக்கதாகும்.

ஐங்குறுநூற்றில் முன்னிலைப்பத்தில் இடம்பெற்றுள்ள பாலைப்பாடலில் 'அணங்கு' பற்றிய நம்பிக்கை கூறப்பெற்றுள்ளன. தலைவன் தலைவியைப் புணர்ந்து உடன்கொண்டு செல்லும் வழியில் தலைவியின் நலம் பாராட்டிக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

***"சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்***
***கொலைவல் லெயினர் தங்கைநின் முலைய***
***சுணங்கென நினைதி நீயே;***
***யணங்கென நினையுமென் னணங்குறு நெஞ்சே" (ஐங்.363)***

*எயினர் பாலைநில ஆடவராவார். ஆறலைத்தல் இவர்தம் குலத்தொழில் ஆகும். தலைவி எயினர் குலத்தவள் ஆவாள். 'சுணங்கு' என்பது உடம்பில் குறிப்பாக மார்பகங்களில் தோன்றும் தேமலாகும். பண்டைத் தமிழர் முலைகளின் மேல் படரும் தேமல்கள் முலைகளுக்கு கூடுதல் அழகினைத் தரும் என நம்பினர். இன்றும் 'அழகுத்தேமல்' என்னும் வழக்காறு உள்ளது. 'அணங்கு' என்பது வருத்தத்தைத் தரும் தெய்வமாகும். தலைவன் இதனை வருத்தத்தைத் தரும் பேய் என்கின்றான். தலைவியின் நலம் பாராட்டும் தலைவன் தலைவியிடம் அவள் முலைகள் படர்ந்த தேமல்கள் தன்னைப் பேய் போல் வருத்தியதால் 'நின் முலைகளில் மேல் படர்ந்துள்ள தேமல்களை நீ தேமல்கள் என நினைக்கின்றாய்; அம்முலைகளால் தாக்குண்டு வருந்தும் என் உள்ளத்திற்கு அவை அணங்காகவே தோன்றுகின்றன' என்கின்றான்.*

***"கழுதுவழங் கரைநாள் காவலர் மடிந்தெனத்" (அகம்.311:4)***

*என்பது அப்பாடலடியாகும்.*

**உருஇல்பேய்**

*நோய்பாடியார் அகநானூற்றில் இயற்றிய பாலைப் பாடலில் உருவம் இல்லாத பேய் குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது.*

***"உருவில் பேஎய் ஊராத் தேரொடு***
***நிலம்படு மின்மினி போல பலவுடன்***
***இலங்குபரல் இமைக்கும் என்பநம்***
***நலம்துறந் துறைநர் சென்ற ஆறே!" (அகம்.67:15–18)***

*வேற்று மொழிகளைப் பேசும் நாடுகளைக் கைப்பற்றவேண்டிச் செல்லும் மன்னர்களின் கழியால் கட்டப்பட்ட கூரிய கேடயங்களின் வரிசையினைக் கண்டாற் போன்று எயினர்கள் பாழிடங்களில் இறந்தவர்களை இட்டுத் தழைகளால் மூடிய கற்குவியல்கள் காணப்பட்டன. உருவமற்றதும் ஊர்ந்திடப் பெறாததுமான பேய்த்தேருடன் நிலத்தில் தோன்றும் மின்மினிப் பூச்சியைப் போல எங்கும் விளங்கும் பரற்கற்கள் யாவும் ஒருசேர ஒளிவிடும் பாழிடங்களைக் கொண்ட சுரவழிதான் தலைவன் கடந்துசென்ற வழி என்று அறிந்தோர் கூறுவது என்று இப்பாடலின் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.*

*'உருஇல் பேய்' என்பது உருவம் இல்லாத பேயைக் குறிக்கும். 'ஊராத்தேர்' என்பது ஏறிச் செலுத்தாத தேராகும். இதிலிருந்து உருவம் இல்லாத, கண்ணுக்குப் புலப்படாத பேய் குறித்த பாலைநில மக்களின் நம்பிக்கையை அறிய முடிகின்றது.*

**பேய்கள் கனவு காணல்**

ஔவையார் இயற்றிய அகநானூற்றின் பாலைப்பாடலில் மனிதர்களைப் போல பேய்களும் கனவு காணும் என்னும் பாலைநில மக்கள் நம்பிக்கை குறிப்பிடப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

***"இடைபிற ரறிதல்லஞ்சி மறை கரந்து***
***பேஎய் கண்ட கனவிற் பன்மாண்***
***நுண்ணிதின் இயைந்த காமம் வென்வேல்" (அகம்.303:1–3)***

தம்மிடையே நிகழ்வனவற்றைப் பிறர் அறிதல்கூடாது என்று அஞ்சி, பேய் தான் கண்ட கனவினைக் கூறாது என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

**'பழூஉப்பல்' பேய்**

கச்சிப்பேட்டு நன்னாகையார் இயற்றிய குறுந்தொகைப் பாலைப்பாடலில் உவமை வாயிலாகப் பாலைநில மக்களின் பழூஉப்பல் என்னும் பேய் குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது.

***"பழூஉப்பல் அன்ன பருஉகிர்ப் பாஅடி***
***இருங்களிற்று இனநிரை ஏந்தல் வரின் மாய்ந்து" (குறுந்.180:1–2)***

பேயின் பற்களைப் போன்று பருத்த நகங்களையுடைய பெரிய யானைக் கூட்டங்கள் நிலத்தே பாவி நடக்கும் அடியினை உடையன என்பது பாடலில் குறித்த செய்தி. இப்பாடலடிகளில் யானையின் பருத்த நகங்களுக்குப் பேயின் பெரிய பற்கள் உவமையாகக் கூறப்பெற்றுள்ளன.

'பழூஉ' என்னும் சொல் பேயைக் குறிக்கும். இப்பேயின் பற்கள் பருத்துக் காணப்பட்டமையால் இப்பேய் 'பழூஉப்பல்' பேய் எனக் கூறப்பெற்றுள்ளது. பேய்மகளின் விகாரமான தோற்றம் சிறுபாணாற்றுப்படையில்,

***"கருமறிக் காதின் கவைஅடிப் பேய்மகள்***
***நிணன்உண்டு சிரித்த தோற்றம் போல***
***பிணன்உகைத்துச் சிவந்த பேருகிர்ப் பணைத்தாள்" [10]***

எனக் கூறப்பட்டிருப்பதும் ஒப்புநோக்கத்தக்கதாகும். இவ்வாறு பாலைத் திணைப் பாடல்களில் பேய்கள் உணவு கொள்ளல், 'கழுது' என்னும் பேய் நடுயாமத்தில் அலைந்து திரிதல், நிணம் தின்னும் கழுது என்னும் பேய், வருத்தத்தைத் தரும் 'அணங்கு' என்னும் பேய், வடிவம் இல்லாத உருஇல்பேய், பேய்கள் கனவு காணல், பழூஉப்பல்பேய் முதலான பாலைநில மக்களின் பேய்கள் குறித்த நம்பிக்கைகள் கூறப்பெற்றுள்ளன.

**'வினைப்பயன்' குறித்த நம்பிக்கைகள்**

*சங்க இலக்கியத்தில் பாலைத்திணைப் பாடல்களின்வழி வினைப்பயன் குறித்த வாழ்வியல் நம்பிக்கையினைத் தெரியமுடிகின்றது.*

**நல்வினைப் பயன்**

*நற்றிணையின் பாலைத்திணைப் பாடலொன்றில் நல்வினைப் பயன் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளன. தலைவன் பிரிந்தவழி மெலிவுற்ற தலைவி தோழிக்குக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.*

***"சென்ற காதலர் வழிவழிப் பட்ட***
***நெஞ்சே நல்வினைப் பாற்றே ஈண்டொழிந்து" (நற்.107:7–8)***

*தலைவி தோழியிடம் தன்னைப் பிரிந்து அரிய பாலை வழியிடத்துச் சென்ற தலைவன்பால் அவனை வழிபட்டுச் சென்ற தன் நெஞ்சம் மீளாமல் முன் செய்த நல்வினைப் பயனைத் துய்க்கின்றது என்கின்றாள். இப்பாடலடிகளால் தலைவி நல்வினையை 'நல்வினைப் பாற்றே' என்கின்றாள். பாலைநிலத்தின்கண் சென்ற தலைவன்பால் தலைவியின் உள்ளம் சென்றது; அது அவளின் நல்வினைப் பயனாகும். அவ்வாறு அவள் உள்ளம் சென்ற நிலையில் தலைவி ஊராரின் பழிச்சொல்லுக்கு ஆட்படுகின்றாள். இது அவளின் தீவினைப் பயனாகும். இவ்வாறு நல்வினைக்கும் தீவினைக்கும் ஆட்பட்ட தலைவி தன் நிலைக்கு வருந்துவதாகக் கூறுகின்றாள்.*

**ஊழ்வினை**

*பாலைக்கலிப் பாடலொன்றில் பொருள் கிடைத்தலும் பொருளீட்டலும் பழவினையாகிய ஊழ்வினைப் பயன் என்னும் மக்களின் நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. 'பழவினை' மிகவும் வலிமை உடையது. அதன் ஆற்றலை எவராலும் மாற்ற இயலாது என்பது மக்களின் நம்பிக்கையாகும்.*

***"...... ....... .......... பொருள்தான்***
***பழவினை மருங்கின் பெயர்புபெயர்பு உறையும்" (கலி.21:10–11)***

*பொருளானது தனக்கு உரியார் இன்னார் எனக் கருதாமல் அவரவர்க்கு உரிய ஊழ்வினையாலே அவரவர் இடத்து மீண்டும் மீண்டும் சென்று தங்கும் என்பது இப்பாடலடிகள் உணர்த்தும் கருத்தாகும். ஐங்குறுநூற்றில் மகட்போக்கியவழித் தாய் இரங்கு பத்தில் ஓதலாந்தையார் இயற்றிய பாடலொன்றில் ஊழ் பற்றிய நம்பிக்கை சுட்டப்பெற்றுள்ளது.*

*“பல்லூழ் நினைப்பினு நல்லென் றூழ*
*மீளி முன்பிற் காளை காப்ப”*                    *(ஐங்.374:1–2)*

என்பன அப்பாடலடிகளாகும். இப்பாடலில் தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டாள். தலைவியின் இச்செயலை நினைத்துத் தாய் இரங்கிக் கூறுகின்றாள். ஒரு செயலைப் பற்றி ஒருகால் நினைக்கும்போது ஒருவருக்கு அது மிகவும் நல்லதாகத் தோன்றி, மறுமுறை அச்செயலை நினைக்கும்போது தீயதாகத் தோன்றலாம். இவ்வாறின்றி இப்பாடலின் தாய் எத்துனைமுறை நினைத்தாலும் தன் மகள் தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்ட செயல் நல்லவென்றே கருதுகின்றாள். தன் மகள் உடன்போக்கில் சென்றதும் அது தொடர்பான பிற செயல்களும் நல்லனதாமோ எனப் பலமுறை நினைத்து நினைத்து தாய் இறுதியாக முடிவெடுத்தாளாதலின் “நல்லென்றூழ” என்கின்றாள்.

இப்பாடலின் தாய் தன் மகளின் உடன்போக்கினை ‘அறம்’ என்றும் ‘நல்லூழ்’ என்றும் கூறுகின்றாள். ஏனெனில் உடன்போக்கும் ஒருவகையான திருமணமுறையே ஆகும்.

ஐங்குறுநூற்றின் மகட்போக்கியவழித் தாய் இரங்கு பத்தில் அமைந்த மற்றொரு பாடலில் பாலைநில மக்களின் ‘ஊழ்’ நம்பிக்கை அழுத்தமாகக் கூறப்பெற்றுள்ளது.

*“நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்*
*பூப்புரை யுண்கண் மடவரற்*
*போக்கிய புணர்த்த வறனில் பாலே”*                    *(ஐங்.376:3–5)*

இப்பாடலில் தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்றமையால் நற்றாய் விதியாகிய ஊழினை வெகுண்டு கூறுகின்றாள். நற்றாய் மாந்தர்க்கு வரும் நல்லவையும் தீயவையும் விதியால் வருவன என்னும் நம்பிக்கை உடையவள்; ஆதலால் மடப்பம் பொருந்திய தன் மகள் உடன்போக்கில் தலைவனுடன் செல்லுமாறு செய்த அந்த விதியை நொந்து இவ்வாறு கூறுகின்றாள். தமக்குத் தாங்கொணாத் துன்பம் வந்தபொழுது மனம் கலங்கிக் கடவுளையும் விதியையும் நொந்து சபிக்கும் உலகியல் இயல்பினை நோக்கி நற்றாய் ஊழினை ‘அறப் பண்பற்றது’ என இழிவாகக் கூறுகின்றாள். அறமற்ற அச்செயலைச் செய்தமைக்காக ஊழானது தக்க தண்டனையைப் பெறவேண்டும் என நற்றாய் சபிக்கின்றாள். பாவிகளுக்குத் தண்டனை தருவது அறமாயினும், யாதும் அறியாத தன்மகளைச் செல்வமிக்க தன் மனையை விட்டு நீங்கச் செய்தமையால்,

*இப்பொழுதுதான் தன் மகளைப் பிரிந்து துயரத்தீயிடை வேவதைப் போல விதியாகிய ஊழும் காட்டுத்தீயிடைப் பட்டு வருந்தவேண்டும் என்று நற்றாய் ஊழ்வினையைச் சபிக்கின்றாள்.*

**தீவினைப்பயன்**

*கொடியூர்கிழார் மகனார் நெய்தல் தத்தனார் என்னும் சங்கப்புலவர் பாடிய அகநானூற்றில் அமைந்த பாடலொன்றில் பாலைநில மக்களின் தொல்வினை என்னும் தீவினைப்பயன் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:*

***"நமக்கே எவ்வம் ஆகின்று***
***அனைத்தால் தோழி!நந் தொல்வினைப் பயனே" (அகம்.243:14–15)***

*தலைவன் தலைவியைப் பொருள்வயிற் பிரிந்தான். பிரிந்தவன் காலம் நீட்டித்தான். அவன் தலைவியிடம் குறித்துச் சென்ற பருவம் வந்தும் வந்திலன். இதனையறிந்த தோழி தலைவியை ஆற்றியிருக்க வேண்டும் என வற்புறுத்தினாள். தலைவி தோழியிடம், முன்னரே தலைவனைப் பிரிந்து வாழும் தன்னைக் வாடை மேலும் வருந்துவதால் தன்னால் எங்ஙனம் ஆற்றியிருக்க முடியும் என்கின்றாள்.*

*தற்பொழுது கொடிய வாடைக்காற்றானது நீர் சொரியும் கண்களை உடைய தனக்குத் துன்பம் தருவதாக அமைந்துவிட்டது. தன்னை விட்டு நீங்காத தனது பழைய தீவினைப் பயன் அத்தன்மையது எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள். இதிலிருந்து பாலைநில மக்களின் தொல்வினையாகிய தீவினைப்பயன் குறித்த நம்பிக்கையை அறியலாம். தலைவனைப் பிரிந்திருக்கும் தன்னை வருத்தும் வாடைக்காற்றினைத் தலைவி தீவினைப்பயன் என நொந்து கூறுகின்றாள்.*

**நல்வினைப்பயன்**

*மோதாசனார் இயற்றிய குறுந்தொகையின் பாலைப்பாடலில் பாலைநில மக்களின் நல்வினைப்பயன் குறித்த நம்பிக்கை குறிக்கப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:*

***"நல்லை மன்றம்ம பாலே மெல்இயல்***
***துணைமலர்ப் பிணையல் அன்னஇவர்***
***மணம்மகிழ் இயற்கை காட்டி யோயே" (குறுந்.229:5–7)***

தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் புரிந்துகொள்ளாத இளமைப் பருவத்தில் நிகழ்த்திய விளையாட்டினைக் கண்டோர் நினைவுகூர்ந்தனர். தம்முள் முன்னர் அயன்மை உடையவராகிய அவர்கள் நல்லூழின் பயனால் ஒன்றாயினர் என நினைத்து, அவர்கள் இணைவதற்குத் துணை செய்த நல்லூழாகிய பாலினை வாழ்த்தினர். ஒன்றியுயர்ந்த பாலது ஆணையால் தலைவன் தலைவியரின் உறவு பிறவிகள்தோறும் தொடரும் என்னும் நம்பிக்கை இப்பாடலடிகளில் கூறப்பெற்றுள்ளன.

இளமையில் உடலால் நீங்காது சண்டையிட்டுக் கொண்டிருந்த இவர்களை உள்ளத்தாலும் நீங்காது நட்பாக்கி மகிழ்வித்த நல்வினைப் பயனாகிய 'பால்' மிகவும் வலிமையுடையதாகும். இளமையில் நட்பாக இருப்பவர்கள்கூட திருமணம் முடித்துக்கொண்ட பின்னர் தம்முள் பகைத்துப் பிரிதல் உலகியல் இயல்பாகும். பருவம் வாராத நிலையில் சண்டையிட்ட தலைவன் தலைவியர் உள்ளத்தில் பருவம் வந்தபின்னர் காதலை உண்டாக்கி அவர்களை உடன்போக்கில் ஒன்றிணைத்து மணம் முடிக்க உதவிய ஊழினைக் கண்டோர் 'நல்லை மன்றம்ம பாலே' எனக் கூறி மகிழ்ந்தனர்.

**கூற்றம்**

'கூற்றம்' என்னும் கூற்றுவன் குறித்த நம்பிக்கையும் பாலைத்திணைப் பாடல்களில் பாலைநில மக்களின் வாழ்வியல் நம்பிக்கைகளாகப் பரவலாகக் கூறப்பெற்றுள்ளன. 'கூற்றம்' என்னும் கூற்றுவன், உயிரை உடலிலிருந்து பிரித்தெடுக்கும் எமனைக் குறித்த நம்பிக்கையாகும்.

காலெறி கடிகையார் இயற்றிய குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் பாலைநில மக்களின் கூற்றுவன் குறித்த நம்பிக்கை தத்துவப் பார்வையில் வெளிப்படுத்தப் பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

***"…. …. …. …. கரும்பின்***
***கால்எறி கடிகைக் கண் அயின்றன்ன***
***வால்எயிறு ஊறிய வசைஇல் தீநீர்க்***
***கோல்அமை குறுந்தொடிக் குறுமகள் ஒழிய***
***ஆள்வினை மருங்கில் பிரியார் நாளும்***
***உறன்முறை மரபின் கூற்றத்து***
***அறன்இல் கோள்நற்கு அறிந்திசி னோரே"*** ***(குறுந்.267:2–8)***

இப்பாடலில் வாலெயிறு ஊறிய தீநீர்க் குறுமகள், வசைஇல் குறுமகள், கோலமை குறுந்தொடிக் குறுமகள் எனத் தனித்தனியே கூட்டிப்பொருள் கூறப்பெற்றுள்ளன. தலைவியின் எயிற்றில் ஊறிய நீரினைக் கரும்பின் காலெறி

கடிகையின் (அடிப்பகுதியாகிய கணு) சுவையோடு உவமித்தமையால் இப்பாடலை இயற்றிய புலவர் காலெறி கடிகையார் என்னும் சிறப்புப் பெயரினைப் பெற்றுள்ளார்.

கூற்றம் உயிர் பறித்தலையும், என்றும் இளமையோடு இருக்கச் செய்யும் விதி இன்மையையும், இளமையிலும் கூற்றம் உயிரைப் பறிக்கும் என்பதாலும் நாள்தோறும் தலைவன் இதனை உலகியல் வாழ்க்கையில் அறிந்தானாயினும், இதனைப் பிறர்மேல் வைத்துப் பொதுமைப்படக் கூறுகின்றான். வாழ்நாள் வரையறுக்கப்பட்ட உயிர்களின் மேல் கூற்றுவன் அவர்களின் விதிவழியே இயங்குபவன். தன்னை மாற்றுவதற்கு வேறோர் அறத்தினை வேண்டாதவன். இவ்வாறு இப்பாடலில் அறக்கடவுளாகிய கூற்றுவன் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய குறுந்தொகையின் பாலைப் பாடலில் உவமை வாயிலாகப் பாலைநில மக்களின் கூற்றுவன் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

***"கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்***
***ஆற்றுஇருந்து அல்கி வழங்குநர்ச் செகுத்த***
***படுமுடைப் பருந்துபார்த் திருக்கும்***
***நெடுமூ திடைய நீர்இல் ஆறே"*** ***(குறுந்.283:5–8)***

தலைவன் பொருளீட்டச் செல்லும் கொடிய பாலை வழியில் கூற்றத்தை ஒத்த கொல்லுதலில் தப்பாத வேற்படையை உடைய மறவர்கள் பாலைநிலத்தின் வழிச்செல்வோர் போகும் வழியில் தங்கியிருந்து பொழுதுபட்ட போது அவர்களைக் கொல்லுவர். அவ்வாறு மறவர்களால் வேலெறிந்து கொல்லப்பட்ட வழிப்போக்கர் உடல்களை உண்பதற்காகப் பருந்துகள், அவ் உடல்கள் மிகுந்த நாற்றம் உண்டாகும் வரையில் காத்திருக்கும். இத்தகைய நீரில்லாத கொடிய பாலை வழியில் தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள்வயிற் சென்றான் எனக் கூறப்பட்டுள்ளது. இப்பாடலடிகளில் மறவர்களின் கொலைத் தொழிலுக்கு உவமையாகக் கூற்றுவன் கூறப்பட்டிருப்பதை அறியலாம்.

நற்றிணைப் பாடலொன்றில் (நற்.271) தலைவன் தலைவியை உடன்போக்கில் கொண்டு செல்கின்றான். தலைவனுடன் தலைவி உடன்போக்குச் செல்லுதல் அறமாயினும், அயலார் அலர் பேசிப் பழித்துக் கூறுவதால் தலைவியின் தாய் மிகவும் வருந்தி, இதற்கு முன்னரே என்னுயிரைப் பறித்துக்கொள்ளாமல் தலைவன்பின் சென்ற தன் மகளைத் (தலைவியை)

தேடுமாறு இதுவரையில் கூற்றுவன் என்னுயிரை விட்டு வைத்துள்ளான். அத்தகைய கூற்றுவன் தானே கெட்டு அழிவானாக எனக் கூற்றுவனைப் பழித்துக் கூறுகின்றாள்.

*"மாலைவிரி நிலவில் பெயர்புபுறங் காண்டற்கு*
*மாயிருந் தாழி கவிப்பத்*
*தாவின்று கழிகளற் கொள்ளாக் கூற்றே" (நற்.271:10–12)*

இதிலிருந்து பாலைநில மக்களின் கூற்றுவன் குறித்த நம்பிக்கையினை அறியமுடிகின்றது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய பாலைக்கலிப் பாடலொன்றில் உவமை வாயிலாகக் கூற்றம் குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது.

*"நாற்றஞ்சால் நளிபொய்கை அடைமுதிர் முகையிற்குக்*
*கூற்றுறம்போல் குறைபடூஉம் வாழ்நாளும்நிலையுமோ?"*
*(கலி.17:11–12)*

நாற்றம் அமைந்த பெருமையுடைய பொய்கையின்கண், இலைகளுக்கு இடையே முகிழ்க்கும் முகைக்குக் கூற்றமாகிய அலர்ச்சி, அதன் வாழ்நாள் குறைவிற்குக் காரணம் ஆவதைப் போல, விதித்த காலம் குறைபட்டு வாழ்கின்ற நாட்களும் தலைவியுடன் நிலைத்திருக்காது. அதாவது கூற்றம் மனிதனின் வாழ்நாளைக் குறைக்கும் என்பது பாலைநில மக்களின் நம்பிக்கையாகும்.

மாமூலனார் இயற்றிய அகநானூற்றின் பாலைப் பாடலில் தலைவன் பொருள்வயிற் பிரிந்தான். இதனால் வேறுபட்ட தலைவிக்குத் தோழி, தலைவன் பிரிந்துசென்ற நாட்களைக் கோடிட்டுக் குறித்துவைத்த நெடிய சுவரினை நோக்கி வருந்தித் துன்பத்தில் அழுந்தாதே. 'கூற்றத்தாலே உயிர் பறிக்கப்பட்டு இறக்காமல் பிறர்தம் பொருளைப் பெற்றுப் பயன் கொள்ளுமாறு இறந்தோர் நல்வினை செய்தவர்' என்னும் கொள்கையுடன் பொருள் தேடும் முயற்சியில் தலைவன் நின்னைப் பிரிந்து தொலைதூர நாட்டிற்குச் சென்றுள்ளான் என்கின்றாள்.

*"நோற்றோர் மன்ற தாமே கூற்றம்*
*கோளுற விளியார்பிறர் கொள விளிந் தோரெனத்*
*தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்*
*நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்து*
*ஆழல் வாழி தோழி தாழா அது" (அகம்.61:1–5)*

*இப்பாடலடிகளில் 'கூற்றம் உயிரைப் பறிக்கும்' என்னும் பாலைநில மக்களின் கூற்றம் குறித்த நம்பிக்கை இடம்பெற்றிருப்பதைக் காணலாம். அதற்குள் மனிதன் பொருளைத் தேடிப் பிறர்க்கு ஈந்து பயனுள்ள வாழ்க்கையை வாழவேண்டும் என இப்பாடலில் புலவர் வலியுறுத்திக் கூறுகின்றார்.*

*மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் என்னும் சங்கப்புலவர் இயற்றிய நற்றிணைப் பாலைப்பாடலில் மக்களின் 'நரகம்' குறித்த நம்பிக்கை இடம்பெற்றுள்ளன.*

***"வரையா நயவினர் நிரையம் பேணார்" (நற்.329:1)***

*தலைவன் வினைவயிற் பிரிந்ததால் துன்புற்ற தலைவியிடம் தோழி, தலைவன் நின்மாட்டு அளவிட முடியாத அன்புடையவன்; நரகமாகிய தீயநெறியைப் பின்பற்றாதவன் என்கின்றாள்.*

**பிறப்பும், மறுபிறப்பும்**

*பாலைத்திணைப் பாடல்களில் பிறப்பு மற்றும் மறுபிறப்புக் குறித்த நம்பிக்கை அறியப்பெற்றுள்ளது. அம்மூவனார் நற்றிணையில் இயற்றிய பாலைத்திணைப் பாடலில் பிறப்பு, மறுபிறப்புக் குறித்த நம்பிக்கை வெளிப்படையாகக் கூறப்பெற்றுள்ளது. வினைவயிற் பிரிந்த தலைவன் குறித்த பருவத்தில் வாராமையால் தலைவி வருந்தினாள். அத்தலைவியை ஆற்றியிருக்குமாறு கூறிய தோழியிடம் தலைவி, 'தன்னைத் தலைவன் பிரிந்தமைக்காக இறந்துபோக அஞ்சவில்லை; அங்ஙனம் இறந்து தான் மறுபிறப்பு எய்தினால் தன் காதலனாகிய தலைவனைப் பிரிந்து மறக்க நேருமோ என அஞ்சுகின்றேன்' என்கின்றாள். அப்பாடலடிகள் வருமாறு;*

***".... .... .... ஈங்கோ***
***சாதல் அஞ்சேன்; அஞ்சுவல் சாவின்***
***பிறப்புப்பிறி தாகுவது ஆயின்***
***மறக்குவேன் கொல்லென் காதலன் எனவே" (நற்.397:6–9)***

*இப்பாடலடிகளின் பாலைநில மக்களின் பிறப்பு, மறுபிறப்புக் குறித்த வாழ்வியல் நம்பிக்கை கூறப்பெற்றிருப்பதைத் தெரியலாம். சங்க இலக்கியத்தில் பாலைத்திணைப் பாடல்களில் பிறப்புத் தொடர்பான இம்மை, மறுமை குறித்தும் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளது. பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய பாலைக்கலிப் பாடலில் பாலைநில மக்களின் இம்மை, மறுமை நம்பிக்கைகள் குறிக்கப் பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:*

*“செம்மையின் இகந்துஒரீஇப் பொருள்செய்வார்க்கு அப்பொருள்*
*இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ?” (கலி.14:14)*

தோழி தலைவனிடம் செம்மையான வழிகளிலிருந்து மாறுபட்டுச் சென்று பொருள் தேடுவார்க்கு அப்பொருள் இம்மையும் மறுமையும் அவர்க்குப் பகையாக விளங்கும் என இடித்துரைத்துத் தலைவனது பொருள்வயிற் பிரிவைத் தடுக்க முயற்சிக்கின்றாள்.

மாமூலனார் என்னும் சங்கப்புலவரின் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் **‘இம்மையில் நன்மை செய்தவிடத்துத் தீமை ஏற்படுவதில்லை’** என்னும் மக்களின் நம்பிக்கை கூறப் பெற்றுள்ளது.

*“.... .... .... .... ‘யிம்மை*
*நன்றுசெய் மருங்கில் தீதுஇல்’ என்னும்*
*தொன்றுபடு பழமொழி இன்றுபொய்த்தன்று கொல்?”*
*(அகம்.101:1–3)*

**‘பழியஞ்சல்’**

மாமூலனாரின் அகநானூற்றும் இயற்றிய பாலைத்திணைப் பாடலில் பாலைநில மக்களின் ‘பழியஞ்சல்’ என்னும் நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. தலைவன் பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி தம் ஊர் மிகவும் பழமையானது. என்றும் இடைவிடாமல் நடைபெறும் விழாக்களைக் கொண்டது. இந்த ஊரில் வாழும் மக்கள் பழியற்றவராயினும் அவர்கள் யாவரையும் புறங்கூறும் அம்பல் ஒழுக்கத்தினர். கொடும் பழிச்சொற்களைக் கூறும் சேரிப்பெண்கள் தன்னை இகழினும் இகழுகு எனக் கூறுவதால் பழியஞ்சும் பாலைநில மக்களின் நம்பிக்கையினை அறியலாம். அப்பாடலடிகள் வருமாறு:

*“அழியா விழவின் அஞ்சவரு மூதூர்ப்*
*பழியிலர் ஆயினும் பலர்புறங் கூறும்*
*அம்பல் ஒழுக்கமும் ஆகிய வெஞ்சொற்*
*சேரியம் பெண்டிர் எள்ளினும் எள்ளுக” (அகம்.115:1–4)*

**தவம், தவசியர்**

சங்க இலக்கியத்தின் பாலைத்திணைப் பாடல்களில் தவம், தவசியர் குறித்த நம்பிக்கையும் அறியப்படுகின்றது.

சல்லியங்குமரனார் என்னும் சங்கப்புலவர் இயற்றிய நற்றிணைப் பாலைப்பாடலில் உவமை வாயிலாகத் தவம், தவசியர் குறித்த வாழ்வியல்

செய்தி கூறப்பெற்றுள்து. பெரிய செம்மையான மந்தகத்தையும் வளைந்த கவுளையும் அகன்ற வாயையும் கொண்டு கரிய மேகம் போன்ற யானை விளங்கும். இத்தகைய யானையின் பக்கமாகிய விலாப்புறம் உராய்ந்தமையால் பொரிந்தமை போன்று காட்சி தரும் அடிமரத்தையும் உள்ளே துளையமைந்த காய்களையும் கொண்டு கொன்றை மரங்கள் திகழ்கின்றன. இத்தகைய கொன்றை மரங்கள் குன்றின்மேல் தங்கும் நெடிய சடையுடனும் அசையாத உடலுடனும் தவம் செய்யும் தவசியராகிய முனிவர் போலத் தோன்றுகின்றன எனக் கூறப்பட்டுள்ளது.

*"இருஞ்செம் முடிய கொடுங்கவுள் கயவாய்*
*மாரி யானையின் மருங்குல் தீண்டி*
*பொரியரை ஞெமிர்ந்த புழற்காய்க் கொன்றை*
*நீடிய சடையொடு ஆடா மேனிக்*
*குன்றுறை தவசியர் போலப் பரிவுடன்"* *(நற்.141:1–5)*

சங்க காலத்தில் சடைமுடியை வளர்த்து உயர்ந்த குன்றின்மேல் அமர்ந்து அசையாமல் தவசியர் தவம் செய்துள்ளனர் என்பதையும் இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்னும் சங்கப்புலவர் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் உண்ணாமையால் வாடி வருந்திய வயிற்றினையும், நீராடாத விரதத்தையும் கொண்டிருந்த தவசியர் பற்றிய செய்தி கூறப்பெற்றுள்ளது.

*"உண்ணா மையின் உயங்கிய மருங்கின்*
*ஆடாப் படிவத் தான்றோர் போல"* *(அகம்.123:1–2)*

**நிரையப் பெண்டிர் அலர் கூறல்**

நரகம் போன்ற இழிந்த குணங்களைக் கொண்ட பெண்களே 'நிரையப் பெண்டிர்' ஆவர். உடன்போக்கிற்கு உடன்பட்ட தலைவி தோழியிடம், பாலைநிலத்தைக் கடந்து செல்லும் தலைவனுக்குத் தலைவியர் இரக்கம் கொள்ளுதல் இயல்பு எனக் கருதாமல் அலர் தூற்றுவதில் விருப்பம் கொண்ட இந்த ஊரில் வாழும் நரகம் போன்ற இழிந்த குணங்களைக் கொண்ட 'நிரையப் பெண்டிர்' இன்னாத சொற்களைக் கூறினர். இது தன்மகளுக்கு உயர்வு தருவன அல்ல என நினைத்த என் தாய் 'தெய்வத்தை வழிபட்டாள் எனக் கூறுகின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:

*"சுரம்பல கடந்தோர்க்கு கிரங்குப என்னார்*
*கௌவை மேவல ராகிய இவ்வூர்*

***நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ***
***புரைய அல்லஎன் மகட்கெனப் பரைஇ***
***நம்முஉணர்ந் தாறிய கொள்கை***
***அன்னை முன்னர்யாம் என்னிதற்படலே" (அகம்.95:10–15)***

ஓரோடோகத்துக் கந்தரத்தனார் என்னும் சங்கப்புலவர் இப்பாடலடிகளில் 'நிரையப் பெண்டிர்' அலர் கூறுவர் என்னும் பாலைநில மக்களின நம்பிக்கையை வெளிப்படுத்தியுள்ளார்.

**'பொய்ச்சாட்சி கூறல்'**

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய பாலைக்கலிப் பாடலில் 'பொய்ச்சாட்சி கூறல்' என்னும் நம்பிக்கையின் விளைவு கூறப்பெற்றுள்ளன. பொய்ச்சாட்சி கூறுதலை மக்கள் ஒருபோதும் ஏற்றுக்கொள்ளார். இதனைப் பாலிக்கலிப் பாடல் பொய்க்கரி கூறியவன் ஒரு மரத்தின்கீழ் வந்தமர்ந்தால் அந்த மரமே கருகி வாடிப் பட்டுப்போகும் என வலியுறுத்திக் கூறுகின்றது. அப்பாடலடிகள் வருமாறு:

***"கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி***
***எரிபொத்தி என்நெஞ்சம் சுடுமாயின் எவன்செய்கோ?"***
***(கலி.34:10–11)***

இதிலிருந்து பாலைநில மக்களின் பொய்ச்சாட்சி கூறுதல் பற்றிய நம்பிக்கையினை அறியலாம்.

ஐங்குறுநூற்றில் இடைச்சுரத்து உரைத்த பத்தில் ஓதலாந்தையார் இயற்றிய பாலைப்பாடல்வழி 'நல்லோர் பொய்கூறார்' என்னும் பாலைநில மக்களின் நம்பிக்கையைத் தெரியமுடிகின்றது. இடைச்சுரத்துத் தலைவியைத் தேடிப் பின் சென்ற செவிலித்தாய் நல்லோர் பொய் கூறார் என்ற நம்பிக்கையில் கண்டோரிடம் தம் மகளைப் பற்றி வினாவுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. நல்லோர் பொய் கூறார் ஆதலால் இடைச்சுரத்தில் தாம் நல்லோர் என நம்பிய பலரையும் செவிலித்தாய் கைகுவித்து வணங்கித் தன் மகளைப் பற்றி வினாவுகின்றாள். இதுகுறித்த பாடல் வருமாறு:

***"நல்லோ ராங்கட் பரந்துகை தொழுது***
***பல்லூழ் மறுகி வினவு வோயே***
***திண்டோள் வல்வில் காளையொடு***
***கண்டெனை மன்ற சுரத்திடை யாமே" (ஐங்.390)***

**முன்னோர்க்குத் தென்புலக்கடன் செய்தல்**

மாமூலனார் பாடிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடல்வழி பாலைநில மக்களின் 'முன்னோர்க்குத் தென்புலக்கடன் செய்தல்' தொடர்பான நம்பிக்கையைத் தெரியமுடிகின்றது.

வீரம் பொருந்திய குதிரைப் படைகளையும் புறமுதுகிடாத வலிமையையும் கொண்ட உதியஞ்சேரலாதன் என்னும் சேரமன்னன், துறக்கத்தினை அடைந்த அழியாத நல்ல புகழினையுடைய தன் முன்னோர்க்குச் செயற்கரிய தென்புலக் கடனைச் செய்தபோது அவர்க்குப் பலியாகப் பெருஞ்சோறு படைத்தான். அதனை உண்பதற்குப் பேய்களின் சுற்றங்கள் அங்குகூடின என்பதான செய்தி கூறப்பட்டுள்ளது.

*"துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை*
*முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்*
*பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்*
*கூளிச் சுற்றம் குழீஇயிருந் தாங்குக்*
*குறியவும் நெடியவும் குன்றதலை மணந்த*
*சுரனிறந்து தகன்றன ராயினும் மிகநனி" (அகம்.233:7–12)*

**'நற்சொல்கேட்டல்'**

கல்லாடனார் இயற்றிய அகநானூற்றில் பாலைத்திணைப் பாடலில் பிறர் வாய்மொழியாக நற்சொல் கேட்டல் நன்மையைத் தரும் என்னும் வாழ்வியல் நம்பிக்கை இடம்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*"பயந்தரு கொள்கையின் நயந்தலை திரியா*
*நின்வாய் இன்மொழி நன்வா யாக*
*வருவர் ஆயினோ நன்றே வாராது" (அகம்.333:15–17)*

வினைவயிற் பிரிந்த தலைவன் பொருளீட்டும் வினை முற்றுப்பெறாவிட்டாலும் நின்னை அடைந்து பெறும் இன்பத்தை விடுத்துப் பொருள் ஈட்டுவதைப் பெரிதாகக் கருதிக் காலம் தாழ்த்தமாட்டான்; குறித்த பருவத்தில் விரைந்து வருவான் எனக் கூறித் தோழி தலைவியை ஆற்றுப்படுத்தினாள். இதைக் கேட்ட தலைவி தோழியிடம் என் உள்ளத்திற்கு மகிழ்ச்சி தரும் இனிய சொற்கள் பலவற்றைக் கூறினாய்; நின் வாய்ச்சொற்கள் பலித்துத் தலைவன் மீண்டு வருவானாயின் அது மிகவும் நல்லது' என்கின்றாள்.

**‘வேள்விக்குண்டம்’**

எயினந்தை மகனார் இளங்கீரனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் வேள்விக் குண்டம் குறித்த பாலைநில மக்களின் வாழ்வியல் நம்பிக்கை இடம்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

***“கரியாப் பூவிற் பெரியோர் ஆர***
***அழலெழு தித்தியம் மடுத்த யாமை***
***நிழலுடை நெடுங்கயம் புகல்வேட் டாஅங்கு” (அகம்.361:10–12)***

பொருள்வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுரத்தில் தலைவியை நினைத்து அலை மோதும் தன் நெஞ்சினைக் கடிந்து, வாடாத பூக்களைச் சூடிய வானோர்கள் ஆகிய தேவர்கள் உண்ணுவதற்காகத் தீ வளர்க்கும் வேள்விக் குண்டத்தைச் சார்ந்து வைக்கப்பெற்ற யாமை மரமானது தான் முன்பிருந்த குளிர்ச்சிமிக்க பொய்கையில் சென்று புகுவதற்கு விரும்பும் எனக் கூறுகின்றான்.

‘தித்தியம்’ என்பது வேள்விக் குண்டத்தைக் குறிக்கும். இதிலிருந்து பாலைநில மக்களின் வேள்விக்குண்டம் தொடர்பான நம்பிக்கையினை அறியலாம்.

சங்க இலக்கியத்தின் பாலைத்திணைப் பாடல்களில் கனவுகள் குறித்த நம்பிக்கைகளும் சிறுசிறு குறிப்புக்களாக ஆங்காங்கே காணப்படுகின்றன.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய பாலைக்கலிப் பாடலில் மாசில்லா வண்மையை உடைய படுக்கையில் தலைவியோடு புணர்ந்த புணர்ச்சிக் காலத்தே தலைவியின் தோளில் சாய்ந்தவாறே உறங்கிய தலைவன் கனாகண்டு’ குத்தும் கொம்பினைக் கொண்ட யானை நீர் வேட்கையினால், விளங்குகின்ற பேய்த்தேரினை நோக்கி ஓடும் நெடிய மலையில் வெம்மையுடைய கானலைக் கடந்துசென்று நடுவுநிலைமையில் முயற்சி செய்து யான் பொருள் தேடி வரும் வரையில் ஆராய்ந்த கோல் தொழிலினை உடைய செறிந்த கொடியணிந்த முன்கையினை உடையவள் துன்புற்று வாடுதல் கொள்ளாமல், மனையறங்காத்துப் பேணி நிற்க வல்லமை உடையவளோ?’ எனப் பிதற்றிக் கூறியதைத் தலைவி தோழியிடம் கூறினாள். அப்பாடலடிகள் வருமாறு:

***“இன்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்***
***புதுவது பன்னாளும் பாராட்ட யானும்***
***இதுவொன் றுடைத்தென எண்ணி அதுதேர***
***மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுள்***

*பாயல்கொண் டென்றோட் கனவுவார் ஆய்கோல்*
*தொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்*
*கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ*
*விடுமருப் பியானை இலங்குதேர்க் கோடு*
*நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்றெஞ்*
*செய்பொருண் முற்று மளவென்றா ராயிழாய்" (கலி.24:3–12)*

சொல்ல வேண்டியதை நேரடியாகச் சொல்லாமல் குறிப்பாகக் கூறுதற்கும் செயலால் உணர்த்துதற்கும் கனவு பயன்படுகின்றது. தலைவன் பலநாளும் தலைவியைப் புதிது புதிதாகப் பாராட்டினான். இச்செயல் தலைவிக்கு ஐயத்தை ஏற்படுத்திவிட்டது. நனவின் தாக்கங்கள் கனவில் வெளிப்படுதல் இயல்பாகும். இப்பாடலில் தலைவன் கனவில் பிதற்றாமல் தெளிவாகவே தம் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தியுள்ளான். தலைவன் தீயவழியில் அன்றி நடுவுநிலைமையில் பொருள் தேடும் தன் விருப்பத்தைக் கனவில் கூறியுள்ளான்.

ஐங்குறுநூற்றின் பாலைத்திணையில் இடைச்சுரப் பத்தில் ஓதலாந்தையார் இயற்றிய பாடலிலும் பாலைநில மக்களின் கனவு குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளது. அப்பாடல் வருமாறு:

*"எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடைச்*
*சிறிதுகண் படுப்பினுங் காண்குவென் மன்ற*
*நள்ளென் கங்கு னளிமனை நெடுநகர்*
*வேங்கை வென்ற சுணங்கிற்*
*றேம்பாய் கூந்தன் மாஅ யோளே" (ஐங்.324)*

காட்டுத்தீயால் கவர்ந்து உண்ணப்பட்ட, நெடிய பாலைநிலத்தில் உறங்குவதற்குரிய வாய்ப்புக்கள் மிகவும் குறைவே; இப்பாடலின் தலைவன் அப்பாலை நிலத்தில் சிறிதே கண் அயர்ந்து படுத்தான். அச்சிறிய துயிலிலும் அவன் கனா கண்டான். ஆழ்ந்த உறக்கமாதலின் விழித்திருக்கும் போது எந்நேரமும் தலைவியையே நினைத்திருந்த தலைவன் அந்நினைவுகள் வெளிப்படத் தலைவியையே கனவிலும் கண்டான். கனவிலும் நனவிலும் தலைவியின் நினைவாகவே தான் இருந்தமையால் தலைவியை மறந்தேன் என்பதற்கு இடமில்லை எனத் தலைவன் தோழியிடம் கூறுகின்றான்.

கச்சிப்பேட்டு நன்னாகையார் இயற்றிய குறுந்தொகைப் பாடலில் மக்களின் கனவு குறித்த நம்பிக்கை கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

*"…. …. …. …. அல்கற்*
*பொய்வ லாளன் மெய்யுறல் மரீஇய*
*வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட ஏற்றெழுந்து*
*அமளி தைவந் தனனே குவளை"* *(குறுந்.30:2–5)*

இப்பாடலில் கனவு காணும் தலைவி தோழி வாயிலாக வரைவு வேண்டுகின்றாள். தலைவி தன் காதலனாகிய தலைவனைக் கனவில் கண்டு நனவில் காணாமல் கலங்குகின்றாள். தலைவன் தான் குறிப்பிட்ட நாளில் தலைவியை மணந்துகொள்ள வாராமல் காலத்தை நீட்டித்தமையாலும், கனவில் வந்தும் நனவில் காணாமல் தன்னை மறைத்துக்கொண்டமையாலும் தலைவி அவனைப் 'பொய் வல்லாளன்' என்கின்றாள். இதுவே தலைவியின் நிலைகுலைவிற்குக் காரணமாகும். தலைவியின் கனவு, கனவில் மெய்யாகவும் நனவில் பொய்யாகவும் ஆயிற்று. தலைவியின் திருமண ஆசையே இக்கனவிற்குப் பின்புலமாகும்.

கோப்பெருஞ்சோழன் இயற்றிய குறுந்தொகையின் பாலைத்திணைப் பாடலிலும் பாலைநில மக்களின் கனவு குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடல் வருமாறு:

*"வேனிற் பாதிரிக் கூன்மலர் அன்ன*
*மயிர்ஏர்பு ஒழுகிய அம்கலுழ் மாமை*
*நுண்பூண் மடந்தையைத் தந்தோய் போல*
*இன் துயில் எழுப்புதி கனவே*
*எள்ளார் அம்ம துணைப்பிரிந் தோரே"* *(குறுந்.147)*

இப்பாடலில் தன் காதலியைக் கனவில் கொண்டு வந்து காட்டியமைக்காகத் தலைவன் கனவினைப் பாராட்டுகின்றான். கனவு உண்மையில் தலைவியைத் தராததால் தலைவன் 'தந்தோய் போல' என்கின்றான். 'எள்ளார்' என்னும் சொல்லாட்சி 'புகழ்வர்' என்னும் பொருளுடையது. கனவு, தலைவனின் துயில் நீங்குவதற்குக் காரணமாயிற்று. எனினும் அதனை இகழாமல் தலைவியைக் காட்டியமைக்காகப் புகழ்கின்றான். காதலியைக் காட்டிய கனவினை எவரும் இகழார் எனத் தன் உணர்வினை உலகியலில் வைத்துத் தலைவன் கூறுகின்றான். மாமையால் தலைவியின் இயற்கையழகும், பூணினால் அவளது செயற்கை அழகும் சுட்டப்பெற்றுள்ளன. துணையைப் பிரிந்தோர் கனவில் மருட்டிய தலைவியை எள்ளார் என்பதால் தலைவியால் ஏமாற்றப்பட்ட தன்னையே எள்ளுவர் என்கின்றான். தலைவியைக் கனவில் துய்த்த இடமும் அவள் நலமும்

தோன்றப் பாதிரி மரமும் அதன் மலரின் துய்யும் தலைவனால் நினைக்கப்பட்டன. காமம்மிக்க கழிபடர் கிளவியாதலின் தலைவன் கனவினை அழைத்துக் கூறும் கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது. இவ்வாறு கனவு குறித்த மக்களின் நம்பிக்கைகள் பாலைத்திணைப் பாடல்களில் பயின்று வந்திருப்பதைக் காணலாம்.

**வேங்கை மலர் கொய்தல்**

ஐங்குறுநூற்றின் பாலைத்திணையில் செலவுப் பத்தில் ஓதலாந்தையார் இயற்றிய பாடலில் வேங்கை மலர் கொய்யும் பெண்கள் 'புலி புலி' என்று கூச்சலிடுவர்; அக் கூச்சலால் வேங்கை மரம் தணிந்து தாழ்ந்து கொடுக்கும் என்னும் நம்பிக்கை கூறப்பெற்றுள்ளன. அக்கூக்குரல் 'பஞ்சுரம்' என்னும் பண்ணிசையைப் போல இருந்தமையால் வழிச் செல்வோர் அஞ்சினர் என்னும் செய்தியும் இப்பாடலில் கூறப்பெற்றுள்ளன. குறிஞ்சி நிலத்தில் வாழும் குறமகளிர் குறிஞ்சிப்பண் பாடாமல், பாலைக்குரிய பஞ்சுரப்பண்ணைப் பாடக் கேட்ட வழிப்போக்கர் இனி வருவது பாலைநில வழி என அஞ்சினர் எனக் கொள்ளலாம். அப்பாடலடிகள் வருமாறு:

***"வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினு***
***மாரிடைச் செல்வோ ராறுநனி வெரூஉங்" (ஐங்.311:1–2)***

**காக்கை கரைதல்**

ஐங்குறுநூற்றின் பாலைத்திணையில் மறுதரபுப் பத்தில் ஓதலாந்தையார் இயற்றிய பாடலில் காக்கை கரைதல் குறித்த சங்ககால மக்களின் நம்பிக்கை பண்பாட்டியல் பார்வையில் நுணுக்மாக வெளிப்படுத்தப் பெற்றுள்ளன. ;அப்பாடல் வருமாறு:

***"மறுவு றூரவிச் சிறுகருங் காக்கை***
***யன்புடை மரபினின் நின்கிளையோ டாரப்***
***பச்சூன் செய்த பைந்நிண வல்சி***
***பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ;***
***வெஞ்சின விறல்வேற் காளையொ***
***டஞ்சில் லோதியை வரக்கரைந் தீமே" (ஐங்.391)***

தலைவி தலைவனுடன் உடன்போக்கில் சென்றுவிட்டாள். இதனை அறிந்த நற்றாய் தன்மகள் அவள் காதலனுடன் தன் இல்லத்திற்கு மீளல் வேண்டும் என்று விரும்பினாள். அம்மீட்சி நன்னிமித்தமாகக் கரையுமாறு காக்கையை நற்றாய் வேண்டுகின்றாள். அவ்வாறு காக்கை கரைந்தால் அதற்கு உயர்ந்த

உணவைப் பலியாகத் தருவதாகக் காக்கையை இரந்து வேண்டுகின்றாள். தலைவன் தன் மகளின் கேள்வன் என்பதாலும், அவளுக்கு யாதொரு துன்பமும் இன்றி மீட்டுவரும் தறுகண்மையுடையவன் என்பதாலும் அவனை நற்றாய் "வெஞ்சின விறல்வேற் காளை" என்கின்றாள்.

'காக்கை கரைந்தால் விருந்து வரும்' என்பது தமிழக மக்களிடம் பண்டுதொட்டு நிலவிவரும் நம்பிக்கையாகும். காக்கைக்குப் பலியிடலும் தொன்மைக் காலத்திலிருந்து தமிழரிடையே நிலவும் வழக்கமாகும். காக்கை கரைவது மக்களால் நன்னிமித்தமாக நம்பப்பட்டது. ஆந்தையில் குழறல் தீ நிமித்தமாகக் கொள்ளப்பட்டது. ஆதலால் காக்கை கரைவதற்குக் கைமாறாக நல்லுணவு தருவதாகக் கூறுவதைப் போன்று ஆந்தை குழறாமல் இருப்பதற்கும் ஆந்தைக்கு உணவு தருவதாகக் கூறும் சங்க மரபும் உண்டு. இதனை,

***"எம்மூர் வாயில் ஒண்டுறைத் தடைஇய***
***கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய***
***தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்***
***வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை***
***மையூன் தெரித்த நெய்வெண் புழுக்கல்***
***எலிவால் சூட்டொடு மலியப் பேணுதும்***
***எஞ்சாக் கொள்கைஎங் காதலர் வரல்நசைஇத்***
***துஞ்சாது அலமரு பொழுதின்***
***அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றா தீமே"*** ***(நற்.83)***

என்னும் பெருந்தேவனார் நற்றிணையில் இயற்றிய குறிஞ்சித்திணைப் பாடலால் அறியலாம்.

நச்செள்ளையார் குறுந்தொகையின் முல்லைத் திணையில் படைத்துள்ள தோழி தலைவிக்கு விருந்துவரக் கரைந்த காக்கைக்குக் கைம்மாறாகத் தொண்டி நகரத்தில் வயல்களில் விளைந்த வெண்ணெல்லால் சமைத்த இனிய உணவில், நள்ளி என்னும் வள்ளலின் நாட்டிலுள்ள ஆயர்களின் பல பசுக்களும் தந்த அனைத்து நெய்யையும் சேர்த்து ஏழுகலங்களில் கொடுத்தாலும் அது செய்த உதவிக்கு அது சிறிய பலியே என்கின்றாள். அப்பாடல் வருமாறு:

***"திண்தேர் நள்ளி கானத்து அண்டர்***
***பல்ஆ பயந்த நெய்யின் தொண்டி***
***முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு***
***எழுகலத்து ஏந்தினும் சிறிது என் தோழி***

*பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு*
*விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே”* *(குறுந்.210)*

இப்பாடலை இயற்றியதால் நச்செள்ளையார் “காக்கைப் பாடினியார்” என்னும் சிறப்புப் பெயரினைப் பெற்றார்.

**நிமித்தம்**

‘நிமித்தம்’ என்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துதலாகும். இதனை இன்று ‘சகுனம்’ என்கின்றனர். பழந்தமிழர் இதனைப் ‘புள்’ (குறுந்.140:1–3), ‘நிமித்தம்’ [11] என்னும் சொற்களால் குறித்துள்ளனர்.

வருங்கால நிலைமைகளை முன்னறிவிக்கும் அறிகுறியாக நிமித்தங்களைக் கருதுவதனைத் தொன்மைச் சமூகங்கள் முதல் இன்றுவரையுள்ள சமூகங்களின் வாழ்வியல் கூறுகள் உணர்த்தி நிற்கின்றன. செயல்களில் நிகழும் நன்மை தீமைகளை உறுதிப்படுத்தும் நிலையில் அவை நன்னிமித்தம், தீ நிமித்தம் ஆகின்றன. நிமித்தங்கள் பெரும்பாலும் மனிதமனம் முடிவெடுக்க இயலாத சூழ்நிலைகளில் தோன்றுகின்றன. மனிதன் செய்யப்புகும் செயல்களுக்கும் இயற்கையில் நிகழும் நிகழ்வுகளுக்கும் ஒருவிதத் தொடர்பு இருப்பதாக மனிதமனம் கற்பிதம் செய்துகொண்ட நிலையில் நிமித்தக்கூறுகள் தோன்றின. காலப்போக்கில் வாழ்வியலில் தொடர்ந்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளோடு அவ் இயற்கை நிகழ்வுகள் இயைத்து நோக்கப்பட்ட நிலையில் அவை நிமித்தங்களாயின.

“நிமித்தங்கள் நம்பிக்கையின்பாற்பட்டன. நம் செயல்களுக்கும் நம்வயப்படாத இயற்கையின் செயல்களுக்கும் தொடர்பு காட்டுவது நிமித்தங்களின் செயற்பாடாகும். இயற்கை நிகழ்வுகளுக்கும் மனிதனின் செயல்களுக்கும் தொடர்புண்டு என்ற கருத்தேற்றத்தின் அடிப்படையில் அவை நம்பப்படுகின்றன. நிமித்தங்கள் அச்சத்தின் காரணமாகத் தோன்றின. பின்னர் பாதுகாப்புணர்வில் வளர்க்கப்பட்டன. நிமித்தக்கூறுகள் வடிவம் பெறுவதற்கு நிமித்தக் கூறுகளின் வியக்கத்தக்க பண்பியல்புகளே காரணமாகும். இதனைக் காக்கை, ஆந்தை ஆகிய பறவைகள் நிமித்தக் காரணியாகக் கொள்ளப்பட்டமை கொண்டு அறியலாம்” [12] என்பர்.

பறவைகளைப் ‘புள்’ என்னும் பொதுப்பெயரால் சுட்டு வழக்கு தமிழில் உண்டு. சங்க இலக்கியத்தில் நிமித்தத்தையே ‘புள்’ என்ற பெயரால் புலவர்கள்

பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். காலப்போக்கில் பிற நிமித்தக் காரணிகளான உயிரினங்களையும் 'புள்' என்னும் பெயரால் குறிப்பிட்டுள்ளமையை பல்லிநிமித்தமும் நல்லோர் வாய்ச்சொல்லும் புள் என்றே குறிப்பிட்டுள்ளமை கொண்டு அறியலாம். பறவைகளே தொடக்க காலத்தில் நிமித்தக் கூறாகக் கருதப்பட்டன. நிமித்தத்தைக் குறிக்கும் 'சகுனம்' என்ற சொல் வடமொழிச் சொல்லாகும். அச் சொல்லும் பறவையினையே குறித்தது [13] என்பர்.

இதனால் பறவைகளே முதலில் நிமித்தமுணர்த்தும் காரணிகளாக இருந்தமையை அறியலாம். தமிழில் நிமித்தம் பார்த்தல் 'புள்' எனக் கூறப் பெற்றிருப்பதாலும், வேறுபல நிமித்தங்களும் 'புள்' எனக் கூறப்பட்டிருப்பதாலும் தொடக்க காலத்தில் புள் என்ற சொல்லாலேயே நிமித்தத்தைக் குறித்துள்ளனர் என்பது தெளிவு. இன்று சகுனம் பார்த்தல் என்பது பொதுவாக அனைத்து வகையான நிமித்தக் கூறுகளையும் உள்ளடக்கிய ஒன்றாகும்.

நிமித்தங்களை அவற்றின் செயல்விளைவு கொண்டு நன்னிமித்தம், தீ நிமித்தம் என இருவகைப்படுத்தலாம். நற்செயலையும் நற்பயனையும் அறிவிக்கும் குறியினை நன்னிமித்தம் எனலாம். தீய செயல்களையும் தீமைகளையும் அறிவிக்கும் குறியினைத் தீ நிமித்தம் எனலாம். நிமித்தக் கூறுகள் காலத்திற்கும் இடத்திற்கும் சூழ்நிலைகளுக்கும் மக்களின் மனப்போக்குகளுக்கும் தக்கவாறு மாறுபடும். இடி, மின்னல், விண்மீன்கள், காகம், ஆந்தை முதலான பறவைகளின் ஒலிகள், விலங்குகளின் ஓசைகள், இயற்கைக்கு மாறுபட்ட செயல்கள், பறவைகள் இரை கொள்ளல் ஆகியன நிமித்தக் குறிகளாக இலக்கியங்களில் கூறப்பெற்றுள்ளன. நிமித்தங்கள் பெரும்பாலும் நம்மைச் சுற்றியுள்ள பொருட்களின் அடிப்படையிலேயே உருவாகின்றன. பாலைத்திணைப் பாடல்களில் பல்லி ஒலி, கண் துடித்தல், புள் ஒலி, ஓந்தி நிமித்தம், கன்றினை ஈன்ற பசு நிமித்தங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

**பல்லி ஒலி**

கள்ளிக்குடிப்பூதம் புல்லனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாடலில் பல்லிநிமித்தம் தலைவனின் வரவை உணர்த்தும் நன்னிமித்தமாகக் கூறப் பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

***".... .... .... .... ஓங்குமிசை***
***உயர்புகழ் நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி***

***நயவரு குரல பல்லி***
***நள்ளென் யாமத்து உள்ளுதொறும் படுமே"*** ***(நற்.333:9–12)***

*தலைவனது பொருள்வயிற் பிரிவில் ஆற்றாளாகிய தலைவியை ஆற்றுவிக்கும் தோழி உயர்ந்த இடத்தில் விளங்குவதும் உயர்ந்த புகழை உடையதுமான நல்ல இல்லத்தில் ஒளி பொருந்திய சுவருடன் பொருந்தியதாகப் பல்லி விளங்குகின்றது. தலைவனைச் செறிந்த இரவிலே நினைக்குந்தோறும் விருப்பம் தரும் குரலையுடைய அப்பல்லி நல்ல குறிகளை உணர்த்துவதாக ஒலிக்கின்றது எனத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள். பல்லியானது தலைவனை நினைக்குந்தோறும் ஒலித்து அவன் வரவினை அறிவித்தமையால் பல்லியின் குரல் விருப்பத்திற்குரியதாகவும் நல்நிமித்தமாகவும் இப்பாடலில் தோழியால் குறிக்கப்பெற்றுள்ளது.*

*கல்லாடனார் இயற்றிய அகநானூற்றுப் பாடலிலும் பல்லி ஒலி நிமித்தமாகக் கூறப்பெற்றுள்ளது. வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகன் கேட்பத் தலைவியிடம் சென்ற தன் நெஞ்சம், பல அடுக்குகளால் மாண்புற்று விளங்கும் உயர்ந்த மாளிகையில் ஓரிடத்தே நின்று பல்லி சொல்லுந்தோறும் அதனை வாழ்த்திப் பசுவின் கன்றுகள் வீடு திரும்புகின்ற மாலைக்காலத்தில் எம் வரவு பார்த்து நின்ற தலைவியை அடைந்தது எனக் கூறுகின்றான். அப்பாடலடிகள் வருமாறு:*

***"எம்மினும் விரைந்துவல் லெய்திப் பல்மாண்***
***ஓங்கிய நல்லில் ஒருசிறை நிலைஇப்***
***பாங்கர்ப் பல்லி படுதோறும் பரவிக்***
***கன்றுபுகு மாலை நின்றோள் எய்திக்"*** ***(அகம்.9:17–20)***

*இப்பாடலடிகளில் பல்லி ஒலித்தல் நல் நிமித்தமாகக் கூறப்பெற்றுள்ளது.*

*எயினந்தை மகன் இளங்கீரனார் இயற்றிய அகநானூற்றுப் பாடலில், பொருள்வயிற் பிரிவில் தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவன் தனது பிரிவினால் தலைவி எந்நிலையை அடைவாளோ என்று இரங்கித் தன் நெஞ்சிற்குக் கூறும்போது பல்லியிடம் 'நற்சொல் கூறுக' என மனம் நடுங்கித் தலைவி வேண்டுவாள் என வருந்துகின்றான்.*

*"பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி*
*'நல்ல கூறு'என நடுங்கிப்*
*புல்லென் மாலையொடு பொரும்கொல் தானே?" (அகம்.289:15–17)*

தனது பிரிவினால் தலைவி துயிலின்றி வருந்துவாள். அத்தகையவள் பிளந்த வாயினை உடைய பல்லி ஒலிக்கும் போதெல்லாம் தெய்வத்தைத் தொழுது 'நற்சொல் கூறுக' என அதனை வேண்டி மனம் நடுங்கி ஒளியிழந்த மாலைக் காலத்தே வருந்துவாள் எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறிக்கொள்கின்றான். இப்பாடலில் பல்லி ஒலித்தல் தலைவிக்கும் தலைவனுக்கும் மன நடுக்கத்தைக் கொடுப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

மதுரை மருதன் இளநாகனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் முதிய பல்லியின் ஒலிப்பு தீமையை அறிவிப்பதாகக் கூறப்பெற்றுள்ளது. விற்படை கொண்ட போரினை எதிர்கொண்டு வென்று நல்ல புகழை நிலைநாட்டி இறந்துபட்ட நாணத்தையுடைய வீரரது நடுகல்லைப் பொருந்தியிருந்து, கண்ணிமைக்காது உணவிலே கருத்தூன்றிக் கிடந்த முதிய பல்லியானது சிறிது தடை செய்யினும் பெரிய முகபாடம் அணிந்த யானைமீது செல்லும் அரசியராயினும் அவ்விடத்தினின்றும் மேலும் செல்ல நினைக்காமல் திரும்பிச் செல்வர். பல்லி நிமித்தம் தடையாக இருந்தால் மக்கள் எச்செயலையும் செய்யமாட்டார்கள் என்பது சங்ககால மக்களின் நம்பிக்கையாகும். இதுகுறித்த அப்பாடலடிகள் வருமாறு:

***"வில்லீண் டருஞ்சமந் ததைய நூறி***
***நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்***
***நிரைநிலை நடுகல் பொருந்தி இமையாது***
***இரைநசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி***
***சிறிய தெற்றுவ தாயிற் பெரிய***
***ஓடை யானை உயர்ந்தோ ராயினும்***
***நின்றாங்குப் பெயரும் கானஞ்"*** ***(அகம்.387:13–19)***

பொருந்தில் இளங்கீரனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் பொருளீட்டி மீண்டு வரும் தலைவன் இடைச்சுரத்தில் தலைவியை நினைத்து அவளுக்காக இரங்கித் தன் நெஞ்சிற்குக் கூறுவதான பாடலில் பல்லி நிமித்தம் கூறப்பெற்றுள்ளது. தன் வருகையைக் குறித்துத் தலைவி சுவரில் சுழித்த செய்குறியாகிய வட்டத்தை நாள்தோறும் எண்ணி எண்ணிச் சுவர் நனையுமாறு அழுத கண்ணீரானது காதில் அணிந்த பொற்குழை நனையுமாறு தெரித்து வீழும். திருத்தமாகச் செய்யப்பெற்ற அணிகலன்களை உடைய முன்கையைக் கன்னத்தில் வைத்து ஊன்றியவாறு படுக்கையில் தலையணைமீது வருந்தி வீழ்ந்து கிடக்கும் தலைவியது தோளின் மெலிவினைப் போக்கும் மருந்து இதுவென நினைக்கும் பொழுதெல்லாம் ஒலிக்கும் பல்லியானது, நிமித்தத்தைப் போற்றித்

தொழுது வாழும் எம் தலைவியின் செவியின்கண் என் வரவினைக் கூறி அறிவுறுத்துமோ என இப்பாடலின் தலைவன் தன்நெஞ்சிற்கு இரங்கிக் கூறுகின்றான். இதுகுறித்த பின்வரும் பாடலில் பல்லி நிமித்தம் தலைவியின் துன்பத்திற்கு மருந்தாகவும் ஆறுதலாகவும் கூறப்பெற்றுள்ளது.

*"…. …. …. …. தோற்றிய*
*செய்குறி ஆழி வைகறோறு றெண்ணி*
*எழுதுசுவர் நினைந்த அழுதுவார் மழைக்கண்*
*விலங்கிவீழ் அரிப்பணி பொலங்குழைத் தெறிப்ப*
*திருந்திழை முன்கை அணலசைத் தூன்றி*
*இருந்தணை மீது பொருந்துழிக் கிடக்கை*
*வருந்துதோட் பூசல் களையு மருந்தென*
*உள்ளுதொறு படூஉம் பல்லி*
*புள்ளுத்தொழி துறைவி செவிமுத லானே?" (அகம்.351:9–17)*

இவ்வாறு பாலைத்திணைப் பாடல்களில் சங்ககால மக்களின் பல்லி நிமித்தம் குறித்த நம்பிக்கை குறிக்கப்பெற்றுள்ளது.

**கண்துடித்தல்**

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய பாலைக்கலிப் பாடலொன்றில் இடக்கண் துடித்தலும், பல்லி ஒலித்தலும் ஆகிய நிமித்தங்கள் கூறப்பெற்றுள்ளன.

*"இனைநலம் உடைய கானம் சென்றோர்*
*புனைநலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்*
*பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன*
*நல்லெழில் உண்கணும் ஆடுமால் இடனே" (கலித்.11:19–22)*

பொருளீட்டுவதற்காகச் சென்ற தலைவன் என் புனைந்த நலத்தைக் கெடுப்பவன் அல்லன்; நம் மனையிடத்துப் பல்லியும் தலைவன் வரவிற்குப் பொருந்தி ஒலித்தன; என் மையுண்ட கண்ணும் இடப்புறமாகத் துடித்தன எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள். பெண்ணிற்குக் கண் இடப்புறமாகத் துடித்தல் நல்நிமித்தமாகும்.

**புள் நிமித்தம்**

நக்கீரர் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் புள் நிமித்தம் குறித்த செய்தி இடம்பெற்றுள்ளது. தலைவன் பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி,

*“…. …. …. …. கைம்மிகக்*
*கனவுங் கங்குல்தோ றினிய; நனவும்*
*புனைவினை நல்இல் புள்ளும் பாங்கின”* *(அகம்.141:11–3)*

என்கின்றாள். இரவுதோறும் இனிய கனவுகள் அதிகமாகின்றன. பகற்பொழுதில் அலங்கரிக்கப்பெற்ற தொழிற் சிறப்பினை உடைய நல்ல வீட்டில் புள் நிமித்தங்களும் நல்லனவாக அமைகின்றன. என் உள்ளம் தலைவன் வரவை விரும்பி அமைதியுடன் இருக்கின்றது என இப்பாடலின் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

**ஓந்தி நிமித்தம்**

அள்ளூர் நன்முல்லையார் பாடிய குறுந்தொகைப் பாலைப் பாடலில் ஓந்தி நிமித்தம் பார்த்தல் குறித்த செய்தி இடம்பெற்றுள்ளது. தலைவன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ‘நீ ஆற்றுகின்றில்லை’ என்ற தோழிக்குத் தலைவி,

*“வேதின வெரிநின் ஓதி முதுபோத்து*
*ஆறுசெல் மாக்கள் புள்கொளப் பொருந்தும்*
*சுரனே சென்றனர் காதலர் உரன்அழிந்து”* *(குறுந்.140:1–3)*

என்கின்றாள். பாலை வழியில் செல்பவர்க்கு ஓந்தியைத் தவிர நிமித்தம் காண்பதற்கு வேறு எப்பொருளும் இல்லை. இவ் ஊர் தலைவன் பிரிவினால் ஏற்பட்ட துன்பத்தைத் தாங்கியுள்ள தலைவி என்னை அறியுமேயன்றிப் பிரிந்து சென்ற தலைவனைப் பற்றி அறியவில்லை எனத் தலைவி கூறுகின்றாள். தலைவனைப் பிரிந்து வலிமையிழந்து, அவன் வருவான் என்ற நம்பிக்கையில் தலைவி துன்பத்தைத் தாங்கி உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றாள். ஓந்தி, தன்னுடைய செயலை நன்றாகக் கருதியதோ, தீதாகக் கருதியதோ, எத்தகைய நிமித்தத்தைத் தலைவனுக்குக் காட்டியதோ அறியேன் எனத் தலைவி கூறுகின்றாள். ‘முதுபோத்து’ ஆதலின் அதன் நிமித்தம் தனக்கு நன்றாகவே அமையும் எனத் தலைவி நம்புகின்றாள். ஓந்தி, நிமித்தம் காட்டித் தலைவனது பொருட் செலவினைத் தடுத்தபோது வினைமேற் கொண்ட விருப்பத்தால் அவனை ஒரு பொருட்டாகக் கருதமாட்டான் எனத் தலைவி கூறுகின்றாள்.

தலைவன் உரனுடன் வினைமேற் சென்றான் என்றும், தான் உரனழிந்து ஊரார் அலர் தூற்ற உயிர் வாழ்வதாகவும் தலைவி தோழியிடம் கூறுகின்றாள். இப்பாடலில் ஓந்தி நிமித்தமே மையக் கருத்தாக அமைந்துள்ளது.

**கன்றினை ஈன்ற பசு**

*கல்லாடனார் பாடிய குறுந்தொகையின் பாலைப் பாடலில் கன்றினை ஈன்ற பசு தலைவிக்கு நல்ல நிமித்தமாகவும், தலைவனுக்குத் தீய நிமித்தமாகவும் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளது.*

***"குருகும் இருவிசும்பு இவரும்; புதலும்***
***வரிவண்டு ஊத வாய்நெகிழ்ந் தனவே;***
***சுரிவளைப் பொலிந்த தோளும் செற்றும்***
***வருவர்கொல் வாழி தோழி பொருவார்***
***மண்எடுத்து உண்ணும் அண்ணல் யானை***
***வண்தேர்த் தொண்டையர் வழையமல் அடுக்கத்துக்***
***கன்றில் ஓர்ஆ விலங்கிய***
***புன்தாள் ஓமைய சுரனிறந் தோரே"          (குறுந்.260)***

*எப்பொழுதாவது அரிதாக நிகழும் செயல்களே நிமித்தங்கள் ஆகும். எப்பொழுதும் இயல்பாக நடைபெறுகின்ற செயல்கள் நிமித்தங்கள் ஆகா. இப்பாடலில் காலமல்லாத காலத்தில் குருகுகள் உயரப் பறத்தலானும், புதர்களில் போதுகள் இதழ் விரிதலாலும், அவற்றோடு பொருந்தத் தலைவியின் மெலிந்த தோள்கள் வளையொடு செறிதலாலும் தலைவன் விரைந்து வருவான் எனத் தலைவி இவற்றை நல்ல நிமித்தங்களாகக் கொள்ளுகின்றாள். பறவாத காலத்தில் பறந்த குருகும், பூவாத காலத்தில் பூத்த புதரும், செறியாதபோது செறிந்த வளைகளும் தலைவன் வரவினைக் குறித்த நல்ல நிமித்தங்களாகக் கொள்ளப்பட்டன.*

*தன் கன்றை நினைத்துச் செல்லும் பசு இடையில் குறுக்கிடுவதையும், கன்று இல்லாத பசு குறுக்கிடுவதையும் தீய நிமித்தமாகச் சங்ககால மக்கள் கொண்டுள்ளனர். கன்றை ஈன்ற பசுவும் தீய நிமித்தமாகக் கொள்ளப்பட்டது.*

*விசும்பில் குருகு இவர்தல், புதரில் பூ மலர்தல், தோளில் வளை செறிதல் ஆகியவை தலைவிக்கு நல்ல நிமித்தங்கள் ஆவதைப் போன்று, இடைச்சுரத்தில் கன்றை ஈன்ற பசு எதிர்ப்படுதலும் தீய நிமித்தமாகும்.*

*இந்தியப் பண்பாட்டில் 'திராவிடப் பண்பாடு' முக்கியப் பங்காற்றுகின்றது. திராவிடப் பண்பாட்டின் சிறப்பினை அண்மைக்கால ஆய்வுகள் வெளிப்படுத்திய நிலையில், அதன் தொன்மைமிக்க மரபுகளை அறிய முற்பட்ட நிலையில் திராவிடவியல் கல்வி உலகின் பல பகுதிகளிலும் வேரூன்றின. உலகப் பண்பாட்டு வரலாற்றில் தமிழ்ப் பண்பாடும் குறிப்பிடத்தக்க பண்பியல்புகளைக்*

கொண்டிருந்த நிலையினை உணர்ந்த உலகம் வரலாற்று நிலவியல் பின்புலங்களிலும் தமிழ் இலக்கியச் சான்றுகளைக் கவனமாக உற்றுநோக்கியது. ஆய்வுலகம் நாட்டுப்புறக் கதைகள், சமுதாயம் திரித்து மறைத்து வைத்திருக்கும் உண்மைகள் [14] என்னும் சிந்தனையை வெளிப்படுத்தித் தமிழிலக்கியச் சான்றுகளைப் பிற அறிவியல் துறைகளின் ஆய்வு முறைகளோடு இணைத்து நோக்கிப் புதிய கருத்துக்களை வெளியிட்டது. அவற்றில் தென்அமெரிக்கா, ஆஸ்திரேலியா, இந்தியா, ஆப்பிரிக்கா, அண்டார்டிகா ஆகியவை ஒரு காலத்தில் கோண்ட்வாக் கண்டத்தின் பகுதிகளாக ஒன்றினணைந்திருந்தன [15] என்ற ஆய்வு முடிவு சிறப்புடையதாகும்.

இக்கோண்ட்வாக் பெருங்கண்டத்தின் வடபகுதியில் பழந்தமிழர் வாழ்ந்த ‘லெமூரியா’ அடங்கி இருந்ததாகக் கருதுகின்றனர். இதனையே பழந்தமிழ இலக்கியங்கள் ‘நாவலந் தெண்பொழில்’ [16] எனப் பரவலாகக் குறித்துள்ளன. பழந்தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடும் கடல்கோள்கள் உண்மை நிகழ்வுகளே என்ற கருத்தேற்றத்தின் அடிப்படையில் நாவலந்தீவு பல மாறுதலுக்குட்பட்டு அழிந்தும் பிரிந்தும் சிதைந்தும் இருப்பதாகக் கருதுகின்றனர். அவ்வாறு நிகழ்ந்தவற்றுள் மூன்று கோடியே நாற்பது லட்சம் ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த கடல்கோள் லெமூரியவைப் பெரும் மாற்றத்திற்கு உட்படுத்தியதாகக் கூறுவர் [17] இதனை உறுதிப்படுத்தும் நிலையில் உலகின் பல பகுதிகளில் நிலவும் வேறுபட்ட பண்பாடுகளின் ஒருமைப்பாட்டைப் பேணும் சில மரபுகள் ஒத்திருப்பதைக் கொண்டு அறியமுடிகின்றது. இவ்வாறு ஒத்தமைவதற்கு மனித இனம் ஓரிடத்தில் முதன்முதலில் தோன்றியமையே காரணம் எனக் கூறலாம்.

**தமிழர் தாயகம்**

உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியில் குரங்கினத்திலிருந்து மனிதன் தோன்றினான் என டார்வின் உடலமைப்புத் தகவு நிலையில் விளக்கினார். அவ்வாறு மாற்றமடைந்த நிலை கடல்கொண்ட லெமூரியாக் கண்டத்தில் நிகழ்ந்திருக்க வேண்டுமென தாமஸ் ஹக்ஸ்லி, எர்னஸ்ட் ஹெகல் போன்றோர் கருதுகின்றனர். பழந்தமிழ்ப் புலவர்கள் மூத்தகுடியாகத் தமிழ்க் குடியைச் சுட்டியமைக்கு லெமூரியாக் கண்டத்தில் மனித இனம் தோன்றியதே என்ற வரலாற்று உண்மையே காரணமாகும் [18] பழந்தமிழர் வாழ்ந்த நாவலந்தீவைக் கடல் கொள்ளக் கொள்ள மக்கள் வடக்கே இடம்பெயர்ந்த நிலையினை மொழியியல் காரணிகள் மெய்ப்பிப்பதாகக் [19] கூறுவர். இயற்கையின் சீற்றங்களால் நிலப்பகுதி நீர்ப்பகுதியாகவும், நீர்ப்பகுதி நிலப்பகுதியாகவும்

மாறுவது தொடர் நிகழ்வாகும். இதனைப் புகழ்பெற்ற இமயமலை முற்காலத்தில் கடலாக இருந்தமையினை இன்று அப்பனிப்பாறைகளில் கடல்வாழ் உயிரினங்களின் எச்சங்கள் தென்படுவது உணர்த்தும். சிலம்பில் “குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள” [20] எனக் கூறப்பட்டிருப்பது மேற்காட்டிய நாவலந்தீவு அழிந்துவந்த நிலையினைக் குறிக்கும்.

திராவிட மரபினரில் தொன்மையான மரபுப் பின்னணி தமிழர்க்கே உண்டு. இதனை அவர்களின் இலக்கிய இலக்கண வாழ்வியல் சான்றுகளால் அறியலாம். தமிழர்களின் பண்பாட்டு மரபினை உற்றுநோக்கும்போது அவர்கள் தமிழ்மண்ணின் பூர்வீகக் குடிமக்கள் என்ற உண்மை புலனாகின்றது. சமுதாயத்தின் இயல்புப் போக்கிற்குத் தக்கவாறு வடிவம் பெறுவதும், காலப்போக்கிற்கேற்ப மாறுபடுவதும் இலக்கியத்தின் இயற்கைப் பண்பாகும். தமிழின் மொழி மரபுகளும் இலக்கிய மரபுகளும் தமிழ் மக்களின் வாழ்க்கை மரபுகளும் ஆழமாக வேரூன்றி வளர்ந்துள்ளமையைப் பல்வேறு காலங்களில் தோன்றிய தமிழ் இலக்கியங்கள் புலப்படுத்தி நிற்கின்றன. அவ் இலக்கியங்களின் வழியே வாழ்வியல் மரபுகளை இனங்கண்டு அறிந்துணர்த்துவது பண்பாட்டினை அறியும் வாய்ப்பாகும். பண்பாட்டினை அறிவதற்கு இலக்கியச் சான்றுகளே அடிப்படையாகும். இலக்கியச் சான்றுகளைப் பிற வாழ்வியல் சான்றுகளோடு இணைத்து நோக்கி அச்சமுதாயப் பண்பாட்டின் சிறப்பியல்புகளை அறிந்துணர்த்துவது சமூகப் பண்பாட்டு வரலாற்றின் முக்கியப் பணியாகும். அவ்வகையில் தமிழரின் பண்பாட்டு மரபுகளை அவர்களது பழக்க வழக்கங்களைப் பாலைப் பாடல்களில் வழிநின்று ஆராய்வது காலத்தின் அவசியத் தேவையாகின்றது.

**பழக்கம்**

‘பழக்கம்’ என்ற சொல் ‘பழகுதல்’ [21] பயிற்சியாதல் என்னும் பொருளில் தமிழிலக்கியங்களில் தொன்றுதொட்டு ஆட்சி பெற்றுள்ளது. அது செயல்முறையினை அடியொற்றிய தொடக்கநிலையைக் குறிக்கும். பழகிப்போன செயல் சமூக இசைவாணை பெற்று வழங்கி வருவதனையே ‘வழக்கம்’ என்னப்படுகின்றது. இச்சொல்லும் பழந்தமிழ் இலக்கண [22] இலக்கியங்களில்[23] சமூகச் செயல்களைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது. ‘வழக்கம்’ என்ற சொல் சமுதாயம் ஏற்றுக்கொண்ட பழக்கங்களைக் குறிப்பதற்காகப் பயன்பட்டு வளர்ச்சிநிலையில் தோன்றிய சொல்லாகும். ‘பழக்கவழக்கம்’ என்பது சமூகச் செயல்பாட்டு நிலைகளை விளக்கவே இன்று பயன்பாட்டு வருகின்றது. தனிமனித

வழக்கங்களே காலப்போக்கில் சமுதாய வழக்கங்களாகித் தலைமுறைகள்தோறும் இடையறாது நிலைத்த வாழ்வினைப் பெறுகின்றன.

'பழக்கம்' என்பது ஒரு கற்கும் செயலாகும். இது தனிமனிதனிடம் இயல்பாக வந்தமையும் நடத்தையைக் குறிக்கும். நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக்கூடியதாக மாறிவிடும். இச்செயலையே பழக்கம் என்பர் [24] பழக்கம் செயல்களை எளிய முறையில் பிழையின்றிச் செய்ய உதவுவதுடன் முயற்சி, காலம், வினையாற்றல் ஆகியனவற்றை மிச்சப்படுத்தித் தருகின்றது. நல்ல பழக்கங்களைக் குழந்தைப் பருவத்திலிருந்து கற்றுக்கொடுக்க வேண்டும்.

**வழக்கம்**

பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கமாகும். அது சமூகச் சார்புடையது. ஓர் இனத்தின் சிறுபகுதியினரோ, சிற்சில நாட்டினரோ, அவருள்ளும் ஒருசிறு வகுப்பினரோ, தனித்தனியான ஆட்களோ குறிப்பிட்ட செயல்களை ஒழுங்காகச் செய்து வருவதையே வழக்கம் என்றனர். அது ஒழுக்கத்தாலும் செயல்களாலும் உருவாவது. இயற்கையும் செயற்கையும் இணையும் கூட்டுறவால் நிலைபெறுவது. விருப்பு, வெறுப்புக்களைக் கொண்டது. ஒரு வழக்கம் செல்லக்கூடியதாக இருக்க வேண்டுமாயின் அது பண்டைக்காலம் முதல் இடையீடின்றித் தொடர்ந்து வழக்கில் வருவதுடன் அறிவுக்கு ஒத்ததாகவும் இருக்க வேண்டும். சமூகத்தில் மிகுதியாகப் பின்பற்றப்படும் பழக்கமான நடவடிக்கைகளே வழக்கமாகும். 'வழக்கத்தின் முக்கியப் பண்புகளாக ஒரு நிலையான நடவடிக்கை, வழிமுறை, சமூகப்பண்பு, சரி தவறு என்ற மதிப்பீட்டுத் தீர்வு ஆகிய காரணிகளைச் சமூகவியலார் குறிப்பிடுவர்.[25] பேக்ஹாட் என்பவர் வழக்கமே மனித சமூக வாழ்க்கையின் முதற் கட்டுப்பாடு என்றார். 'மக்களை ஒன்றுபடுத்தவும் அவர்களுடைய நடவடிக்கைகளை ஒத்த தன்மைபெறச் செய்யவும், சுயநல எண்ணங்களைக் கட்டுப்படுத்தவும், இத்தகைய கட்டுப்பாட்டிற்கு ஆட்படாதவர்களை ஒதுக்கித்தள்ளவும் தேவையான திறமையும் உறுதியும் வாய்ந்த வழக்கங்களை உருவாக்கிக்கொண்ட சமூகங்கள் மட்டுமே நிலைத்துநிற்க முடியும் [26] அவை போட்டியில் வெற்றி பெற்றுப் பிழைத்து நிற்பதைக் கில்பர்ட் பாஸ்கல் குறிப்பிடுகின்றார். இவருடைய கருத்தை ஆழமாகச் சிந்திக்கும்போது வழக்கம் இயல்பாகச் செயற்படுதல், வலுக்கட்டாயமாகச் செயற்பட வைத்தல் என்னும் இரு பண்புகளைக் கொண்டிருப்பதை அறியலாம். வழக்கங்கள் ஒரு குழுவின் விருப்பங்கள், இலட்சியங்கள், வாழ்க்கைப் பார்வைகளைப்

பிரதிபலிப்பதாகவும் அமைகின்றன. வழக்கங்களை அது பற்றிய நிகழ்வுகளை வைத்தே முடிவு செய்ய வேண்டும்.

**பழக்க வழக்கம்**

பழக்க வழக்கங்களைத் தனிமனிதனும் சமுதாயம் என்ற அமைப்பும் இணைந்தே உருவாக்குகின்றன. மக்களின் தேவைகளின் அடிப்படையிலேயே பழக்க வழக்கங்கள் தோன்றுகின்றன. அவை சமுதாயத்தால் ஏற்கப்படும் நிலையில் வழக்கங்களாகின்றன. 'தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைப் பழக்கம் எனவும், இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி உணர்ச்சி ஆகியனவற்றுடன் இயைந்து நிற்பதை வழக்கம்' எனவும் கூறுவர்.[27] தனிமனிதன் ஒருவன் பழகிப்போன முறையில் திரும்பத் திரும்பச் செய்து வரும் ஒரு குறிப்பிட்ட செயலைப் பல மனிதர்கள் ஒன்றாகச் சேர்ந்து செய்யும் பொழுது அது வழக்கம் என்றாகின்றது.[28] இதனால் பழக்கத்தைத் தனிமனிதனைச் சார்ந்த தொடக்கநிலை எனவும், வழக்கத்தைச் சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் கொள்ளலாம்.

**மரபு**

'மரபு' என்பது எழுதப்படாத சட்டமாகும். இது சமூகத்தின் உள ஒருமைப்பாட்டால் உருவாக்கப்படுவது. மரபுகள் சமுதாய நலன் கருதி ஏற்பட்டவை. 'மரபு' என்பதற்கு வழக்கமாகத் தலைமுறைதோறும் பின்பற்றப்படுவது எனப் பொருள் கொள்ளலாம். ஒவ்வொரு சமூகமும் தமக்கெனச் சில தனித்த சமூக மரபுகளைக் கொண்டிருக்கின்றன. ஒரு சமுதாய மரபினைப் பிறதொரு சமுதாய மரபு கட்டுப்படுத்துவதில்லை. மரபுகள் சமுதாயந்தோறும் மாறுபடினும் அவை அச்சமுதாயங்களின் சிறப்புக்களைக் கட்டிக் காப்பதால் மானுட சமுதாயம் இன்றும் அவற்றைப் போற்றிப் பாதுகாத்து வருகின்றன.

ஒரு சமுதாயத்தின் மரபுகளைப் பிறிதொரு சமுதாயத்தின் மரபுகளோடு இயைத்துக் காண்பது சமூக விதிக்கு மாறுபட்டதெனினும் ஓரினப்பட்ட சமூக மரபுகளை ஒன்றுபடுத்திக் காண்பது தனிப்பட்ட சமூகங்களின் மனநிலையை அறியும் வாய்ப்பாகின்றது. மரபினை மீறுவது சட்டப்படி குற்றமில்லை. எனினும் சமுதாய வாழ்வியல் நியதிப்படி குற்றமாகும். எனவேதான் மரபினை மீறுவோர் சமுதாயத்தால் தனித்து ஒதுக்கி வைக்கப்படுகின்றனர். அவர்களுக்குரிய தண்டனையைச் சமூகம் என்னும் கூட்டுநிறுவனம் கொடுக்கின்றது.

பழக்கம், வழக்கம், மரபு ஆகியன ஒன்றோடொன்று உறவுடையன. ஒன்றன் வளர்ச்சிநிலையே மற்றொன்றின் தொடர்ச்சியாக அமைகின்றது. பழக்கவழக்க மரபுகளை எளிதில் மாற்ற இயலாது. அவை கால, இட, சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு அமையும். இம் மரபுகளே சமுதாய நியதிகளாக மக்களால் ஏற்கப்படுகின்றன. ஆதலால் பழக்கத்தைத் தனிமனிதச் சார்புடையதாகவும், வழக்கத்தைச் சமுதாயச் சார்புடையதாகவும், மரபுகளைச் சமுதாயம் விதிக்கும் கட்டுப்பாடுகளாகவும் கொள்ளலாம். பழக்கத்தைத் தொடக்கநிலையாகவும், வழக்கத்தைத் தொடர்நிலையாகவும், மரபுகளை முதிர்நிலையாகவும் கொள்ளலாம்.

இத்தகைய பழக்க வழக்கங்களைச் சங்க இலக்கியத்தின் பாலைத்திணைப் பாடல்கள் தனித்தன்மையோடு வெளிப்படுத்தினும் நானிலப் பழக்க வழக்கங்களும் அப்பாடல்களில் பரவலாகக் கூறப்பெற்றுள்ளன.

**கருவுற்றபெண் மண் தின்றல்**

ஓதலாந்தையார் ஐங்குறுநூற்றில் அமைந்த இடைச்சுரப்பத்தில் இயற்றியுள்ள பாடலொன்றில் கருவுற்ற பெண் மண் தின்னும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

> ***“வள்ளெயிற்றுச் செந்நாய் வயவுறு பிணவிற்குக்***
> ***கள்ளியங் கடத்திடைக் கேழல் பார்க்கும்” (ஐங்.323:1–2)***

‘வயவு’ என்பது கருவுற்ற பெண்ணுயிர்களுக்கு ஏற்படும் ஆசையாகிய நோயைக் குறிக்கும். ‘பிணவு’ என்பது விலங்கினப் பெண்பாற் பெயராகும். கருவுற்ற பெண்ணுக்கும் பெண் விலங்கிற்கும் பெண் பறவைகளுக்கும் தோன்றும் ஆசை பற்றிய ஒரு நோயே வயவு நோயாகும். இந்நோய் பெண் உயிர்களின் விருப்பம் காரணமாக ஏற்படுவதாகும். இவ்வாறு கருவுற்ற பெண்களும் பெண் விலங்குகளும் பெண் பறவைகளும் மண் தின்னல், புளிப்புச் சுவையுள்ள உணவுப் பொருட்களை விரும்புதல் போன்ற பழக்கத்தினைக் கொண்டிருக்கும். கருவுற்ற பெண்களிடம் இன்றும் மண் தின்னும் பழக்கம் காணப்படுகின்றது.

இப்பாடலில் கருவுற்ற பெண் செந்நாய்க்குத் தன் அன்பின் மிகுதியால் உணவு தேடிச் சென்ற ஆண் செந்நாய் அதன் வயவு நோயைத் தணிப்பதற்காகக் கள்ளிச்செடிகள் நிறைந்த காட்டில் மறைந்து நின்று கருவுற்ற பெண் செந்நாய்க்கு விருப்பமான ‘கேழல்’ என்னும் காட்டுப்பன்றியின் வரவிற்காகக் காத்திருக்கும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது. ஏனெனில் கருவுற்ற பெண் செந்நாய் ‘கேழல்’ என்னும் காட்டுப்பன்றியின் இறைச்சியினை விரும்பித் தின்னும்.

**உடன்போக்கும் தலைவி சிலம்பு கழித்தல்**

கயமனார் இயற்றிய நற்றிணைப் பாலைப் பாடலில் உடன்போக்கிற்கு உடன்பட்ட தலைவி தன் காலில் அணிந்துள்ள சிலம்பணியைக் கழற்றும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது. சிலம்பின் பரல்கள் ஒலித்துத் தலைவி இல்லத்தை விட்டு வெளியேறுவதை இல்லத்தார்க்குக் காட்டிக்கொடுத்து விடுமாகையால் தலைவி தன் காலில் அணிந்துள்ள இச்சிலம்பணியைக் கழற்றும் பழக்கத்தைக் கைக்கொள்கின்றாள்.

*“நெற்தெரி யியக்கம் வெளில்முதன் முழங்கும்*
*வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கா*
*லரிஅமை சிலம்பு கழீஇ பல்மாண்*
*வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்”* *(நற்.12:3–6)*

தயிர்ப்பானையில் முடைநாற்றம் தீர விளம்பழத்தை இட்டுவைத்துள்ளனர். அதன் மணம் கமழ்கின்றது. அத்தயிர்ப்பானையை மத்துடன் கூடிய கயிறு ஆடித் தேய்த்தலால் மத்தின் தண்டு தேய்ந்திருக்கின்றது. வெண்ணெய் தோன்றத் தயிரைக் கடைதலால் தறியடியில் ஓசை முழங்குகின்றது. இத்தகைய இருள் தீரும் வைகறைப் பொழுதில் தலைவி தன் உடலைப் பிறருக்குத் தெரியாதவாறு மறைத்து தன் காலில் அணிந்துள்ள பருக்கைக்கல் இட்டு நிரப்பப்பெற்ற சிலம்பணியைக் கழற்றினாள். அச்சிலம்பணியை பல மாட்சிமைப்பட்ட வரிந்து புனைந்த பந்தோடு ஒருசேர வைக்கச் சென்றாள்.

இவ்வாறு இப்பாடலடிகளில் உடன்போக்கிற்கு உடன்பட்ட தலைவி தன் சிலம்பணியைக் கழற்றிப் பந்தில் வைத்துவிட்டு வைகறைப் பொழுதில் உடன்போக்குச் செல்லும் பழக்கம் கூறப்பெற்றுள்ளன.

**ஆயர்கள் பசுக்களின் கழுத்தில் மணிகட்டுதல்**

ஆவூர்க் காவிதிகள் சாதேவனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப்பாடலில் ஆயர்கள் பசுக்களின் கழுத்தில் மணியைக் கட்டிவிடும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“வேய்பயில் இறும்பின் கோவலர்யாத்த*
*ஆபூண் தெண்மணி இயம்பும்*
*உதுக்காண் தோன்றுமெம் சிறுநல் ஊரே”* *(நற்.264:7–9)*

உடன்போக்கு மேற்கொண்ட தலைமக்கள் மீண்டுவரும் காலத்தில் தலைவன் தலைவியிடம் ‘ஊர் தோன்றிற்று. சிறிது விரைந்து செல்க’ என

வழியிடை வருத்தம் தோன்றாதவாறு கூறும் இப்பாடலடிகளில் ஞாயிறு மேற்கில் மறைந்ததால் ஒளி குன்றியது. இவ்வேளையில் மூங்கில் நிறைந்த சிறுமலையில் ஆயர்கள் பசுக்களின் கழுத்துகளில் கட்டிய தெளிந்த ஓசையையுடைய மணிகள் ஒலிக்கின்றன. நம் சிறிய நல்லூர் தோன்றுகின்றது என்கின்றான். இப்பாடலடிகளில் ஆயர்கள் பசுக்களின் கழுத்துக்களில் மணிகளைக் கட்டிவிடும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

**நடுகல் நடுதல்**

ஐங்குறுநூற்றில் வரவு உரைத்த பத்தில் அமைந்த ஓதலாந்தையார் இயற்றிய பாடலொன்றில் நடுகல் நடும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*"விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோ*
*ரெழுத்துடை நடுக லன்ன விழுப்பிணர்ப்*
*பெருங்கை யானை யிருஞ்சின முறைக்கும்" (ஐங்.352:1–3)*

விழுமிய அம்பு தொடுத்தலைத் தொழிலாகக் கொண்ட மறவர் தம் வில்லிலிருந்து விடுத்த அம்பினால் உயிர் நீத்து வீழ்ந்த கரந்தை வீரர் பொருட்டுப் பெயரும் பீடும் பொறித்து நடுகல் நடுதல் சங்க காலத்தில் பாலைநில மக்களின் பழக்கமாகும். அம்பினால் வீழ்ந்தோர் தம் பசுக்களை மீட்பதற்காக வெட்சியாருடன் போரிட்ட மறவர் ஆவர். இவ்வாறு இறந்துபட்ட கரந்தை மறவர்க்குத் தமர் பெருமை செய்வதற்காக அவர் பெயரையும் பெருமையையும் பொறித்துக் கல்நட்டு வழிபடுவது சங்ககால மக்களின் பழக்கமும் வழிபாட்டு மரபும் ஆகும்.

**நடுகல்லில் பெயர் எழுதுதல்**

மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் பொருள்வயிற் பிரிந்து சென்ற தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குக் கூறும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*".... .... .... .... நம்வயின்*
*இருங்கவின் இல்லாப் பெரும்புல் தாடிக்*
*கடுங்கண் மறவர் பகழி மாய்த்தென*
*மருங்குல் நுணுகிய பேஎமுதிர் நடுகல்*
*பெயர்பயம் படரத் தோன்று குயிலெழுந்து*
*இயைபுடன் நோக்கல் செல்லா தசைவுடன்*
*ஆறுசெல் வம்பலர் விட்டனர் கழியுஞ்" (அகம்.297:4–10)*

இப்பாடலடிகளில் நடுகற்களில் இறந்தவர்களின் பெயர்களை எழுதி வைக்கும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது. அழகிழந்த பொலிவற்ற தாடியினையும் அஞ்சாமையையும் கொண்ட மறவர்கள் தம் அம்புகளை அச்சம் தரும் நடுகல்லில் தீட்டுவர். இதனால் பக்கம் தேய்ந்து மெலிந்து போன நடுகல்லில் மறவர்களின் பெயரும் பெருமையும் விளங்கத் தோன்றுமாறு பொறிக்கப்பட்ட எழுத்துக்களை ஒன்றுசேர்த்துப் பொருட் பொருத்தமுடன் படிக்க இயலாதவர்களாக வழிநடை வருத்தத்தால் தளர்ச்சியுடன் செல்லும் வழிப்போக்கர்கள் அதனை விடுத்துச் செல்கின்றனர். இப்பாடலடிகளில் நடுகல்லில் இறந்த மறவரின் பெயரும் பீடும் எழுதி வைக்கும் பழக்கம், மறவர்கள் தம் அம்புகளை நடுகல்லில் தீட்டிக் கூர்மையாக்கும் பழக்கம் முதலியன குறித்த செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

**நடுகல்லில் மயில்தோகை சூட்டி வேல் நடுதல்**

நோய்பாடியார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் வெட்சியாருடன் போரிட்டு வீர மரணம் அடைந்த கரந்தை மறவர்களுக்கு நடப்பட்ட நடுகல்லில் மயில் தோகை சூட்டி, அதன்முன் வேல் நடும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

***"நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்***
***பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்***
***பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்***
***வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்"*** ***(அகம்.67:8–11)***

கரந்தை மறவர்கள் அரத்தினால் போழ்ந்து அராவப்பட்ட முனையைக் கொண்ட பற்களையுடைய அம்புகளையும் இடுக்கிக் குறிபார்க்கும் நுண் பார்வையினையும் உடையவர்கள். அவர்கள் பருக்கைக் கற்கள் உள்ள அகன்ற மேட்டுநிலத்தில் நெல்லி மரங்களைக் கொண்ட நீண்ட இடங்களில் இருட்டுவேளையில் தம் ஆனிரைகளை மீட்கவேண்டி வெட்சியாருடன் போரிட்டு வென்று வீரமரணம் அடைந்தனர். நடுகற்களில் மானம் மிக்க அக்கரந்தை மறவர்களது பெயரினையும் ஆற்றலையும் பொறித்து வைத்தனர். மயில்தோகையினைச் சூட்டிய அந்நடுகற்களின் முன்னர் வேல்களை ஊன்றினர்; அதன்கண் கேடகத்தைச் சாத்தினர். இது செல்லும் வழிதோறும் பகைவர் போர்முனை இருப்பைப் போன்று காட்சி தந்தது.

போரில் விழுப்புண்பெற்ற சிறந்த மறவர்க்கு நாட்டும் கல்லே நடுகல் ஆகும். "நடுகல் பிறங்கிய உவலிடு பறந்தலை" (புறம்.352:3) என்னும் புறநானூற்றுப் பாடலடியால் தழைகள் இடப்பட்ட பாழ்பட்ட இடங்களில் நடுகற்கள்

நடப்பட்டதை அறியலாம். நடுகற்களில் இறந்துபட்ட மறவர்தம் பெயர், ஆற்றல் போன்ற செய்திகள் பொறிக்கப்பட்டன. அக்கற்களில் மயில்தோகையினைச் சூட்டி அவற்றின் முன் வேலினை ஊன்றி அவற்றின்கண் கேடகத்தைச் சாத்துவர் என்பதையும், அக்கற்களைக் கைதொழுது வழிபடும் பழக்கம் சங்ககால மக்களிடம் இருந்தது என்பதையும் இதனால் அறியலாம்.

**நடுகற்களில் பயண வழிகளைக் குறித்தல்**

மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலொன்றில், நடுகற்களில் வழிச்செல்வோர்க்குப் பயண வழிகளைக் குறித்துக் காட்டும் பழக்கம் இருந்தமை சுட்டிக்காட்டப் பெற்றுள்ளது.

***"மரங்கோள் உமண்கன் பெயரும் பருதிப்***
***புன்றலை சிதைத்த வன்றலை நடுகற்***
***கண்ணி வாடிய மண்ணா மருங்குற்***
***கூருளி குயின்ற கோடுமாய் எழுத்தவ்***
***வாறுசெல் வம்பலர் வேறுபயம் படுக்கும்"      (அகம்.343:4–8)***

பொருள்வயிற் பிரிவை மேற்கொண்ட தலைவன் இடைச்சுரத்து மீளக் கருதிய தன் நெஞ்சிற்கு, கானகத்துப் பாறையிலுள்ள நடுகல்லை அவ்வழிச் செல்லும் உப்பு வணிகரது வண்டிச் சக்கரத்தின் பூண் சிதையச் செய்யும்; சூட்டப்பெற்ற மாலை வாடப்பெற்றதும், கழுவித் தூய்மை செய்யப்பட்டதுமாகிய இடத்தின்கண் கூரிய உளியால் செதுக்கப்பட்ட கோடுகள் தேய்ந்து அழிந்த எழுத்துக்கள் அவ்வழியில் செல்லும் உண்மைக்கு மாறான வேறு பொருளையும் வழியையும் அறிவிக்கும் எனக் கூறுகின்றான். இதிலிருந்து நடுகல்லில் பயண வழிகளைக் குறிக்கும் வழக்கம் சங்ககாலத்தில் இருந்ததை அறியலாம். இது தற்காலத்தில் சாலைகளில் நடப்படும் மைல்கல்லினை ஒத்ததாகும்.

**நடுகல்லின் முன் வேல் ஊன்றுதல்**

மதுரை மருதன் இளநாகனார் என்னும் சங்கப்புலவரின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் நடுகல்லின் முன்னர் வேல் ஊன்றும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

***"வீளை அம்பின் விழுத்தொடை மழவர்***
***நாளா உய்த்த நாமவெஞ் சுரத்து***
***நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்***
***கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்***

*பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்*
*பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்*
*வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்"* *(அகம்.131:6–12)*

வெட்சியாருடன் போரிட்டு ஆனிரைகளை மீட்டுவரச் சென்ற கரந்தையார் அச்சுரவழியைக் கடந்து நெடுந்தொலைவு நடந்து வந்தமையால் தம் தாயருடன் செல்ல இயலாமல் நடை தளர்ந்து நின்றுவிட்ட கன்றுகளின் கண்ணின் கருமணியின் கடையினின்றும் சிந்துகின்ற கண்ணீரைத் துடைத்து அவற்றின் துயரத்தைப் போக்கினர். நிரைமீட்ட இறந்துபட்ட கரந்தையோரின் பெயரும் பெருமையும் பொறித்து, மயிற்பீலி சூட்டப்பெற்று விளங்கும் சிறப்பினைக் கொண்ட நடுகல்லின்முன் ஊன்றிய வேலும் அதன்கண் சார்த்தப்பெற்ற கேடகமும் செல்லும் வழிதோறும் வேற்று மன்னரது போர்முனையை ஒத்துக் காணப்படும் அச்சம் தரும் இயல்பினைக் கொண்டது எனப் பொருளீட்ட விரும்பிய தன் நெஞ்சிற்குத் தலைவன் கூறுகின்றான். இவ்வகையில் சங்ககாலத்தில் நடுகல்லின் முன்னர் வேல் ஊன்றும் பழக்கம் இருந்தமையை அறியலாம்.

**கரந்தை மறவருக்கு நடுகல் நாட்டுதல்**

கோடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனார் என்னும் புலவர் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் கரந்தை மறவருக்கு நடுகல் நடும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*"கான்புலந்து கழியும் கண்ணகன் பரப்பின்*
*விடுவாய்ச் செங்கணைக் கொடுவில் ஆடவர்*
*நல்நிலை பொறித்த கல்நிலை அதர*
*அரம்புகொள் பூசல் களையுநர்க் காணாச்*
*சுரம்செல விரும்பினி ராயின் இன்நகை"* *(அகம்.179:6–10)*

கொடிய பாலைநிலத்தின்கண் எய்தால் தப்பால் செல்லும் தன்மையுடைய அம்புகளையும் வளைந்த வில்லினையும் கொண்ட கரந்தை மறவரின் பெயரும் பீடும் எழுதப்பெற்ற நடுகற்கள் நடப்பட்டுள்ள வழிகளில் குறும்பர்கள் செய்யும் கலகத்தை அடக்குவார் இல்லை எனத் தோழி தலைவனிடம் கூறி அவன் பொருள்வயிற் பிரிவைத் தடுக்கின்றாள். இப்பாடலடிகள் கரந்தை மறவருக்கு நடுகல் நடுப்பழக்கத்தைச் சுட்டிக்காட்டுகின்றன.

**பாலைவழியில் நடுகல் நடுதல்**

*மதுரை மருதன் இளநாகனார் என்னும் புலவர் இயற்றிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் பாலை வழியில் நடுகல் நடும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

***"அத்த நடுகல் ஆளென உரைத்த***
***கான யானை....."*** ***(அகம்.365:4–5)***

*பாலை வழியில் நடப்பட்டுள்ள நடுகல் யானைக்கு உண்மையான மனிதன் நிற்பதாகத் தோன்றியது. காட்டு யானை அந்த நடுகல்லை ஆளெனக் கருதி உதைத்தது. இதிலிருந்து நடுகல் சங்ககாலத்தில் மனித வடிவிலும் செய்யப்பட்டிருக்கலாம் என உய்த்துணரலாம். எவ்வாறாயினும் சங்ககால மக்கள் பாலை வழியில் நடுகல்லை நடும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதை அறியமுடிகின்றது.*

**இறைவனுக்கு நாட்பலி இடுதல்**

*சங்க காலத்தில் சிற்றூர்களில் வாழ்ந்த மக்கள் இறைவனுக்கு நாட்பலி கொடுக்கும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதைக் குடவாயிற் கீரத்தனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலால் அறியலாம்.*

***"சுரையிவர் பொதியில் அம்குடிச் சீறூர்***
***நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகை***
***புரிசை மூழ்கிய பொரியரை ஆலத்து"*** ***(அகம்.287:5–7)***

*சுரைக்கொடி படர்ந்த பொதியிலின் கண் அழகிய குடிகளைக் கொண்ட சிறிய ஊரில் வாழபவர்கள் வான் பொய்த்தமையால் நாள்தோறும் இறைவனுக்கு இடுகின்ற விடியற்காலைப் பலியை இட மறந்தனர். அதனால் பலிபீடம் பொலிவின்றிப் பாழ்பட்டுக் கிடந்தது என்று பொருள்வயிற் பிரிந்து சென்ற தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். இதிலிருந்து சங்ககால மக்கள் நாள்தோறும் இறைவனுக்கு நாட்பலி இடும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதை அறியமுடிகின்றது.*

**பாலைக் கலத்தில் கொள்ளுதல்**

*தலைவன் பிரிவுடைத் தலைவியை ஆற்றுவித்த தோழிக்குத் தலைவி கூறுவதாக வெள்ளிவீதியார் இயற்றிய குறுந்தொகையின் பாலைத்திணைப் பாடலில் சங்ககால மக்கள் கன்று உண்டு எஞ்சிய பாலைக் கலத்தில் கொள்ளும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

*“கன்றும் உண்ணாது கலத்தினும் படாது*
*நல்யான் தீம்பால் நிலத்துஉக் காஅங்”* *(குறுந்.27:1–2)*

**தலைவன் மார்பில் சுடர்ப்பூண் அணிதல்**

ஐங்குறுநூற்றின் வரவு உரைத்த பத்தில் ஓதலாந்தையார் இயற்றியுள்ள பாலைப் பாடலில் தலைவன் தன் மார்பில் சுடர்ப்பூண் அணியும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“எரிக்கொடி கவைஇய செவ்வரை போலச்*
*சுடர்ப்பூண் விளங்கு மேந்தெழி லகல”* *(ஐங்.353:1–2)*

‘எரிக்கொடி’ என்பது ஒருவகையான சோதிக் கொடியாகும். இது தீச்சுடர்களின் வரிசையில் அடங்கும். மலையில் தீப்பற்றும் பொழுது இக்கொடி வரிசையாக ஒளிவிட்டு எரியும். தலைவன் மார்பு மலை போல் உயர்ந்தது. அவன் மார்பில் கிடந்த பூண் ஆரம் ஒளிவிட்டு எரிக்கொடி போன்று இருந்தது என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

**யானையைப் பொற்கயிற்றால் பிணித்தல்**

ஐங்குறுநூற்றின் வரவு உரைத்த பத்துப் பாடலில் சங்ககாலத்தில் செல்வந்தர் யானையைப் பொற்சங்கிலியினால் பிணிக்கும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“உள்ளுதற் கினிய மன்ற செல்வர்*
*யானை பிணித்த பொன்புனை கயிற்றி*
*னொள்ளெறி மேய்ந்த சுரத்திடை*
*உள்ளம் வாங்க தந்தநின் குணனே”* *(ஐங்.356)*

என்ற இப்பாடலில் ‘செல்வர்’ என்பது அரசரைக் குறிக்கும். அரசரின் யானையாதலின் அவர்தம் செல்வச் செருக்குத் தோன்றத் தம் யானையைப் பொற்சங்கிலியால் பிணிக்கும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர் எனப் புலவர் குறிப்பிட்டுள்ளார். இப்பாடலில் பொன் என்பது தங்கத்தைக் குறிக்காது; அது செம்பு அல்லது இரும்புச் சங்கிலியாக இருக்கலாம்.

**சீழ்க்கை (சீட்டி) ஒலியெழுப்புதல்**

நக்கீரர் இயற்றியுள்ள பாலைப் பாடலில் கோவலர்களின் சீட்டியடிக்கும் (சீழ்க்கை ஒலியெழுப்பும்) பழக்கம் கூறப்பெற்றுள்ளது. இப்பாடலில் வடுகர் பெருமகனாகிய எருமை என்பானின் புகழ் பேசப்பட்டுள்ளது.

கோவலர்தம் சீழ்க்கை ஒலியினைக் கேட்டறிந்து பசுவினத்தைத் தம்முடன் அணைத்து அழைத்துவரும் அசையும் திமில் கொண்ட காளைகளின் சருக்கரை பொருந்திய கழுத்தில் தாழத் தொங்கவிடப்பட்ட, உட்துளையினை உடைய மூங்கில் குழாய்கள் நிறையுமாறு இட்டுவைத்த உணவினை உடைய கூட்டமிக்க கோவலரது தொழுவங்களைக் கைப்பற்றி, அவற்றிலிருந்த கன்றுகளையுடைய பசுக்கூட்டத்தைத் தம் மன்றுகள் நிறையுமாறு கவர்ந்து வந்தவன் எருமை என்னும் வடுகர் பெருமகன் ஆவான் என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது.

*"கணஞ்சால் கோவலர் நெடுவிளிப் பயிரறிந்து*
*இனம்தலைத் தரூஉந் துளங்கிமில் நல்லேற்றுத்*
*தழூஉப்பிணர் எருத்தந் தாழப் பூட்டிய*
*அம்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த*
*துறுகாழ் வல்சியல் தொழுவறை வௌவி*
*கன்றுடைப் பெருநிரை மன்றுநிரை தரூஉம்"* *(அகம்.253:12–17)*

இதிலிருந்து கோவலர் சீழ்க்கை ஒலியெழுப்பும் பழக்கத்தையும் அதனைக் கேட்டுக் காளைகள் பசுவினத்தை அணைத்துக் கூட்டமாக அழைத்து வருவதையும் அறியலாம்.

**கள்ளினைப் பலியாகக் கொடுத்தல்**

தாயக்கண்ணனார் இயற்றிய அகநானூற்றுப் பாடலில் வடுகரது நாட்டில் கள்ளாகிய நறவினைப் பலியாகக் கொடுக்கும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்*
*இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு*
*ஓங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்க்*
*கொய்குழை யதிரல் வைகுபுலர் அலரி*
*சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி*
*இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை*
*நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்*
*வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து"* *(அகம்.213:1–8)*

வேங்கடமலை, போர்த்தொழில் பயிற்சி பெற்ற யானைகளைக் கொண்ட வெல்லும் போர்மேல் செல்லும் தொண்டையர்க்கு உடைமையானது. தலைவன் பொருள்தேடச் செல்லும் இடம் இவ் உயர்ந்த வேங்கடமலைக்கு அப்பால் உள்ளது. கொய்யத்தகும் தளிர்களைக் கொண்ட காட்டு மல்லிகையின் வைகறைப் பொழுதில் மலரும் மலர்களைத் தம் சுருண்ட கரிய மயிரில் வண்டுகள்

மொய்க்குமாறு சூடிக்கொண்டு, போர்முனையில் பகைவரை வென்று அவர்தம் பசுக்கூட்டத்தை ஆனேறுடன் கவர்ந்துகொண்டு வந்தமைக்காக வெட்சியார்க்கு விடியற்காலத்தே முதிர்ந்த கள்ளாகிய நறவினைப் பலியாகக் கொடுக்கும் வெண்மையான நிணச்சோற்றினை உணவாகக் கொள்வது வடுகர் நாடாகும் எனக் கூறப்பட்டுள்ளது.

**பறையறைதல்**

மாமூலனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் சங்ககால மக்களின் பறையறையும் பழக்கம் கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

***"ஒண்கதிர்த் திகிரி உருளிய குறைத்த***
***அறையிறந் தவரோ சென்றனர்***
***பறையறைத் தன்ன அலர்நமக் கொழித்தே"*** ***(அகம்.281:11–13)***

தலைவனது பொருட்பிரிவில் வேறுபட்ட ஆற்றாளாகிய தலைவியின் நிலையைக் கண்டு தோழி ஆற்றாமையால் வருந்தினாள். அத்தோழிக்குத் தலைவி, வானளாவிய பெரியமலையினைப் பிளந்து வழியை ஏற்படுத்தியமையால் அவ்வழி பாறைகளைக் கடந்து பறைமுழங்கினாற் போன்று ஊரெங்கும் பரந்து வெளிப்படும் பழிச்சொற்களைத் தனக்கென்று விட்டுவிட்டுத் தலைவன் சென்றுவிட்டான் என்கின்றாள். இப்பாடலடிகளில் சங்ககால மக்களின் பறையறையும் பழக்கம் கூறப்பெற்றுள்ளன.

**அந்தணர்கள் வேள்வி செய்தல்**

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் சங்ககாலத்தில் வாழ்ந்த அந்தணர்களின் வேள்வி நடத்தும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது. பருவம் கண்டு ஆற்றாத தலைவியின் நிலையைக் கண்டு ஆற்றாதவளாகிய தோழி தானும் ஆற்றாதவளாகித் தலைவியிடம்,

***"கேள்வி அந்தணர் கடவும்***
***வேள்வி யாவியின் உயிர்க்குமென் நெஞ்சே"*** ***(கலி.36:25–26)***

என்கின்றாள். நூற்கேள்வி வல்ல அந்தணர் விருப்பத்துடன் நடத்தும் யாகத்தில் தோன்றும் புகையைப் போலத் தானும் தலைவனது செயலுக்காக நெட்டுயிர்ப்பு விடுவதாகத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள்.

**'யா' மரப்பட்டைகளைக் கொண்டு 'தீ' மூட்டுதல்**

*உறையூர் மருத்துவன் தமோதரனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாடலில் உமணர்கள் 'யா' மரப்பட்டைகளைக் கொண்டு 'தீ' மூட்டும் வழக்கம் கூறப்பெற்றுள்ளன.*

***"மிசைமரஞ் சேர்த்திய கவைமுறி யாஅத்து***
***நாரரை மருங்கின் நீர்வரப் பொளித்துக்***
***களிசுவைத் திட்ட கோதுடைத் ததரல்***
***கல்லா உமணர்க்குத் தீமூட் டாகும்" (அகம்.257:15-18)***

*தலைவியை உடன்போக்கில் அழைத்துச்செல்லும் தலைவன் அவளது நடையாற்றலைக் கண்டு வியந்து பாராட்டி இவ்வாறு கூறுகின்றான். தளிர்களையுடைய கவர்ந்த கிளைகளைக் கொண்ட யா மரத்தின் அடிப்பகுதியில் களிறானது அதன் நாரினை நீர் வருமாறு உரித்துச் சுவைத்துப் போட்ட சக்கையாகிய சிதைந்த மரப்பட்டைகள் அவ்வழியில் செல்லும் கல்வி அறிவு இல்லாத உப்பு வணிகர்க்குத் தீ மூட்டும் சுள்ளிகளாகப் பயன்படும் என்பது இப்பாடலடிகளின் கருத்தாகும்.*

**உப்பு மூட்டைகளைக் கழுதை மீது ஏற்றிச் செல்லுதல்**

*மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலில் உமணர்கள் வணிகத்திற்காக உப்பு மூட்டைகளைக் கழுதைகளின் மீது ஏற்றுச்செல்லும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

***"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்***
***உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்***
***குடபுல மருங்கின் உய்ம்மார், புள்ளோர்த்துப்***
***படையமைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்***
***நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்***
***குறைக்குளம்பு உதைத்த கல்பிறழ் இயவின்" (அகம்.207:1-6)***

*தெய்வம் உறையும் கடலினது நீர் பரவிய உப்பளத்தில் விளைந்து, நன்கு காய்ந்து உலர்ந்த அமிழ்தமாகிய வெண்ணிற உப்பினை, படைக்கலன்களைக் கையில் கொண்டெழுந்த வீரச்செயல்கள் புரியும் உமணர்கள் மூட்டைகளாக அடுக்கி, அவ் உப்பு மூட்டைகளை வெண்ணிறக் கழுத்தினைக் கொண்ட கழுதைகளின் மீது ஏற்றிக்கொண்டு நிமித்தம் பார்த்து அவற்றை மேற்குத் திசைகளிலுள்ள ஊர்களுக்குக் கொண்டுசெல்வர் எனத் தன் மகளை உடன்போக்கில் விடுத்த தாய் தன்னுள் வருந்திக் கூறுகின்றாள்.*

*இப்பாடலடிகளில் உமணர்கள் வெண்கல் அமிழ்தமாகிய உப்பினைக் கழுதைகளின் மீதேற்றி வணிகத்திற்குக் கொண்டுசெல்லும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

**நெற்றியில் பொட்டு வைத்தல்**

*இளங்கீரனார் இயற்றியுள்ள நற்றிணையில் பாலைப் பாடலில் தலைவி நெற்றியில் பொட்டு வைக்கும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது. முன்னொரு காலத்தில் பொருள்வயிற் பிரிந்து மீண்டு வந்த தலைவன் பின்னும் பொருட்பிரிவு வழிப்பட்ட தன் நெஞ்சிற்குச் செலவு அழுங்குவித்துப் பின்வருமாறு கூறுகின்றான்.*

***"குன்றூர் மதியம் நோக்கி நின்றுநினைந்து***
***உள்ளினேன் அல்லெனோ யானே முள்ளெயிற்றுத்***
***திலகம் தைஇய தேங்கமழ் திருநுதல்***
***எமது முண்டோர் மதிநாள் திங்கள்"*** *(நற்.62:4–7)*

*மூங்கில்கள் நீண்டு வளர்ந்த காட்டு வழியில் குன்றத்தை நோக்கிச் செல்லும் நிலவினைக் கண்ட தலைவன் சிறிது நேரம் நின்று நினைத்துப் பார்த்து முள் போன்ற கூரிய பற்களையும் திலகமிட்ட மணங்கமழும் நெற்றியினையும் கொண்ட கலை நிரம்பிய நிலவு ஒன்று தம்மிடத்திலும் உண்டு என்று தலைவியை நினைத்துக் கூறுகின்றான்.*

*நிலவைப் பொட்டிட்ட பெண்ணின் முகத்திற்கு உவமை கூறும் மரபு திருமுருகாற்றுப்படையில்,*

***"திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்"*** [29]

*எனவும், நிலவைப் பெண்ணின் முகத்திற்கு உவமையாகக் கூறுதல் திருக்கோவையாரில்,*

***"மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேற் காதலை வாழி மதி"*** [30]

*எனவும் கூறப்பட்டிருப்பது ஒப்புநோக்கத்தக்கதாகும்.*

**மகளிர் பாதங்களுக்கு செம்பஞ்சிக்குழம்பு தடவுதல்**

*மதுரை மருதன் இளநாகனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைத்திணையில் பாடலொன்றில் சங்ககாலப் பெண்கள் தம் பாதங்களுக்குச் செம்பஞ்சிக் குழம்பினைத் தடவும் வழக்கத்தைக் குறித்துள்ளார். களவொழுக்கத்தில்*

இடையூறு நேர்ந்தமையால் தலைவியைத் தலைவனுடன் உடன்போக்கு அனுப்பிய தோழி தலைவனிடம்,

***“புன்னுகும் பெடுத்த நன்னெடுங் கானத்து***
***ஊட்டு பஞ்சிப் பிசிர்பரந் தன்ன***
***வண்ணம் மூதாய் தண்நிலம் வரிப்ப***
***இனிய ஆகுக தணிந்தே***
***இன்னா நீப்பின் நின்னொடு செலற்கே”            (அகம்.283:13–17)***

எனக் கூறுகின்றாள். மகளிர் (பாதங்களுக்கு) ஊட்டுகின்ற செம்பஞ்சிக் குழம்பின் சிதரல் போன்ற இந்திரகோபப் பூச்சிகள் காட்டு நிலத்தினைக் கவின்பெறச் செய்யவேண்டும். தலைவன் தலைவியுடன் உடன்போக்குச் செல்லும் கானகம் வெப்பம் தணிந்து இனிமைபெற வேண்டும் எனத் தோழி தலைவனிடம் கூறுகின்றாள்.

மதுரை ஆசிரியன் கோடங்கொற்றன் இயற்றிய குறுந்தொகையின் பாலைப் பாடலிலும் சங்ககாலப் பெண்கள் தம் பாதங்களுக்குச் செம்பஞ்சிக் குழம்பினைத் தடவும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது. மகட்போக்கிய செவிலித்தாயின் கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது.

***“கழிய காவி குற்றும் கடல***
***வெண்தலைப் புணரி ஆடியும் நன்றே***
***பிரிவுஇல் ஆயம் உரியதொன்று அயர***
***இவ்வழிப் படுதலும் ஒல்லாள் அவ்வழிப்***
***பால்பாழ் படுப்பச் சென்றனள் மாதோ***
***செல்மழை தவழும் சென்னி***
***விண்ணுயர் பிறங்கல் விலங்குமலை நாட்டே”    (குறுந்.144)***

தலைவி தலைவன் மேல் கொண்ட காதலால் தன்னை எஞ்ஞான்றும் பிரியாத ஆயமகளிரைப் பிரிந்து செல்லத் துணிந்தனள். ஆயத்தார் தலைவிக்கு ஒப்பனை செய்யும்போது அவளுடைய பாதங்களுக்குச் செம்பஞ்சிக் குழம்பினைத் தடவுவார். அத்தகைய கால்கள் பாலைநிலத்தில் எவ்வாறு நடக்கக்கூடும் எனச் செவிலித்தாய் வருந்துகின்றாள். தலைவி நெய்தல் நிலத்தவள் என்பதைப் ‘புணரி ஆடி’ என்ற தொடரும், தலைவன் குறிஞ்சி நிலத்தவன் என்பதை ‘பிறங்கல் விலங்குமலை நாடு’ என்ற தொடரும் வெளிப்படுத்துகின்றன.

**கால்களில் செருப்பு அணிதல்**

குடவாயிற் கீரத்தனார் என்னும் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் சங்ககாலத்தில் பாலைநிலத்தில் வாழ்ந்த மறவர்கள் தம் கால்களில் செருப்பு அணியும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*"கலங்குமுனைச் சீறூர் கைதலை வைப்பக்*
*கொழுப்பா தின்ற கூர்ம்படை மறவர்*
*செருப்புடை அடியர் தெண்சுனை மண்டும்*
*அருஞ்சுரம் அரிய வல்ல வார்கோல்" (அகம்.129:11–14)*

என்பன அப்பாடலடிகளாகும். கூர்மையான படைக்கலன்களைக் கொண்ட வரும் காலில் செருப்பினை அணிந்தவருமான மறவர்கள் அச்சிற்றூரில் வாழும் மக்கள் தம் தலைகளில் கைவைத்து அழுது புலம்புமாறு அவர்தம் கொழுத்த ஆனிரைகளைக் கவர்ந்து சென்று அவற்றைக் கொன்று தின்று நீர்வேட்கையால் தெளிந்த சுனைநீரை மிகுதியாகப் பருகும் பாலை வழிகளைக் கடந்து தலைவன் பொருளீட்டச் சென்றான் எனத் தலைவிக்குத் தோழி கூறுகின்றாள்.

ஓரோடகத்துக் கந்தரத்தனார் இயற்றியுள்ள பாடலிலும் உப்பு வணிகர் தம் கால்களில் செருப்பு அணியும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது. தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறிச் செலவு அழுங்குவிப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

*"அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ*
*எரிஇதழ் அலரியொடு இடைபட விரைஇ*
*வெண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணி*
*தோல்புதை சிரற்றுஅடிக் கோலுடை உமணர்*
*ஊர்கண் டன்ன ஆரம் வாங்கி*
*அருஞ்சுரம் இவர்ந்த அசைவுஇல் நோன்தாள்" (அகம்.191:1–6)*

துய்யினை உச்சியில் கொண்ட பாலைநிலத்துப் பாதிரிப்பூவினைத் தீப்போன்ற இதழினையுடைய அலரிப்பூவுடன் இடையிடையே கலந்து வளம் பொருந்திய தாழம்பூவின் மடலோடு வைத்துக் கட்டிய வண்டுகள் மொய்க்கும் மாலையைச் சூடியவர்களாகிய உப்பு வணிகர் செருப்பு ஒலிக்கும் சாலினையும் பகடு ஓட்டும் கோலினையும் உடையவர்கள் என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

இப்பாடலடிகளில் உப்புவணிகர் தம் கால்களில் செருப்பு அணியும் வழக்கம் கூறப்பெற்றுள்ளன.

**'வடுகர்' கள்ளுண்டு மகிழ்தல்**

*மாமூலனார் புலவர் இயற்றிய பாடலில் சங்க காலத்தில் வாழ்ந்த வடுகர்கள் கள்ளுண்டு மகிழும் வழக்கம் கூறப்பட்டுள்ளது. பிரிவிடை வேறுபட்ட தலைவிக்குத் தோழி,*

***"தொடைஅமை பகழித் துவன்றுநிலை வடுகா***
***பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கும்" (அகம்.295:13–14)***

*எனக் கூறுகின்றாள். வலிமைமிக்க வில்லில் நன்கு தொடுத்த அம்புகளைக் கொண்ட வடுகர்கள் கள்ளுண்டு மகிழ்ந்து செருக்கும் ஆரவாரம் செய்யும் இடனான வேற்றுமொழி வழங்கும் தேயத்தைக் கடந்தும் தலைவன் சென்றுள்ளான் எனத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள். இப்பாடலடிகளில் 'வடுகர்' கள்ளுண்டு மகிழும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

**கொள்ளிக்கட்டையால் யானையை விரட்டுதல்**

*எருமை வெளியனார் என்னும் புலவர் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப்பாடலில் சங்க காலத்தில் தினைப்புனத்தைக் காவல் செய்தோர் இரவு நேரத்தில் தினையைக் கவரவரும் யானைகளைக் கொள்ளிகட்டையை வீசி விரட்டும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

***"மடிபதம் பார்க்கும் வயமான் துப்பின்***
***ஏனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப்***
***பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி***
***விடுபொறிச் சுடரின் மின்னிஅவர்***
***சென்ற தேஎத்து நின்றதால் மழையே" (அகம்.73:13–17)***

*சிறிய தினைப்புனைத்தைக் காவல் செய்யும் வலிமைமிக்க சிங்கம் போன்ற ஆற்றல் கொண்ட கானவன், பரண் மேல் அமர்ந்தவாறு இருண்ட நிறம் கொண்ட யானை சோர்வடையும் காலத்தைப் பார்ப்பான். கைப்பிடியையும் தலையிடத்தே தீயையும் கொண்ட அவன் கையில் உள்ள கொள்ளிக்கட்டையை வீசும்போது சுடர்ப்பொறியை போல மின்னல் மின்னி மழை பெய்து நின்றது.*

**'மழவர்' சீழ்க்கை ஒலியெழுப்புதல்**

*மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் சங்ககாலத்தில் வாழ்ந்த மழவர் சீழ்க்கை ஒலியெழுப்பும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

*“வீளை அம்பின் விழுத்தொடை மழவர்*
*நாளா உய்த்த நாமவெஞ் சுரத்து*
*நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்*
*கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்”      (அகம்.131:6–9)*

என்ற இப்பாடலடிகளில் ‘வீளை’ என்பது சீழ்க்கை ஒலியைக் குறிக்கும். தலைவன் தான் கடந்து செல்லும் காடு சீழ்க்கை ஒலியெழுப்பும் மழவரது அம்பின் தப்பாத தொடையினை உடைய வெட்சி சூடிய மறவர்கள் விடியற்காலையில் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துகொண்டு செல்லும் அச்சம் தரும் கொடிய பாலைவழி என்கின்றான்.

**குந்தாலியால் குழிதோண்டுதல்**

எயினந்தை மகனார் இளங்கீரனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் கோவல் குந்தாலியால் கிணறு தோண்டும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“கடற்ற மருங்கின் கணிச்சியிற் குழித்த*
*உடைக்கண் நீடமை ஊறல் உண்ட*
*பாடின் தெண்மணிப் பயங்கெழு பெருநிரை”    (அகம்.399:6–8)*

என்ற இப்பாடலடிகளில் குறித்த ‘கணிச்சி’ என்பது குந்தாளியைக் குறிக்கும். பசுக்கூட்டங்கள் பலவற்றைக் கொண்ட கோவலர் மலைக்காட்டினைச் சார்ந்த பகுதியில் குந்தாலியால் கிணறு தோண்டினர். அக்குழியில் ஊறிய நீரைக் குடித்த மணிகள் அணிந்த பால் தரும் பசுக்கள் வறண்ட பாலை நிலத்திற்குள் சென்றனவாகக் கூறப்பட்டுள்ளது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் கோவலர் கிணறு தோண்டும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“பயநிரை சேர்ந்த பாணாட் டாங்கண்*
*நெடுவிளிக் கோவலர் கூவல் தோண்டிய*
*கொடுவாய்ப் பத்தல் வார்ந்துகு சிறுகுழி*
*நீர்காய் வருத்தமொடு சேர்விடம் பெறாது*
*பெருங்களிறு மிதித்த அடியகத்து இரும்புலி”    (அகம்.155:7–11)*

பால் தரும் பசுக்கள் நிறைந்த பாழ்பட்ட நாட்டின் பல இடங்களிலும் அப்பசுக்கள் நீர் குடிப்பதற்காக நீண்ட சீழ்க்கை ஒலியெழுப்பும் கோவலர், தாம் தோண்டிய கிணற்றிலிருந்து வளைந்த வாயினை உடைய ‘பத்தல்’ என்னும்

கருவியால் இறைத்த நீர் ஒழுகிச் சென்று சிறுகுழியில் நிரம்பியது என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். 'கூவல்' என்பது கோவலர் தோண்டிய சிறு கிணறு ஆகும்.

**எருதுபூட்டிய வண்டியைப் பயன்படுத்துதல்**

முள்ளியூர்ப்பூதியார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் உப்பு வணிகர் எருது பூட்டிய வண்டிகளைப் பயன்படுத்தும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*"…. …. …. …. பலபுரி*
*வார்கயிற் றொழுகை நோன்சுவல் கொளீஇப்*
*பகடு துறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ"* *(அகம்.173:8–10)*

உப்பு வணிகர் பல புரிகளையுடைய நீண்ட கயிற்றால் கட்டப்பட்ட வண்டிகளை எருதுகளின் வலிய கழுத்தில் பூட்டுவர். ஏற்றமான இடங்களில் வண்டிகளை ஓட்டும்போது வண்டிகளில் பூட்டிய எருதுகளை அதட்டி ஓசை எழுப்புவர் எனக் கூறப்பட்டுள்ளது.

**வீரக்கழல் அணிதல்**

உடன்போக்கில் செல்லும் தலைமக்களின் நிலைஅறிந்து அவர்களை இடைச்சுரத்தில் கண்டோர் வருந்திச் செவிலித்தாயிடம் கூறுவதாகப் பெரும்பதுமனார் என்னும் இயற்றிய குறுந்தொகையின் பாடலில் ஆடவர்தம் கால்களில் வீரக்கழல் அணியும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*"வில்லோன் காலன கழலே; தொடியோள்*
*மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்*
*யார்கொல்? அளியர் தாமே ஆரியர்"* *(குறுந்.7:1–3)*

உடன்போக்கின் இடையூறுகளை எதிர்கொண்டு நீக்குவதற்காகத் தலைவன் வில்லேந்தியவனாக முன் செல்கின்றான். அத்தலைவன் பகைவரை வென்று அவர்தம் தலைவடிவம் பதித்த கழலினை இடக்காலிலும், தம் குடிக்குரிய அடையாளம் பொறித்த கழலினை வலக்காலிலும் அணிந்துள்ளான். தலைவன் தலைவியை மணந்துகொள்ளவில்லை என்பதைக் கண்டோர் அவள் காலில் இருந்த சிலம்பினால் அறிந்துகொள்கின்றனர் என்பதாகப் பாடலில் கூறப்பட்டுள்ளது.

**மாலையில் விளக்கேற்றுதல்**

இளங்கீரனார் இயற்றிய நற்றிணையில் பாலைத்திணைப் பாடலில் மாலை நேரத்தில் பெண்கள் தம் வீடுகளில் விளக்கேற்றி வைத்து வழிபடும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*".... .... .... .... யுள்ளிய*
*வினைமுடித் தன்ன இனியோள்*
*மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே" (நற்.3:7–9)*

இப்பாடலடிகளில் இனிமைப் பண்புகளையுடைய தலைவி மாலை நேரத்தில் தம் வீட்டில் விளக்கினை ஏற்றி வழிபட்டு தலைவன் பொருளீட்டி இன்னும் வரவில்லையே எனத் துன்புற்றிருக்கும் செய்தி கூறப்பெற்றுள்ளது. இதிலிருந்து சங்க காலத்தில் பெண்கள் மாலைநேரத்தில் வீடுகளில் விளக்கேற்றும் பழக்க வழக்கத்தைக் கொண்டிருந்தனர் என அறியலாம்.

**தயிர்ப்பானையில் விளம்பழம் இடுதல்**

கயமனார் இயற்றிய நற்றிணைப் பாலைப் பாடலில் தயிர்ப்பானையின் முடைநாற்றம் தீருவதற்காக விளம்பழத்தை இட்டு வைக்கும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*"விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசிப்*
*பாசந் தின்ற தேய்கான் மத்த*
*நெய்தெரி யியக்கம் வெளில்முதன் முழங்கும்" (நற்.12:1–3)*

**பகைவர் பல்லைக் கோட்டைக் கதவில் பதித்து வைத்தல்**

பொய்கையார் இயற்றிய நற்றிணைப் பாலையில் பாடலில் பகைவனைக் கொன்று அவன் பல்லைக் கொண்டுவந்து தம் கோட்டை வாசல் கதவில் பதித்து வைக்கும் சங்ககால மன்னர்களின் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*".... .... .... .... மூவன்*
*முழுவலி முள்ளெயி றழுத்திய கதவிற்*
*கானலந் தொண்டிப் பொருநன் வென்வேல்*
*தெறலருந் தானைப் பொறையன் பாசறை" (நற்.18:2–5)*

சேர மன்னானாகிய கணைக்காலிரும்பொறை மூவன் என்பவனைப் போரில் வென்றான். மூவனின் வலிமையுடைய முள்போன்ற பற்களைப் பிடுங்கிக் கொண்டுவந்து தம் கோட்டை வாசல் கதவில் வைத்து இழைத்தான். இது சங்ககால மன்னர்களின் போர் மற்றும் வீரம் சார்ந்த பழக்கவழக்கமாகும். இவ் வழக்கம் மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலிலும் கூறப்பட்டுள்ளது.

*"கல்லா எழினி பல்லெறிந்து தழுத்திய*
*வன்கண் கதவின் வெண்மணி வாயில்" (அகம்.211:13–14)*

கன்றுகளையும் அடிகளையும் கொண்ட யானைக்கூட்டம் ஆழமான பள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டன. அவற்றை மீட்பதற்காக எழினி என்பான் வாராது போயினன். இதனையறிந்த சோழ மன்னன் பெருஞ்சினம் கொண்டான். அவனைப் பிடித்துவரச் சோழ மன்னன் மந்தி என்பவனை அனுப்பினான். மந்தி தொலைதூர நாட்டிற்குச் சென்று முதற்போரிலேயே எழினியைப் பிடித்து அவன் பல்லைப் பறித்துவந்து வெண்மணி என்னும் ஊரினது வலிமை பொருந்திய கோட்டைவாயில் கதவில் பதித்தாள். இவ்வாறு பாலைத்திணைப் பாடல்களில் சங்ககால மன்னர்கள் பகைவர்களை வென்று அவர்தம் பற்களைத் தம் கோட்டைவாயில் கதவுகளில் பதித்து வைக்கும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

**தலைவன் வேலில் மயிற்பீலி சூட்டி மணியை அணிவித்தல்**

பொருள்வயிற் பிரியும் தலைவன் தன் பொருட்பிரிவுக்கு ஆயத்தமாக வேலில் மயிற்பீலி சூட்டி மணியை அணிவிக்கும் வழக்கம் நற்றிணையின் பாலைப் பாடலில் கூறப்பெற்றள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*“.......... ......... .......... நெறிப்பட*
*வேலும் இலங்கிலை துடைப்ப பலகையும்*
*பீலி சூட்டி மணிய மவ்வே” (நற்.177:4–6)*

தலைவன் ஒழுங்குபடுமாறு வேலின் விளங்கிய இலையைத் துடைத்தான். அத்துடன் கிடுகினையும் மயிற்பீலி சூட்டி மணியை அணிவித்தான். இதிலிருந்து தலைவனின் பொருள்வயிற் பிரிவைக் குறிப்பாக அறிந்து கொள்கின்றாள்.

**யாழ் இசைத்தல்**

நற்றிணையின் பாலைத்திணைப் பாடலொன்றில் வருத்துகின்ற சினம் கொண்ட தெய்வத்தின் முன்னர், அத்தெய்வத்தின் சினத்தைத் தணிவிப்பதற்காகப் பாணர் சிறிய யாழின் நரம்பை இசைத்து அமைதிப்படுத்தும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*“.... .... .... .... சென்னியர்*
*தெறலருங் கடவுள் முன்னர் சீறியாழ்*
*நரம்பி இசைத்தன்ன இன்குரல் குருகின்” (நற்.189:2–4)*

**யாழிசைத்தல்**

பாணர் தம் வருத்தம் நீங்கச் சிறிதுநேரம் யாழிசைத்து மன அமைதி பெறும் வழக்கம் நற்றிணைப் பாலைப் பாடலில் கூறப்பெற்றுள்ளது.

*“கானம் வெம்பிய வறங்கூர் கடத்திடை*
*வேனில் ஓதி நிறம்பெயர் முதுபோத்துப்*
*பாண்யாழ் கடைய வாங்கிப் பாங்கர்” (நற்.186:3–5)*

**சூதாடுதல்**

தலைவனது பிரிவால் வருந்திய தலைவி கூறுவதாக நற்றிணையின் பாலைத்திணையில் காமக்கணிப் பேலையார் இயற்றியுள்ள பாடலில் சங்ககால ஆண்களின் சூதாடும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்*
*கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு*
*அகறல் ஓம்புமின் அறிவுடை யீரெனக்*
*கையறத் துறப்போர்க் கழறுவ போல*
*மெய்கூற இருந்து மேவர நுவல*
*இன்னா தாகிய காலை பொருள்வயின்*
*பிரியல் ஆடவர்க்கு இயல்பெனின்*
*அரிதுமன் றம்ம அறத்தினும் பொருளே?” (நற்.243:4–11)*

சோலைகளில் பூப் போன்ற கண்களை உடைய குயில்கள் தங்கியிருந்தன. இக்குயில்கள் தலைவியரைச் செயலறும்படிக் கைவிட்டுத் துறந்து செல்லும் இயல்புடையோரை இடித்துரைப்பதைப் போல ஆணும் பெண்ணுமாகக் கூடிக் கூவுகின்றன. அவை, “அறிவுடையீரே சூதாடு கருவி பெயர்ந்து விழுவதைப் போன்று நிலையில்லாதது பொருள்; இப்பொருளை ஈட்டுதலே வாழ்க்கை எனக் கொண்டு நும் மனைவியரைப் பிரியும் செயலைச் செய்யாமல் சேர்ந்திருங்கள்’ என்பது போலக் கூவுகின்றன. பிரியும்போதே இன்னாமையைச் செய்யும் இவ் இளவேனிலில் பிரிதலே ஆடவர்க்கு இயல்பு போலும், அறத்தைவிடப் பொருள் சிறந்ததன்று எனக் குயில்கள் ஆடவர்க்கு அறிவுறுத்துகின்றன.

**காக்கைக்குப் பலிச்சோறு வைத்தல்**

கழார்க்கீரன் எயிற்றியார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் சங்ககால மக்களின் காக்கைக்குப் பலிச்சோறு வைக்கும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“மாசுஇல் மரத்த பலிஉண் காக்கை*
*வலிபொரு நெடுஞ்சினை தளியொடு தூங்கி*

*வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்*
*நல்வகை மிகுபலிக் கொடையோடு உகுக்கும்*
*அடங்காச் சொன்றி அம்பல் யாணர்*
*விடக்குடைப் பெருஞ்சோறு உள்ளுவன இருப்ப”* *(நற்.281:1–6)*

என்பன அப்பாடலடிகளாகும். மாசற்ற மரத்திலிருந்து மக்கள் இடும் பலிச்சோற்றை உண்ணுகின்ற காக்கை காற்று மோதும் நெடிய கிளையிலிருந்து தன்மேல் விழுகின்ற மழைத்துளியோடு அசைந்து கொண்டிருக்கும். வெறி கொள்ளும் போரையுடைய சோழரது கழார் என்னும் ஊரில் கொள்ளப்பெறும் நல்ல பலிச்சோற்றுக் கொடையோடு அளிக்கப்பெறும் அளவிலலாத சோற்றை புதிய ஊன் துண்டங்களோடு கூடிய பெருவிருந்தாகப் பெறுவதற்கு அக்காக்கைகள் காத்திருக்கும் எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள். இப்பாடலடிகளில் காக்கைக்குப் பலிச்சோறிடும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

**பகைவர் ஊரைத் தீயிட்டு எரித்தல்**

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள கலித்தொகை பாலைக்கலிப் பாடலில் பகைவேந்தன் ஊரைத் தீயிட்டு எரிக்கும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம்போல*
*எரிவெந்த கரிவறல் வாய்புகுவ காணாவாய்ப்”* *(கலி.13:1–2)*

என்பன அப்பாடலடிகளாகும். போர்த்தொழில் வல்ல சினம் மிக்க மன்னன் தன் படையோடு சென்று தங்கிப் பகை மன்னன் ஊரைத் தீயிட்டு எரித்து அழிக்கும் வழக்கம் இப்பாடலடிகளில் கூறப்பெற்றுள்ளது.

**பெண்களில் ஒப்பனை செய்தல்**

ஐங்குறுநூற்று இளவேனிற் பத்துப் பாடலில் இளம்பெண்கள் பூக்களின் தாதினையும் இளந்தளிர்களையும் தம் முலைகளின் மேல் அப்பிக்கொள்ளும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“எழில்தகை இளமுலை பொலியப்*
*பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே”* *(ஐங்.347:2–3)*

இயல்பிலேயே எழிலும் பெருமையும் உடைய இளம்பெண்களின் முலைகள் தளிர்களை அப்பியமையால் மேலும் பொலிவு பெற்றன. இது சங்ககாலப் பெண்களின் ஒப்பனை சார்ந்த பழக்கவழக்கமாகும்.

**வடக்கிருந்து உயிர்துறத்தல்**

*மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் மானம் காரணமாகச் சங்ககால மன்னர்கள் வடக்கிருந்து உயிர் துறக்கும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

***"…. …. …. …. ஒண்படைக்***
***கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்***
***பொருதுபுண் ணாணிய சேர லாதன்***
***அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென***
***இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்***
***அரும்பெறல் உலகத் தவனோடு செலீஇயர்***
***பெரும்பிறி தாகியாங்குப் பிறிந்திவண்" (அகம்.55:9–16)***

*கரிகால் வளவன் ஒளி மிக்க வலிமையான படையினைக் கொண்ட சோழமன்னன் ஆவான். அவனோடு பெருஞ்சேரலாதன் என்னும் சேரமன்னன் வெண்ணி என்னும் இடத்தில் போரிட்டான். போரில் பெருஞ்சேரலாதன் புறப்புண் பட்டான். அதற்கு நாணியவனாகப் பெருஞ்சேரலாதன் தான் போரிட்டுத் தோற்ற அப் போர்க்களத்தின் ஒரு புறத்தே வாளோடு வடக்கிருந்து உயிர்நீத்தான். இச்செய்தியைக் கேட்ட சான்றோர் பலரும் அங்குச் சென்று வடக்கிருந்து உயிர் நீத்தனர். இதிலிருந்து சங்க காலத்தில் மன்னரும் சான்றோரும் மானம் காரணமாக வடக்கிருந்து உயிர்துறக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதை அறியலாம்.*

**கன்னிப் பெண்கள் பிறைதொழுதல்**

*கடம்பலூர்ச் சாண்டில்யன் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள குறுந்தொகையில் பாலைப் பாடலில் சங்க காலக் கன்னிப்பெண்களின் பிறைதொழும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.*

***"வளைஉடைத் தனையது ஆகிப் பலர்தொழச்***
***செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி***
***இன்னாப் பிறந்தன்று பிறையே அன்னோ" (குறுந்.307:1–3)***

*வண்ணத்தாலும் வடிவத்தாலும் ஒத்திருப்பதால் பிறைத்திங்களுக்குக் கன்னிப்பெண்களின் உடைந்த சங்கு வளையல்கள் உவமையாகக் கூறப்பெற்றுள்ளன. மாலைப் பொழுதில் செக்கர்வானத்தில் தோன்றும் பிறை பலராலும் தொழுது வணங்கப்பெறுவதாகும்.*

**சுவரில் கோடிட்டு எண்ணுதல்**

தலைவன் தன்னைப் பிரிந்து சென்ற நாட்களைத் தலைவி சுவரில் கோடிட்டு எண்ணும் வழக்கம் மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் கூறப்பெற்றுள்ளது.

*“தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்*
*நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்து*
*ஆழல் வாழி தோழி தாழாஅது”* *(அகம்.61:3–4)*

**சுவரில் வட்டம் சுழித்தல்**

பொருள் ஈட்டிக்கொண்டு மீண்டுவரும் தலைவன் இடைச்சுரத்தில் தலைவியை நினைத்து அவளுக்காக இரங்கித் தன் நெஞ்சிற்குக் கூறுவதாகப் பொருந்தில் இளங்கீரனார் இயற்றியுள்ள பாலைப் பாடலில் தலைவி சுவரில் வட்டத்தைச் சுழித்து எண்ணும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“புழல்வீ இருப்பைப் புன்காட் டத்தம்*
*மறுதர லுள்ளமொடு குறுகத் தோற்றிய*
*செய்குறி ஆழி வைகறோ றெண்ணி*
*எழுதுசுவர் நனைந்த அழுதுவார் மழைக்கண்”* *(அகம்.351:8–11)*

தலைவி தன் வருகையை நினைத்துச் சுவரில் செய்குறியாகக் கிழித்த வட்டத்தை நாள்தோறும் எண்ணி எண்ணிச் சுவர் நனையுமாறு அழுத கண்ணீர் அவள் காதல் அணிந்த பொற்குழை நனையுமாறு தெரித்து வீழும் எனத் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். இதிலிருந்து சுவரில் வட்டத்தைச் சுழித்து எண்ணும் சங்ககாலத் தலைவியரின் பழக்கத்தினை அறியலாம்.

**பிரண்டைக் கொடியை அறுத்துப்போட்டுச் செல்லுதல்**

குடவாயிற் கீரத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் பாலைவழிச் செல்வோர் பிரண்டைக் கொடியை வழிநெடுகிலும் அறுத்துப் போட்டுச் செல்லும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது. இதுகுறித்த பாடலடிகள் வருமாறு:

*“ஆறுசெல் மாக்கள் அறுத்த பிரண்டை*
*ஏறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப*
*நெறியயல் திரங்கும் அத்தம் வெறிகொள”* *(அகம்.119:5–7)*

மலைகள் சூழ்ந்த பாலை வழியில் செல்லும் மக்கள் பிரண்டைக் கொடியை அறுத்துப்போட்டுச் செல்கின்றனர். அக்கொடிகள் இடியுண்ட பாம்பினது பசிய

உடலின் துண்டுகள் போல பாலை வழியின் பக்கத்தே பயனின்றி வாடி வதங்கிக் கிடக்கின்றன.

**பகழியைச் செப்பம் செய்தல்**

ஆறலைக் கள்வர் பகழியாகிய அம்பினைச் செப்பம் செய்யும் பழக்க வழக்கம், பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் கூறப்பெற்றுள்ளது.

***“. . . . . . . . . . . . . . . கள்வர்தம்***
***பொன்புனை பகழி செப்பங் கொண்மார்***
***உகிர்நுதி புரட்டும் ஓசை போலது”            (குறுந்.16:1–3)***

ஆறலைக் கள்வர் தம் தொழிலுக்காகப் பயன்படுத்தும் அம்புகளின் நுனிப்பகுதி இரும்பினால் அமைக்கப்படுவன. பன்முறை வழிப்போக்கரை எய்து கொன்றமையால் அவற்றின் நுனிப்பகுதி மழுங்கிக் காணப்படும். எனவே ஆறலைக் கள்வர் அவற்றைக் கூர்மையாக்கிச் செப்பம் செய்வர்.

**காக்கைகள் பிணங்களை உண்ணுதல்**

மருங்கூர்ப் பாகைச் சாத்தன் பூத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் காக்கைகள் பிணங்களை உண்ணும் பழக்கவழக்கம் கூறப்பெற்றுள்ளது.

***“மைந்நிற உருவின் மணிக்கட் காக்கை***
***பைந்நிணங் கவரும் படுபிணக் கவலைச்***
***சென்றோர் செல்புறத் திரங்கார் கொன்றோர்” (அகம்.327:15–17)***

கரிய நிறத்தையும் நீலமணி போன்ற கண்களையும் கொண்ட காக்கைகள் கொழுப்பமைந்த பிணங்களின் ஊனை உண்ணுவதற்கு இடனான பிணங்கள் பரவிக் கிடக்கும் கொடிய வழிகளில் தலைவன் பொருளீட்டச் செல்வதாகத் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். இதிலிருந்து காக்கைகள் பிணங்களை உண்ணும் வழக்கத்தை அறியலாம்.

**மன்னர்களின் அடையாளப் பூக்களை மாலைகளாகச் சூடிக்கொள்ளுதல்**

குடவாயிற் கீரத்தனார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் பாலை வழியில் பொருளீட்டச் செல்ல ஆறலைக் கள்வர்களால் துன்பம் ஏற்படாமல் தம்மைத் தற்காத்துக் கொள்வதற்கு போந்தை, வேம்பு, ஆர் என்னும் பூக்களால் தொடுக்கப்பட்ட மாலைகளைச் சூடிச்செல்லும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது.

*“வெண்மணற் பொதுளிய பைங்கால் கருக்கின்*
*கொம்பைப் போந்தைக் குடுமி வெண்தோட்டு*
*அத்த வேம்பின் அமலை வான்பூச்*
*சுரிஆர் உளைத்தலை பொலியச் சூடிக்*
*குன்றுதலை மணந்த கானம்*
*சென்றனர் கொல்லோ சேயிழை நமரே” (குறுந்.281)*

பாலை நிலத்தின் கொடியவழிச் செல்வோர் எதிரில் வருவோரிடமும் ஆறலைக் கள்வர்களிடமும் அந்தந்த நாட்டு மன்னர்களுக்கு உரியவர்களாகத் தம்மைக் காட்டித் தற்காத்துக் கொள்வதே இவ்வழக்கமாகும்.

**தொகுப்புரை**

- ❖ மரபு வழியில் தலைமுறை தலைமுறையாக மக்களிடம் காணப்படும் நம்பிக்கைகள் முன்னோர்களின் வாழ்வியல் நெறிகளை நினைவு படுத்துகின்றன. மக்கள் பிறப்பு முதல் இறப்பு வரையில் பலவிதமான நம்பிக்கைகளைக் கொண்டிருக்கின்றனர். இந்நம்பிக்கைகளே மக்கள் வாழ்க்கையை இயக்குகின்றன.
- ❖ வழிபடு தெய்வம், தெய்வ வழிபாடு, கடவுளுக்குப் பலியுணவு படைத்தல், இறைவனுக்கு நாட்பலி, வேப்ப மரத்தில் வாழும் தெய்வத்திற்குப் பலியிடல், பலி வழிபாடு, கொற்றவைக்குப் பலிக்கடன், கானமர் செல்வி, அறக்கடவுள், கடல்நீரின் மேற்பரப்பில் தெய்வம் வாழ்தல், ஓமை மரத்தில் தெய்வம் வாழ்தல், ‘சிவன்’ ஆலமுற்றத்தில் வாழ்தல், பேய் உணவு ஏற்றல், கழுது என்னும் பேய், அயங்கு, உருஇல்பேய், பேய்களின் கனவு, பழூஉப்பல் பேய் என்பன குறித்த சங்ககால மக்களின் நம்பிக்கைகள் பாலைப் பாடல்களின் சான்றுவழி நின்று விளக்கப்பெற்றுள்ளன.
- ❖ நல்வினைப்பயன், பழவினையாகிய ஊழ்வினை, ஊழ் நம்பிக்கை, தொல்வினையாகிய தீவினைப் பயன், கூற்றம், நரகம், பிறப்பு – மறுபிறப்பு, இம்மை – மறுமை, பழியஞ்சல், தவம் – தவசியர், நிரையப்பெண்டிர், பொய்ச்சாட்சி கூறல், முன்னோர்க்குத் தென்புலக்கடன் செய்தல், நற்சொல் கேட்டல், வேள்விக் குண்டம், கனவு, காக்கை கரைதல் ஆகியன குறித்த சங்ககால மக்களின் நம்பிக்கைகளும் பாலைப் பாடல்களில் அறியத்தக்கனவாக உள்ளன.

- பல்லி, கண் துடித்தல், புள், ஓந்தி, கன்றினை ஈன்ற பசு ஆகியனவற்றின் நிமித்தங்கள் குறித்த சங்க கால மக்களின் வாழ்வியல் எதிர்பார்ப்புக்கள் பாலைப் பாடல்களின் குறிக்கப்பெற்றுள்ளன.
- கருவுற்ற பெண் மண் தின்னல், உடன்போக்கில் தலைவி சிலம்பணியைக் கழற்றல், ஆயர்கள் பசுக்களின் கழுத்தில் மணி கட்டுதல், நடுகல் நடுதல், நடுகல்லில் இறந்தவர் பெயரை எழுதுதல், நடுகற்களில் பயணவழிகளைக் குறித்தல், இறைவனுக்கு நாட்பலி இடல், பால் கறத்தல், ஆடவர் மார்பில் சுடர்ப்பூண் அணிதல், யானையைப் பொற்கயிற்றால் பிணித்தல், சீழ்க்கை ஒலியெழுப்புதல், நறவினைப் பலி கொடுத்தல், பறையறைதல் முதலான சங்ககால மக்களின் பழக்கங்களும் வழக்கங்களும் பாலைப் பாடல்களின் அறியப்படுகின்றன.
- அந்தணர் வேள்வி, உமணர் 'யா'மரப் பட்டைகளைக் கொண்டு தீமூட்டடல், உப்பு மூட்டைகளைக் கழுதைகளின் மீது ஏற்றிச் செல்லல், பெண்கள் நெற்றியில் பொட்டு வைத்தல், மகளிர் பாதங்களுக்குச் செம்பஞ்சிக் குழம்பு தடவுதல், மழவரும் உமணரும் கால்களில் செருப்பணிதல், வடுகர் கள்ளுண்டு மகிழ்தல், கொள்ளிக்கட்டையை வீசி யானைகளை விரட்டடல், குந்தாலியால் கிணறு தோண்டடல், உப்பு வணிகர் எருது பூட்டிய வண்டிகளைப் பயன்படுத்துதல், ஆடவர் கால்களில் வீரக்கழல் அணிதல் முதலான சங்ககால மக்களின் வழக்கங்களும் பாலைத்திணைப் பாடல்களில் அறியப்படுகின்றன.
- மாலையில் வீடுகளில் விளக்கேற்றல், தயிர்ப்பானையில் விளாம்பழத்தை இட்டு வைத்தல், பகைவர்களின் பற்களைக் கோட்டை வாசல் கதவுகளில் பதித்தல், தெய்வத்தின் சினம் தணிக்க யாழிசைத்தல், பாணர் தம் வருத்தம் நீங்க யாழிசைத்தல், சூதாடல், காக்கைக்குப் பலிச்சோறு வைத்தல், பகைவேந்தன் ஊரைத் தீயிட்டு எரித்தல், வடக்கிருந்து உயிர் நீத்தல், கன்னிப் பெண்கள் பிறைதொழல், சுவரில் கோடிட்டு எண்ணல், சுவரில் வட்டம் அழித்தல், பாலைவழிச் செல்வோர் பிரண்டைக் கொடியை அறுத்துப் போட்டுச் செல்லல், பகழியைச் செப்பம் செய்தல், பாலைவழிச் செல்வோர் மன்னர்களின் அடையாளப் பூக்களை மாலைகளாகச் சூடுதல் முதலான சங்ககால மக்களின் பழக்கவழக்கங்கள் பாலைப் பாடல்களின் வழித் தெரியப்பெற்றுள்ளன.

## குறிப்புக்கள்

1. James Bissett pratt, The Psychology of the Religions Belief, p.32
2. International Encyclopaedia of the social sciences, Vol.1 and 2, p.455.
3. Gustav Johoda, The Psychology of superstition, p.4
4. *க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும், வழிபாடும், ப.6.*
5. Annals of Oriental Research, Vol.XXIII, *க.த.திருநாவுக்கரசு, திருக்குறளுக்கு உரைகள் வேண்டுமா?" ப.14*
6. Annalx of Oriental Research, Vol.XXIII, Pp.14-16
7. *சிறுபாண்.97.*
8. *பொருநர். 183–184*
9. *திருமுருகு.51–53*
10. *சிறுபாண்.197–199*
11. *தொல்.பொருள்.இளம்.(உரை.ஆ.), அகத்.நூற்.39:1–4*
12. *க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், பக்.110–111*
13. Carl Gustar Diehl, Instrument and purpose, p.215
14. *வி.ஐ.சுப்பிரமணியம், நாட்டார் வழக்காற்றியல் – ஓர் அறிமுகம், "முன்னுரை", ப.*IV.
15. *ஏ.கொந்தராத் தோவ், "சோவியத்நாடு – லெமூரியா கண்டத்தின் மர்மம்" (தொடர் கட்டுரை), ப.27*
16. *ஐங்.448:1, பெருங்.465, மதுரைக்.232, சிலப்.17:3*
17. *ஏ.கொந்தராத் தோவ், மு.நூ., ப.22*
18. *ஏ.கொந்தராத் தோவ், மு.நூ., பக்.22–23*
19. *மேலது, ப.28*
20. *சிலப்.11:20*
21. *"கேட்டல் மாத்திரை அன்று யாவதும்*

   *காண்டல் இல்லாது யாண்டு பல கழிய*

வழுஇன்று பழகிய கிழமையர் ஆயினும்

அரிதே தோன்றல் அதற்பட ஒழுகல்” புறம்.216:1–4

22. “முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை” – தொல்.பொருள்.இளம்.நூற.37

23. “தோளணி தோடு சுடரிழை நித்திலம்

பாடுவார் பாடல் பரவல் பழிச்சுதல்

ஆடுவார் ஆடல் அமர்ந்த சீர்ப்பாணி

நல்ல கமழ்தேன் அளிவழக்கம் எல்லாமும்

பண்தொடர் வண்டு பரிய எதிர்வந்து ஊத” – பரி.10:115–119

24. கலைக்களஞ்சியம், தொகுதி–7, பக்.29–30

25. எஸ்.பி.ஆதிநாராயணன், மனித உள்ளம், ப.171

26. கில்பர்ட் பாஸ்கல், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், (தமிழாக்கம்: ஜெ.நாராயணன்), ப.54

27. மேலது, ப.234

28. மேலது, ப.232

29. திருமுருகு.24

30. திருக்கோவையார்.1118

# இயல் : 6

# வாழ்வியல் பண்பாடு

**முன்னுரை**

*"சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்" எனும் இவ்ஆய்வுரையினை மையமிட்டதாக அமையும் 'பாலைநில மக்களின் வாழ்வியல் பண்பாடு' என்ற இவ்இயலில், பாலைத்திணைப் பாடல்களில் காணப்பெறும் அந்நில மக்களின் வாழ்வியல் சார்ந்த மெய்ம்மைகளும், பாலைநில மக்களின் வாழ்வியல் பண்பாடு சார்ந்த கருத்துரைகளும் வகைதொகைப்படுத்தி விரிவாகவும் விளக்கமாகவும் ஆராயப்பெறுகின்றன.*

**பண்பாடு – விளக்கங்கள்**

*'பண்பாடு' என்னும் சொல் மனிதனோடு மட்டுமே தொடர்புடையது. மனிதனைப் பிற உயிரினங்களிடமிருந்து பிரித்துக்காட்டி அவனை உயரியவனாகக் காட்டுவது பண்பாடு. ஆயினும் மனிதர்களிடம் காணப்படும் பண்பாடு மிகவும் சிக்கலானதாகும். உயிரினங்களின் உடல்சார் கூறுகளுக்கும் பண்பாட்டுக் கூறுகளுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. உடற்பண்புகள் மரபுவழியில் மரபணுக்களால் அறுதியிடப்படுகின்றன. ஆனால் பண்பாட்டுக் கூறுகள் மரபணுக்களால் தீர்மானிக்கப் பெறுவதில்லை. பண்பாட்டுக் கூறுகள் அறிவு சார்ந்த நிலையிலேயே முடிவு செய்யப்படுகின்றன. 'பண்பாடு' என்பது தலைமுறை தலைமுறையாக அறிவு சார்ந்த நிலையில் மனித சமூகம் கற்றுணர்ந்த நடத்தைமுறைகளைக் குறிக்கும். மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை அவனது பண்பாட்டைச் சமுதாய வயமாக்கல், பண்பாட்டு வயப்படுதல் என்ற நிலைகளில் கற்கின்றான். பெற்றோர், குடும்பம், குழுக்கள், பிற சமூக நிறுவனங்கள் ஆகியன மனிதனுக்குச் சமூகப் பண்பாட்டைக் கற்றுத் தருகின்றன. 'பண்பாடு' என்னும் கருத்தாக்கம் மக்களின் அறிவு சார்ந்த நிலையில் ஏற்படும் எண்ணற்ற கருத்து வடிவங்களின் படிநிலைகள் வாயிலாக வெளிப்படுகின்றன. ஒவ்வொரு மனிதனும் தனித்துவமான சொந்தப் பண்பாட்டைக் கொண்டிருக்கின்றான். அது அவனுடைய தனித்தன்மையுடைய பாங்குகளையும், அவன் எவற்றையெல்லாம் சமூகத்தில் கற்றுக்கொண்டுள்ளானோ, புரிந்து கொண்டுள்ளானோ அவை அனைத்தும் அடங்கும். இரு தனிமனிதர்கள் எப்போதும் ஒத்த மனப்பாங்கினைப் பெற்றிருப்பதில்லை.*

‘பண்பாடு’ என்பது மனிதனின் வாழ்க்கையோடும் வாழும் முறைமைகளோடும் தொடர்புடையது. மனித இனம் மட்டுமே தமக்கியைந்த பண்பாட்டியல்புகளைக் கொண்டிருக்கின்றது. மனிதன் மட்டுமே உறவுமுறைகளின் அடிப்படையில் பண்பட்ட வாழ்க்கை முறைகளையும் சமுதாய ஒழுகலாறுகளையும் விதிமுறைகளையும் கொண்டு வாழ்கின்றான். பண்பாடும் பண்பட்ட வாழ்க்கையும் நிலத்திற்கு நிலம், நாட்டிற்கு நாடு, இனத்திற்கு இனம் மாறுபடும் தன்மையுடையன. இவற்றின் வேற்றுமைகளுக்கிடையில் மனித இனம் அனைத்திற்கும் பொதுவாக அமைந்திருக்கும் ஒப்புமைக் கூறுகளைக் கொண்டு ஒரு நாட்டின் தேசியப் பண்பாட்டையும், உலகளாவிய பண்பாட்டையும், அனைத்துலகப் பண்பாட்டையும் உருவாக்க வேண்டியுள்ளது.

பண்பாட்டுக் கூறுகள் அனைத்துத் தனிமனிதர்களாலும், அனைத்து உட்குழுவினராலும் பகிர்ந்து கொள்ளப்படுவனவாக இருக்கும். அதனாலேயே “பண்பாடு என்பது அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்பட்டது என்றும், கற்றுணரப்பட்டது என்றும்” [1] வரையறுக்கப்படுகின்றது. ‘பண்பாடு’ என்பதற்கு சமூக மானுடவியல் வல்லுநர்கள் பல்வேறு விளக்கங்களையும் வரையறைகளையும் தந்துள்ளனர். குரோபரும் குளுக்கானும் எழுதியுள்ள நூலில் நூற்றி அறுபதுக்கும் மேற்பட்ட வரையறைகள் தொகுத்துக்கூறப்பெற்றுள்ளன. பண்பாடு என்பது மக்களால் ஆக்கப்பெற்ற ஊடகமாகும். இந்த ஊடகத்தைக் கொண்டே மக்கள் தங்கள் தேவைகளை நிறைவுசெய்து கொள்கின்றனர். உயிரியல் நிலையில் மரபுரிமையாக வராமல் அறிவு சார்ந்த நிலையில் வெளிப்பட்டு நிற்கும் ‘பண்பாடு’ என்பது மக்கள் அனைவரும் கூட்டாகச் சேர்ந்து செயல்படும்போது ஏற்படும் நடத்தை முறைகளின் தொகுப்பாகும்.

> “மக்கள் தலைமுறை தலைமுறையாகக் குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தைமுறைகளும் பழக்கங்களும் மரபுகளும் சேர்ந்த ஒரு தொகுதியே பண்பாடு ஆகும்” [2]

என்பர். ‘பண்பாடு’ என்பது மனிதனின் அறிவு சார்ந்த சிந்தனை வெளிப்பாடு ஆகும். அது மனிதனின் உடல் சார்ந்த தகவமைப்பாகும். மற்றொரு வகையில் கூறினால் பண்பாடு என்பது மனிதனால் தோற்றுவிக்கப்பெற்ற சுற்றுச்சூழல் ஆகும். இதில் பொருள்சாராப் பண்புகளும் சட்டங்களும் நம்பிக்கைகளும் அடங்கும். பண்பாடு என்பது மரபு வழியில் மனிதனால் புரிந்து கொண்டுள்ளவை பற்றிய ஓர் அமைப்பாகும். இது கற்றலின் வாயிலாகப் பெறப்படுவது; கற்றல் நடத்தை முறைகளின் வழி உருவாக்கப்படுவது.

*சுருக்கமாகக் கூறினால் பண்பாடு என்பது அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்பட்ட கருத்துக்களும், சமுதாய மரபுரிமையாகப் பெறப்பெற்ற நம்பிக்கைகளும் பழக்கவழக்கங்களும் அடங்கிய தொகுப்பாகும்.*

*புகழ்பெற்ற மானுடவியல் சிந்தனையாளரும் 'ஆவி வழிபாடே' மனிதகுலத்தின் தொடக்ககாலச் சமயமாகும் என்னும் கொள்கையை வகுத்தவருமான எட்வர்ட் பர்னட்டைலர்,*

> *"பண்பாடு என்பது அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்கநெறிகள், சட்டம், வழக்கம் ஆகியவையும், மனிதன் சமுதாயத்தின் ஓர் உறுப்பினராக இருந்து கற்கும் பிற திறமைகளும் பழக்கங்களும் அடங்கிய முழுமைத் தொகுதி"* [3]

*எனப் பண்பாடு என்பதற்கு 1871இல் எழுதிய 'தொன்மைப் பண்பாடு' என்னும் நூலினுள் வரையறை விளக்கம் தந்துள்ளார். பண்பாட்டை உண்மையியல் வகை அணுகுமுறைகளிலும், கருத்தியல் வகை அணுகுமுறைகளிலும் அணுகலாம். பண்பாடு என்பதற்கு உண்மையியல் வகையில் வரையறைகளை வகுத்தவர்கள், நேரடியாக உற்றுநோக்கல் வாயிலாக அறியப்பெறும் நடத்தை முறைகளையும் அதனால் விளையும் மற்றவற்றையும் அடிப்படையாகக் கொண்டு பண்பாட்டை விளக்க முற்படுகின்றனர்* [4] *இவர்கள் பண்பாட்டை உற்றுநோக்குதல் வாயிலாக அறியமுடியும் என்கின்றனர். கருத்தியல் வகையில் பண்பாட்டை வரையறுக்க முற்பட்டவர்கள் மக்கள் அவரவர் பண்பாட்டைப் பற்றி ஏற்படுத்திக் கொண்டுள்ள மதிப்புக்களையும் நெறிமுறைகளையும் பிற கருத்தாக்கங்களையும் புரிந்துகொண்டு பண்பாட்டை விளக்க முற்படுகின்றனர். இவர்கள் பண்பாட்டை மனத்தளவில் மட்டுமே புரிந்துகொள்ள முடியும்* [5] *என்னும் கருத்துடையவர்கள். இதனை,*

> *"கருத்தியலார்க்குப் பண்பாடு என்பது செய்பொருள்களை மட்டும் சார்ந்ததன்று. அவற்றைப் பற்றிய மக்களின் கருத்துக்களையும் உள்ளடக்கியதாகும். அத்துடன் பண்பாடு என்பது ஒரு முறைப்படியான நடத்தை முறைக்கு மக்கள் ஏற்படுத்திக் கொள்ளும் ஓர் அமைப்பு அல்லது மன அளவிலான விதி"* [6]

*எனப் பக்தவத்சலபாரதி வரையறுத்துக் கூறுவதும் குறிப்பிடத்தக்கது.*

*பண்பாடு சில வேளைகளில் மேற்கத்தியப் பண்பாடு, அமெரிக்கப் பண்பாடு, இந்தியப் பண்பாடு எனப் புவிப்பரப்பு மற்றும் நாடு சார்ந்ததாகவும்,*

ஆங்கிலேயப் பண்பாடு, திராவிடப் பண்பாடு, யூதர் பண்பாடு, நீக்ரோடு பண்பாடு, தமிழ்ப் பண்பாடு என இனம் மற்றும் மொழி சார்ந்ததாகவும் அமைகின்றன.

### பண்பாட்டுக் கூறுகள்

பண்பாட்டில் ஆயிரமாயிரம் உட்கூறுகள் பல கோலங்களில் அமைந்து கிடக்கின்றன. பண்பாட்டின் மிகச்சிறிய அலகே பண்பாட்டுக் கூறு ஆகும். ஹோபல் என்னும் சமூகப் பண்பாட்டியல் சிந்தனையாளர்,

> "கற்றுணர்ந்த நடத்தைமுறையானலும் சரி, உற்பத்தி செய்யப்பட்ட பயன்படு பொருளாயினும் சரி, அதனை எந்த அளவுக்குக் குறைத்துக் காணமுடியுமோ, அந்த அளவுக்குக் குறைத்துக் காணக்கூடிய ஒன்றே பண்பாட்டுக் கூறு" [7]

எனப் பண்பாட்டுக் கூறினை வரையறுத்துள்ளார். பொருள்சார் பண்பாடு என்ற நிலையில் இதற்குக் கத்தி, எழுதுகோல், கைக்கட்டை, கதவு போன்ற அதற்கு மேலும் குறைத்துக்காண இயலாத நிலையிலுள்ள பொருட் கூறுகளைக் கூறலாம். பொருள் சாராப் பண்பாட்டு நிலையில் தலை வாருதல், நண்பர்களைக் காணும்போது கைகுலுக்கி வணக்கம் செலுத்துதல், அன்பை வெளிப்படுத்த முத்தம் கொடுத்தல் ஆகியனவற்றைக் கூறலாம்.

### பண்பாட்டுக் கலவை

பண்பாட்டுக் கலவை என்பது ஒரு தனிப்பட்ட பண்பாட்டுக் கூறுக்கும் நிறுவனத்திற்கும் இடைப்பட்ட நிலைகளில் அமைவதாகும். பல பண்பாட்டுக் கலவைகளால் ஆனதே 'குடும்பம்' என்னும் சமுதாய நிறுவனமாகும். அந்நிறுவனத்தில் திருமணம், உறைவிடம், தேனிலவு, உடலுறவு, குழந்தை வளர்ப்புப் போன்ற பல பண்பாட்டுக் கலவைகள் அடங்கும்.

### பண்பாட்டுத் தளங்களும் விழுமியங்களும்

ஒரு பண்பாட்டுத் தளத்தில் வாழும் மக்களின் வாழ்க்கையை நெறிப்படுத்தும் கூறுகள் அனைத்தையும் நெறியியல் சார்ந்த பண்பாட்டுக் கூறுகள் எனலாம். சமுதாயத்தில் வாழும் ஒருவர் எவ்வாறு வாழவேண்டும், எவற்றைச் செய்யக்கூடாது, ஏன் செய்யக்கூடாது என்பன போன்ற காரண காரியங்களோடு தொடர்புடைய கூறுகளே பண்பாட்டு நெறியியல் ஆகும். சமூக விழுமியங்கள், நெறிமுறைகள், குடிவழக்குகள், வழக்க பாடுகள், அளிப்புகள், மரபாண்மைகள், வழக்கங்கள், பழக்கங்கள் ஆகிய இதிலடங்கும்.

ஒரு பண்பாட்டைச் சார்ந்தோரின் வாழ்வியலுக்கும் செயல்களுக்கும் நடத்தை முறைகளும், எவை அவசியமோ அவையே அப்பண்பாட்டில் பண்பாட்டு விழுமியங்கள் ஆகும். இந்த விழுமியங்கள் பெரும்பாலும் கருத்தியலாகவே அமைந்துவிடும். ஒரு சமுதாயத்தில் மக்கள் அனைவரும் பின்பற்றும் பொதுவான நெறிமுறைகள் சார்ந்த நடத்தை முறைகளே குடிவழக்குகளாகும். இவை மக்களின் பழக்கத்தால் வந்து வழக்கத்தினால் இயல்பாக வெளிப்படுவது.

**பண்பாட்டின் வகைகளும் பொதுமைகளும்**

சமுதாய வாழ்வில் இதை இதைத்தான் செய்யவேண்டும் என்று மக்களிடமிருந்து எதிர்பார்ப்பது உகந்தநிலைப் பண்பாடு [8] ஆகும். மக்கள், சமுதாயத்தின் சட்டதிட்டங்களின் எதிர்பார்ப்புகளைக் கவனத்தில் கொள்ளாமல் நடைமுறை வாழ்வில் நடந்துகொள்வதைக் குறிப்பதே உண்மைப் பண்பாடு [9] ஆகும். சமுதாயத்தின் சட்டதிட்டங்களை மீறிக் குடித்தல், சூதாடுதல், பரத்தமை ஆகியன இதிலடங்கும். மக்கள் மனத்தளவில் உணரும் விழுமியங்கள், குடிவழக்குகள், வழக்கடிபாடுகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், விரக்தி, துன்பம், இன்பம், பயம் ஆகியன உள்ளார்ந்த பண்பாடாகும். உள்ளார்ந்த பண்பாட்டிற்கு நேர் எதிராக அமையும் அனைத்தும் வெளிப்படைப் பண்பாடாகும். ஒரு நாட்டில் குடியுரிமை பெற்று வாழும் வேற்று நாட்டவர்கள் தாம் குடியேறிய நாட்டின் ஒரு பகுதியையும், அவர்கள் சொந்த நாட்டின் பண்பாட்டின் பெரும்பகுதியையும் இணைத்துக்கொண்டு வாழ்வது உட்பண்பாடு ஆகும். இந்த உட்பண்பாடு ஒரு சமுதாயத்தின் முதன்மைப் பண்பாட்டிற்கு எதிராக அமைந்துவிட்டால் அது எதிர்ப்பண்பாடு ஆகும்.

உலகின் அனைத்துப் பண்பாடுகளுக்கும் பொதுவான பண்பாட்டுப் பொதுமைகள் காணப்படுவதற்குக் காரணம், மனிதனின் அடிப்படைத் தேவைகள் அனைத்தும் அனைத்து நாட்டு மக்களிடமும் ஒத்திருப்பதே ஆகும். பண்பாட்டுப் பொதுமைகள் ஒவ்வொரு பண்பாட்டிலும் வெவ்வேறு நிலைகளில் மாறுபட்டுக் காணப்படுவதற்குக் காரணம் இயற்கை மற்றும் சமுதாயச் சூழல்களே ஆகும். பண்பாட்டுப் பொதுமைகள் பற்றி முதன்முதலில் சிந்தித்த கிளார்க் விஸ்லர் பண்பாட்டுப் பொதுமைகளைப் ‘பண்பாட்டுத் திட்டம்’ என்றார். அவர் பின்வரும் ஒன்பது வகையான பண்பாட்டுப் பொதுமைகளைக் குறிப்பிட்டுள்ளார்.

1. மொழி,

2. உணவு, வீடு, போக்குவரத்துச் சாதனங்கள், உடை, கருவிகள், பொருட்கள் தொழில்கள்,

3. கலை,

4. மரபுக் கதைகள், அறிவியல் சிந்தனைகள்,

5. சடங்குகள், மூட நம்பிக்கைகள்,

6. குடும்பம், திருமணம், சமுதாயக் கட்டுப்பபாடு, விளையாட்டுகள், பிற தொடர்புடைய சமுதாய நிறுவனங்கள்,

7. சொத்து, பரிமாற்ற முறைகள், வணிகம்,

8. அரசு, சட்டம்,

9. போர் [10]

இவ் அடிப்படையில் பாலைநில மக்களின் வாழ்வியல் பண்பாட்டினை இவ்இயல் ஆராய்கின்றது.

**குடியிருப்புக்கள்**

மறவரும் எயினருமே பாலை நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஆவர். இவர்கள் வாழும் ஊர் 'குறும்பு' என்று அழைக்கப்பெற்றன. மதுரைப் பேராலவாயார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில்,

***"படலைப் பந்தர் புல்வேய் குரம்பை***
***நல்கூர் சீறூர் எல்லித் தங்கி***
***குடுமி நெற்றி நெடுமரச் சேவல்***
***தலைக்குரல் விடியல் போகி முனாஅது***
***கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின்"*** ***(அகம்.87: 3–7)***

என மறவரின் ஊராகிய குறும்பும், குடியிருப்பாகிய 'புல்வேப்ப குரம்பை'யும் கூறப்பெற்றுள்ளன. 'குரம்பை' என்பது சிறுகுடில் ஆகும். மறவர்களின் குறும்பாகிய ஊர்கள் கற்கள் நிரம்பிய பகுதியில் அமைந்திருந்தன. ஈந்தில் இலையால் வேயப்பட்ட குடிசைகளே 'குரம்பை' ஆகும்.

ஈங்கையின் இதழ்களால் வேயப்பட்ட கூரை வேய்ந்த வீடு பற்றிக் கண்ணகனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப்பாடலில் கூறப்பெற்றுள்ளது.

***"சிறைநாள் ஈங்கை உறைநனி திரள்வீ***
***கூரை நல்மனைக் குறுந்தொடி மகளிர்"*** ***(நற்.79:1–2)***

குடவாயிற் கீரத்தனார் என்பார் உவமை வாயிலாகக் குரம்பையாகிய குடிசை வீடு பற்றிக் கூறியுள்ளார்.

*“.... .... .... .... தேக்கின்*
*அகல்இலை குவித்த புதல்போல் குரம்பை” (அகம்.315:15–16)*

உறையூர் முதுகூத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாடலில் தலைவன் கடந்து செல்லும் பாலை வழியில் குனிந்து செல்லும்படியான தலை குவிந்துள்ள குரம்பைக் குடிசைகளைக் கொண்ட குடியிருப்புக்களை உடைய சிற்றூர்கள் கூறப்பெற்றுள்ளன.

*“.... .... .... .... காதலர்*
*குவிந்த குரம்பை அங்குடிச் சீறூர்*
*படுமணி யியம்பப் பகலியைந்து உமணர்” (அகம்.329:3–5)*

மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் எயினர்கள் வாழும் ‘குன்றாகச் சிறுகுடி’ கூறப்பெற்றுள்ளது.

*“கண்டிரள் நீளமைக் கடிப்பிற் தொகுத்து*
*குன்றாகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகுஞ்*
*சீறூர் நாடு பலபிறக் கொழியது” (அகம்.331:6–8)*

மாயேண்டன் என்பார் இயற்றியுள்ள பாடலில் புல்வேய் குரம்பைகளைக் கொண்ட தலைவியின் ஊர் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளது.

*“.... .... .... .... நெல்லி*
*மரையினம் ஆரும் முன்றிற்*
*புல்வேய் குரம்பை நல்லோள் ஊரே” (குறுந்.235:3–5)*

இவ்வாறு பாலைத்திணைப் பாடல்களில் எயினர்கள் மற்றும் மறவர்களின் குறும்பு என்னும் ஊர்களும் புல்வேய் குரம்பைகளும் குடியிருப்புக்களாகக் கூறப்பெற்றிருப்பதைத் தெரியலாம்.

**இல்லறம்**

பாலைத்திணைப் பாடல்களில் இல்லறம் குறித்த செய்திகளும், பண்பட்ட இல்வாழ்க்கையும் ஆங்காங்கே சிறுசிறு குறிப்புக்களாக இடம்பெற்றுள்ளன.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் தலைவி தலைவனுடன் உடன்போக்குச் செல்கின்றாள். தலைவியைத் தேடிச் செல்லும் செவிலித்தாய் பாலை நிலத்தின் இடைச்சுரத்தில் முக்கோல்பகவராகிய

அந்தணரிடம் தலைவியைப் பற்றி வினவுகின்றாள். அச்செவிலித்தாயிடம் முக்கோல்பகவர்,

*“இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்*
*சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்*
*அறம்தலை பிரியா வாறுமற் றதுவே”* *(கலி.9:18–20)*

எனக் கூறுகின்றார். மிக உயர்ந்த கற்பினை உடையை தலைவி, ஆண்மைத்தன்மை கொண்ட சிறந்த கணவனை வழிபட்டு அவன் பின்னே செல்கின்றாள். இல்லறமே அறங்களில் தலையாய அறமாகும். ஆதலால் அவளைப் பின் தொடர்ந்து செல்ல வேண்டாம் என முக்கோல்பகவர் செவிலித்தாயிடம் கூறுகின்றார். மலையில் பிறந்த நறுமணச் சந்தனம் அதனைத் தன் உடம்பில் பூசிக்கொள்பவர்க்கே பயனைக் கொடுக்கும். கடலிடத்தில் பிறக்கும் சிறப்புடைய முத்துக்கள் அதனை அணிந்துகொள்பவர்களுக்கே அழகினைத் தரும். ஏழ்நரம்பால் கூட்டிய இனிய இன்னிசை யாழில் தோன்றினும் அது பாடுவார்க்கே பயன்படும். அதைப்போன்று நும்மகளும் உரிய பருவத்தில் அவள் கணவனுக்கே பயனுடையவள் ஆவாள்; அவர்களது இல்லறம் சிறப்புற அமையவேண்டும் என இப்பாடலில் முக்கோல் பகவர் செவிலித்தாய்க்கு அறிவுறுத்துகின்றார். உடன்போக்கு மேற்கொண்ட உயர்ந்த கற்புடைய தலைவி இல்லற வாழ்வை ஏற்கும் தகுதியைப் பெற்றுவிட்டாள் என்பது இப்பாடலின் கருத்தாகும்.

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை**

இல்லற வாழ்க்கைக்குக் கணவன் மனைவியரின் ஒன்றிய உள்ளமே அடிப்படை என்பதைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ பாலைக்கலிப் பாடலில் குறிப்பிட்டுள்ளார். இப்பாடல் தோழி கூற்றில் அமைந்துள்ளது. “ஒன்றாத் தமரினும்” [11] என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் சுட்டிக்காட்டியுள்ள நாளது சின்மையும் இளமையது அருமையும், தாளாண் பக்கமும், தகுதியது அமைதியும், இன்மையது இழிவும், உடைமையது உயர்ச்சியும், அன்பினது அகலமும், அகற்சியது அருமையும் என்னும் எட்டினையும் தலைவன் கூறக் கேட்ட தோழி அவற்றை “நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே” [12] என்னும் தொல்காப்பிய விதியால் தலைவனுக்குக் கூறிச் செலவு அழுங்குவிப்பதாக இப் பாலைக்கலிப் பாடல் அமைந்துள்ளளது.

*“சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது*
*ஒழிந்தவர் எல்லாரும் உண்ணாதும் செல்லார்;*

*இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்*
*வளமை விழைதக்கது உண்டோ? உளநாள்*
*ஓரோஒகை தம்முள் தழீஇ ஓரோஒகை*
*ஒன்றன்கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்*
*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை அரிதுஅரோ" (கலி.18:5–11)*

என இப்பாடலின் தோழி தலைவனிடம் கூறுகின்றாள். தோழி 'நீ நன்கு மதித்துப்போற்றும் பொருள் சென்றவர்கள் காலம் நீட்டிப்பச் சென்று தேடுவது ஆகும். முகந்து கொள்ளப் பொருள் ஓரிடத்தே குவிந்து கிடப்பதில்லை. பொருள் தேடிச் செல்லாமல் இருப்பவர்கள் ஒருவாற்றான் உண்ணாமல் அழிந்துவிடுவதும் இல்லை. இளமையையும் இருவர் உள்ளத்தே ஒத்த காமத்தையும் ஒன்றாகப் பெற்றவர்கள் ஒன்றி இணைந்தவர்கள் பொருட்செல்வத்தை விரும்பமாட்டார்கள். இளமையும் ஒத்த காமமும் உள்ளவரையில் கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் தம்முள் தழுவியும், ஒரு சமயத்தில் இருவரும் ஒன்றன் கூறாகிய ஆடையை உடுப்பவராக வறுமையுற்று வாழ்ந்தபோதும் அதனைப்பற்றிக் கவலைப்படாமல் ஒன்றிக்கலந்து இருவரும் பிரியாமல் இருக்கும் வாழ்க்கையே வாழ்க்கை' எனத் தலைவனுக்கு அறிவுறுத்துகின்றாள்.

இதிலிருந்து கணவனும் மனைவியும் ஒத்த அன்பு பூண்டு ஒருவரையொருவர் பிரியாமல் இருப்பதே இல்வாழ்க்கை என்பதை அறிய முடிகின்றது. இச் சிந்தனை பாலைக்கலிப் பாடலில் கூறப்பெற்றுள்ளது.

**இல்லறத்தில் கணவன் மனைவியர் நிலை**

ஓதலாந்தையார் பாடிய ஐங்குறுநூற்றுப் செலவு அழுங்குவித்த பத்தில் இல்லறத்தில் இன்பத்திலும் துன்பத்திலும் கணவனும் மனைவியும் சேர்ந்து பங்குகொள்ள வேண்டும் என்னும் சிந்தனை கூறப்பெற்றுள்ளது.

*"புதுக்கலத் தன்ன கனிய வாலம்*
*போகிறனைத் தடுக்கும் வேனில் அருஞ்சுரம்*
*தண்ணிய வினிய ஆக*
*மெம்மொடுஞ் சென்மோ விடலை நீயே" (ஐங்.303)*

பொருட்பிரிவில் தலைவியை உடனழைத்துச் செல்ல மறுக்கும் தலைவனிடம் தோழி இவ்வாறு கூறுகின்றாள். புதிய மட்கலம் ஆலம்பழத்தைத் தன் வடிவாலும் நிறத்தாலும் ஒத்திருக்கின்றது. 'போகில்' ஆலமரத்தின் பழத்தை உண்டு வாழும் கிளிவகை ஆகும். தன் பழத்தை உண்ட பறவைகள், மற்றொன்றை உண்ணாமல் தடுக்கும் இனிமை ஆலம்பழத்திற்கு உண்டு. அதுபோலத் தலைவன்

தலைவியையும் உடன் அழைத்துச்சென்றால் கொடுமைகள் மிகுந்த சுரநெறியும் தலைவனுக்கு இனியதாகவும் தண்ணியதாகவும் இருக்கும். கணவனைப் பிரிந்திருக்கும் மனைவியின் நிலை, பாலை நிலத்தின் கொடுமையைவிடப் பெருங்கொடுமை எனத் தோழி தலைவனுக்கு இடித்துரைக்கின்றாள். இதிலிருந்து கணவன், மனைவியைப் பிரிந்து சென்றால் இல்லற வாழ்க்கை சிறக்காது என்பதை அறியலாம். இவ்வாறே பாலை பாடிய பெருங்கடுங்கோ குறுந்தொகைப் பாடலில் தலைவனிடம் தோழி,

*"..... .... ஓமைஅம் பெருங்காடு*
*இன்னா என்றிர் ஆயின்*
*இனியவோ பெரும தமியோர்க்கு மனையே" (குறு.124:2–4)*

என வினவுகின்றாள். ஐங்குறுநூற்றுப் பாடலில் தலைவன் இடைச்சுரத்தில் தலைவியின் குணத்தை நினைத்த அளவில் தன்னுடைய துன்பம் நீங்கியமை கண்டு,

*"வெய்ய ஆயின முன்னே; இனியே*
*ஒண்ணுதல் அரிவையை உள்ளுதொறும்*
*தண்ணிய ஆயின சுரத்திடை ஆறே" (ஐங்.322:3–5)*

என்கின்றான். தலைவன் இடைச்சுரத்தில் தலைவியின் பண்புகளை நினைத்துப்பார்த்து,

*"இன்னா மன்ற சுரமே*
*இனியமன்ற யான் ஒழிந்தோள் பண்பே" (ஐங்.326:4–5)*

எனவும் கூறுகின்றான்.

இதிலிருந்து கணவனும் மனைவியும் பிரியாமல் இருப்பதே நல்லறமாகிய இல்லறத்தின் சிறப்பு என அறியலாம். கணவனின் துன்பத்தை மனைவியின் பண்புநலன்கள் போக்குகின்றன.

**இல்லற வாழ்க்கையில் ஈதலும் துய்த்தலும்**

பொருள் ஈட்ட விரும்பிய தன் உள்ளத்திற்குத் தலைவன் கூறுவதாக உகாய்க்குடிகிழார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாடலில் இல்வாழ்க்கையின் தலையாய பயன் ஈதல் எனக் கூறப்பெற்றுள்ளது.

*"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லெனச்*
*செய்வினை கைம்மிக எண்ணுதி; அவ்வினைக்கு*

*அம்மா அரிவையும் வருமோ?*
*எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே"      (குறுந்.63)*

ஈட்டிய பொருளால் பெறக்கூடிய இன்பத்தை நினைத்து இப்போது பெற்றுவரும் இன்பத்தை இழக்க ஒருப்படேன் என்கின்றான் தலைவன். தலைவி தன்னுடன் வாராமையால் அவளுடைய மாமை நிறம் சிதையுமாதலின் தலைவியை விடுத்துத் தனித்துச் செல்லத் தலைவன் உடன்படவில்லை. இல்லுறை மகளிர் மனை கடந்து தம் கணவன் வினைமேல் செல்லும் இடங்களுக்குச் செல்வதில்லை. இல்வாழ்க்கையில் இருப்போர் வறியோர்க்கு ஈந்து, எஞ்சியதை நுகரவேண்டும் என்ற இல்லறத்தின் பண்புசால் அறநெறி குறித்து ஈதல் முதலில் கூறப்பெற்றுள்ளது. மனைவியை உடன்கொண்டு செல்லலும் பிரிதலும் இன்றிக் கணவன் தடுமாறுவதால் அவனது பொருட்பிரிவு தவிர்க்கப்பட்டமையை அறியலாம்.

**மனைமுதல் வினை**

பெருந்தேவனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாடலில் இல்லறத்தாரின் அறவோர்க்கு அளித்தல், விருந்தெதிர் கோடல் முதலான இல்வாழ்க்கைத் தொழில்களும் இல்வாழ்க்கைக் கடமைகளும் கூறப்பெற்றுள்ளன. பொருட்பிரிவினை விரும்பிய தன் நெஞ்சிற்குத் தலைவன் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*"நீயுழந் தெய்துஞ் செய்வினைப் பொருட்பிணி*
*பல்லிதழ் மழைக்கண் மாஅ யோள்வயிற்*
*பிரியின் புணர்வ தாயிற் பிரியாது*
*ஏந்துமுலை முற்றம் வீங்க பல்லூழ்*
*சேயிழை தெளிர்ப்பக் கவைஇ நாளும்*
*மனைமுதல் விளையொடும் உவப்ப*
*நினைமாண் நெஞ்சம் நீங்குதல் மறந்தே"      (அகம்.51:8–14)*

'பாலை நிலத்தின் காட்டுவழியே சென்று பொருட்பற்றுக் காரணமாக வருந்திச் செய்யும் வினைகளால் அடையப்படும் பொருள் பல இதழ்களைய உடைய மலர் போன்ற குளிர்ந்த கண்களையும் மாந்தளிர் போன்ற நிறத்தையும் கொண்ட தலைவியிடமிருந்து பிரிந்து செல்வதால் கைகூடுவது உறுதி. ஆயினும் தன்னைப் பிரியாது அண்ணாந்து ஏந்திய வனமுலைப் பரப்பு விம்மவும் சிவந்த அணிகலன்கள் ஒலிக்கவும் பலமுறை தழுவி நாள்தோறும் அறவோர்க்கு அளித்தல், விருந்தோம்பல் முதலான இல்லறச் செயல்களில் ஈடுபடும்

தலைவியுடன் மகிழ்ந்திருக்க பொருட்பிரிவு நினைப்பை ஒழிவாயாக' எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

தலைவனும் தலைவியும் கணவனும் மனைவியுமாக இல்லிருந்து செய்யும் அறவோர்க்கு அளித்தல், விருந்தோம்பல் முதலான இல்லறக் கடமைகளைக் கணவன் பிரிந்தமையால் மனைவியால் செய்ய இயலாது எனத் தலைவன் கூறுகின்றான். இதுவே 'மனைமுதல் வினை'யின் பண்பாட்டு முக்கியத்துவம் ஆகும்.

சங்க காலத்தில் இல்லுறை மகளிராகிய மனைவியர், கணவர்களைப் போல மனை கடந்து சென்று வினை செய்வதில்லை என்பதும் நினையத்தக்கதாகும்.

**இல்லோர் வாழ்க்கை**

இல்வாழ்க்கைக்குப் பொருள் மிகவும் இன்றியமையாதது. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய சொந்த முயற்சியால் பொருளினை ஈட்ட வேண்டும். பொருள் இல்லாதவர் வாழ்க்கை இரத்தலைவிடக் கொடியது. இதனைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாடலால் அறியலாம். தலைவன் பொருட்பிரிவில் தலைவி தோழிக்குக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

***"உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்***
***இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு எனச்***
***சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்***
***சென்றனர் வாழி தோழி என்றும்"*** ***(குறுந்.63:1–4)***

என்பன அப்பாடலடிகளாகும். ஒருவன் தன் முயற்சியால் தாளாற்றித் தந்த பொருளைப் பகுத்துண்டு வாழ்வதைத் தன் வாழ்வின் இலக்காகக் கொள்ளுதல் வேண்டும். தாயத்தால் வரும் செல்வத்தைப் (முன்னோர்கள் ஈட்டிய செல்வத்தைப் பாதுகாப்பது) போற்றிக் காப்பது ஒன்றே தன் கடமை எனவும், அதனை அழிப்பதற்கும் குறைப்பதற்கும் எவ்வகையிலும் தனக்கு உரிமையில்லை எனவும் ஒருவன் அறிதல் வேண்டும். முன்னோர் தேடித் தொகுத்த பொருளை ஒருவன் தன் இன்பத்திற்காகப் பயன்படுத்துவான் ஆயின், அவன் இறந்தவனாகவே கருதப்படுவான். தாயத்தை அழித்து உயிர் வாழ்தல் இரந்துண்டு வாழ்வதைவிட இழிவானது. தலைவன் இவ்வாறு முயற்சியின் அருமையையும் இரத்தலின் இளிவரவினையும் தலைவிக்குக் கூறி ஆள்வினை உடையவனாகப் பிரிந்து சென்றதைத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள். ஆதலால் இல்வாழ்க்கையை மேற்கொள்ளும் ஒவ்வொரு கணவனும் தன் சொந்த முயற்சியாலும்

உழைப்பாலும் பொருளீட்ட வேண்டும் என்பது கூறப்பெற்றிருத்தலை அறியலாம்.

**இல்வாழ்வான் கடமை**

தலைவன் தன் பொருட்பிரிவில் வினைக்குறை உடையவனாக மீள்வானோ என அஞ்சிய தலைவிக்குத் தோழி, அவன் வினைமுடித்தே மீள்வான் என ஏதுக்காட்டி ஆற்றுவிப்பதாக கடுகுபெருந்தேவன் பாடியுள்ள குறுந்தொகைப் பாடலில் இல்வாழ்வான் கடமை சிறப்பாக வலியுறுத்தப் பெற்றுள்ளது.

*"பொத்துஇல் காழ அத்த யாஅத்துப்*
*பொரிஅரை முழுமுதல் உருவக் குத்தி*
*மறம்கெழு தடக்கையின் வாங்கி உயங்குநடைச்*
*சிறுகண் பெருநிரை உறுபசி தீர்க்கும்*
*தடமருப்பு யானை கண்டனர் தோழி!*
*தம்கடன் இறீஇயர் எண்ணி இடந்தொறும்*
*காமர் பொருட்பிணிப் போகிய*
*நம்வெங் காதலர் சென்ற ஆறே"* *(குறுந்.255)*

என்பது அப்பாடலாகும். வேனில் வெம்மையிலும் பாலை நிலத்தில் யானைகளுக்கு யா மரத்தின் பட்டை உணவாகப் பயன்படுகின்றது. பாலையின் வெம்மையால் அம்மரங்களும் பொரிந்து காணப்படுகின்றன. களிறு தம் கொம்பினால் யா மரத்தின் அடிப்பகுதியைக் குத்தித் தம் கைகளால் பட்டைகளை உரித்துத் தம் சுற்றம் உண்ணக் கொடுக்கின்றது. இக்காட்சிகளைக் கண்டு செல்லும் தலைவனும் தாம் வருந்தித் தன் சுற்றத்தார்களைப் பாதுகாப்பதைத் தம் வாழ்வின் கடமையாகப் பொறுப்புடன் எண்ணிப் பார்ப்பான். இல்வாழ்பவன் தென்புலத்தார், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான் என்னும் ஐவகையினரையும் பாதுகாப்பதைத் தன் கடமையாகக் கொண்டு ஒழுகுதல் வேண்டும். இக்கடமையைச் செய்யப் பொருள் வேண்டும். இதனால் தலைவன் தன் கடமையைச் செய்வதற்காகப் பொருட்பிணிக்கு அகன்றான். களிறு தன் சுற்றத்தைப் பாதுகாக்கும் கடமையைச் செய்வதைப் போல தலைவனும் தான் மேற்கொண்ட வினையை முடித்தே மீள்வான் எனத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள். இதிலிருந்து இல்வாழ்வானின் குடும்பக் கடமைகளையும் பொறுப்புக்களையும் அறியலாம்.

**தலைவிக்கு விழா**

தலைவனின் பொருட்பிரிவில் தலைவியின் ஆற்றாமையைக் கண்டு தோழி வருந்தினாள். அத்தோழிக்குத் தலைவி கூறுவதாகக் குறுந்தொகையின்

பாலைத்திணைப் பாடலில் அணிலாடு முன்றிலார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள பாடலில் தலைவன் தலைவியுடன் இருப்பதே தலைவிக்கு விழா எனக் கூறப்பெற்றுள்ளது.

*"காதலர் உழைய ராகப் பெரிதுவந்து*
*சாறுகொ ளூரிற் புகல்வேன் மன்ற;*
*அத்த நண்ணிய அங்குடிச் சீறூர்*
*மக்கள் போகிய அணிலாடு முன்றிற்*
*புலம்பில் போலப் புல்லென்று*
*அலப்பென் தோழி அவரகன்ற ஞான்றே"* *(குறுந்.41)*

கணவனாகிய தலைவன் தன்னுடன் தங்கியிருக்கும்போது சீறூரில் வாழ்ந்தாலும் அதனையே விழாக்கோலம் கொண்ட பேரூர் போல விரும்பி மகிழ்வதாகவும், அவன் தன்னைப் பிரிந்த அன்றே மக்கள் நீங்கிய அணில் விளையாடும் முற்றத்தை உடைய தனிமையைத் தரும் பாழ்மனையைப் போலப் பொலிவிழந்து தோற்றுவேன் என்றும் தலைவி தன் நிலையைத் தோழியிடம் கூறுகின்றாள்.

'சாறு' என்பது விழாவினைக் குறிக்கும். கணவன் தன்னுடன் தங்கியிருப்பது மனைவிக்குத் திருவிழா என்பதை இதனால் அறியலாம். அத்துடன் மனைவி கணவனிடம் கொண்ட பேரன்பினையும் இப்பாடல் புலப்படுத்துகின்றது.

**தலைவியே பொருள்**

பொருள் கடைக்கூடிய நெஞ்சிற்குத் தலைவன் கூறிச் செலவழுங்கு வித்ததாகக் கருவூர் ஓதஞானி இயற்றியுள்ள பாலைப் பாடலில் தலைவியையே பொருளாக மதித்துப் போற்றும் தலைவனின் மனநிலை கூறப்பெற்றுள்ளது. இது இல்லற வாழ்க்கையில் கணவன் – மனைவியர் உறவுநிலையின் உயர்வினைக் காட்டுவதாகும்.

*"மருந்தெனின் மருந்தே; வைப்பெனின் வைப்பே*
*அரும்பிய சுணங்கின் அம்பகட் டிளமுலை*
*பெருந்தோள் நுணுகிய நுசுப்பிற்*
*கல்கெழு கானவர் நல்குறு மகளே"* *(குறுந்.71)*

தலைவன் பொருள்தேட விழைந்த அவன் உள்ளத்திற்குத் தலைவியே பொருளாகவும் பொருளால் துய்க்கப்பெறும் இன்பமாகவும் விளங்குகின்றாள். பெரிய தோளினையும் நுண்ணிய இடையையும் கொண்ட கற்கள் பொருந்திய

*கானவர் நல்கிய மகள், பிரிந்து சென்று தேடும் பொருளால் அறம் செய்து அவ்வுலகில் துய்ப்பது அறம் என்றால் இத்தலைவியே அதற்குரிய மருந்து ஆவாள். பொருளினால் இவ்வுலகில் துய்ப்பது செல்வம் என்றால் இவளே அச்செல்வம் ஆவாள் என்கிறான் அத்தலைவன்.*

*தலைவன் இத்தகைய பெருமைக்குரிய தலைவியைப் பிரியாமையே பொருளெனக் கருதிச் செலவினைத் தவிர்க்கின்றான். பொருளால் அறனும் பொருளும் இன்பமும் எய்தலாம் என்று தன்னைப் பொருள் வேட்கையில் உய்த்த உள்ளத்திற்கு அறப்பயனும் பொருட்பேறும் இன்பப்பயனும் தனக்குக் கானவர் நல்கிய மகளே என்கின்றான். மருந்து, வைப்பு, இன்பம் என்னும் மூன்றாகவும் தலைவியின் மார்பகம், தோள், நுசுப்பு ஆகிய மூன்றும் விளங்குகின்றன; இவற்றை விடுத்துப் புறம் சென்று பொருள் தேடுவது எதற்கென்று தலைவன் செலவினைத் தவிர்க்கின்றான். இத்தகைய கணவனால்தான் இல்லறவாழ்க்கை சிறக்கும் என்பதை இப்பாடலால் அறியலாம்.*

**தலைவி, தலைவன் அன்புப் பிணைப்பு**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் தலைவி தலைவனுடன் கொண்டிருக்கும் பிரிக்க இயலாத அன்பின் பிணைப்புக் கூறப்பெற்றுள்ளது. பொருட்பிரிவை உணர்த்திய தலைவனிடம் தன்னையும் உடன்கொண்டு செல்லுமாறு கூறும் தலைவி "வளியினும் வரைநில்லா வாழுநாள்" என்று வாழ்க்கையின் நிலையாமையைக் கூறுகின்றாள்.*

***"அணையரும் வெம்மைய காடுஎனக் கூறுவீர்***
***கணைகழி கல்லாத கல்பிறங்கு ஆர்இடை***
***பணையெருத்து எழில்ஏற்றின் பின்னர்ப்***
***பிணையும் காணிரோ? பிரியுமோ அவையே?" (கலி.20:20–24)***

*எனக் கூறும் தலைவி சுரம் தன் அடிக்கு எளியதன்றாயினும், வழியிடை உண்ணுநீர் இல்லை என்றாலும் நின்னைப் பிரிந்து இரேன் எனத் தலைவனிடம் உறுதிப்படக் கூறுகின்றாள். பிரிந்திருந்தால் இறந்துபடுவேன் என்கின்றாள். கலைமானைத் தொடர்ந்து செல்லும் பிணைமானைக் காட்டித் தன்னையும் உடன் அழைத்துச் செல்ல வேண்டுகின்றாள்.*

**கனவிலும் தலைவியை மறவாத தலைவன்**

*பொருளீட்டி வந்த தலைவன் தலைவியைப் பாராட்டினான். அதைக் கண்ட தோழி அத்தலைவனிடம் இவள் பண்புகளை நீ எவ்வாறு மறந்து*

இத்துணை நாட்கள் வெளியூரில் தங்கினாய்? என வினவினாள். அதற்குத் தோழியிடம் தலைவன் கூறுவதாக ஐங்குறுநூற்றின் பின்வரும் பாடல் அமைந்துள்ளது.

*"எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடைச்*
*சிறிதுகண் படுப்பினும் காண்குவென் மன்ற*
*நள்ளென் கங்கு னளிமனை நெடுநகர்*
*வேங்கை வென்ற சுணங்கிற்*
*றேம்பாய் கூந்தன் மாஅ யோளே"* *(ஐங்.324)*

காட்டுத் தீயால் கவர்ந்து உண்ணப்பட்டதும் நெடியதுமான பாலை நிலத்தில் உறங்குவதற்குரிய வாய்ப்புக்கள் மிகவும் குறைவு. எனவே சிறிது கண்படுத்ததாகத் தோழியிடம் கூறும் தலைவன் அத்துயிலிலும் கனாக்கண்டேன் என்கின்றான். அச்சிறிய துயில் ஆழ்ந்த உறக்கமாதலின், அவள் விழித்திருக்கும்போது எந்நேரமும் தலைவியை நினைத்தலின் அந் நினைவுகள் கனவுகளாக வெளிப்பட்டன. எனவே தலைவன் சிறிதே கண்படுத்தபோதும் தலைவியையே கனவில் கண்டான். எனவே தலைவன் தோழியிடம் கனவிலும் நனவிலும் தலைவியின் நினைவே இருந்தமையால் அவளை மறந்தேன் என்பதற்கு இடமில்லை என்கின்றான்.

**தலைவி, தலைவன் இன்பமும் துன்பமும்**

பொருட் பிரிவினைத் தலைவி தாங்கிக்கொள்ள மாட்டாள் என அறிந்தும் அவளைப் பிரிந்து பொருளீட்டி வருதல் வேண்டும் என இடைவிடாது தூண்டும் தன் உள்ளத்திற்கு இடிந்துரைப்பதாக மருங்கூர்ப் பாகைச் சாத்தன்பூதனார் பாடிய பாடற்செய்தி அமைந்துள்ளது. கணவன் – மனைவியர்க்கிடையே இன்பமும் துன்பமும் மாறிமாறி வரும் என்னும் செய்தியைக் கூறியுள்ளார்.

*"இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்*
*நன்பகல் அமையமும் இரவும் போல*
*வேறுவே றியலஆகிமா றெதிர்ந்து*
*உளவென உணர்ந்தனை ஆயின் ஒரூஉம்*
*இன்னா வெஞ்சுரம் நன்னசை துரப்பத்*
*துன்னலும் தகுமோ துணிவில் நெஞ்சே"* *(அகம்.327:1–6)*

பெண்கள் வருந்துமாறு ஆண்கள் அவர்களைப் பிரிதலும், பின்னர் விரைந்து வந்து ஆண்கள் பெண்களைக் கூடி அவர்களுக்கு அருள் செய்வதுமாகிய இன்பம்

*துன்பம் இரண்டும் இரவும் பகலும் காதலுடைய கணவன், மனைவியரிடையே காணப்படுவன. இதனை அறிந்தும் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டும் வேட்கையால் துன்பம் மிகுந்த பாலை வழியைக் கடந்து செல்ல விரும்புதல் முறையோ என இப்பாடலில் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.*

**தலைவியிடம் அன்பு காட்டும் தலைவன்**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள குறுந்தொகைப் பாடலில் தலைவியிடம் அன்பு காட்டும் தலைவனைத் தோழி தலைவிக்குச் சுட்டிக்காட்டி ஆற்றுவிக்கின்றாள்.*

***"நசைபெரிது உடையர் நல்கலும் நல்குவர்***
***பிடிபசி களைஇய பெருங்கை வேழம்***
***மென்சினை யாஅம் பொளிக்கும்***
***அன்பின தோழி அவர்சென்ற ஆறே" (குறுந்.37)***

*இடைச்சுரத்தின்கண் அன்பை வெளிப்படுத்தும் காட்சிகளைக் கண்டு தலைவன் விரைந்து வருவான் எனத் தோழி தலைவிக்குக் கூறுகின்றாள். தலைவன் தலைவியைப் பிரிந்து சென்ற வழியில் பெண் யானையின் பசியை நீக்குவதற்காகப் பெரிய கைகளை உடைய ஆண் யானையானது மெல்லிய கிளைகளைக் கொண்ட யா மரத்தின் பட்டைகளை உரித்து அதன் நீரைப் பிடியானை பருகக் கொடுக்கும் அன்புடைய காட்சியைக் காணும் தலைவன் பேரன்புடையவனாகத் தலைவியை நினைத்துத் திரும்பி வருவான் எனத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள்.*

**விருந்தோம்பல்**

*நல்லதொரு குடும்பப் பின்னணியில் அறத்தைச் சிறப்பாக வகுத்து பொருளைப் பயன்பெறப் பகுத்து இன்பத்தை எளிதாகச் சமுதாயத்திற்கு வழங்குவதற்கு விருந்தோம்பல் என்னும் பண்பாடு உதவுகின்றது. விருந்தோம்பலை இல்லறத்தின் நல்லறமாக ஏற்றுக் கணவனும் மனைவியும் இணைந்து இல்விருந்தோம்பியுள்ளனர். கணவனுக்காகச் சமைத்த மனைவி நாளடைவில் பிறருக்காகவும் விருந்து சமைத்தாள். கணவனிடம் மனைவி கொண்ட அன்பு விரிவடைந்து விருந்தினர்பால் சென்றது. எதிர்பாராத நேரத்தில் விருந்தினர் வரினும் மகிழ்ந்து அன்புடன் விருந்தினரை வரவேற்று அவர்களைப் பேணும் தமிழரின் விருந்தோம்பல் பண்பாடாக மலர்ந்தது.*

வீட்டுக்கு வரும் உறவினர்களையும் நண்பர்களையும் வெகுதூரப் பயணிகளையும் விருந்தினராக ஏற்று மக்கள் ஊண்முறை விருந்து அளித்தனர். இது நாளடைவில் மனிதநலப் பண்புகளைத் தன்னகத்தே கொண்ட கோண்முறை விருந்தாக வளர்ந்தது. மக்களின் தேவைகளை நிறைவேற்றவும் விருந்தோம்பல் பயன்பட்டு வந்துள்ளது. உளவியல் அடிப்படையில் பார்க்கும்போது உடலியல் தேவைகள், பாதுகாப்புத் தேவைகள், அன்புடைமை சார்ந்த உணவுத் தேவைகள், தன்மதிப்புத் தேவைகள், தன்னையறிதலாகிய தேவைகள் ஆகிய மனித சமூகத் தேவைகள் அனைத்தும் விருந்தோம்பல் வாயிலாக நிறைவேறியுள்ளன.

தமிழர், விருந்தோம்பலில் ஒப்புரவைக் கலந்த வாழ்க்கையினர். பிறிதின் நோய் தன்நோய் போல் அறிவினாலாகிய பயன் விருந்தோம்பலால் விளைந்துள்ளது. அன்பின் அடிப்படையிலான பண்புகளால் போற்றப்படுவது விருந்தோம்பலாகும். விருந்தோம்பல் குடும்பத்தலைவியின் மாண்புடைய பண்பாகப் போற்றப்பட்டுள்ளது. பெண்கள் வகிக்கும் பல பங்குநிலைகளில் குடும்பப் பெண்களின் முக்கியக் கடமையாக விருந்தோம்பல் இருப்பதால் அனைத்து வயதுப் பெண்களுக்கும் உரிய உயரிய பண்பாடாக விருந்தோம்பல் திகழ்கின்றது. தமிழினம் இன்பக் களியாட்டங்களில் அழுந்தி சமூகச் சீர்குலைவில் சிக்கிச் சீரழிந்துவிடக் கூடாது எனச் சிந்தித்த சமூகநலச் சிந்தனையாளர்களான தமிழர், தமிழ்ப் பண்பாட்டு மரபில் மக்களை விருந்தோம்பலைப் பின்பற்றுமாறு வலியுறுத்தினர். விருந்தோம்பலைச் சமூகக் கடனாகக் கருதி அதனைக் கூட்டுப் பொறுப்பாக்கிச் சமூகப் பண்பாட்டியலைச் செழுமைப்படுத்தினர்.

பாரம்பரியத்தின் பின்புலத்தில் தோன்றிய விருந்தோம்பும் மனநிலை, கலை, இலக்கியங்களிலும் வெளிப்பட்டன. விருந்தோம்பும் மனப்போக்கை ஈடு செய்யும் வகையில் சங்க அகப்பாடல்களில் குடும்பத் தலைவியரிடம் கூட்டுநனவிலி மனம் செயல்படுகின்றன. பாலை உட்பட ஐவகை நிலங்களில் வாழ்ந்த சங்ககால மக்கள் தங்களுடைய வாழ்க்கை முறைகளுக்கு ஏற்பவும், செல்வநிலைகளுக்கு ஏற்பவும், தங்களுக்குக் கிடைக்கும் இயற்கை உணவு, தாவர உணவு, புலால் உணவு ஆகியனவற்றை விருந்தினர்களுக்குக் கொடுத்து விருந்தோம்பியுள்ளனர்.

நிலந்தோறும் விருந்தோம்பல் பண்பாடு இருந்தமையால் உடன்போக்கு மேற்கொண்ட தலைமக்களும், பொருள்வயிற் பிரிவில் சென்றோரும் வெகுதூரப் பயணிகளும் விருந்தினர்களாகி ஆங்காங்கே விருந்தோம்பப்பட்டு கவலையின்றிப் பயணித்துள்ளனர். விருந்தோம்பல் சங்ககாலம் முதற்கொண்டு இன்றுவரையில் அன்பின் அடிப்படையில் எழும் பகுத்துண்ணும் உணர்வில் பிறந்து, பிற

உயிர்களையும் மனிதர்களையும் ஓம்பும் சமுதாய உணர்வில் வளர்ந்து, உலகியலின் உயர்பண்பாகப் பரவி ஒப்புரவாகப் பயன்பட்டு, உறுதிப்பொருள்களின் உயர் தோற்றமாக உயர்ந்து ஒருலக உணர்வில் உறவுரிமையுடைய மனிதநேயமிக்க வாழ்வியல் பண்பாடாக வளர்ந்துள்ளது.

பாலைத்திணைப் பாடல்களிலும் விருந்தோம்பல் பண்பாடு குறித்த செய்திகள் காணப்படுகின்றன. இளந்தேவனார் இயற்றியுள்ள பாலைப் பாடலில் தோழி தலைவியிடம், நள்ளிரவில் வந்த விருந்தினர் உண்பதற்கு நீ நெய்யை அளாவவிட்டுக் கொழுவிய ஊனைச் சமைத்ததனால் உண்டான புகை படிந்த நெற்றியில் சிறிய நுண்ணிய வேர்வைத் துளிகள் தோன்றின. அப்போது தலைவன் உன் புணர்ச்சியை விரும்பினான் எனக் கூறுகின்றாள்.

*"எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்*
*கிளரிழை அரிவை! நெய்துழந் தட்ட*
*விளரூன் அம்புகை எறிந்த நெற்றிச்*
*சிறுநுண் பல்வியர் பொறித்த*
*குறுநடைக் கூட்டம் வேண்டு வோரே"* *(நற்.41:6–10)*

பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடிய பாலைக்கலிப் பாடலில் தோழி, பொருளை விரும்புதல் வாழ்க்கை அன்று; ஆராயின் பழியில்லாதவாறு அரசன் நம்மைப் பாதுகாக்கின்றான். நீ வருகின்ற விருந்தினர்களைப் பேணிப் பாதுகாத்து நின் மனைவி விரும்பியவாறு அவளுடன் கூடியிருந்து இனிய முயக்கத்தைப் பெறுதலே நிலைபேறுடைய பொருள் எனத் தலைவனுக்கு அறிவுறுத்துகின்றாள்.

*"நச்சல் கூடாது பெரும! விச்செல*
*வொழிதல் வேண்டுவல் சூழின் பழியின்று*
*மன்னவன் புரந்தர வருவிருந் தோம்பித்*
*தன்னகர் விழையக் கூடின்*
*இன்னுரல் வியன்மார்ப அதுமனும் பொருளே"* *(கலி.8:19–23)*

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள மற்றொரு பாலைக்கலிப் பாடலில் தோழி தலைவியிடம், தலைவன் மீண்டுவரும் இளவேனில் காலம் வந்தது. அதற்கு விருந்து படைப்போம் என்கின்றாள்:

*"காதலர் எயிறேய்க்குந் தண்ணருவி நறுமுல்லைப்*
*போதாரக் கொள்ளுங் கமழ்குரற் கென்னுந்*
*தூதுவந் தன்றே தோழி*
*துயரறு கிளவியோ டயர்ந்தீகம் விருந்தே"* *(கலி.32:32:16–19)*

ஓதலாந்தையார் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றின் பாலைப்பாடலில் உடன்போக்குச் செல்லும் தலைவன் தலைவியிடம் தன் இல்லத்திற்கு பகல் விருந்தாகி விருந்தினராகச் செல்வோம் என்கின்றான்.

*"புலிப்பொறி வேங்கைப் பொன்னிணர் கொய்துநின்*
*கதுப்பய லணியு மளவை பைபயச்*
*சுரத்திடை யயர்ச்சியை யாறுக மடந்தை*
*கல்கெழு சிறப்பி னம்மூர்*
*ரெல்விருந்து தாகிப் புகுக நாமே"* *(ஐங்.396)*

தலைவிக்கு மனைவி என்னும் உரிமையைக் கொடுக்கும் தலைவன், தலைவி தன்னூருக்குள் நுழையும்போது களைப்புத் தீர்ந்து மகிழ்ச்சியோடு செல்ல விரும்பினான். ஆதலின் 'அயர்ச்சி ஆறுக மடந்தை' என்கின்றான். புதுவோராய் வருவோரை வரவேற்று உணவளித்து மகிழ்வித்தல் விருந்தோம்பல் மரபாதலின் தாம் பகலில் செல்வதால் 'எல்விருந்தாகிப் புகுகம்' என்கின்றான். தலைவன் தன் தாய் தன் வீட்டிற்கு வரும் மருமகளை விருந்தாக ஏற்பாள் என்கின்றான். உடன்போக்கில் விரைந்து வந்துவிட்டமையால் நண்பகல் உணவிற்கே நம் இல்லம் புகுதல் கூடும் எனக் கூறும் தலைவன் 'எல்விருந்தாகிப் புகுகம்' என்கின்றான்.

கபிலர் அகநானூற்றுப் பாடலில் உடன்போக்குச் சென்ற தலைவியைத் தலைவனின் தாயும் விருந்தாக ஏற்பது கூறப்பட்டுள்ளது.

*"மான்அதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி*
*வெய்திடையுறா அதெய்தி முன்னர்ப்*
*புல்லென் மாமலைப் புலம்புகொள் சீறூர்ச்*
*செல்விருந் தூற்றித் துச்சி லிருத்த*
*நுனைகுழைத் தலமரு நொச்சி*
*மனைகெழு பெண்டியான் ஆகுக மன்னே"* *(அகம்.203:13-18)*

நக்கீரர் இயற்றியுள்ள பாலைப் பாடலில் விருந்தோம்பல் கடமையைச் செய்வதற்காகத் தலைவன் பொருளீட்ட வேண்டும் எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள். வளமையையும் உண்மை பேசுதலால் நெடுந்தொலைவிலும் போற்றும் புகழினையும் உடைய கோசர்களது வீரம் விளங்கும் படையினை அழித்து அவர்களது நிலத்தைக் கைப்பற்ற விரும்பிய பொன்னால் செய்த பூண்களை அணிந்த சோழனது பூக்கள் நிறைந்த நீண்ட சுழியின் நடுவிடத்தே தோட்டங்களை உடைய பெரும்புகழ் கொண்ட காவிரிப்பூம்பட்டினத்தைப்

போன்ற வளமிக்க தம் இல்லத்தில் தம்பால் வரும் விருந்தினரை மகிழ்ச்சியுடன் பேணுவதற்குப் பாலையைக் கடந்துசென்ற தலைவன் சிறந்த பொருளை எளிதில் பெற்றுவர வேண்டும் எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

*"வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை*
*வளம்கெழு கோசர் விளங்குபடை நூறி*
*நிலம்கொள வெஃகிய பொமல்பூண் கிள்ளி*
*பூவிரி நெடுங்கழி நாப்பண் பெரும்பெயர்க்*
*காவிரிப் படப்பைப் பட்டினத் தன்ன*
*செழுநகர் நல்விருந் தயர்மார் ஏமுற*
*விழுநிதி எளிதினின் எய்துக தில்ல"* *(அகம்.205:8–14)*

மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் இயற்றிய பாலைப் பாடலில் தலைவியின் விருந்தயர்தல் பண்பினைத் தலைவன் சிறப்பித்துக் கூறுகின்றான். நாள்தோறும் தன் இல்லத்திற்குத் தொடர்ந்து வரும் விருந்தினரை வரவேற்று உபசரித்துப் பேணுவதற்குத் தன் இல்லத்தின் முன்னர் இடப்பட்ட பந்தரின்கண் வறுமையுற்று வருவோரைப் பாதுகாத்து ஓம்புபவள் தலைவி எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

*". . . . . . . . . . . . . உள்ளிய*
*விருந்துஒழி வறியாப் பெருந்தண் பந்தர்*
*வருந்தி வருநர் ஓம்பித் தண்ணெனத்*
*தாதுதுகள் உதிர்த்த தாழையங் கூந்தல்"* *(அகம்.353:16–19)*

மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் தலைவன் பொருளீட்டச் செல்லும் பாலை வழியின் சுரத்தில் மலையைச் சார்ந்திருக்கும் சில குடிகளைக் கொண்ட ஊர்களில் இரவில் விருந்துண்டு பாதுகாப்பான இடங்களில் தங்கிச் செல்லும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*". . . . . . . . . . . சேணோங்கு*
*அலந்தலை ஞெமையத் தாளில் ஆங்கண்*
*எல்விருந்து அயர ஏமத்து அல்கி"* *(அகம்.187:10–13)*

இவ்வாறு பாலைத்திணைப் பாடல்களில் விருந்தோம்பல் பண்பாடு குறித்த செய்திகள் ஆங்காங்கே சுட்டிக்காட்டப்பெற்றுள்ளன.

**தலைவியின் அறிவும் ஒழுக்கமும்**

*போதனாரின் நற்றிணைப் பாலைப்பாடலில் தலைவியின் அறிவும் ஒழுக்கமும் குறித்த பண்பட்ட ஒழுகலாறு தமிழ்ப் பண்பாட்டுச் சிந்தனையில் விளக்கிக் கூறப்பெற்றுள்ளது.*

*நரைத்த கூந்தலையும் முதுமையும் உடைய செவிலியர் தேன் கலந்த நல்ல சுவையைக் கொண்ட இனிய வெண்ணிறமான பால் கலந்த உணவினை, விரிந்த ஒளியுடைய பொற்கலத்தில் இட்டனர். அவ்வாறு அவர்கள் கலத்தில் இட்ட உணவை ஒரு கையில் ஏந்தி, புடைப்பாகச் சுற்றிய பூவொத்த மெல்லி நுனியைக் கொண்ட சிறுகோலை ஓங்கித் தலைவியை 'நீ உண்க' என அடித்தனர். தெளிந்த நீரின் முகிழ்த்த முத்துக்கள் உள்ள பரவலாக இடப்பட்ட பொற்சிலம்பு ஒலிக்குமாறு தாவியோடும் தன்மையினளாகிய என்மகள் (தலைவி). அவள் செவிலியர் பின்தொடர இயலாது நடை மெலியுமாறு முன்றிலின் கண்ணுள்ள பந்தலின் கீழ்நின்று 'உண்ணேன்' எனப் பிடிவாதமாக மறுக்கும் சிறிய விளையாட்டுப் பருவத்தினள். அப்படிப்பட்டவள் அறிவையும் ஒழுக்கத்தையும் எவ்வாறு அறிந்தாள்? தான் மணந்த கொழுநன் குடி வறுமையுற்ற சூழலிலும் தன்னைப் பெற்ற தந்தையின் இல்லத்தின் வளமான உணவினைக் கருதாதவள் ஆயினாள். நுண்ணிய மணல் இடையீடுபட்டு வருவதைப் போன்று ஒருபொழுது உணவின்றி, மறுபொழுதில் உணவை உண்ணும் சிறுமையள் ஆயினள் என நற்றாய் வருந்திக் கூறுகின்றாள்:*

***"பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்***
***விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்தி***
***புடைப்பில் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்***
***'உண்'ணென்று க்குபு புடைப்பத் தெண்ணீர்***
***முத்தரிப் பொன்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று***
***அரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்***
***பரீஇமெலிந் தொழியப் பந்தர் ஓடி***
***ஏவல் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி***
***அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்?"      (நற்.110:1–9)***

*திருமணத்திற்குப் பின்னர் பெண்கள் கணவன் உறவுகளோடு கணவன் இல்லத்தில் ஒன்றிவிடுவதை இப்பாடலால் அறியலாம்.*

**பாலைப் பாடல்களில் தலைவன்**

பாலைத்திணைப் பாடல்களில் தலைவியின் இயல்புகளும் செயற்பாடுகளும் பலவாறாகக் கூறப்பெற்றுள்ளன. முகுகூற்றனார் நற்றிணைப் பாலைப்பாடலில் தலைவனின் இயல்புகளைத் தோழி பின்வருமாறு சுட்டிக் கூறுகின்றாள்.

*"என்கைக் கொண்டு தன்க ணொற்றியுந்*
*தன்கைக் கொண்டென் நன்னுதல் நீவியும்*
*அன்னை போல இனிய கூறியுங்*
*கள்வர் போலக் கொடியன் மாதோ"        (நற்.28:1–4)*

முன்பு அன்னையைப் போல இனிய சொற்களைக் கூறித் தலைவியிடம் அன்பு செலுத்திய தலைவன் தற்பொழுது கள்வரைப் போல கொடியவனாக உள்ளான் எனத் தலைவனின் பண்பைத் தோழி சுட்டிக்காட்டுகின்றாள்.

பாலை பாடிய பெருங்கங்கோ இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப்பாடலில் உடன்போக்கில் தலைவனின் செயல் கூறப்பெற்றுள்ளது. முன்னர் தலைவியைத் தலைவன் உடன்போக்கு அழைத்துச் சென்ற சுரவழியில் தன்னை எதிர்த்து ஆறலைக் கள்வரோடு போரிட்டு வென்றான். எனினும் அருளுடைமையாளன் ஆகிய அவன் ஆறலைக் கள்வர்களைக் கொல்லவில்லை.

*"கிடினென இடிக்குங் கோற்றொடி மறவர்*
*வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது*
*அமரிடை உறுதர நீக்கிநீர்*
*எமரிடை உறுதர ஒளித்த காடே"        (நற்.48:6–9)*

தலைவியின் உறவினர் வரும்போது பேராண்மை கொண்ட அத்தலைவன் காட்டிடை ஒளிந்துகொள்கின்றான். மணம் செய்துகொள்ளாத நிலையில் தலைவி அவள்தம் உறவினர் உடைமை என்னும் நனிநாகரிக நோக்கில் தலைவன் இவ்வாறு மறைந்துகொள்கின்றான். மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலிலும் இச்செய்தி கூறப்பெற்றுள்ளது.

*"அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவன்*
*நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே"        (நற்.362:9–10)*

நொச்சி நியமங்கிழார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப்பாடலில் தோழி தலைவியிடம் தலைவன் நம்மைப் பிரிபவன் அல்லன்; பிரியினும் காதல் நோயைப் பொறுப்பவன் அல்லன்; அவன் உன்னிடம் மிகுந்த விருப்பமும் சிறந்த அன்பும் மென்மையும் கொண்டவன். அவன் தன் வினை முற்றுப்பெறாத நிலையிலும் விரைந்து வருவான் என்கின்றாள்.

*"நோன்மார் அல்லர் நோயே மற்றவர்*
*கொன்னு நம்பும் குரையர் தாமே*
*சிறந்த அன்பினர் சாயலும் உரியர்" (நற்.208:6–8)*

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய அகநானூற்றுப் பாலைப்பாடலின் தோழியும், தலைவியை மறவாத தலைவனை,

*"இறந்தன ராயினும் காதலர் நம்வயின்*
*மறந்துகண் படுதல் யாவது புறந்தாழ்வு" (அகம்.223:9–10)*

எனக் குறிப்பிடுகின்றாள். தாயங்கண்ணனார் இயற்றியுள்ள பாலைப் பாடலின் தோழியும் தலைவியிடம் தலைவனின் அன்பு மிகுதியை,

*"வினைபொரு ளாகத் தவிர்விலர் கடைசிவந்து*
*ஐய அமர்த்த உண்கணின்*
*வையேர் வாலெயிறு ஊறிய நீரே" (அகம்.237:15–17)*

என்கின்றாள். கோப்பெருஞ்சோழன் இயற்றியுள்ள பாலைப்பாடலில் தலைவனது பிரிவை உணர்த்திய தோழிக்குத் தலைவி,

*"அருளும் அன்பும் நீக்கி துணைதுறந்து*
*பொருள்வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்*
*உரவோர் உரவோர் ஆக!*
*மடவம் ஆக மடந்தை நாமே" (குறுந்.20.)*

என்கின்றாள்.

தொடர்பில்லாதவர் மாட்டுத் தோன்றும் அருளையும், தொடர்புடையார் மாட்டுத் தோன்றும் அன்பையும் துறந்து பொருள் தேடும் நோக்கம் ஒன்றே உடையவனாகத் தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவன் அறிவுடையவன் ஆயின் அத்தகைய வன்மையைக் கொண்ட அவன் அறிவுடையவனாகவே இருக்கட்டும். அவனைப் பிரிந்திருக்கும் நான் அறிவற்றவளாகவே இருக்கின்றேன் எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

தன்துயர் கண்டு இரங்காமையாலும், தன்னைப் பாதுகாக்காமல் பிரிந்தமையாலும் அன்பும் அருளும் நீங்கியவன் எனத் தலைவனிடம் தலைவி குறை கண்டனள். மறுமை இன்பத்திற்கு ஏதுவாகிய அருளும், இம்மையில் மனை மகிழ்ச்சிக்குக் காரணமான அன்பும் துறந்து பொருள் விரும்பிச் செல்லும் அறிவைவிட, அருளும் அன்பும் கொண்டு மனைவியுடன் வாழும் மடமை உயர்ந்தது எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

பாலை நிலம் ‘அருஞ்சுரம்’ (ஐங்.301:2, 307:2, 314:4, 317:3), ‘வியன்சுரம்’ (ஐங்.306:1), ‘வெஞ்சுரம்’ (ஐங்.309:1), ‘நனந்தலை உலகம்’ (ஐங்.326:1, 329:1), வெஞ்சுரமாகிய ‘வெயிற்கடம்’ (ஐங்.330:1) என்றிவ்வாறு பாலைத் திணைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளது. பாலை நிலத்தின் பயணவழிகள் ‘வெஞ்சுரக் கவலை’ (ஐங்.323:3), ‘கவலை அருஞ்சுரம்’ (ஐங்.320:4), ‘மொழிபெயர் பன்மலை’ (ஐங்.321:4) எனக் கொடுமையானதாகவே கூறப்பெற்றுள்ளது. பாலைப் பாடல்களில் பாலைநிலத் தலைவன் ‘மைவரை நாட’ (ஐங்.301:4), ‘சிறுவரை நாட’ (ஐங்.309:5), ‘மெல்லம் புலம்ப’ (ஐங்.302:4), ‘கொண்க’ (307:3), ‘குரிசில்’ (ஐங்.306:1), ‘தோன்றல்’ (ஐங்.304:5), ‘விடலை’ (ஐங்.303:4, 305:4) எனக் குறிப்பிடப்பட்டிருப்பதால் நானிலத் தலைவர்களும் பாலைப் பாடல்களின் தலைவர்களாக அமைவதைக் காணலாம்.

பாலைவழிப் பயணத்தின் துயரம் அவை நிழலுமற்ற வற்கடம்; புலி, செந்நாய், யானை முதலான விலங்குகள் அலைந்து திரியும்; இந்நிலத்தில் ஆறலைத்துண்ணும் அருளற்ற கள்வர் கொலை, வழிப்பறி ஆகியயனவற்றைச் செய்வர் எனக் கூறப்பெற்றுள்ளது.

***“வேங்கை கொய்யுநர் பஞ்சரம் விளிப்பினு***
***மாரிடைச் செல்வோ ராறுநனி வெரூஉங்***
***காடிறந் தனரே காதலர்”*** (ஐங்.311:1–3)

ஆதலால் இத்தகைய நிலத்தின் தலைவர்கள் அன்புடையவர்களாகவும் பல வேளைகளில் அன்பற்றவர்களாகவும் இருப்பது இயல்பே; இத்தலைவர்கள் பொருளீட்டும் வேட்கையிலேயே செயல்படுவதால் தலைவியர் தலைவனை இரக்கமற்றவனாகக் கூறுகின்றனர். ஆயினும் தலைவன் அன்பும் அருளும் இரக்கமும் உடையவன் ஆவான்.

**நற்றாய்**

ஓதலாந்தையார் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றுப் பாலைப் பாடலில் தலைவியின் உடன்போக்கினை நற்றாய் அறநெறி என மகிழ்ந்து தன் நெஞ்சிற்குக் கூறுகின்றாள்.

***“மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலு***
***முயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்***
***சுரநனி யினிய வாகுக தில்ல***
***வறநெறி யிதுவெனத் தெளிந்தவென்***
***பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே”*** (ஐங்.371)

தலைவி தலைவனுடன் வேனிற் காலத்தில் உடன்போக்குச் சென்றாள். காதலனுடன் உடன் சென்று கற்பைக் காத்துக்கொள்வதே அறநெறி எனத் தெளிந்து சென்ற பிறை போலும் நெற்றியை உடைய தன் மகள் உடன்போக்குச் சென்ற வழியில் மறவராகிய மள்ளர் தம் பறையை முழக்க அதன் ஒலிக்கேற்ப மயில்கள் ஆடி மகிழும் உயர்ந்த நெடுமலையில் மேகங்கள் மழை பெய்து தன் மகள் செல்லும் சுரவழியின் வெம்மை நீக்கவேண்டும் என இப்பாடலில் நற்றாய் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றாள்.

மற்றொரு நற்றாய், தன் மகளின் உள்ளம் ஏற்குமாறு பொய்யான வாக்குறுதிகளைக் கூறி நம்பச்செய்து வஞ்சினம் கூறிய அயலவனாகிய இளைய தலைவனோடு, ஆரவாரமிக்க இப்பழைய ஊரில் பழிச்சொல் பரவ, பல மலைகளைக் கடந்து உடன்போக்குச் சென்ற மகள், தன்னை நினைத்துப் பார்க்கவில்லை என நற்றாய் புலம்புகின்றாள்.

*"என்னு முள்ளினள் கொல்லோ தன்னை*
*நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொ*
*டழுங்கல் மூதூர் ரலரெழ*
*செழும்பல் குன்றம் மிறந்தவென் மகளே?" (ஐங்.372)*

தலைவி தன் தாயையும் உறவுகளையும் நினைத்துப் பாராமல் உடன்போக்குச் சென்றமைக்குக் காரணம் அவளுக்குத் தலைவன் மீதிருந்த பெருங்காதலே ஆகும்.

மற்றொரு ஐங்குறுநூற்றுப் பாடலின் நற்றாய் தன்னை மிகுந்த துயரத்தில் ஆழ்த்தித் தன் மகளை உடன்போக்கில் அழைத்துச்சென்ற விடலையாகிய தலைவனின் தாய் தன்னைவிடப் பெருந்துன்பத்தை அடையவேண்டும் எனக் கூறுகின்றாள்.

*"நினைத்தொறுங் கலிழு மிடும்பை யெய்துக*
*புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை*
*மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்*
*வெஞ்சுர மென்மக ளுய்த்த*
*வம்புஅமை வல்வில் விடலை தாயே" (ஐங்.373)*

ஓதலாந்தையாரின் மற்றொரு ஐங்குறுநூற்றுப் பாலைப்பாடலில் தான் காதலித்த தலைவனை வரைந்துகொள்ள நற்றாய் மறுத்தமையால் தலைவனுடன் உடன்போக்குச் சென்ற தலைவி இடைச்சுரத்தில் கண்டாரிடம் தன் தாயை 'அறன்இல் ஆய்' எனப் பழித்துக் கூறுகின்றாள்.

*"கடுங்கட் காளையொடு நெடுந்தேர் ரேறிக்*
*கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய*
*வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்*
*கூறுமின் வாழியோ வாறுசெல் மாக்க!*
*ணற்றோள் நயந்துபா ராட்டி*
*யெற்கெடுத் திருந்த வறன்இல் யாய்க்கே"                (ஐங்.385)*

காவல் செய்தும் வரைந்து கொடுக்க மறுத்தும் தலைவியை இற்செறித்த தாய் அறமற்றவள் ஆவாள். குடும்பத்தின் நற்பெயரைக் காப்பதாக நினைத்து தன் மகளின் களவுக் காதலையும் நல்வாழ்க்கையையும் கெடுத்தவள் நற்றாய். சங்க அகப்பாடலில் கண்டாரிடம் தலைவி கூறுவதாக இப்பாடல் ஒன்றே அமைந்துள்ளது. உடன்போக்கில் தலைவனும் தலைவியும் தேரூர்ந்து செல்வதாகக் கூறும் பாடலும் இஃது ஒன்றே ஆகும்.

**அறினில் அன்னை**

தலைவிக்கும் அவள் தாய்க்கும் உள்ள பகைமை உறவினைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ குறுந்தொகைப் பாலைப்பாடலில் சங்ககாலச் சமூகப் பண்பாட்டுப் பின்புலத்தில் பின்வருமாறு எடுத்துக்காட்டியுள்ளார்.

*"ஊஉர் அலரெழச் சேரி கல்லென*
*ஆனாது அலைக்கும் அறன்இல் அன்னை*
*தானே இருக்க தன்மனை; யானே*
*நெல்லி தின்ற முள்எயிறு தயங்க*
*உணல்ஆய்ந் திசினால் அவரொடு சேய்நாட்டு*
*விண்தொட நிவந்த விலங்குமலைக் கவாஅன்*
*கரும்புநடு பாத்தி அன்ன*
*பெருங்களிற்று அடிவழி நிலைஇய நீரே"                (குறுந்.262)*

இப்பாடலில் தோழி தலைவியை உடன்போக்கிற்கு உடன்படுத்துகின்றாள். தலைவனின் களவொழுக்கத்தை ஊராரும், சேரியில் உள்ளாரும் அறிந்து அலர் தூற்றும் நிலை ஏற்படுகின்றது. இதனை அறிந்த தாய் தலைவியை இற்செறித்தாள். காப்புக் கைமிகுந்து காமம் பெருகியவழித் தலைவியை தலைவனுடன் உடன்போக்குச் செல்ல விடுத்தலே தக்கவழி எனத் தோழி உணர்ந்தாள். இதனால் அலர் அடங்கும் என்றும், தலைவியின் தாய் அறனில்லாத இல்லத்தில் தனித்திருந்து வருந்துவாள் என்றும் தோழி கருதினாள். யானை அடிச்சுவடு பட்ட இடத்தில் தேங்கிய நீர், கரும்புநடு பாத்தியில் தேங்கிய நீராக உவமை கூறப்பெற்றுள்ளது. அலர் மொழிகளிலிருந்தும் தாயின் சுடுமொழிகளிலிருந்தும்

*நீங்கி உடன்போக்கில் சென்று நெல்லியின் காயைத் தின்று நீரைப் பருகும்போது தோன்றும் மகிழ்ச்சி தலைவியின் முறுவலில் கூறப்பெற்றுள்ளது. தலைவி தான் விரும்பிய தலைவனுக்கு மணம் முடிக்க முயலாத தாயை 'அறினில் அன்னை' எனப் பழித்துக் கூறுகின்றாள்.*

**செவிலித் தாயின் வருத்தம்**

*கயமனார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் உடன்போக்குச் சென்ற மகளை நினைத்துச் செவிலித்தாய் வருந்துகின்றாள்.*

***"பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்***
***விளையாடு ஆயமொடு அயர்வோள் இனியே***
***எளிதுஎன உணர்ந்தனள் கொல்லோ? முளிசினை***
***ஓமைக் குத்திய உயர்கோட்டு ஒருத்தல்***
***வேனிற் குன்றத்து வெவ்அறைக் கவாஅன்***
***மழைமுழங்கு கடுங்குரல் ஓர்க்கும்***
***கழைதிரங்கு ஆர்இடை அவனொடு செலவே" (குறுந்.396)***

*களிறு தன்னுடைய பிடிக்கு நீர் ஊட்டுவதற்காக நீர் வேட்கையால் ஓமை மரத்தைக் குத்தி நீர் கிடைக்காது வருந்தி வானின் முழக்கத்தை உற்றுக் கேட்கும். பாலைநில வெம்மையால் அந்நிலத்தின் ஓமை மரங்கள் கூட உலர்ந்துவிட்டன. மூங்கில்களும் காய்ந்தன. ஓமை, மூங்கில் முதலிய ஓரறிவு உயிர்களும் நீரின்றி வாடின. இனிய மழைவரும் என யானைகள் எதிர்நோக்கிக் காத்திருத்தல் போல தலைவியையும் தலைவனையும் காணும் ஆசையால் செவிலி வருந்துகின்றாள்.*

*தாரகமாகிய நீரும், போடகமாகிய பாலும், போக்கியமாகிய விளையாட்டு ஆயமும் தலைவிக்குத் தலைவனே என்றாகிவிட்டதால் அவனுடன் உடன்போக்குச் சென்றதால் செவிலித்தாய் வருந்துகின்றாள்.*

**கார்த்திகை தீபம் ஏற்றல்**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் கார்த்திகை தீபம் ஏற்றி வழிபடும் மரபு கூறப்பெற்றுள்ளது.*

***"அறுமீன் பயந்த அறம்செய் திங்கள்***
***செல்சுடர் நெடுங்கொடி போல***
***பல்பூங் கோங்கம் அணிந்த காடே" (நற்.202:9–11)***

*ஆறுநாள் மீனாக விளங்கும் கார்த்திகை 'அறுமீன்' எனக் கூறப்பெற்றுள்ளது. சங்ககால மக்கள் ஆறுநாள் மீனாக விளங்கும் கார்த்திகையுடன் முழுநிலவு*

கூடும் கார்த்திகை மாதத்தில் விளக்குகளை ஏற்றி முருகக் கடவுளை வழிபாடு செய்துள்ளனர்.

**இல்லங்களில் விளக்கேற்றல்**

விரிந்த சுடரை உடைய ஞாயிறு மேற்றிசையில் மலையினைச் சார்ந்து மறைந்தது. ஒளி பொருந்திய வளையல்களை அணிந்த பெண்கள் தம் இல்லங்களில் வெண்மையான திரிகளைக் கொண்டு விளக்கேற்றினர் என ஆலம்பேரிச் சாத்தனார் தாம் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

***“. . . . . . . . . . . . .. கைமிக்***
***ககன்சுடர் கல்சேர்பு மறைய மனைவயின்***
***ஒண்தொடி மகளிர் வெண்திரிக் கொளாஅலிற்” (அகம்.47:8–10)***

இதிலிருந்து மாலைக்காலத்தில் பெண்கள் தம் இல்லங்களில் விளக்கேற்றி வழிபட்டதை அறியலாம்.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைப்பாடலில் மாலைக்காலத்தில் பெண்கள் தம் வீடுகளில் விளக்கேற்றும் செய்தி கூறப்பெற்றுள்ளது. கூதிர்ப் பருவத்தின் மாலைக் காலத்தில் மையுண்ட கண்களை உடைய கனத்த குழையணிந்த பெண்கள் தம்முடைய கையுறைப் பொருளாக அனைத்து உலகமும் தொழும் ஒளிப்பொருளாகிய தெய்வத்திற்கு ஆவின் நெய்யை ஊற்றி விளக்கேற்றித் தொழுது வழிபட்டனர்:

***“. . . . . . . . . . . . . துயர்கூர் மாலை***
***கயல்ஏர் உண்கண் கனங்குழை மகளிர்***
***கையுறை யாக நெய்பெய்து மாட்டிய***
***சுடர்துயர் எடுப்பம் புன்கண் மாலை” (குறுந்.398:3–5)***

**கலங்கரை விளக்கு**

மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள பாலைப்பாடலில் மாட ஒள்ளெரியாகிய கலங்கரை விளக்கு கூறப்பெற்றுள்ளது.

***“உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்***
***புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ***
***இரவும் எல்லையும் அசைவின் றாகி***
***விரைசெலல் இயற்கை வங்கூ ழாட்டக்***
***கோடுயர் திணிமணல் அகன்துறை நீகான்***

*மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய*
*ஆள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல”* *(அகம்.255:1–7)*

என்ற இப்பாடலில் உலகமே கிளர்ந்து எழுந்தாற் போன்ற அச்சம் பொருந்திய நாவாயானது, வேகமாக வீசும் இயல்பினதாய் காற்று அசைத்துச் செலுத்த இரவுபகலாக ஓரிடத்தும் தங்காது புலால்நாறும் அலைகளை உடைய பெரிய கடலின் நீர்ப்பரப்பைக் கிழித்துக்கொண்டு சென்றது; வங்கம் ஓட்டியும் கரை உயர்ந்த மணல் செறிந்த துறையிடத்தே ஒளிபொருந்திய கலங்கரை விளக்கு உதவியால் செல்லும் இடமறிந்து வங்கத்தைச் செலுத்த பொருளீட்டும் முயற்சியில் தலைவனும் கடல் கடந்து சென்றான் எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

**கட்டில், மெத்தை, படுக்கை**

பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடிய பாலைக்கலிப் பாடலில் தலைவி, சிங்கம் சுமந்த கட்டிலின் மேல் அன்னத்தூவியால் அமைந்த மெல்லிய மெத்தையில் படுத்துத் துயில் கொள்ளும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“நலம்பெறு சுடர்நுதால்! எம்மொடு நீவரின்*
*இலங்குமாண் அவிர்தூவி அன்னமென் சேக்கையுள்*
*துலங்குமான் மேல்ஊர்தித் துயில்ஏற்பாய்! மற்றுஆண்டை*
*விலங்குமான் குரல்கேட்பின் வாடுவை அல்லையோ?” (கலி.13:14–17)*

**நடுகல் வழிபாடு**

அம்மூவனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப்பாடலில் நடுகல் வழிபாடு குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளன.

*“. . . . . . . . . . . . . . . . முரம்பின் வீழ்த்த*
*வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்*
*வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்*
*நடுகல் பீலி சூட்டித் துடிப்படுத்து*
*தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலிகொடுக்கும்” (அகம்.35:5–9)*

கோட்டை வீரராகிய வெட்சியார் கூரிய முனையினை உடைய நீண்ட வேலினைக் கொண்டவர்கள். வில்லையே ஏராகக் கொண்டு வாழும் வாழ்க்கையைக் கொண்ட சிறந்த அம்பினை உடைய கரந்தை வீரர்கள் அவர்களைப் போர் முனையில் வென்று தம் ஆனிரைகளை மீட்டு வந்தனர். பின்னர் அவ்வெட்சியாரை மேட்டு நிலத்தே வீழ்த்தினர். கரந்தை வீரர்கள் தம் ஆண்மையின் அடையாளமாக மணற்குன்றின் மேலுள்ள நடுகல் தெய்வத்தை வழிபடுவதற்காக அக்கல்லில் மயில்தோகைகளைச் சூட்டினர். துடியை முழக்கி

நெல்லால் சமைத்த கள்ளொடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுத்தனர் என நடுகல் வழிபாடு கூறப்பெற்றுள்ளது.

களத்தில் இறந்துபட்ட வீரனின் உடலைப் புதைத்த இடத்தில் ஒரு கல்லினை நட்டு அக்கல்லில் அவ்வீரனின் பெயரும் பீடும் எழுதி வைத்தல் நடுகல்லாகும். இந்நடுகல் மரபு பழந்தமிழ் வீரவாழ்வின் அடையாளமாகும். வீரன் களத்தில் பட்ட இடத்திலன்றி அவ்வீரனை நினைவுகூரும் வகையில் பிறவிடத்தில் நடப்பட்ட கல்லும் சங்ககாலத்தில் நடுகல் என்றே அழைக்கப்பெற்றன. ஆயினும் அது 'வீரக்கல்' என்று கூறப்பட்டது. இதனை மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப்பாடல்,

*". . . . . . . . . . . . . . . . ஆடவர்*
*பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்*
*பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்"* *(அகம்.131:9–11)*

எனக் குறிப்பிடுகின்றது.

**உடன்போக்கும் தமர் அறியச் செய்யும் மணமும்**

ஓதலாந்தையார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றுப் பாடலில் உடன்போக்கும் தமர் அறியச் செய்யும் திருமணமும் பாலைநில மக்களின் பண்பாட்டு வாழ்க்கையாகக் கூறப்பெற்றுள்ளது.

*"தன்னம ராயமொடு நன்மண நுகர்ச்சியி*
*னினிதாங் கொல்லோ தனக்கே பனிவரை*
*யினக்களிறு வழங்கும் சோலை*
*வயக்குறு வெள்வே லவற்புணர்ந்து செலவே?"* *(ஐங்.379)*

தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்ற பின்னர் தோழி நற்றாயிடம் தலைவியின் களவுக் காதலைக் கூறினாள். அதனைக் கேட்ட நற்றாய் அக்களவு பற்றிய செய்தியை முன்பே கூறியிருப்பின் நானே அவளை அத்தலைவனுக்கு மணம் முடித்துக் கொடுத்திருப்பேன். அவ்வாறு இல்லாமல் அவள் உடன்போக்குச் சென்றாளே என்று வருந்திக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

'நன்மண நுகர்ச்சி' என்பது பலரும் அறியச் செய்யும் திருமணத்தினால் அடையும் பேரின்பமாகும். அது கேளிரும் கிளைஞர்களும் உடனிருக்கச் செய்யப்படும் திருமணம் ஆதலின் 'தன்அமர் ஆயமொடு' என்கின்றாள் நற்றாய். தலைவியின் திருமண நாளை ஆவளோடு எதிர்பார்த்துள்ளோரும் அவள் இன்பவாழ்வினைக் கண்டு தாமும் இன்பம் அடைவாருமாகிய தோழியர் கூட்டம்

பார்க்க நடைபெறும் திருமணத்தினும், கொடும் வெம்மை கொண்ட பாலையைக் கடந்துசென்று அறியாத் தேயத்தே அயலவர் உடனிருக்கச் செய்யப்படும் திருமணம் இன்பத்தைத் தராது என்று நற்றாய் வருந்துகின்றாள். 'இனக்களிறு வழங்கும் சோலை' என்பது உயிர்க்குத் துன்பம் தரும் என்னும் பொருளுடையது. ஆயினும் பிறந்தநாள் முதல் சிறந்தன செய்து வளர்த்த தாய், உடன் விளையாடி உயிரொன்ற விளையாடிய தோழியர்களைவிடத் தலைவி தனக்குச் சிறந்தவனாகத் தேர்ந்தெடுத்த காளையாகிய தலைவனே தன் வாழ்க்கைத்துணை என்று முடிவு செய்த அவளது கற்பு மேம்பாடு நற்றாயால் இப்பாடலில் உணர்த்தப்படுகின்றது.

**வதுவைச் சடங்கு**

ஓதலாந்தையார் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றின் பின்வரும் பாலைப்பாடலில் வதுவைச்சடங்கு என்னும் திருமணச் சடங்கு விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளது.

***"நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினு***
***மெம்மனை வதுவை நல்மணங் கழிகெனச்***
***சொல்லி னெவனோ மற்றே வென்வேல்***
***மையற விளங்கிய கழலடி***
***பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே" (ஐங்.399)***

தலைவியைத் தன்னுடன் அழைத்துச் சென்ற தலைவன் அவளைத் தன் இல்லத்திற்குக் கூட்டிச் சென்றான். அத்தலைவனின் தாய் தலைவியை வரவேற்று திருமணத்திற்கு முன்னர் செய்யும் சிலம்புகழி நோன்பு என்னும் சடங்கினைச் செய்தாள். அதனைக் கண்ட சிலர் தலைவியின் தாயிடம் கூறினர். அப்போது நற்றாய் சொல்லி வருந்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

பெண்களுக்குத் திருமணத்திற்கு முன்னர் பெற்றோர் அணிவிக்கும் கன்னிச் சிலம்பினைத் திருமணத்திற்கு முன்னர் நீக்குவது பண்பாட்டு மரபாகும். அதனைச் சிலம்புகழி நோன்பு என்று கூறினர். இதனைப் பெண்ணின் தாய் தன் இல்லத்தில் நிகழ்த்துவதைப் பெரும் செல்வமாகவே கருதுவாள். இதனை நற்றிணைப் பாடல்,

***"சிலம்பு கழீஇய செல்வம்" (நற்.229:5)***

எனக் குறிப்பிடுகின்றது. தாய் செய்யக்கடவதாகிய திருமணச் சடங்கினைத் தன் மகளின் காதலனை ஈன்ற தாய் செய்தாள் எனக் கேட்ட நற்றாய் தன் ஏமாற்ற உணர்வினை இவ்வாறு வெளிப்படுத்துகின்றாள். இவ் வாய்ப்பினை

*இழந்தாலும் நற்றாய் முறையான வதுவைச் சடங்கினையாவது தன் இலத்தில் நடத்தவேண்டும் என்று விரும்புகின்றாள். அவ் வாய்ப்பும் கிடைக்காதோ என்ற ஏக்கத்தில் நற்றாய் 'எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச் சொல்லின் எவனோ?' என்கின்றாள்; தலைவன் பொய்யான வாக்குறுதிகளைத் திறம்படச் சொல்லித் தன் மகளை அழைத்துச் சென்றமையால் 'பொய்வல் காளை' என்று தலைவனைச் சாடுகின்றாள்.*

*சிலம்புகழி சடங்கினை இக்காலத்தில் நாத்தூண் பெண்கள் (நாத்தனார்கள்) செய்கின்றனர். இச்சடங்கு 'கருமணி வழித்தல்' என்னும் பெயரில் அவர்களால் செய்யப்படுகின்றது. சிலம்புகழி சடங்கின்போது மணப்பெண் உண்ணா நோன்பு இருக்கின்றாள்.*

**வதுவை அயர்தல்**

*கயமனாரின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் சங்க காலத்தில் நடைபெற்ற திருமண ஏற்பாடுகள் விளக்கமாகக் கூறப்பெற்றள்ளன.*

***"நனைவினை நறவின் தேறல் மாந்தி***
***புனைவினை நல்லில் தருமணல் குவைஇப்***
***பொம்மல் ஓதி என்மகள் மணனென***
***வதுவை அயர்ந்தனர் நமரே அதனால்"*** ***(அகம்.221:1–4)***

*அரும்புகளிலிருந்து விளைந்த கள்ளின் தெளிவை நிறைய உண்டு, நன்கு அலங்கரிக்கப்பட்ட சிறந்த வேலைப்பாடுகள் அமைந்த நல்ல இல்லத்தில் புதிதாகக் கொண்டுவந்த மணலைக் குவித்துப் பரப்பினர். கற்றையாக நெருங்கி வளர்ந்த பொலிவு பெற்ற எம் மகளுக்குத் திருமணம் எனக் கூறித் தாய் தந்தையர் மணத்திற்கு வேண்டுவனவற்றைச் செய்தனர். இஃது சங்க காலத்தில் தம் மகளின் திருமணத்திற்காகப் பெற்றோர் செய்யும் பொதுவான திருமண ஏற்பாடாகும். ஆயினும் இப்பாடலின் தோழி, தலைவியின் பெற்றோர் வேற்றுமண வரைவாகிய நொதுமலர் வரைவிற்கு ஏற்பாடு செய்தமையால் தலைவியைத் தலைவனோடு உடன்போக்குச் செல்லுமாறு அறிவுறுத்துகின்றாள்.*

**கொடுப்போர் இன்றியும் கரணம்**

*சங்ககாலத்தில் வெளிப்பட வரைவதல், படாமை வரைதல் என்று இருவகையான திருமண முறைகள் இருந்தன. படாமை வரைதல் என்பது கொடுப்போர் இன்றி நடைபெறும் உடன்போக்குத் திருமண முறையைச் சார்ந்தது. இதனைத் தொல்காப்பியர்,*

*“கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே*
*புணர்ந்துடன் போகிய காலை யான”* [13]

எனக் கற்பியலில் சுட்டிக் காட்டியுள்ளார். ஔவையார் குறுந்தொகையில் இயற்றியுள்ள பாலைப் பாடல் இதற்குச் சான்றளிக்கின்றது.

*“பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு*
*தொன்மூ தலாத்துப் பொதியில் தோன்றிய*
*நாலூர்க் கோசர் நன்மொழி போல*
*வாயா கின்றே தோழி ஆய்கழற்*
*சேயிலை வெள்வேல் விடலையொடு*
*தொகுவளை முன்கை மடந்தை நட்பே”* *(குறுந்.15)*

தலைவி தலைவனுடன் உடன்போக்கில் செல்கின்றாள். தோழி தலைவியின் கற்பு நெறிப்பட்ட செயலைச் செவிலித்தாயிடம் கூறினாள். செவிலித்தாய் நற்றாயிடம் கூறி அறத்தொடு நிற்கின்றாள். பறையும் சங்கும் மங்கல நாளில் முழங்குவன. பலர் கூடுவதற்கேற்ப நிழலும் இடமும் உடைமையால் ஆலமரத்தின் அடியில் பொதுமக்கள் கூடும் மன்றங்கள் இருந்தன. ‘பறைபடப் பணிலம் ஆர்ப்ப’ திருமண நாளில் பலரும் விருந்துண்டு செல்வதற்கேற்ற வளமனையை உடையவன் தலைவன் எனச் செவிலி நற்றாய்க்குக் கூறுகின்றாள். கோசர் என்பவர் மோகூர்ப் பழையனுடைய அவையத்து விளங்கிய ஒருவகை வீரர் ஆவர். இக்குடியினர் நான்கு ஊர்களில் வாழ்ந்தவராதலின் நாலூர்க்கோசர் எனப்பட்டனர். கோசர் தம்குலப் பெண்ணைக் கொன்றமைக்காக நன்னனைக் கொன்ற சூழ்ச்சித்திறம் உடையவர். உடன்போக்கில் தலைவனும் தலைவியும் மணந்துகொண்டமை ‘நட்பு வாயாகின்று’ எனக் கூறப்பெற்றுள்ளது.

**நெற்றிப் பொட்டு**

நக்கீரனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் தலைவன் தலைவியின் கூந்தலில் பூச்சூடி நெற்றியில் பொட்டுவைக்கும் பண்பாட்டுச் செய்தி கூறப்பெற்றுள்ளன.

*“. . . . . . . . . . . . . நெறிகுரல்*
*சாந்தார் கூந்தல் ஊரி போதணிந்து*
*தேங்கமழ் திருநுதல் திலகம் தைஇயும்”* *(அகம்.389:1–2)*

என்பன இது குறித்த பாடலடிகளாகும்.

**ஒப்பனையைத் தவிர்க்கும் தலைவி**

*மதுரை மருதன் இளநாகனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைப் பாடலில் தலைவனுடைய பொருட்பிரிவில் தலைவி ஒப்பனையைத் தவிர்ப்பாள் என்னும் செய்தி கூறப்பெற்றுள்ளது. இப்பாடலில் தோழி தலைவியிடம் தலைவன் பொருளீட்டி மீண்டு வந்துகொண்டிருப்பதால் கழன்று வீழ்ந்த நின் வளைகளைத் தோளில் செறிவாயாக; நின் துன்பம் நீங்குவதாக; நெறிப்புடைய நின் கூந்தலில் மாலையைச் சூட்டிக்கொள்க என்கின்றாள்.*

***"தொடிதோள் இவர்க! எவ்வமும் தீர்க!***
***நெறிஇருங் கதுப்பின் கோதையும் புனைக"          (அகம்.269:1–2)***

*கச்சிப்போட்டு நன்னாகையார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் தலைவன் இல்லாதபோது தலைவி கூந்தலைப் புனைதல் இல்லை என்னும் செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:*

***"நறுந்தாது கொழுதும் பொழுதும்***
***வறுங்குரற் கூந்தல் தைவரு வேனே"          (குறுந்.192:5–6)***

**வெறியாட்டு**

*உறையூர் மருத்துவன் தாமோதரனார் அகநானூற்றில் இயற்றியுள்ள பாலைப்பாடலில் வெறியாட்டுக் குறித்த செய்தி உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. தலைவன் பொருட் பிரிவில் தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள்; தலைவி தோழியிடம் 'ஆற்றுவேன்' என்று கூறுகிறார்.*

***"குன்றி அன்ன கண்ண குரூஉமயிர்ப்***
***புன்தாள் வெள்எலி மோவாய் ஏற்றை***
***செம்பரல் முரம்பில் சிதர்ந்த பூழி***
***நல்நாள் வேங்கைவீ நன்கனம் வரிப்பக்"          (அகம்.133:1–4)***

*குன்றிமணி போன்ற கண்களையும் நல்ல நிறத்தையுடைய மயிரினையும் மெல்லிய கால்களையும் தாடியையும் கொண்ட ஆண் வெள்ளெலியின் செந்நிறப் பருக்கைக் கற்கள் உள்ள மேட்டு நிலத்தில் கிளறிச் சிதறிப் போட்ட புழுதியில் நல்ல மணநாளை அறிவிக்கும் வேங்கை மலர்கள் உதிர்ந்து வீழ்ந்து அவ்விடத்தை நல்ல வெறியாடும் களம் போல அழகு செய்யும் என்று தலைவி தோழியிடம் கூறுகின்றாள். இப்பாடலில் உவமை வாயிலாக வெறியாடும் 'களம்' பேசப்பெற்றுள்ளது.*

**நீர்ப்பந்தர்**

நப்பாலத்தனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் பசுக்கூட்டம் நீர் குடிப்பதற்காக அமைக்கப்பட்ட ஆன் நீர்ப் பந்தல் கூறப்பெற்றுள்ளது. வெயிலில் வெப்பமுற்ற பரற்கற்கள் மிகுந்த பாலை வழியில் பள்ளத்தின் ஒரு புறத்தில் குந்தாலியால் தோண்டிய கிணறு இருந்தது. அங்குப் பசுக்கூட்டத்தைப் பாதுகாக்கும் ஆயர்கள் சென்று அதனருகில் சிறுகுழியைப் பறித்தனர். அக்குழியில் ஊறிய நீரைப் பசுக்கூட்டம் குடித்த பின்னர் யானைக் கூட்டம் உண்ணும் என இப்பாடலில் ஆன்நீர்ப் பந்தல் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

***“வெயில்வெய்து உற்ற பரலவல் ஒதுக்கில்***
***கணிச்சியிற் குழித்த கூவல் நண்ணி***
***ஆன்வழிப் படுநர் தோண்டிய பந்தல்***
***யானை இனநிரை வௌவும்”*** *(நற்.240:6–9)*

இச்செய்தி நற்றிணையின் மற்றொரு பாடலில்,

***“பயநிரைக்கு எடுத்த மணிநீர்ப் பந்தர்***
***புன்தலை மடப்பிடி கன்றொடு ஆர”*** *(நற்.92:6–7)*

எனக் கூறுப்பெற்றுள்ளது. ஓதலாந்தையாரின் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றுப் பாலைப்பாடலில் கல்லாக்கோவலர் தம் ஆனிரைகள் நீர் உண்பதற்காகத் தம் கோல்களால் (தடிக்கம்பு) தோண்டிய நீர்ப்பந்தல் கூறப்பெற்றுள்ளது.

***“கல்லாக் கோவலர் கோலிற் தோண்டிய***
***வானீர்ப் பத்தல் யானை வெளவுங்”*** *(ஐங்.304:1–2)*

**பொருளீட்டல்**

பொருள்வயிற் பிரிவைக் களமாகவும் பின்புலமாகவும் கொண்டுள்ள பாலைத்திணைப் பாடல்களில் பொருளீட்டல், பொருளின் சமூகத்தேவை, புகழ் கருதிப் பொருளீட்டல், ஈகை, பொருள்வழிப்பட்ட வாழ்க்கை, வினையே ஆடவர்க்கு உயிர், ஆள்வினை ஆடவர் கடமை, பொருளும் அருளும், மன்னாப் பொருட்பிணி, நில்லாப் பொருட்பிணி, இல்வாழ்க்கையில் பொருட்பயன், அறத்தினும் பொருளே சிறந்தது என்னும் நிலைகளில் பொருளீட்டல் குறித்த செய்திகள் இவண் கூறப்பெறுகின்றன.

**பொருளீட்டல்**

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பாலைக்கலிப் பாடலில் தோழி கூற்றில் பொருளீட்டலின் பயன் குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள்

வருமாறு:

*“இடனின்றி இரந்தோர்க்குஒன்று ஈயாமை இழிவென*
*கடனிறந்து செயல் சூழ்ந்த பொருள் ஆகுமோ” (கலி.2:19–20)*

தம்மிடத்துப் பொருளேதும் இல்லை எனக் கூறி இரந்து வந்தவர்களுக்குச் சிறிதும் கொடுக்காமல் இருப்பது இழிவு எனக் கருதி மலை கடந்து சென்று தேடி இயற்றும் பொருள் நன்கு மதிக்கப்படும் மதிப்புடைய உயரிய பொருளாகும் எனக் கூறப்பட்டுள்ளது.

மற்றொரு பாலைக்கலிப் பாடலின் தலைவன், கையிலே பொருள் இல்லாதவர்களுக்குக் காதல் உடையவன் என்ன காரியத்தைச் செய்துவிடப் போகின்றான் என மற்றவர்கள் பழித்தும் இகழ்ந்தும் கூறுவதைக் கேட்டுப் பொருளீட்டச் செல்கின்றான்.

*“மருளிகொள் மடநோக்கம் மயக்கப்பட்டு அயர்ந்தாயோ?*
*காதலர் எவன்செய்ய பொருள் இல்லாதார்க்கென*
*ஏதிலார் கூறும்சொல் பொருளாக மதித்தாயோ” (கலி.14:11:13)*

இதனால் உந்தப்பட்டு பாலைநிலத்தின் அருஞ்சுரத்தின் வழியே பொருளீட்டச் செல்லும் தலைவன் தன்னுடைய தற்காப்புக்காக வில், அம்பு, திகிரி முதலான கருவிகளைக் கொண்டு செல்கின்றான்.

*“நீயே செய்வினை மருங்கியல் செலவயர்ந்து யாழநின்*
*கைபுனை வல்வில் ஞாண்உளர் தீயே” (கலி.7:5–6)*

**பொருளின் சமூகத்தேவை**

பொருள்வயிற் பிரியும் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அகநானூற்றில் பாலைத்திணையில் இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார் என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள பாடலில் பொருளீட்டலுக்கான சமூகக் காரணம் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*“நட்டோர் இன்மையும் கேளிர் துன்பமும்*
*ஒட்டாது உறையுநர் பெருக்கமும் காணூஉ*
*ஒருபதி வாழ்தல் ஆற்றுப தில்ல” (அகம்.279:1–3)*

மகளிரின் மார்பகத்தை விட்டு நீங்கும் ஆற்றலற்ற ஆடவர்களே தம்மோடு பொருந்திய நட்புக் கொண்டோர் பொருளற்று வறுமையில் வாடுவதையும்

சுற்றத்தார் துன்பம் உறுவதையும் கண்டு பொருளீட்டும் முயற்சியின்றி மடி பெருக்கி ஒரே இடத்தில் வாழ்வர் என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

வினைமுற்றி மீளும் தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் இயற்றியுள்ள பாலைத்திணைப் பாடலில் பொருளின் சமூகத்தேவை கூறப்பெற்றுள்ளது.

*"கேள்கே டூன்றவும் கிளைஞர் ஆரவும்*
*கேளல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்*
*ஆள்வினைக் கெதிரிய ஊக்கமொடு புகல்சிறந்" (அகம்.93:1–3)*

உறவினர்களுக்கு ஏற்படும் கேட்டினைப் போக்கி அவர்களைத் தாங்குதல் வேண்டும். தம் சுற்றத்தார் பசியின்றி உண்ண வேண்டும். நொதுமலாளர் தம்மோடு உறவினர்களாக ஒழுகுதல் வேண்டும் என்னும் சமூகத்தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகப் பொருளீட்ட வேண்டும் எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

**புகழ் கருதிப் பொருளீட்டல்**

தலைவனது பொருட்பிரிவில் ஆற்றாமையால் வருந்திய தலைவியை ஆற்றுவிப்பதற்காகத் தோழி கூறுவதாக மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் புகழ் கருதிப் பொருளீட்டும் தலைவனின் ஆண்மைச் செயல் கூறப்பெற்றுள்ளது.

*"செறுவோர் செம்மல் வாட்டலுஞ் சேர்ந்தோர்க்கு*
*உறுமிடத்து உவக்கும் உதவி ஆண்மையும்*
*இல்லிருந் தமையோர்க்கு இல்லென் றெண்ணி*
*நல்லிசை வலித்த நாணுடை மாந்தர்" (அகம்.231:1–4)*

தம் பகைவரின் செருக்கினை அழிக்கவும், தம்மைச் சேர்ந்தோர்க்கு ஒரு தீங்கு நேரும்போது அவர்களுக்கு உதவி செய்யும் ஆண்மையும் ஆகிய இரண்டும் இல்லத்தில் சோம்பி இருப்பவர்களுக்கு இல்லை என்பதை நினைத்து நாணம் கொண்ட தலைவன் புகழ் கருதிப் பொருளீட்டச் சென்றதாக இப்பாடலின் தோழி தலைவியிடம் கூறுகின்றாள்.

**ஈகையும் பொருளும்**

தலைவியைப் பிரிந்து சென்று பொருளீட்டி வரவேண்டும் என்று இடைவிடாது வற்புறுத்தும் தன் நெஞ்சிற்குத் தலைவன் கூறுவதாக மதுரைத் தத்தங்கண்ணனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில்

ஈகை செய்வதற்காகப் பொருளீட்ட வேண்டும் என்னும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*"இருள்படு நெஞ்சத் திடும்பை தீர்க்கும்*
*அருணன்கு உடைய ராயினும் ஈதல்*
*பொருளில் லோர்க்கஃ தியையாதாகுதல்*
*யானு மறிவென் மன்னே யானைதன்"* *(அகம்.335:1–4)*

வறுமை வந்தால் என்செய்வது என மயங்கும் அருள் உள்ளத்தைக் கொண்டவராயினும் பொருள் இல்லாதவர்க்கு ஈகை செய்ய இயலாது என்பதை யானும் நன்கு அறிவேன் எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். ஈதலும் இசைபட வாழ்தலும் சங்ககால மக்களின் வாழ்வியல் தழுவிய பண்பாடு ஆதலின் தலைவன் ஈகை செய்வதற்காகப் பொருளீட்ட வேண்டும் என்கின்றான்.

**பொருள்வழிப்பட்ட வாழ்க்கை**

தலைவனின் பொருட்பிரிவில் ஆற்றாமையால் வருந்திய தலைவி தோழியிடம் கூறுவதாகப் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாடலில் பொருள்வழிப்பட்ட வாழ்க்கையின் முக்கியத்துவம் சுட்டிக் கூறப்பெற்றுள்ளது.

*"அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்*
*பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்*
*பொருளின் ஆகும் புனையிழை என்றுநம்*
*இருளேர் ஐம்பால் நீவி யோரே"* *(அகம்.155:1–4)*

எக்காலத்திலும் பாவநெறியில் செல்லாமல் அறநெறியில் செல்லும் வாழ்க்கையும், பிறர் வீட்டு வாயிலில் சென்று இரவாத உயர்வும் ஆகிய இரண்டும் பொருளால் ஆகும் எனக் கூறித் தலைவன் பொருட்பிரிவில் சென்றதாகத் தோழியிடம் இப்பாடலின் தலைவி கூறுகின்றாள். இதன்வழிப் பொருள்வழிப்பட்ட வாழ்க்கையின் சிறப்பை அறியலாம்.

**வினையே ஆடவர்க்கு உயிர்**

தலைவன் பொருள்வயிற் பிரிவான் என அஞ்சி ஆற்றாமை கொண்ட தலைவிக்குத் தோழி கூறுவதாகப் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் புலவர்இயற்றியுள்ள பாலைத்திணைப் பாடலில் பொருளீட்டும் வினையே ஆடவர்க்கு உயிரெனக் கூறப்பெற்றுள்ளது.

*"வினையே ஆடவர்க்கு உயிரே வாள் நுதல்*
*மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என*
*நமக்குரைத் தோரும் தாமே*
*அழாஅல் தோழி அழுங்குவர் செலவே"* *(குறுந்.135)*

ஈதலும் துய்த்தலும் பொருள் இல்லோர்க்கு இல்லையாதலின் தன் உயிரையும் பொருட்படுத்தாமல் அரியபெரிய வினைகளை மேற்கொண்டு அவற்றைச் செய்து முடிக்கும் வினைசெயல்வகை ஆடவர்க்கு உயிராகக் கூறப்பட்டுள்ளது. ஆடவரின் இயக்கத்திற்கு அவர் முயன்று செய்யும் வினைகளே காரணமாகும். தம் இல்லத்தை நீங்காமல் கற்பு நெறி நிற்கும் மனைவியர்க்கு தனியே உயிர் என்பது இல்லை. அவர்களைப் பாதுகாத்து மகிழ்விக்கும் அவர்தம் கணவர்களே அவர்களுக்கு உயிர் ஆவர். உயிர் உள்ள வரையில் வினை செய்து பொருளீட்டல் ஆடவரின் கடமையாதலின் வினை ஆடவர்க்கு உயிராகின்றது. கணவரைப் பிரிந்து அவர் வருகைக்காகக் காத்திருத்தலின் மனைவியர்க்கு ஆடவர் உயிராகின்றார். தலைவன் பிரியான் எனத் தோழி கூறினும், கடமைக்காகத் தலைவன் பொருள் வயிற் பிரிவான் என்பதே இப்பாடலின் மையக் கருத்தாகும்.

**ஆள்வினை ஆடவர் கடமை**

'பொருள்வயிற் பிரிவான்' என அஞ்சிய தலைவிக்குப் 'பிரியேன்' எனத் தலைவன் கூறுவதாக மதுரைப் போத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் ஆள்வினை ஆடவர் கடமை என்னும் செய்தி கூறப்பெற்றுள்ளன.

*"அருளன் றாக ஆள்வினை ஆடவர்*
*பொருளென வலித்த பொருளல் காட்சியின்*
*வைத்துமலி உள்ளமொடு துஞ்சல் செல்லாது*
*எரிசினம் தவழ்ந்த இருங்கடற் றடைமுதல்*
*கரிகுதிர் மருத்த கான வாழ்க்கை*
*அடுபுலி முன்பின் தொடுகழல் மறவர்*
*தொன்றியல் சிறுகுடி மன்றுநிழல் படுக்கும்*
*அண்ணல் நெடுவரை ஆமறப் புலர்ந்த*
*கல்நெறிப் படர்குவ ராயின் நன்னுதல்"* *(அகம்.75:1–9)*

உண்மைப் பொருள் அருளன்று; ஆள்வினையே எனத் துணிந்த ஆடவர்கள் ஊக்கம் கொண்ட உள்ளத்தோடு எரியும் தீப்பரந்த இலைகள் கரிந்து உதிரப்பெற்ற

*மரங்களைக் கொண்ட காட்டில் வாழ்க்கையைக் கொண்ட கொல்லும் புலி போன்ற வலிமையையும், காலில் கட்டப்பெற்ற வீரக்கழலினையும் உடைய மறவர்கள் பழைமை வாய்ந்த தம் சிற்றூர்களின் மன்றங்களில் படுத்து உறங்குவர். அத்தகைய நீண்ட மலைப்பகுதியைக் கடந்து நீரின்றி வறண்ட கல்வழியில் தலைவன் பொருட்பிரிவில் சென்றான். இதனால் தலைவி தலைவனின் ஆள்வினைச் செயலை நினைத்து வருந்துகின்றாள்.*

**பொருளும் அருளும்**

*தலைவனின் பொருட்பிரிவை உணர்த்திய தோழியிடம் தலைவி கூறுவதாக வெண்பூதி என்பார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப்பாடலில் பொருட்செல்வம், அருட்செல்வம் ஆகிய செல்வங்களின் இயல்புகள் பேசப்பெற்றுள்ளன. தலைவி தோழியிடம்,*

***“. . . . . . . . . . . . . . நத்துறந்து***
***பொருள்வயிற் பிரிவார் ஆயின் இவ்வுலகத்துப்***
***பொருளே மன்ற பொருளே***
***அருளே மன்ற ஆரும்இல் லதுவே”*** ***(குறுந்.174:4–7)***

*பாலையின் வெம்மையைக் கருதாமல் சென்றமையால் தலைவன் பொருட் செல்வத்தின் உயர்வு கருதியமையும், தன்னைத் துறந்து சென்றமையால் அருளின் உயர்வை அவன் போற்றாமையையும் தலைவி நினைத்துப் பார்க்கின்றாள். அருட்செல்வம் அவ்வுலகிற்கு உரியதாதலின் அதனை இவ்வுலகில் எவரும் பெரிதாகப் போற்றவில்லை. கீழ்மக்களிடம் உளதாகிய பொருட்செல்வம் உயர்ந்தோரால் போற்றப்படுவதும், செல்வத்துட் செல்வமாகிய அருட்செல்வம் அவர்களால் ஏற்கப்படாமையும் வியப்பாக உள்ளது.*

*பொருள்மேல் கொண்ட வேட்கையினால் அருளையும் அன்பையும் கொன்று அருளுடைமையாக இன்பப்பொருளை இழத்தல் அறிவுடைமையன்று எனத் தலைவனுக்கு வலியுறுத்தப்படுகின்றது.*

**மன்னாப் பொருட்பிணி**

*பொருட்பிரிவைக் கூறிய தலைவனுக்குத் தோழி கூறுவதாக நற்றிணையில் இடம்பெற்றுள்ள பாலைத்திணைப் பாடலில், மன்னாப் பொருட் பிரிவினால் இளமையும் இன்பமும் வீணாகின்றன எனத் தோழி தலைவனுக்கு அறிவுறுத்துகின்றாள். அப்பாடலடிகள் வருமாறு:*

***“வெவ்வளி வழங்கும் வேய்பயில் அழுவத்து***
***எவ்வம் மிகூஉம் அருஞ்சுரம் இறந்து***
***நன்வாய் அல்லா வாழ்க்கை***
***மன்னாப் பொருட்பிணிப் பிரிதும்யாம் எனவே” (நற்.46:8–11)***

ஒவ்வொரு நாளும் இளமையும் இன்பமும் கழிகின்றன. எய்கணை நிழல் சென்றவாறு சுவடு பதியாமல் நீங்குகின்றன. இந்நிலையில் மன்னாப் பொருளை நினையாமல் தலைவியுடன் உடன் தங்குக எனத் தோழி தலைவனை வேண்டுகின்றாள். பொருள் தேடும் பொருட்டு இன்பத்தையும் இளமையையும் இழப்பதால் தோழி வாழ்க்கை நன்றன்று என்னும் பொருளில் ‘நன்வாய் அல்லா வாழ்க்கை’ என்கின்றாள்.

வண்ணப்புறக் கந்தரத்தனார் என்னும் இயற்றியுள்ள பாலைப்பாடலில் பொருட்பிரிவை விரும்பிய தலைவனைத் தோழி பின்வருமாறு கூறி செலவழுங்குவிக்கின்றாள்.

***“மன்னாப் பொருட்பிணி முன்னி இன்னதை***
***வளையணி முன்கைநின் இருளைக்கு உணர்த்தெனப்***
***பல்மாண் இரத்தீ ராயின் சென்மென***
***விடுந ளாதலும் உரியள் விடியனே” (நற்.71:1–4)***

நிலையில்லாத பொருளைத் தேடும் ஆசை நின்னைப் பிணித்தலால் அப்பொருள் தேடலில் கருத்தைச் செலுத்தி இதனை வளையணிந்த முன்கையை உடைய உன் தோழிக்குக் கூறுக என இரந்து கேட்கின்றீர். நானும் அவ்வாறே அவளிடம் கூற அவளும் நின்னை பொருட்பிரிவில் செல்ல விடுப்பாள்; ஆயினும் இறந்துபடுவாள். ஆதலால் பொருட்பிரிவைத் தவிர்க்க எனத் தோழி தலைவனிடம் கூறுகின்றாள். இப்பாடலில் தோழியின் பார்வையில் தலைவன் தேடும் பொருள் மன்னாப்பொருள் ஆகின்றது.

**நில்லாப் பொருட்பிணி**

பொருள்வயிற் பிரிவை விரும்பிய தன் நெஞ்சிற்குத் தலைவன் மறுத்துக்கூறிச் செலவினைத் தவிர்ப்பதாக நற்றிணையில் இடம்பெற்றுள்ள பாலைத்திணைப் பாடலில் நில்லாப் பொருட்பிணியின் இயல்பு சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

***“இறந்துசெய் பொருளும் இன்பம் தருமெனின்***
***இளமையின் சிறந்த வளமையும் இல்லை;***

*இளமை கழிந்த பின்றை வளமை*
*காமந் தருதலும் இன்றே; அதனால்*
*நில்லாப் பொருட்பிணிச் சேறி”* *(நற்.126:7–11)*

பாழ்பட்ட பாலைநிலத்தின் வழிச்சென்று ஈட்டும் பொருள் இளமையில் பெறும் காம இன்பத்திற்கு ஈடாகாது. இளமை பெறும் காம இன்பமே மிகச்சிறந்தது. இக்காம இன்பத்தை இளமையிலேயே இனிது நுகர முடியும். பொருளால் ஏற்படும் வளமை சிறந்ததெனினும் அதைவிட இளமையே சிறந்தது. இளமையைப் பொருள் ஈட்டுவதில் கழித்தால், பொருளால் உண்டாகும் வளமை முதுமையில் காம இன்பத்தைத் தராது. ஆதலால் நிலைத்துநில்லாப் பொருள்மீது கொண்ட பற்றுக் காரணமாக காம இன்பத்தைக் கருதாத நெஞ்சமே, பொருட்பிரிவைத் தவிர்ப்பாயாக என இப்பாடலின் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறிக் கொள்கிறான்.

**இல்வாழ்க்கையில் பொருட்பயன்**

இரந்தோர்க்கு ஈதல் செய்தல் முதலான காரணத்தால் பொருள்வயிற் பிரிந்த தலைவன் தான் வருவதாகக் குறித்த பருவம் வந்தும் வராதது கண்ட தலைவி வருந்திக் கூறுவதாகக் கருவூர்க்கோசனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் இல்வாழ்க்கையில் பொருளின் பயன்பாடு சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது.

*“இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்*
*அசையுநர் இருந்தோர்க்கு அடும்புணர்வு இன்மென*
*வினைவயில் பிரிந்த வேறுபடு கொள்கை*
*அரும்பவிழ் அலரிச் சுரும்புஉண் பல்போது*
*அணிய வருதும்நின் மணியிருங் கதுப்பென*
*எஞ்சா வஞ்சினம் நெஞ்சுணக் கூறி*
*மைசூழ் வெற்பின் மலைபல இறந்து*
*செய்பொருட்கு அகன்ற செயிர்தீர் காதலர்”* *(நற்.214:1–8)*

தம் இல்லத்தில் செயலற்றுச் சோம்பியிருப்பவர்க்கு இம்மைக்குரிய புகழும், இம்மை – மறுமை ஆகியனவற்றுக்குரிய இன்பமும், மறுமையிலும் இன்புறச் செய்யும் ஈதலாகிய கொடையும் ஆகிய மூன்றும் அரிதாகக் கூடக் கைகூடுவதில்லை எனக் கருதி பொருள் செயல் வினைக்குத் தலைவன் சென்றதாக இப்பாடலின் தலைவி தோழியிடம் கூறுகின்றான். அனைத்திற்கும் மேலாக இல்வாழ்க்கைக்கும் பொருள் தேவை.

சோம்பலுற்று இல்லத்தில் இருப்போர்க்குப் புகழும் இன்பமும் கொடைமையும் இன்மையால் பழந்தமிழர் பொருள்வயிற் பிரிவை மேற்கொண்டனர் என்பது இப்பாடலால் அறியப்படும் செய்தியாகும்.

**அறத்தினும் பொருளே சிறந்தது**

தலைவன் பொருள்வயிற் பிரிவில் ஆற்றாளாகிய தலைவி தோழியிடம் கூறுவதாக காமக்கணிப்பசலையார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் தலைவியின் கூற்றில் அறத்தினும் பொருளே அரியது; சிறந்தது என்னும் கருத்து வலியுறுத்தப்பெற்றுள்ளது.

***"மெய்யுற இருந்து மேவர நுவல***
***இன்னா தாகிய காலைப் பொருள்வயின்***
***பிரிதல் ஆடவர்க்கு இயல்பெனின்***
***அரிதுமன் றம்ம அறத்தினும் பொருளே"*** ***(நற்.243:8–11)***

முன்னர்த் தலைவன் தலைவியைப் பிரியேன் என்று கூறினான். இது அறத்தின் பாற்பட்டது. சொன்ன சொல்லைக் காக்கும் அறம் மறந்தவனாக தற்போது பொருள்வயிற் பிரிவில் சென்றமையால் தலைவி அறத்தினும் பொருளே சிறந்தது எனத் தோழியிடம் கூறுகின்றாள்.

**இன்மையது இழிவு**

பெருந்தலைச் சாத்தனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாடலில் தலைவியின் உள்ளக் குறிப்பை அறிந்து பொருட்பிரிவைத் தவிர்க்கும்போது தலைவன் தன் நெஞ்சிற்குப் பின்வருமாறு கூறுகின்றான்.

***"குவளை நாறுங் கூந்தல் தேமொழி***
***இவளின் தீர்ந்தும் ஆள்வினை வலிப்ப***
***பிரிவன்நெஞ் சென்னும் ஆயின்***
***அரிதுமன் றம்ம இன்மையது இளிவே"*** ***(நற்.262:7–10)***

குவளை மலர் மணம் வீசும் கூந்தலையும் இனிய மொழிகளையும் கொண்டவள் இத்தலைவி. இவளைக் கைவிட்டுப் பொருள் முயற்சியில் என் உள்ளம் ஈர்க்கின்றது. அதனால் என் நெஞ்சு 'இவளைப் பிரிவேன்' என்கின்றது. அப்படியாயின் வறுமையால் ஏற்படும் இழிவு மிகவும் கொடியது என்கின்றான் இப்பாடலின் தலைவன். இதிலிருந்து இன்மையது இழிவினைப் போக்கப் பொருளீட்டல் அவசியம் என அறியலாம்.

பொருளீட்டல் முற்றுப்பெறாத நிலையில் ஆற்றானாகிய தலைவனின் உள்ளம் தலைவியிடம் செல்வோம் என்றது. ஆனால் அவன் அறிவு வினைமுடித்துச் செல்லலாம் என்றது. தலைவனின் உள்ளமும் அறிவும் மாறுபாடு கொள்ளும் இந்நிலையை தேய்புரிப் பழங்கயிற்றினார் என்பார் பாடிய நற்றிணைப் பாலைப் பாடலில் தலைவன் கூற்றில் பின்வருமாறு வெளிப்படுத்தியுள்ளார்.

*“ . . . . . . . . . . . . . நெஞ்சம்*
*செல்லல் தீர்க்கஞ் செல்வாம் என்னுஞ்*
*செய்வினை முடியாது எவ்வம் செய்தல்*
*எய்யா மையோடு இளிவுதலைத் தருமென*
*உறுதி தூக்காத் தூங்கி அறிவே” (நற்.284:3–7)*

தலைவனின் அறிவு எதிர்காலத்தை ஆராய்ந்து பொருளை விரும்பிற்று. அறவோர்க்கும் அருளியோர்க்கும் அளித்தற்கும் பகை நீக்கத்திற்கும் காதல் வாழ்விற்கும் இல்லறச் செம்மைக்கும் பொருள் இன்றியமையாதது என்பதால் தலைவனின் அறிவு பொருள் தேடும் முயற்சியை முன்னிலைப்படுத்துகின்றது.

**செல்வத்தின் பயன்**

தலைவனின் பொருள்வயிற் பிரிவில் ஆற்றாளாகிய தலைவி தோழிக்குக் கூறுவதாக அந்தியிளங்கிரனார் பாடிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் மக்கள் செல்வம் மிகுந்தவர்களையே விரும்பி நாடுவர் எனச் செல்வத்தின் பயன் குறித்த செய்தி பொருத்தமான உவமையால் விளக்கப் பெற்றுள்ளது.

*“நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்*
*பயன் இன்மையின் பற்றுவிட் டொரூஉம்*
*நயனின் மாக்கள் போல வண்டினம்*
*சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர” (அகம்.71:1–4)*

செல்வம் நிறைந்தாரைத் தேர்ந்து அடையும் எண்ணத்தால் செல்வம் குறைந்தார் இனிப் பயன்படமாட்டார் எனக் கருதி அவர்பால் இருந்த பற்றினை விட்டொழித்து அவரைக் கைவிட்டு நீங்கும் நன்றியில்லாத மக்களைப் போல வண்டின் கூட்டம் சுனையில் பூத்த நீர்ப்பூக்களை விடுத்துக் கோட்டுப்பூக்களை நாடிச் சென்றன. இதிலிருந்து செல்வத்தின் வலிமையையும் பயனையும் அறியலாம்.

### பொருளே காதலர் காதல்

பொருள்வயிற் பிரிவில் சென்ற தலைவன் குறித்த காலத்தில் வாராமையால் தலைவி ஆற்றாமையால் வருந்தினாள். அவளிடம் தோழி தலைவன் உன்னிடம் அருள் கொண்டு விரைந்து வருவான் என்றாள். அதைக் கேட்ட தலைவி சினந்து கூறுவதாக அகநானூற்றுப் சீத்தலைச் சாத்தனார் இயற்றியுள்ள பாலைப் பாடலில் 'பொருளே காதலர் காதல்' என்னும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*"இல்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்*
*வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்*
*பொருளே காதலர் காதல்*
*அருளே காதலர் என்றி நீயே" (அகம்.53:13–16)*

எந்நாளும் பொருளற்ற வறியவர்களுக்கு இல்லையெனக் கூறித் தன்னால் இயன்றதைச் செய்யாது மறைப்பதற்கு வலிமையற்ற தலைவனின் உள்ளம் அரிய பாலையின் கவர்த்த வழியினைக் கடந்து சென்றது. தலைவன் காதலித்தது என்னைக் காட்டிலும் பொருளையே ஆகும். நீயோ தலைவன் அருள் செய்வான் என்கின்றாய் எனத் தலைவி தோழியைச் சினந்து கூறுகின்றாள். இதிலிருந்து தலைவனின் பொருட்பற்றினை அறியலாம்.

### உடையும் உணவும்

மக்களின் சமூக வாழ்வியல் பண்பாட்டியலில் அவர்கள் உடுத்தும் உடைகளும் உண்ணும் உணவு வகைகளுமே அவர்களது சமூக வாழ்வியலின் தரத்தையும் தகுதியையும் எடுத்துக்காட்டுகின்றன. எத்தகைய நிலையில் வாழ்வார்க்கும் உடையும் உணவும் அடிப்படையான அவசியத் தேவையாகும். அத்துடன் உறைவிடமும் வேண்டும்.

உலகத்தை ஒருகுடைக்கீழ் ஆளும் மன்னர்களாயினும், காட்டில் வேட்டையாடும் வேடுவர்களாயினும், கடலில் மீன்பிடிக்கும் பரதவர்களாயினும் ஒவ்வொருவரும் உண்பதற்கு நாழி உணவும் உடுத்துவதற்கு இரண்டு ஆடைகளும் அவசியமெனப் புறநானூற்றுப் பாடல் (புறம்.189:1–5) கூறும். இப்பாட்டு உண்பது நாழி உடுப்பவை இரண்டு என்பதால் ஆடவர்கள் பொதுவாக இரண்டு ஆடைகள் அணிந்தமை புலனாகும். இவற்றுள் ஒன்றை அரையில் கட்டி, மேலாடையைத் தோளில் முன்னும் பின்னும் நாலுமாறு தொங்கவிடுவர்.[14] மேலாடையை அவர்கள் குடுமியைச் சுற்றித் தலைக்கட்டாகவும் கட்டுவர் (அகம்.195:12–14) என்பதற்குச் சங்க இலக்கியங்களில் சான்றுகள் உள்ளன.

*காவி ஆம்பல் போன்றவற்றின் இலைகளால் ஆன தழையாடையை மகளிர் அணிந்தனர். இத் தழையாடைகளுக்காக இவர்கள் தழை கொய்தனர் எனச் சங்க இலக்கிய ஐந்திணைப் பாடல்களிலும் குறிப்புக்கள் (நற்.123:6–7, 204:1–2, 390:4–6, அகம்.20:8–10) காணப்படுகின்றன. குறிஞ்சிப்பாட்டில் "பைவிரி அல்குல் கொய்தழை தைஇ"[15] எனத் தழையாடை கூறப்பெற்றுள்ளது.*

*பாலைத்திணைப் பாடல்களில் துவராடைகளும் தழையாடைகளும் பற்றிக் கூறப்பெற்றுள்ளது. இளவேட்டனார் இயற்றியுள்ள நற்றிணையின் பாலைத்திணைப் பாடலில் நிறைந்த நல்ல மழைநீரைக் கண்டறியாதவரும் குறைந்த உணவை உடையவரும் இரவுப்பொழுதில் துவராடையை அணிந்தவருமாகிய ஆறலைக் கள்வர்களாகிய மறவர்கள் பாலைவழிச் செல்வோரைக் கொன்று கொள்ளையடிக்க எதிர்நோக்கி இருக்கும் செய்தி கூறப்பெற்றுள்ளது.*

***"துவர்செய் யாடைச் செந்தொடை மறவர்***
***அதர்பார்த் தல்கும் அருஞ்சுவரு நெறியிடை" (நற்.33:6–7)***

ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாடலில் எயினர்களின் செந்துவர் ஆடை பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

***"சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்***
***கொலைவி லெயினர் தங்கைநின் முலைய" (ஐங்.363:1–2)***

செம்மண் படிந்து எயினரின் ஆடை செம்மைநிறம் பெற்றிருந்தமையால் 'செந்துவர் ஆடை' எனக் கூறப்பெற்றுள்ளது.

*மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில்* பெண்களின் தழையாடை உடுத்தும் வழக்கம் கூறப்பெற்றுள்ளது. தழையாடை உடுத்தியமையால் பொலிவு பெற்ற நெய்தல்நிலப் பெண்கள் கொற்கைப் பட்டினத்தின் துறைமுகத்தில் விளங்குகின்ற ஒளியையுடைய முத்துக்களோடு வலம்புரிச் சங்கினைச் சொரிந்து குளிர்ந்த துறையின்கண் கடல் தெய்வத்தினை வாழ்த்தி வணங்கினர் என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது.

***"புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை***
***அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து***
***தழையணிப் பொலிந்த கோடேந்து அல்குல்***
***பழையர் மகளிர் பனித்துறைப் பரவ" (அகம்.201:4–7)***

*கயமனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப்பாடலில் தழையாடை* தொடுக்கப்பட்ட செய்தி கூறப்பெற்றுள்ளது.

***“வேலும் விளங்கின இளைஞரு மியன்றனர்***
***தாருந் தையின தழையுந் தொடுத்தன” (அகம்.259:1–2)***

மாமூலனாரின் அகநானூற்றுப் பாலைப்பாடலில் எயினர் மகளிர் தழையாடை உடுத்தும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

***“பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்***
***கண்டிரள் நீளமைக் கடிப்பிற் தொகுத்துக்***
***குன்றாகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகுமஞ்” (அகம்.331:5–7)***

வயலைக் கொடியால் ஆன தழையாடையைப் பெண்கள் உடுத்தும் செய்தியைக் கயமனார் தம் அகநானூற்றின் பாலைப் பாடலில் சுட்டிக்காட்டியுள்ளார்.

***“. . . . . . . . . . . . . . . . பையென***
***வயலைஅம் பிணையல் வார்ந்த கவாஅன்***
***திதலை அல்குற் குறுமகள் அவனொடு” (அகம்.189:7–9)***

சங்க இலக்கியப் பத்துப்பாட்டு நூல்களில் நூலாடையும் பட்டாடையும் மிக மெல்லியனவாகவும் தொழில் திறம் மிக்கனவாகவும் அக்காலத்தில் செய்யப்பட்டதாகக் கூறப்பெற்றுள்ளது. அக்காலத்தில்தான் எட்டுத்தொகை நூல்களில் துவராடைகளும் தழையாடைகளும் கூறப்படுகின்றன.

அரிசி உணவாகிய சோற்றை வல்சி, சொன்றி, மிதவை, அடிசில், புன்கம், விதவை, துழவை, கூழ் என்னும் வெவ்வேறு பெயர்களில் அழைத்தமைக்குச் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களின் பாடல்களில் மிகுதியான சான்றுகள் உள்ளன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையான சமையல் முறையாகும். நெல்லரிச் சோற்றுடன் நெய், புளி, பால், தயிர் ஆகியனவற்றை இட்டுச் சமைக்கும் வழக்கமும் சங்க காலத்தில் இருந்தது. இதனைத் தவிரக் கறிவகைகள், பழக்கொட்டை, வள்ளிக்கிழங்கு, சேப்பங்கிழங்கு, கூவைக்கிழங்கு, ஊறுகாய், இறைச்சி ஆகியனவும் சங்க இலக்கியங்களில் உணவுப் பொருட்களாகக் கூறப்பெற்றுள்ளன. ஐந்நில மக்களிடமும் அந்தந்த நிலங்களின் விளைபொருட்கள் மற்றும் உற்பத்திப் பொருள்களுக்கேற்ப அவர்களுக்குக் கிடைக்கும் உண்ணும் பொருட்களே உணவுப் பொருட்களாக அமைந்திருந்தன.

பாலைநில மக்கள் கள், விளாம்பழம், மரைஆவின் தசை, தேன் கலந்த தீம்பால், முள்ளம்பன்றியின் இறைச்சி, நிணவூன், நெல்லிக்காய், நறவின் தேறல்,

நிணமாகிய இறைச்சி, தினைச்சோறு, கரும்புச்சாறு, செந்நெல் அவல், பால், பசுவின் இறைச்சி, எருதின் இறைச்சி, தோப்பிக்கள், பருத்திக்கொட்டை, புல்லரிசி, தேன் இறால்கள், வரகரிசி, யானையின் இறைச்சியால் சமைத்த ஊன்சோறு ஆகியனவற்றை உணவுகளாகக் கொண்டார்கள் என்பதற்கான சான்றுகள் பாலைத்திணைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன.

பாலைநில மக்கள் கள்ளினை உணவாகக் கொண்டனர் என்பதற்கு நற்றிணையின்,

***"இன்கடுங் கள்ளி னிழையணி நெடுந்தேர்க்***
***கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்"*** ***(நற்.10:5–6)***

எனவரும் பாலைத் திணைப் பாடலடிகள் சான்றளிக்கின்றன. பாலைச்சுரத்தின் வழியே வேற்று நாட்டுக்குச் சென்றோர் விளாம்பழத்தை உணவாக உண்டதை பின்வரும் நற்றிணைப் பாடலடிகளால் அறியலாம்.

***"பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்***
***டுடும்படைத் தன்ன நெடும்பொரி விளவின்***
***ஆட்டொழி பந்தின் கோட்டுமூக் கிறுபு***
***கம்பலத் தன்ன பைம்பயிர்த் தாஅம்***
***வெள்ளில் வல்சி வேற்றுநாட் டாரிடை"*** ***(நற்.24:1–5)***

'வல்சி' என்னும் சொல் உணவைக் குறிக்கும். 'வெள்ளில்' என்பது உண்பதற்குரிய விளாம்பழம் ஆகும்.

எயினந்தையார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் பாலை நிலத்தின்வழிச் செல்வோர் மரைஆவின் தசையை உணவாகக் கொள்ளும் செய்தி கூறப்பெற்றுள்ளது. பாலை வழியின் மலை சூழ்ந்த பகுதியில் செந்நாய் வாடிய மரைஆவினைக் கொன்று தின்னும். அவ்வழிச் செல்லும் வழிப்போக்கர் செந்நாய் தின்ற மரைஆவின் எஞ்சிய தசையை உணவாகக் கொள்வர் எனக் கூறப்பட்டுள்ளது.

***"என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்***
***ஓய்பசிச் செந்நாய் உயங்குமரை தொலைச்சி***
***ஆர்ந்தன ஒழிந்த மிச்சில் சேய்நாட்டு***
***அருஞ்சுரஞ் செல்வோர்க்கு வல்சி யாகும்"*** ***(நற்.43:2–5)***

நற்றிணையின் மற்றொரு பாலைத்திணைப் பாடலில் நற்றாய் தன் மகள் தேனொடு கலந்த தீம்பாலினை உண்ண மனம் கொள்ளாதவள் எனக் கூறுகின்றாள்.

*“மான்அமர்ப் பன்ன மையல் நோக்கமொடு*
*யானும் தாயும் மடுப்ப தேனொடு*
*தீம்பால் உண்ணாள் வீங்குவனள் விம்மி*
*நெருநலும் அணையார் மன்னே”* *(நற்.4–7)*

இதிலிருந்து சங்ககாலப் பெண்கள் தேன்கலந்த தீம்பாலினை உணவாகக் கொண்டதை அறியலாம்.

ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாலைப் பாடலில் பாலைநில மக்கள் முள்ளம்பன்றியின் இறைச்சியை உணவாகக் கொண்ட செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“முளமா வல்சி யெயினர் தங்கை*
*யிளமா வெயிற்றிக்கு மிந்நிலை யறியச்”* *(ஐங்.364:1–2)*

‘முளவுமா’ என்பது முள்ளம்பன்றியைக் குறிக்கும். முள்ளம்பன்றியை அதன் இறைச்சிக்காக எயினர்கள் வேட்டையாடியுள்ளனர்.

மற்றொரு ஐங்குறுநூற்றின் பாலைப் பாடலில் பாலைநில மக்கள் பன்றி, மான், முயல் ஆகியனவற்றின் இறைச்சியை உணவாகக் கொண்ட செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“கணமா தொலைச்சித் தன்னையர் தந்த*
*நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு”* *(ஐங்.365:1–2)*

‘கணமா’ என்பது பன்றி, மான், முயல் முதலான விலங்குக் கூட்டங்களைக் குறிக்கும். ‘நிணம்’ என்பது கொழுப்பாகும். ‘நிணவூன்’ என்பது பன்றி, மான், முயல் ஆகிய விலங்குகளின் கொழுப்போடு கூடிய இறைச்சியைக் குறிக்கும்.

மற்றொரு ஐங்குறுநூற்றுப் பாடலில் உடன்போக்குச் சென்ற தலைவனும் தலைவியும் பசிய நெல்லிக்காய்களை உணவாகக் கொண்ட செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“பையங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து*
*செங்கான் மராஅத்த வரிநிழ லிருந்தோர்”* *(ஐங்.381:1–2)*

கயமனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் பாலைநில மக்கள் நறவின் தேறலை மாந்திய செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“நனைவினை நறவின் தேறல் மாந்திப்*
*புனைவினை நல்லில் தருமணல் குவைஇப்*

*பொம்மல் ஓதி எம்மகள் மணனென*
*வதுவை அயர்ந்தனர் நமரே அதனால்"*            *(அகம்.221:1–4)*

தலைவனது பொருட்பிரிவில் ஆற்றாமையால் வருந்திய தலைவிக்குத் தோழி கூறுவதாகத் தாயங்கண்ணனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாடலில் உறையூர் என்னும் ஊரைப் பற்றிக் கூறும்போது அங்குக் கிடைக்கும் பலவகையான உணவுகள் சுட்டிக் கூறப்பெற்றுள்ளன.

மிக்க வலிமை பொருந்திய செந்தீயில் சுட்ட வளமான நிணத்தினது கொழுவிய துண்டங்கள் சொரியப்பெற்ற மெல்லிய தினைச் சோற்றினையும், காற்றில் நெற்கதிர்கள் சுழன்றாடும் வயலிடத்து விளைந்த கரும்பினது முற்றிய தண்டினைப் பிழிந்தெடுத்து சாரு காய்ச்சிய பாகுடன் ஊற்றிக் கலந்த செந்நெல்லால் ஆன பசிய அவலையும் கலத்தின்கண் சொரிந்து பாணர் முதலானோர்க்குப் பகுத்துக் கொடுக்கும் நீர்மோதும் மதகினைக் கொண்டது உறையூர் என்னும் ஊராகும் என்று கூறப்பெற்றுள்ளது.

*". . . . . . . . . . . . . . . . கனைதிறல்*
*செந்தீ அணங்கிய செழுநிணக் கொழுங்குறை*
*மென்தினைப் புன்கம் உதிர்த்த மண்டையொடு*
*இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பின்*
*விளைகழை பிழிந்த அம்தீஞ் சோற்றொடு*
*பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கும்*
*புலைபொரு புதவின் உறந்தை யெய்தினும்"*      *(அகம்.237:8–14)*

என்ற இப்பாடலில் நிணம், தினைச்சோறு, கரும்புச்சாறு, பால், செந்நெல்லின் பாசவல் ஆகிய உணவு வகைகள் கூறப்பெற்றுள்ளன.

நக்கீரனார் இயற்றியுள்ள பாடலில் பாலை நிலத்தில் வாழும் மழவர்கள் இளைய பசுவினைக் கொன்று அதன் ஊனை உணவாகக் கொள்ளும் செய்தி கூறப்பெற்றுள்ளதுன.

*"பல்பூங் கானத்து அல்குநிழல் அசைஇத்*
*தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்*
*நாகா வீழ்த்துத் திற்றி தின்ற*
*புலவுக்களந் நுழைஇய துகள்வாய்க் கோடை"*    *(அகம்.249:11–14)*

மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் பாலைநிலத்தில் வாழும் ஆறலைக் கள்வர்கள் எருதினைக் கொன்று அதன்

இறைச்சியை உண்பதும், நெல்லால் செய்த தோப்பிக்கள்ளினைக் குடிப்பதும் கூறப்பெற்றுள்ளன.

*"இன்சிலை எழிலேறு கெண்டி புரைய*
*நிணம்பொதி விழுத்தடி நெருப்பின் வைத்தெடுத்து*
*அணங்கரு மரபின் பேஎய் போல*
*விளர்ஊன் தின்ற வேட்கை நீங்கத்*
*துகளற விளைந்த தோப்பி பருகிக்*
*குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்"* *(அகம்.265:12-17)*

வலிமையான வளைந்த வில்லினையும் கொடுமை செய்யும் பார்வையினையும் கொண்ட ஆறலைக்கள்வர் குன்றினை அடைந்து இனிமையாக முழங்கும் எழுச்சி கொண்ட எருதினைக் கொன்று கொழுப்புடன் கூடிய அதன் தசையை நெருப்பிலிட்டுச் சுட்டெடுத்து கண்டாரை வருத்தும் இயல்புடைய வேலைப் போல அதன் வெண்ணிறமான ஊனைத் தின்பர். அதனால் ஏற்பட்ட நீர் வேட்கை நீங்குவதற்காக முதிர்ந்த நெல்லால் சமைத்த தோப்பிக்கள்ளினைக் குடிப்பர்.

குடவாயிற்கீரத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் வறுமையில் வாழும் ஏழைப் பெண்கள் பருத்திக்கொட்டையை எதிர்கால உணவிற்காகச் சேமித்து வைக்கும் பழக்கம் கூறப்பெற்றுள்ளது. வெண்மையான பருத்தியின் கொட்டைகளில் உள்ள பஞ்சினை நீக்கி வறுமையுற்ற பெண்கள் கொட்டைகளை மட்டும் வைத்துண்ணும் உணவாகச் சேமித்து வைத்துள்ளனர்.

*"கல்சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பைத்*
*தாழிமுதல் கலித்த கோழிலைப் பருத்தி*
*பொதிவயிற்று இளங்காய் பேடை ஊட்டிப்*
*போகில்பிளந் திட்ட பொங்கல் வெண்காழ்*
*நல்கூர் பெண்டிர் அல்கல் கூட்டும்"* *(அகம்.129:6-10)*

மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார் என்னும் புலவர் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் வில்லையுடைய வீரர்கள் புல்லரிசியைச் சமைத்து உண்ணும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*"கோடை நீடலின் வாடுபுலத்து உக்க*
*சிறுபுல் லுணவு நெறிபட மறுகி*
*நுண்பல் எறும்பி கொண்டளைச் செறித்த*
*வித்தா வல்சி வீங்குசிலை மறவர்"* *(அகம்.377:1-4)*

நிலைபெற்ற கோடை வெப்பம் மிக நீண்டமையால் வறண்ட நிலத்தில் உதிர்ந்த புல்லரிசியை எறும்புகள் முறையாக எடுத்துச்சென்று தம் வளையில் சேகரித்து வைத்தன. தாம் விதைத்து விளைவிக்காத அவ்வரிசியை வில்லையுடைய மறவர்கள் சமைத்து உணவாக உண்டனர் என்பதாகக் கூறப்பட்டுள்ளது.

மாமூலனாரின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் நீண்டு வளர்ந்த காதுகளைக் கொண்ட இடையர் பெண்கள், காடு கொன்று கொல்லையாக்கிய தினைப்புனத்தின் வரகின் தட்டையைக் கதிரொடு அறுத்து காளைமாடுகளைக் கொண்டு பொலியிட்டு உதிர்ந்த வரகினை அகன்ற பாறையில் அள்ளிக் குவித்தனர். அதனைத் திரிகையில் இட்டுத் திருகிச் சுளகினால் புடைத்து அரிசியாக்கி உரலில் இட்டுத் தீட்டினர். மண்ணால் செய்த பானையில் பண்ணைக் கீரையின் வெண்ணிறப் பழத்தின் அரிசியைப் போன்றிருக்கும் அவ் வரகரிசியை இட்டுச் சுனைநீரை ஊற்றி கற்களை அடுக்கி அமைத்த அடுப்பில் உலை ஏற்றினர். கொன்றைப் பூந்தாது போல வரகரிசிச் சோற்றை ஆக்கினர். அச்சோற்றைப் பாலுடன் கூட்டி வழிச்செல்வோர்க்குக் கொடுத்து அவர்தம் அழிபசி போக்கினர் (அகம்.393) என வரகரிசிச் சோற்றுணவு குறித்த செய்தி விரிவாகப் பேசப்பெற்றுள்ளது.

தொண்டியாமூர்ச் சாத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாடலில் யானையின் இறைச்சியால் ஊன்சோறு சமைக்கும் செய்தி கூறப்பெற்றுள்ளன.

***“புலிதொலைத் துண்ட பெருங்களிற்று ஒழிஊன்***
***கலிகெழு மறவர் காழ்க்கோத் தொழிந்ததை***
***ஞெலிகோற் சிறுதீ மாட்டி ஒலிதிரைக்***
***கடல்விளை அமிழ்தின் கணம்சால் உமணர்***
***அனைகொள் தீம்நீர்ச் சோற்றுஉலைக் கூட்டுஞ்” (அகம்.169:3–7)***

புலியானது கொன்று உண்டு கைவிட்டுப்போன பெரிய களிற்றின் எஞ்சிய ஊனை ஆரவாரம் கொண்ட ஆறலைக் கள்வர்கள் தம் கோலில் கோர்த்துக் கொண்டு செல்வர். அவ்வாறு கொண்டுசெல்லும் எஞ்சிய ஊனை கடலில் விளையும் உப்பினைக் கொண்டுவரும் உமணர்கள் தீக்கடை கோலால் உண்டாக்கிய சிறுதீயில் வாட்டிச் சுனையிலிருந்து கொண்டுவந்த நீர் கொண்டு ஏற்றிய உலையில் இட்டு ஊன்சோறு சமைப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

விற்றூற்று மூதெயினனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாடலில் பலவகையான உணவு வகைகள் கூறப்பெற்றுள்ளன. மாங்காய்களைக் கொத்தாகக் கிள்ளி எடுத்தனர். அவற்றைப் புதிய குடங்களில் இட்டு அவற்றோடு புளிக்கும்

பதனைச் சேர்த்தனர். அக்காய்களிலிருந்து ஊறிய சாற்றினை வெய்யிலில் பதப்படுத்திப் பின்னர் பனையோலைக் குடைகளில் ஊற்றிக் குடித்துத் தங்கள் தொழிற் களைப்பையும் கள்ளுண்ட மயக்கத்தையும் தீர்த்தனர். கொள்ளுப்பயறும் பாலுடன் கலந்து சமைத்த வெண்மையான அவில் நிறைந்த கஞ்சியை வளைத்து உண்ட கை போதும் எனத் தடுக்கும் அளவிற்கு உண்டனர்.

***"புளிப்பதன் அமைத்த புதுக்குட மலிர்நிறை***
***வெயில்வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடைக்***
***கயமண்டு பகட்டிற் பருகி காண்வரக்***
***கொள்ளொடு பயறு பால்விரைஇ வெள்ளிக்***
***கோல்வரைந் தன்ன வாலவிழ் மிதவை***
***வாங்குகை தடுத்த பின்றை ஓங்கிய"*** ***(அகம்.37:9–14)***

இப்பாடலடிகளில் மாங்காயின் புளிப்புச்சாறு, கள், கொள்ளுப்பயறு, பாலுடன் கலந்த கஞ்சி ஆகிய பலவகையான உணவுப்பொருட்கள் கூறப்பெற்றுள்ளன.

காவிரிப்பூம்பட்டினத்துக் காசிக்கண்ணனார் என்னும் புலவர் அகநானூற்றின் பாலைத்திணையில் இயற்றியுள்ள பாடலிலும் பலவகையான உணவுகள் கூறப்பெற்றுள்ளன. பெரிய புலியானது ஆண்மானை அடித்துக் கொன்று அகன்ற கருங்கல் பாறையில் கிடத்தி அதனைத் தின்று கைவிட்டுப் போன காய்ந்த இறைச்சியை பாலைவழிச் செல்லும் வம்பலர் எடுத்தனர். அவ்விறைச்சியை அவ்விடத்தே தழைத்த மூங்கிலின் விளைந்த நெல்லரிசியுடன் கூட்டி, தயிரை இட்டு வெள்ளிய நிணத்தை உருக்கிக் கூட்டிச் சமைத்த வெண்மையான சோற்றைப் புள்ளிகளைக் கொண்ட அடிப்பகுதியை உடைய தேக்கின் அகன்ற இலையில் வைத்து உண்டமை கூறப்பட்டுள்ளது.

***"இரும்புலி துறந்தம ஏற்றுமான் உணங்கல்***
***நெறிசெல் வம்பலர் உவந்தனர் ஆங்கண்***
***ஒலிகழை நெல்லின் அரிசியொ டோராங்***
***காணிலைப் பள்ளி அளைபெய் தட்ட***
***வானிணம் உருக்கிய வாஅல் வெண்சோறு***
***புகரரைத் தேக்கின் அகலிலை மாந்தும்"*** ***(அகம்.107:5–10)***

ஆமூர்க் கவுதமன் சாதேவனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் ஆநிரைகளைக் கவர்ந்து சென்ற வெட்சி வீரர்களை விரட்டியடித்து ஆநிரைகளை மீட்ட கரந்தை வீரர்கள், அவ்வெற்றிச் சிறப்பை துடியின் ஒலிக்கேற்பத் தாளத்தோடு ஆடிக் கொண்டாடினர். தழை மாலையைச் சூடிய அக்கரந்தை

வீரர்கள் உமணர் விட்டுச் சென்ற கல்லடுப்பில் ஊனைப் புழுக்கி உண்டனராகக் கூறப்பட்டுள்ளது.

*“வடியுறு பகழிக் கொடுவில் ஆடவர்*
*ஆணங்குடை நோன்சிலை வணங்க வாங்கிப்*
*பல்ஆன் நெடுநிரை தழீஇக் கல்லென*
*வருமுனை அலைத்த பெரும்புகல் வலத்தர்*
*கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி*
*உவலைக் கண்ணியர் ஊன்புழுக்கு அயரும்” (அகம்.159:5–10)*

**செல்வர் உணவும் உண்கலமும்**

ஓதலாந்தையரின் ஐங்குறுநூற்றுப் பாடலில் செல்வர்களின் உணவும் உண்கலமும் கூறப்பெற்றுள்ளது. உடன்போக்குச் சென்ற தலைவி மீண்டு வருவதற்காக நற்றாய் காக்கைக்குப் பராய்க்கடன் செய்வதாகக் கூறுகின்றாள்.

*“மறுஇல் தூவிச் சிறுகருங் காக்கை*
*அன்புடை மரபில்நின் கிளையொடு ஆரப்*
*பச்சூன் பெய்த பைந்நிண வல்சி*
*பொலம்புனை கலத்தில் றருகுவென் மாதோ” (ஐங்.391:1–4)*

உடன்போக்குச் சென்ற தலைவி தலைவனுடன் வரக் கரைந்தால் காக்கைக்கு பசிய ஊனைப் பெய்த பசிய நிணத்தால் செய்த உணவினைப் பொற்கலத்தில் இட்டுப் பலியாகத் தருவதாக நற்றாய் காக்கையிடம் கூறுகின்றாள்.

தாயங்கண்ணனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் மகட்போக்கியதாய், மணிகள் இழைத்துச் செய்த பொற்கலத்தில் இனிய பாலோடு தேன் கலந்து ஏந்தி செவிலித்தாய் ஊட்டவும் உண்ணாதவள் என்மகளாகிய உடன்போக்குச் சென்ற தலைவி என்கின்றாள்.

*“. . . . . . . . . . . . . . . . . . தேம்பெய்து*
*மணிசெய் மண்டைத் தீம்பால் ஏந்தி*
*ஈனாத் தாயார் மடுப்பவும் உண்ணாள்” (அகம்.105:4–6)*

**கீழ்ப்படு தாரம் உண்ணா**

கல்லாடனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் உணவு கொள்ளும் முறையை உவமை வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். கொல்லும் தொழிலில் வல்ல ஆண்கரடியின் ஓசையைக் கேட்ட மக்கள் அக்கரடியைக்

கொல்வதற்காகப் பல இடங்களிலும் தேடி வருவர். அதனை அறிந்த ஆண்கரடியானது தரையில் கிடக்கும் உணவுப் பொருட்களை உண்ணாமல் மேலே மரத்தின் கிளைகளிலுள்ள பழம் போலும் சாறுடைய இனிய துளையினை உடைய 'ஞெமை' என்னும் ஒருவகை மரத்தின் பூக்களை உண்ணும். இதனைக் கல்லாடனார் "கீழ்ப்படு தாரம் உண்ணா" (அகம்.171:12) என்று குறிப்பிட்டுள்ளார்.

'தாரம்' என்பது உணவு வகைகளைக் குறிக்கும் சொல்லாகும். எனவே மனிதன் மானத்தோடு முறையறிந்து உண்ணவேண்டும் என்பதை இதன்வழி அறியமுடிகின்றது.

காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் பாலை நிலத்தின் வழிச் செல்வோரின் தாகம் தீர்க்கும் உணவுப்பொருளாக நெல்லிக்காய் கூறப்பெற்றுள்ளது.

***"நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பர்***
***செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்"        (அகம்.271:6–7)***

இச்செய்தி பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள குறுந்தொகையின் பாலைத்திணைப் பாடலிலும் கூறப்பெற்றுள்ளது.

***"சுரந்தலைப் பட்ட நெல்லிஅம் பசுங்காய்"        (குறுந்.209:1)***

ஓதலாந்தையார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் எயினர் எறும்பின் அளைப் புல்லரிசியை உணவாகப் பெறும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

***"எறும்பி யளையிற் குறும்பல் சுனைய***
***உலைக்கல் அன்ன பாறை ஏறிக்***
***கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்"        (குறுந்.12:1–3)***

ஊண்பித்தையார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் "புகா" (குறுந்.232:3) என்னும் சொல் உணவு என்னும் பொருளில் ஆளப்பெற்றுள்ளது.

**விழாக்கள்**

சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களில் அக்காலத்தில் மக்களால் சிறப்பாகக் கொண்டாடப் பெற்ற பங்குனி உத்திரவிழா, திருப்பரன்குன்றத்து முருகன்விழா, கார்த்திகைத் தீபப் பெருவிழா, மழவர்களின் பூந்தொடை விழா,

காமன் விழா, விழாக்கொண்ட மூதூர், விழவுடை விழுச்சீர் வேங்கடம் என்பன குறித்த செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

**பங்குனி உத்தரவிழா**

உறையூர் முதுகூத்தனாரின் அகநானூற்றுப் பாடலில் சங்ககால மக்கள் பங்குனி உத்தர விழாவினை உறையூரில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடினர் என்னும் செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*“வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழர்*
*இன்கடுங் கள்ளின் உறந்தை ஆங்கண்*
*வருபுனல் நெரிதரும் இருகரைப் பேரியாற்று*
*உருவ வெண்மணல் முருகுநாறு தண்பொழில்*
*பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்*
*வீஇலை அமன்ற மரம்பயில் இறும்பில்*
*தீயில் அடுப்பின் அரங்கம் போலப்” (அகம்.137:5–11)*

சோழநாட்டின் உறையூர். பகைவர்களை வென்று ஒலிக்கின்ற வீரமுரசினையும், போர் வெற்றியை உடைய சோழரது இனிய கரும்பு மிக்க கள்ளினையும் கொண்ட ஊராகும். உறையூரில் பெருகி வரும் நீர் உடைத்திட இடிந்து விழும் கரைகளைக் கொண்ட காவிரிப் பேரியாற்றின் வெண்மையான மணலையுடைய மணங்கமழும் குளிர்ச்சி பொருந்திய சோலையில் உத்தரமும் நிறைமதியும் கூடிய பங்குனி நன்னாளில் மக்கள் பங்குனி உத்தர விழாவினைக் கொண்டாடினர்.

அவ்விழாவின் மறுநாள் பூக்களும் சிலைகளும் நெருங்கிய மரங்கள் அடர்ந்த குறுங்காட்டின் நடுவே, நெருப்பில்லாத வெற்று அடுப்புகளைக் கொண்டு திருவரங்கம் (உறையூர்) விளங்கியது. இப்பாடலாசிரியர் காலத்தில் திருவரங்கம் ஓர் ஊராகக் கருதப்படாமல் அகன்ற பொழில் சூழ்ந்த ஆற்றிடைக் குறையாகக் கருதப்பட்டது. குறுங்காடு நிறைந்த அவ்வாற்றிடைத் துறையில் உறையூர் மக்கள் பங்குனி உத்தர விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடினர். மக்கள் ஒன்றுகூடி விடியும் வரையில் விழாக்கோலம் பூண்டனர். எங்கும் அடுப்புக்களை அமைத்துத் தீமூட்டி உணவு சமைத்து உண்டு களித்து இன்பம் எய்தினர். மறுநாள் அத்திருவரங்கம் மக்கள் நடமாட்டம் இன்றி அடுப்புக்களிலும் தீயின்றி அழகிழந்து பொலிவற்று வறிதே வெறிச்சோடிக் காணப்பட்டது.

உறையூராகிய பங்குனிமாதம் உத்தரமும் நிறைமதியும் கூடிய நன்னாள் இரவில் மக்கள் பங்குனி உத்தர விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடினர்

என்பதை அறியலாம். பங்குனி உத்தரவிழா சங்க காலத்திலிருந்து இன்றுவரையில் தொடர்ந்து வரும் தமிழர்களின் விழா என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

**திருப்பரன்குன்றத்து முருகன்விழா**

எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் திரப்பரன்குன்றத்தில் இடைவிடாது நடைபெறும் முருகன் விழாவினைப் பற்றிய செய்தி கூறப்பெற்றுள்ளது.

***"யவனர் தந்த வினைமாண் நன்கலம்***
***பொன்னொடு வந்து கறியொடு பெயரும்***
***வளம்கெழு முசிறி ஆர்ப்பெழ வளைஇ***
***அருஞ்சமங் கடந்து படிமம் வவ்விய***
***நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்***
***கொடிநுடங்கு மறுகில் கூடற் குடாஅது***
***பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய***
***ஓடியா விழவின் நெடியோன் குன்றத்து"*** ***(அகம்.149:9–16)***

'சுள்ளி' என்னும் பேரியாறு சேரமன்னர்க்கு உரியது; அவ் ஆற்றின் வெண்ணிற நுரை சிதறுமாறு தொழில் சிறப்புடைய யவனர்கள் கொண்டுவந்த வினைமாண் நன்கலம் பொன்னைக் கொண்டுவந்து விலையாகக் கொடுத்துவிட்டு சேரநாட்டில் விளைந்த மிளகினை ஏற்றிச் செல்லும். அத்தகைய வளம் நிறைந்த முசிறி என்னும் பட்டினத்தை நெடிய நல்ல யானைகளையும் பகைவரை வெல்லும் பேராற்றலையும் கொண்ட பாண்டிய மன்னன் ஆரவாரத்துடன் வளைத்து அரிய போரில் வென்று அங்குள்ள பொற்பாவையினைக் கவர்ந்துகொண்டு வந்தான். அச்செழியனது கொடிகள் அசைந்தாடும் வீதிகளை உடைய கூடல்மாநகரின் மேற்குத் திசையில் பல புள்ளிகளை உடைய மயிற்கொடி விளங்கித்தோன்ற இடைவிடாது நடைபெறும் விழாக்களைக் கொண்ட முருகனது திருப்பரங்குன்றம் அமைந்துள்ளது. அங்கு முருகனுக்காக விழாக்கள் இடைவிடாது நடைபெற்றுக் கொண்டிருக்கும் என்பதை எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார்.

'நெடியோன்' என்பது முருகனைக் குறிக்கும். 'படிமம்' என்பது முசிறியிலிருந்த தெய்வபிம்பம் ஆகும். யவனர் கொண்டுவந்த பாவையாகவும் இருக்கலாம்.

**கார்த்திகை தீபப் பெருவிழா**

தலைவனது பொருள்வயிற் பிரிவில் ஆற்றாதவளாகிய தலைவி தோழிக்குக் கூறுவதாகப் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் கார்த்திகை தீபப் பெருவிழா குறித்த செய்தி உவமை வாயிலாகக் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

***"பைதற வெம்பிய கல்பொரு பரப்பின்***
***வேனில் அத்தத் தாங்கண் வானுலந்து***
***அருவி ஆன்ற உயர்சிமை மருங்கில்***
***பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்***
***இலைஇல மலர்ந்த இலவமொடு***
***நிலையுயர் பிறங்கல் மலைஇறந் தோரே"*** ***(அகம்.185:8–13)***

பாலை வழியிலுள்ள காட்டில் மழை பெய்யாது ஒழிந்தமையால் உயர்ந்த மலைச் சிகரங்களில் இருந்து வீழும் அருவிகளில் நீரற்றுப் போயின. அச் சிகரங்களில் முருகனுக்கான கார்த்திகைப் பெருவிழாவில் ஏற்றுகின்ற கார்த்திகைத் தீப விளக்குகளைப் போல இலைகளே இல்லாமல் பூக்களாகவே மலர்ந்திருக்கும் இலவ மரங்களைக் கொண்ட செறிந்த மலையைக் கொண்டது எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

தலைவனது பொருள்வயிற் பிரிவில் 'ஆற்றியிருப்பேன்' எனத் தலைவி தோழிக்குக் கூறுவதாக ஔவையார் இயற்றிய அகநானூற்றுப் பாடலிலும் கார்த்திகை தீபம் குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது.

***"வானம் ஊர்ந்த வயங்கொலி மண்டிலம்***
***நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் அம்காட்***
***டிலைஇல மலர்ந்த முகைஇல் இலவம்***
***கலிகொள் ஆயம் மலிபுதொகு பெடுத்த***
***அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றிக்***
***கயந்துகள் ஆகிய பயந்தபு கானம்***
***எம்மொடு கழிந்தன ராயின் கம்மென"*** ***(அகம்.11:1–7)***

வானில் இயங்கும் விளங்கும் ஒளியினைக் கொண்ட ஞாயிற்று மண்டிலம் நெருப்பைப் போன்று செந்நிறங் கொண்டு சுட்டெரிக்கும் வெப்பம் மிகுந்த காட்டகத்தே இலைகளும் அரும்புகளும் இல்லாமல் பலவும் ஒருங்கே மலர்ந்த இலவம்பூக்கள், ஆரவாரத்தைக் கொண்ட பெண்கள் கூட்டம் சேர்ந்து மகிழ்ந்து

எடுத்த கார்த்திகை தீப விளக்கின் நெடிய வரிசையைப் போலப் பொலிவு பெற்றுத் தோன்றும் எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

தலைவனது பொருள்வயிற் பிரிவில் ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைவி கூறுவதாக நக்கீரர் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலிலும் கார்த்திகைத் திருவிழாவினைப் பற்றிய செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

***"உலகுதொழில் உலந்து நாஞ்சில் துஞ்சி***
***மழைகால் நீங்கிய மாக விசும்பில்***
***குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து***
***அறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்***
***மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்***
***பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய***
***விழவுடன் அயர வருகதில் அம்ம"*** ***(அகம்.141:5–11)***

கலப்பைகள் உழாமல் ஒடுங்கிக் கிடந்தன. உழவர் ஏரால் உழுதலைச் செய்யாதொழிந்தனர். மழையும் பெய்து ஓய்ந்தது. வானில் சிறு முயலாகிய மறுவின் நிறம் விளங்கித் தோன்ற மதி நிறைந்த கார்த்திகை நன்னாளில் இருளகன்ற நள்ளிரவில் வீதிகளில் திருவிளக்குகள் ஏற்றப்பட்டன. மாலைகள் தொங்கவிடப்பட்டன. பழமையான வெற்றிச் சிறப்புக்களை உடைய முதுமையான ஊரில் ஊர்மக்கள் அனைவரும் ஒன்றிணைந்து கொண்டாடும் கார்த்திகைத் திருவிழாவினை நம்மோடு கூடி மகிழ்ந்து கொண்டாடும் வகையில் தலைவன் விரைந்து வரவேண்டும் எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

இதிலிருந்து சங்க காலத்தில் கார்த்திகை மாதம், மதிநிறைந்த நன்னாளில் வீதிகளில் திருவிளக்குகளை ஏற்றி மக்கள் ஒன்றுசேர்ந்து கார்த்திகை விழாவினைக் கொண்டாடினர் என்பதை அறியலாம்.

**பூந்தொடை விழா**

மாமூலனாரின் அகநானூற்றுப் பாலைப்பாடலில் சங்க காலத்தில் பாலை நிலத்தில் வாழ்ந்த மழவர்கள் 'பூந்தொடை விழா'க் கொண்டாடிய செய்தி உவமை வாயிலாகக் கூறப்பெற்றுள்ளது.

பகைவரது பகைப்புலத்தை அழித்த விரைகின்ற குதிரைகளைக் கொண்ட வன்கண்மையை உடைய பாலைநிலத்தில் வாழ்கின்ற மழவர்கள் 'பூந்தொடை விழா' என்னும் விழாவினைச் சிறப்புடன் கொண்டாடுவர். அவ்விழாவின் முதல்

நாளன்று மணலைக் கொண்டுவந்து வீட்டின் முற்றங்களில் பரப்பி வீட்டினைப் பொலிவுடன் அழகுபடுத்துவர். அப்பாடலடிகள் வருமாறு:

*“. . . . . . . . . . . . . . . . . . கறுத்தோர்*
*தெம்முனை சிதைந்த கடும்பரிப் புரவி*
*வார்கழல் பொலிந்த வன்கண் மழவர்*
*பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன*
*தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்*
*புலம்புறுங் கொல்லோ தோழி சேணோங்கு” (அகம்.187:5–10)*

**காமன் விழா**

பாலை பாடிய பெருங்கடுங்கோ கலித்தொகையில் இயற்றிய பாலைப் பாடல்களில் மட்டுமே சங்ககால மக்களின் காமன் விழாக் குறித்த செய்திகள் விளக்கமாகப் பேசப்பெற்றுள்ளன.

*“மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப் புணர்ந்துஅவர்*
*வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ?” (கலி.35:13–14)*

என்னும் பாடலடிகளில் காமன் விழாக் கூறப்பெற்றுள்ளது. இப் பாலைக்கலிப் பாடலின் கிளவித் தலைவன் பாண்டியன் ஆவான். அவன் ஊர் மதுரையாகும். மதுரை என்றதும் தமிழ்வளர்த்ததும் சங்கம் கண்டதும் ஆகிய செய்திகள் நினைவுக்கு வரும். சங்கப்புலவர் இயற்றிய பாடல்களைக் கூடலார் இளவேனில் காலத்தில்தான் சுவைத்து மகிழ்வர். முன்பனி, பின்பனிக் காலங்களில் பொருள்வயிற் பிரிந்தவர் இளவேனில் காலத்தில்தான் அப்பணி மூடித்துத் திரும்புவர். ‘வில்லவன்’ என்பது காமனாகிய மன்மதனைக் குறிக்கும். மன்மதனுக்கு இளவேனில் காலத்தில்தான் விழா எடுப்பர். சங்ககாலத்தில் காமன் விழா சிறப்பாக நடைபெற்றது. சங்க காலத்தில் மனைவியர் தம் கணவர்களுடன் சேர்ந்து இளவேனில் காலத்தில் காமன் விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடியுள்ளனர்.

*“மலராய்ந்து வயின்வயின் விளிப்ப போன் மரனூழ்ப்ப*
*இருங்குயி லாலப் பெருந்துறை கவின்பெறக்*
*குழவி வேனில் விழவெதிர் கொள்ளுஞ்*
*சீரார் செவ்வியும் வந்தன்று” (கலி.36:7–10)*

என்னும் பாலைக்கலிப் பாடலடிகளிலும் காமனுக்கு இளவேனில் காலத்தே விழா எடுக்கும் செய்தி கூறப்பெற்றுள்ளன.

இளவேனில் காலத்தில் தலைவனது வரவை உணர்ந்த தோழி ஆற்றாளாகிய தலைவிக்கு மகிழ்ந்து கூறுவதாக பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய,

*"நோய்மலி நெஞ்சமொ டினையல் தோழி*
*நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ்செய் பொழுதாயின்*
*காமவேள் விழவாயின் கலங்குவள் பெரிதென*
*ஏமுறு கடுந்திண்தேர் கடவி*
*நாமமர் காதலர் துணைதந்தார் விரைந்தே"(கலி.27:22-26)*

என்னும் பாடலடிகளிலும் காமன் விழாக் குறித்த செய்திகள் கூறப்பெற்றுள்ளன. இளவேனில் காலத்தே காமவேளுக்கு விழா எடுக்கும் சங்ககால மக்களின் பழக்கம் இதனால் தெளிவாகின்றது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ சேரநாட்டின் அரசப் புலவராயினும் மதுரைத் திருமருத முன்துறையைத் தம் பாடல்களில் பல இடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார்.

பாலைக்கலியின் மற்றொரு பாடலில் காமன்விழா நடைபெறும் இளவேனில் காலத்தே தலைவன் வாராமையால், அவனைப் பிரிந்திருக்கும் தலைவி பின்வருமாறு புலம்புகின்றாள்:

*"ஆனாச்சீர்க் கூடலுள் அரும்பவிழ் நறுமுல்லைத்*
*தேனார்க்கும் பொழுதெனத் தெளிக்குந ருளராயின்*
*உறலியாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்*
*விறலிழை யவரோடு விளையாடு வான்மன்னோ*
*பெறலரும் பொருதோடு பிறங்கிணர்ந் துருத்திசூழ்ந்*
*தறல்வாரும் வையையென்று றறையுந ருளராயின்*
*என ஆங்கு*
*தணியா நோய் உழந்தானாத் தகையவள் தகைபெற*
*அணிகிளர் நெடுந்திண்டேர் அயர்மதி பணிபுநின்*
*காமர் கழலடி சேரா*
*நாமஞ்சால் தெவ்வரின் நடுங்கினள் பெரிதே" (கலி.30:9-21)*

நீர் நிறைந்த காலத்தில் வையையில் நீராடுதலைப் பரிபாடல்கள் குறிப்பிடுகின்றன. நீரற்ற இளவேனில் காலத்தில் நீருடைய மடுக்களில் நீராடி மகிழ்வதை இப் பாலைக்கலிப் பாடல் கூறுகின்றது. இளவேனில் காலம் மன்மதனுக்குரிய விழாக்காலமாகும். இக்காலத்தில் சங்ககால மக்கள்

*மன்மதனுக்கு விழாவெடுத்து மகிழ்ந்தனர். காமன் விழாவில் தலைவன் பரத்தையரோடு நீராடி விளையாடி மகிழ்ந்தான்.*

**விழாக் கொண்ட மூதூர்**

*சங்க காலத்தில் பழமைமிக்க மூதூர்களில் தொடர்ந்து விழாக்கள் நடைபெற்றன என்னும் செய்தி கயமனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:*

***"நீளரை இலவத் தூழ்கழி பன்மலர்***
***விழவுத் தலைகொண்ட பழவிறல் மூதூர்***
***நெய்யுமிழ் சுடரின் கால்பொரச் சில்கி***
***வைகுறு மீனின் தோன்றும்***
***மைபடு மாமலை விளங்கிய சுரனே?" (அகம்.17:18–22)***

*மகட்போக்கிய செவிலித்தாயின் கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது. பாலை நிலத்தின் கவர்த்த வழிகளின் பக்கங்களில் நீண்ட அடிப்பகுதியைக் கொண்ட இலவ மரங்கள் மிகுந்து காணப்படுகின்றன. அம்மரங்களில் மலர்ந்த புதிய பல மலர்கள் காற்று வீசுவதால் விழாக்களைத் தன்னிடத்தே கொண்ட வெற்றியை உடைய பழைய முதிய ஊர்களில் நெய் ஊற்றப்பெற்ற விளக்குகளிலிருந்து விழுகின்ற சுடர் போன்று உதிர்ந்து வீழ்கின்றன. இலவ மரத்தில் எஞ்சிய சில பூக்கள் விடியற்காலத்து விண்மீன்களைப் போல அருகித் தோன்றுகின்றன.*

**விழவுடை விழுச்சீர் வேங்கடம்**

*மாமூலனாா இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் விழாக்கள் நிறைந்த திருவேங்கட மலையின் சிறப்புக் கூறப்பெற்றுள்ளது.*

***"மழபுலம் வணக்கிய மாவண் புல்லி***
***விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்" (அகம்.61:12–13)***

*யானைகளின் வெண்மையான கோடுகளைக் கொண்டு, அக்கோடுகளுடன் கள்ளினை விற்றுப்பெற்ற நெல்லால் நாளோலக்கச் சிறப்புச் செய்பவன் புல்லி என்னும் வள்ளல் ஆவான். அவன் காலில் வீரக்கழல் அணிந்தவன். வள்ளல் தன்மை மிக்க கள்வர் கோமான் ஆவான். அப்புல்லி மழவர் நாட்டை அடிமைப்படுத்தியவன். விழாக்கள் நிறைந்த பெரும் சிறப்புக்களைக் கெண்ட திருவேங்கட மலை புல்லி என்னும் அவ் வள்ளலுக்கு உரியதாகும்.*

**வழிபாடு**

பாலைநில மறவர்கள் நடுகல்லையும், இறந்தாரைப் புதைத்து வைத்த பதுக்கைகளில் உள்ள தெய்வங்களையும் வணங்கி வழிபடுவர். பதுக்கையிலுள்ள கடவுளரை வழிபடுவதற்கு அங்குள்ள நடுகல்லுக்குப் பீலி முதலியன அணிவித்துத் துடியை அடிப்பர். நெல்லினால் உண்டாக்கிய கள்ளையும் செம்மறி ஆட்டுக் குட்டியையும் பலியாகக் கொடுப்பர் என்பதைக் குடவாயிற் கீரத்தனார் தாம் பாடிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

*"வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்*
*வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்*
*நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்*
*தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்*
*போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரம்" (அகம்.35:6–10)*

**பாலைநிலக் கொற்றவை**

கொற்றவை பாலை நிலத்திற்குரிய வழிபடு தெய்வம். இவள் முக்கண்ணனாகிய சிவனுடைய போர்ச் சக்தியாவாள். முருகனை 'உமைபாலன்' எனக் குறிப்பிடுவதைப் போலவே "வெற்றிவேல் போர்க்கொற்றவை சிறுவ", "இழையணி சிறப்பின் பழையோள் குழவி" [16] எனக் கொற்றவை மகனாகக் கூறும் பழந்தமிழ் மரபும் உள்ளது. கொற்றவை காட்டில் வாழும் மறவர்களால் வணங்கி வழிபடப்படுபவள். கொற்றவையைச் சங்க இலக்கியங்கள்,

*"கானமர் செல்வி" (அகம்.345:3–4)*

*"பெருங்காட்டுக் கொற்றி" (கலி.89:8)*

எனக் குறித்துள்ளன. கொற்றவையின் தோற்றம் பற்றிய குறிப்பு பரிபாடலில் உள்ளது.

*"ஆயிடை மாஇதழ் கொண்டு ஓர்மட மாதர் நோக்கினாள்*
*வேயெழில் வென்று வெறுத்ததோள் நோக்கி*
*சாய்குழை பிண்டித் தளிர்காதில் தையினாள்*
*பாய்குழை நீலம் பகலாகத் தையினாள்*
*குவளைக் குழைக்காதின் கோலச் செவியின்*
*இவள் செரீஇ நான்கு விழிபடைத்தா ளென்று*
*நெற்றி விழியா நிறை திலகம் இட்டாளே*
*கொற்றவை கோலம் கொண்டு ஓர்பெண்"* [17]

என்பன அப்பாடலடிகளாகும். இப்பாடல் குறிப்பினால் கொற்றவை முக்கண்ணுடையவள் என அறியமுடிகின்றது. இக்கொற்றவை கையில் சூலப்படையைத் தாங்கியிருப்பதால் ‘சூலி’ என்னும் பெயரையும் பெறுகின்றாள்.

***“விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்***
***கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்” (குறுந்.218:1–2)***

கொற்றவை மகிடாசூரனை அழித்தமையால் திருமுருகாற்றுப்படையில் ‘போர்க்கொற்றவை’ எனக் குறிக்கப்படுகின்றாள்.

***“ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை***
***மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே***
***வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ***
***இழையணி சிறப்பின் பழையோள் குழவி”*** [18]

வீரர்கள் சூடும் வெற்றிப் பூவாகிய வாகையிலும் கொற்றவை வீற்றிருப்பதாகக் கருதுவதால் அவ் வாகைப்பூவினை,

***“கடவுள் வாகைத் தூய் வீ”*** [19]

எனச் சிறப்பித்துள்ளனர். இத்தொடருக்குப் பழைய உரைகாரர் ‘வெற்றி மடந்தையாகிய கொற்றவை வாழும் வாகை’ என விளக்கம் தந்துள்ளார்.

கொற்றவையின் கோட்டம் பாலை நிலத்தின் காட்டில் அமைந்திருக்கும். இக்கோட்டத்தினைப் பேய்களும் பூதங்களும் சூழ்ந்து நின்று காவல் செய்யும்; அக்கோவில்களில் புறாக்களும் தங்கியிருக்கும் எனப் பட்டினப்பாலை கூறும்.

***“பூதம் காக்கும் புகல்அருங் கடிநகர்த்***
***தாதுஉண்அம் புறவொடு துச்சிற் சேக்கும்***
***முதுமரத்த முரண் களரி”*** [20]

கானவர் காய்ந்த விறகால் தீமூட்டி அதை எரிவிளக்காக அமைப்பர். காளிகோயிலின் முற்றத்தில் வந்து உறங்கும் மான் கூட்டங்களை எரிவிளக்கின் ஒளியால் மந்திகள் எழுப்பி ஓட்டி அதனைத் துடைத்துத் தூய்மை செய்வதாகப் புறநானூறு கூறும்.

***“யானை தந்த முளிமர விறகின்***
***கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து***
***மடமான் பெருநிரை வைகுதுயில் எடுப்பி***
***மந்தி சீக்கும் அணங்குடை முன்றிலில்***

*நீர்வார் கூந்தல் இரும்புறம் தாழ*
*பேர்அஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கி" (புறம்.247:1–6)*

என்ற இப்பாடலடிகளில் கொற்றவையைப் பற்றிய குறிப்பு உள்ளது. கொற்றவையைச் சுற்றியிருக்கும் பேய்கள் அவளுக்குப் பொழுதுபோக்காக வேடிக்கையான நொடிகளைக் கூறும். இதனைக் கலித்தொகை,

*"பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்நொடித் தாங்கு" (கலி.89:8)*

எனக் குறிப்பிடுகின்றது.

மறவர் கொற்றவையைத் தொழுது அவளுக்குப் பலிக்கடன்களைச் செலுத்தினர். அப்பொழுது அவர்கள் காப்பாகத் தங்கள் கைகளில் நூலைக் கட்டிக் கொண்டனர் (குறுந்.218:1–2) கொற்றவைக்குக் குருதிப்பலி கொடுப்பதும்[21] வழக்கத்தில் இருந்துள்ளது.

பதிற்றுப்பத்துப் பாடல்களால் கொற்றவை உறையும் அயிரைமலை, விந்தயமலை ஆகிய இரு இடங்களைப் பற்றி அறியலாம். அயிரை மலைக் கொற்றவையைப் பற்றிய குறிப்புக்கள் பதிற்றுப்பத்தில் மட்டுமே காணப்படுகின்றன [22] இம்மலையிலிருந்து ஓடிவரும் அயிரையாறு,

*"மாற்றுஅருந் தெய்வத்துக் கூட்டம் முன்னிய*
*புலைமலி பேரியாறு"* [23]

எனக் கூறப்படுகின்றது. சேர மன்னர்கள் தாங்கள் போரில் ஈடுபடும் முன்னர் இந்தக் கொற்றவையை வழிபட்டுச் சென்றுள்ளனர்[24] எனத் தெரிகின்றது. கொற்றவை உறையும் விந்தியமலைக்காடு

*"கடவுட் பெயரிய கானம்"* [25]

எனக் கூறப்பெற்றுள்ளது.

கொற்றவை வழிபாடு எட்டுத்தொகையின் புறப்பாடல்களிலும், பத்துப்பாட்டு நூல்களிலும் கூறப்பட்ட அளவிற்கு எட்டுத்தொகையின் அகப்பாடல்களில் விரிவாகவும் விளக்கமகாவும் கூறப்படவில்லை. எனினும் கொற்றவை பாலைநில மறவர்களின் வழிபடு தெய்வமாகும்.

**பெண்களின் கற்பு**

சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களில் பெண்களின் கற்புநெறி, தலைவியின் கற்பின் பெருமை, நாணொடு மிடைந்த கற்பு, மனைமாண் கற்பு,

*ஆதிமந்தியின் கற்பின் சிறப்பு, வணங்குறு கற்பு, எனக் கற்பு விளக்கமாகப் பேசப்பெற்றுள்ளது.*

**கற்பு நெறி**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய கலித்தொகையின் பாலைக்கலிப் பாடலில் தலைவனின் பொருள்வயிற் பிரிவைத் தடுக்கும் தோழி, தலைவி வடமீன் போல் தொழுதேத்தும் வயங்கிய கற்பினள் என்று தலைவனிடம் கூறுகின்றாள். தோழி தலைவனிடம், 'தம்மிடம் இருந்த பொருளெல்லாம் இரவலர்க்குக் கொடுத்துத் தீர்ந்த பின்னர் இல்லாமை காரணமாக வந்து இரந்தவர்களுக்கு ஈயாமல் இருத்தல் இழிவு எனக் கருதி மலை கடந்து சென்று தேடும்பொருள் நன்கு மதிக்கப்பெறுவதாயினும் அருந்ததி போன்ற நிலைபெற்ற கற்பினை உடையவள் தலைவி. அவளை விட்டு நீ பிரிந்தால் உயிர் வாழாள். ஆதலால் நீ தலைவியைப் பிரியாமல் இருப்பதே பொருளாகும்' என இடித்துரைக்கின்றாள்.*

***"இடனின்றி இரந்தோர்க்குஒன்று ஈயாமை இழிவென***
***கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள் பொருள்ஆகுமோ?***
***வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்***
***தடமென்தோள் பிரியாமை பொருளாயின் அல்லதை?" (கலி.2:19–22)***

*இதிலிருந்து சங்ககாலத்தில் அருந்ததி போன்ற கற்புநெறி பெண்களுக்கு இருந்தது என்றும், பெண்களுக்குக் கற்புநெறி வலியுறுத்தப் பெற்றது என்றும் அறியலாம்.*

**தலைவியின் கற்பின் பெருமை**

*பாலை பாடிய பெருங்கடுங்கோவின் மற்றொரு பாலைக்கலிப் பாடலில் தலைவியின் கற்பின் பெருமை பின்வருமாறு சிறப்பித்துப் பேசப்பெற்றுள்ளது.*

***"செய்பொருட் சிறப்பெண்ணிச் செல்வார்மாட்டு இனையன***
***தெய்வத்துத் திறன்நோக்கித் தெருமரல் தேமொழி!***
***வறன்ஓடின் வையகத்து வான்தரும் கற்பினாள்***
***நிறன்ஓடிப் பசப்புஊர்தல் உண்டு என***
***அறன்ஓடி விலங்கின்று அவர் ஆள்வினைத் திறத்தே" (கலி.16:18–22)***

*இப்பாடல் முழுவதும் தலைவியின் கற்பின் பெருமை சிறப்பித்துப் பேசப் பெற்றுள்ளது. கணவனின் நலம் வேண்டி மழையையும் கனலினையும் காற்றையும் வழிபட விரும்பிய மனைவிக்கு அறக்கடவுளே உதவுவதாக இப்பாடலில் கூறப்பெற்றுள்ளது.*

**நாணொடு மிடைந்த கற்பு**

*வினைமுற்றி மீண்ட தலைவன் தேர்ப்பாகன் கேட்பக் கூறுவதாகக் கல்லாடனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் தலைவியின் நாணொடு செறிந்த கற்பின் பெருமை கூறப்பெற்றுள்ளது.*

***"நாணொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்***
***அம்தீம் கிளவிக் குறுமகள்***
***மென்தோள் பெறநசைஇச் சென்றவென் நெஞ்சே?" (அகம்.9:24–26)***

*தலைவன் தேர்ப்பாகனிடம் தன்னைக் காட்டிலும் தன் உள்ளம் நாணொடு செறிந்த கற்பினையும், ஒளி பொருந்திய நெற்றியினையும், இனிய சொல்லினையும், இளமையையும் கொண்ட தலைவியின் மெல்லிய தோளினை அடைவதற்கு விரைந்து சென்றதாகக் கூறுகின்றான்.*

**மனைமாண் கற்பு**

*மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குப் பின்வருமாறு கூறுகின்றான்:*

***"வினைநன் றாதல் வெறுப்பக் காட்டி***
***மனைமாண் கற்பின் வாணுதல் ஒழியக்" (அகம்.33:1–2)***

*பொருளீட்டுதல் அறம் முதலியன நன்மை பயத்தலை எடுத்துக்கூறி, மாட்சிமைப்பட்ட கற்பினை உடையவளும், ஒளி மிக்க நெற்றியினை உடையவளுமான தன் மனைவி வீட்டில் தனித்து இருக்குமாறு அவளைப் பிரியச் செய்துவிட்டனர் என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான். இவ்வாறு கணவன் மனைவியின் மாட்சிமையுடைய கற்பின் பெருமையைச் சிறப்பித்துக் கூறுகின்றான்.*

**ஆதிமந்தியின் கற்பின் திறம்**

*வெள்ளிவீதியார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் ஆதிமந்தியின் கற்பின் திறம் சிறப்பித்துப் பேசப்பெற்றுள்ளது.*

***". . . . . . . . . . . . . . . . . . . . . யானே***
***காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்***
***தாதிமந்தி போல பேதுற்று***
***அலந்தனென் உழல்வென் கொல்லோ பொலந்தார்க்"***
***(அகம்.45:12–15)***

இப்பாடலடிகள் தோழிக்குத் தலைவி கூறுவதாக அமைந்துள்ளன. ஆதிமந்தி என்பவன் சோழ மன்னன் கரிகால் வளவன் மகள் ஆவாள்.

ஆதிமந்தி நீர்விழாவில் கழாஅர் என்னும் ஊரைச் சார்ந்த காவிரித்துறையில் தன் கணவனாகிய அத்தியுடன் நீராடும்போது காவிரிப் பெண் தன் திரைக்கையால் அவனை வெளவிக்கொண்டு கடலுக்குள் கொண்டுசென்று ஒளித்துக்கொண்டது. ஆதிமந்தி தன் கணவன் அத்தியைக் காணாமல் புனல் வழியே காவிரிக் கரைமீது தொடர்ந்து ஓடினாள். அவ்வாறு ஓடிய ஆதிமந்தி தன் கணவாகிய ஆட்டன் அத்தியைக் காணீரோ என நாடுதோறும் ஊர்தோறும் தேடி அலைந்தாள். 'தன் கணவனைக் கடல் கொண்டது; புனல் கொண்டது' என அல்லல்பட்டு ஆற்றாது அழுத கண்ணீருடன் அரற்றித் திரிந்தாள். ஆதிமந்தியின் கற்பின் பெருமையால் கடலானது ஆட்டன் அத்தியைக் கரைக்கு அருகாமையில் கொண்டுவந்து நிறுத்தியது. ஆதிமந்தியின் துன்பத்தை அறிந்தவளும் ஆங்கே நீராடிக் கொண்டிருந்தவளுமாகிய மருதி என்பவள் ஆட்டனத்தியைக் கண்டு அழைத்து வந்து ஆதிமந்தியிடம் சேர்த்தமையை அகநானூற்றின் 76, 222, 236, 376, 396 ஆகிய பாடல்களிலும், சிலப்பதிகாரத்தின் வஞ்சினமாலையிலும் (வரிகள்: 10–15) விரிவாகக் காணலாம்.

**வணங்குறு கற்பு**

பொருள்வயிற் பிரிந்த தலைவன் குறித்த பருவத்தில் வாராமையால் ஆற்றாமை மீதூர வருந்திய தலைவிக்குத் தோழி கூறுவதாக எருமை வெளியனாரின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் பிறர் வணங்கி மதிக்கும் வணங்குவது கற்பின் சிறப்புப் பேசப்பெற்றுள்ளது.

***"பின்னொடு முடித்த மண்ணா முச்சி***
***நெய்கனி வீழ்குழல் அகப்படத் தைஇ***
***வெருகிருள் நோக்கி அன்ன கதிர்விடு***
***பொருகாழ் முத்தம் இடைமுலை விளங்க***
***அணங்குறு கற்பொடு மடம்கொளச் சாஅய்"*** ***(அகம்.73:1–5)***

'ஒப்பனை ஏதும் செய்யாமல் பின்னிய அளவில் முடித்திட்ட கொண்டையில் எண்ணெய் தடவப்பெற்ற தாழ்ந்து வீழும் கூந்தலை ஒன்றுசேர்த்துக் கட்டி, வெருகுப்பூனை இருளிலே நோக்கினால் போன்று ஒளிவிட்ட முத்தின் ஒரு வடம் மட்டும் முலையிடையே கதிர்விட்டு விளங்க, அருந்ததி போன்ற கற்பினால் மடப்பம் மிகக் கொண்ட நீ அஞ்சுவதால் இரங்கத் தக்கவளாக உள்ளாய்' என இப்பாடலின் தோழி தலைவியிடம் கூறுகின்றாள்.

தலைவி அருந்ததி போன்ற கற்புடையள்; பிறர் மதித்து வணங்குவதற்குரிய கற்புடையவள் என இப்பாடலடிகளில் பெண்ணின் கற்புச் சிறப்பித்துப் பேசப்பெற்றுள்ளது.

பிறநாட்டுப் பெருங்கொற்றனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் தலைவனது பிரிவில் ஆற்றாமையால் வருந்திய தலைவியைத் தோழி 'கற்பில் மேம்பட்டவள்' என்று பாராட்டிப் போற்றுகின்றாள்:

***“இம்மென் பேரலர் இவ்வூர் நம்வயின்***
***செய்வோர் ஏச்சொல் வாடக் காதலர்***
***வருவர் என்பது வாய்வ தாகல்***
***ஐய செய்ய, மதனில சிறியநின்***
***அடிநிலன் உறுதல் அஞ்சிப் பையத்***
***தடவரல் ஒதுக்கந் தகைகொள் இயலி***
***காணிய வம்மோ? கற்புமேம் படுவி”*** ***(அகம்.323:1–7)***

இந்த ஊரில் நின்மாட்டு 'இம்' என்று அலர் கூறும் பெண்கள் செருக்கு அழியுமாறு உன் கணவன் விரைந்து வருவான் என்பது உண்மை. நீ கற்பில் மேம்பட்டவள். ஆதலால் பூமாதேவி கண்டறியாத அழகிய உன் சிவந்த வலிமையற்ற நின் மென்மையான பாதங்களுடன் உடல் வளைத்து நடந்து வருவாயாக எனத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள். இப்பாடலடிகளில் தலைவியைத் தோழி 'கற்புமேம்பட்டவள்' எனப் போற்றுகின்றாள்.

**அடங்கிய கற்பு**

தலைவன் ஆகிய கணவன் கற்பித்தவாறு இல்லத்தில் ஒழுகும் மனைவியின் செயலே அடங்கிய கற்பாகும். அடங்கிய கற்புக்கு அறக்கற்பு, ஆறிய கற்பு எனவும் பொருள் கொள்ளலாம். தலைவன் பிரிவில் தலைவியை ஆற்றுவிக்கும் தோழி,

***“. . . . . . . . . . . . . புன்கண் மாலைப்***
***பின்பனிக் கடைநாள் தண்பனி அச்சிரம்***
***வந்தன்று பெருவிரல் தேரே பணைத்தோள்***
***விளங்குநகர் அடங்கிய கற்பின்***
***நலம்கேழ் அரிவை புலம்புஅசா விடவே”*** ***(குறுந்.338:4–8)***

பெருங்குன்றூர்க்கிழார் இயற்றியுள்ள இப்பாடலின் தோழி தலைவியிடம் கணவனின் தேர் வந்தது எனக் கூறி, அடங்கிய கற்பினளாகிய தலைவி

ஆற்றியிருக்க வேண்டும் என்கின்றாள். கணவனின் பிரிவைச் சிறிது காலம் பொறுத்திருக்கும் மனைவியே அடங்கிய கற்பினள் ஆவாள்.

**கன்னிப் பெண்கள் பிறை தொழல்**

எயினந்தை மகனார் இளங்கீரனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் மணமாகாத கன்னிப் பெண்கள் விரைவில் திருமணம் நடைபெற வேண்டி மூன்றாம் நாள் சந்திரனாகிய பிறையைத் தொழுது வழிபடுதல் கூறப்பெற்றுள்ளது.

***"விளிபடு பூசல் வெஞ்சுரத்து இரட்டும்***
***வேறுபல் தேஎத்து ஆறுபல நீந்திப்***
***புள்ளித் தொய்யில் பொறிபடு சுணங்கின்***
***ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்"*** ***(அகம்.239:6-9)***

புள்ளி வடிவமாக எழுதப்பெற்ற தொய்யிலையும் புள்ளிகளை உடைய தேமலையும் உடைய ஒளி பொருந்திய ஆபரணங்களை அணிந்த கன்னிப்பெண்களும் பிறரும் மூன்றாம் பிறையைத் தொழுவர் என்பது இப்பாடலடிகளின் கருத்தாகும்.

**பராய்க்கடன் செய்தல்**

தலைவனுடன் உடன்போக்குச் சென்ற தன் மகளுக்காக, தன் மகள் நலமுடன் இருக்கவேண்டும் என்பதற்காகச் செவிலித்தாய் தெய்வங்களுக்குப் பராய்க்கடன் செய்யும் செய்தி கயமனார் இயற்றிய குறுந்தொகைப் பாலைப் பாடலில் கூறப்பெற்றுள்ளது.

***"ஞாயிறு காயாது மாண்நிழற் படீஇய***
***மலைமுதல் சிறுநெறி மணல்மிகத் தாஅய்***
***தண்மழை தலையின்றாக நந்நீத்துச்***
***சுடர்வாய் நெடுவேற் காளையொடு***
***மடமா அரிவை போகிய சுரனே"*** ***(குறுந்.378)***

பாலை நிலத்தில் ஞாயிற்றின் வெம்மையும் நிழலில்லாது உலர்ந்த மரங்களும் தொடர்ந்து செல்லவிடாமல் தடுக்கும் பரற்கற்களைக் கொண்ட நீரற்ற சிறுநெறிகளும் காணப்படுதல் இயல்பாகும். இத்தகைய பாலை நிலத்தின் வழியே தன்னுடைய மகள் தலைவனுடன் உடன்போக்குச் சென்றதை அறிந்த செவிலித்தாய் தெய்வங்களுக்குத் தன் மகள் நலம் வேண்டிப் பராய்க்கடன் செய்கின்றாள். தன் மகளும் தலைவனும் சென்ற பாலை வழியில் ஞாயிறு

தன்னுடைய வெப்பத்தைச் சினம் தணிந்து வழங்கவேண்டும்; மரங்கள் நிழல் உடையனவாகத் தழைத்தல் வேண்டும்; அவர்கள் நடந்து செல்வதற்கு இனியனவாக மணல் பரந்த பாலைவழி சிறுநெறியாதல் வேண்டும்; அவர்கள் உண்பதற்கு நீர் கிடைக்க வேண்டும். ஆதலால் இப்பாடலின் செவிலித்தாய் காயாமைக்கு ஞாயிற்றையும், நிழல் வேண்டி மாயோனையும், மணல்நெறி சிறுநெறியாகச் சேயோனையும், மணல் பரவ வருணனையும், மாமழை வேண்டி வேந்தனையும் நினைத்துப் பரவி வழிபடுகின்றாள்.

**பாலைநில மகளிர் ஒப்பனைகள்**

சங்ககாலத்தில் ஆண்களும் பெண்களும் தத்தமது தலைமுடியினைப் பல்வேறு வகையாகப் பேணி வந்தனர். முடியை எண்ணெய் தடவிப் போற்றுதலும், முடிக்கு மயிர்ச்சாந்து பூசுதலும் வழக்கத்தில் இருந்தன. பெண்கள் தம் முடிக்கு வாசனையோடு கூடிய எண்ணெய்யையும் தேய்த்தனர். பெண்கள் நீராடிய பின்னர் தம் கூந்தலைக் கையால் கோதிவிட்டு உலர்த்தி அதற்கு நறும்புகை ஊட்டிப் பேணினர். பெண்கள் தங்கள் கூந்தலை ஐந்து வகையாக ஒப்பனை செய்துகொண்டு அழகுபடுத்திக் கொண்டதால் அவர்கள் கூந்தலுக்குப் பொதுப்பெயராக ‘ஐம்பால்’ என்னும் பெயர் ஏற்பட்டது. கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள் என்பன பெண்களின் ஐந்து வகையான கூந்தல் ஒப்பனையாகும். உச்சியில் கட்டி முடிக்கும் மூடியை ‘முச்சி’ என்றனர். கடை கழன்ற சுருள்மயிரைப் ‘பித்தை’ என்றனர்.

***“நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்” (நற்.10:3)***

பெண்கள் கரியகொடியான காட்டுமல்லிகையின் மலருடன் தூயதும் பொற்றகடு போன்றதுமான பாதிரி மலரையும் சேர்த்து எதிர்எதிரே வைத்துக் கட்டிய மலர்மாலையைத் தம் கூந்தலில் சூடினர். இதனால் கூந்தல் மணங்கமழும் நாற்றத்தைப் பெற்றது.

***“மாக்கொடி அதிரற் பூவொடு பாதிரித்***
***தூத்தகட்டு எதிர்மலர் வேய்ந்த கூந்தல்***
***மணங்கமழ் நாற்றம் மெரீஇ யாமிவள்***
***சுணங்கணி ஆகம் அடைய முயங்கி” (நற்.52:1–4)***

சல்லியங்குமரனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப்பாடலின் தலைவன், புகழை விரும்பிய கிள்ளிவளவன் என்னும் சோழ மன்னன் வலிமையான யானைப் படையைக் கொண்டவன். அவனுடைய அம்பர் என்னும் நகரம் புதிதாக அலங்கரிக்கப்பட்ட உயர்ந்த கொடிகளைக் கொண்டது. அந்நகரைச்

சூழ்ந்த அரிசிலாற்றின் தெளிந்த கருமணல் போன்றது தலைவியின் விரிந்தும் தழைத்தும் விளங்கும் கூந்தல்; அக்கூந்தலில் துயில்வேன் என்கின்றான்.

*"பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை*
*ஏந்துகோட்டு யானை இசைவெம் கிள்ளி*
*வம்பணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த*
*அரிசில்அம் தெள்ளறல் அன்ன இவள்*
*விரிவொலி கூந்தல் விட்டமை கலனே" (நற்.141:8–12)*

நக்கீரரின் நற்றிணைப் பாலைப் பாடலில் தலைவியின் கூந்தல் வானில் பரந்த முகிற்கூட்டங்களைப் போன்றிருந்தது எனக் கூறப்பெற்றுள்ளது.

*"தாழ்ந்தொலி கதுப்பின் வீழ்ந்த காலொடு*
*வண்டுபடு புதுமலர் உண்துறைத் தரீஇய" (நற்.197:6–7)*

கயமனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் தலைவியின் சில்வளைப் பல்கூந்தல் கூறப்பெற்றுள்ளது.

*"வாஅர்ந் திலங்குவால் எயிற்று பொலிந்ததார்ச்*
*சில்வளைப் பல்கூந் தலளே அவளே" (நற்.198:7–8)*

பெருந்தலைச்சாத்தனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் முயங்கும்போது இன்பம் தரும் தலைவியின் கூந்தல் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*"குவளை நாறுங் கூந்தல் தேமொழி*
*இவளின் தீர்ந்தும் ஆள்வினை வலிப்பப்" (நற்.262:7–8)*

ஆவூர்க் காவிதிகள் சாதேவனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாடலில் ஆடும் மயில் போல மலர் புனைந்த தலைவியின் கூந்தல் கூறப்பெற்றுள்ளது.

*"மணிபுரை எருத்தின் மஞ்ஞை போலநின்*
*வீபெய் கூந்தல் வீசுவளி உளர" (நற்.264:4–5)*

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் தலைவியின் கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள் என்னும் ஐம்பால் கூந்தல் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*"செப்பிடந்து அன்ன நாற்றந் தொக்குடன்*
*அணிநிறங் கொண்ட மணிமருள் ஐம்பால்*
*தளர்நறுங் கதுப்பில் பையென முழங்கும்" (நற்.337:6–7)*

மதுரை ஈழத்துப் பூதன்தேவனாரின் நற்றிணைப் பாடலில் தலைவியின் மணியேர் ஐம்பால் கூந்தல் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*". . . . . . . . . . . பெருந்தோட் குறுமகள்*
*மணியேர் ஐம்பால் மாசறக் கழீஇ" (நற்.366:3-4)*

பாலை பாடிய பெருங்கடுங்கோ பாலைக்கலியில் இயற்றியுள்ள பாடலில் நறுமணம் வீசும் நறிதாகிய தலைவியின் நுதலும், மேகம் விரும்பும் கரிதாகிய இருண்ட கூந்தலும் குறித்துக் கூறப்பெற்றுள்ளன.

*"மணம்நாறு நறுநுதல் மாரிவீழ் இருங்கூந்தல்" (கலி.14:4)*

மற்றொரு பாலைக்கலிப் பாடலில் இளமைப் பருவத்தில் நீலமணி ஒளிவிட்டாற் போல நெய்பூசி வாரி ஐந்து வகையாக முடித்த கூந்தலும், கூந்தல் வளம் கெட்ட பெண்களின் முதுமைப் பருவ நிலையும் பற்றிக் கூறப்பெற்றுள்ளன.

*"நெய்இடை நீவி நீலமணிஒளி விட்டன்ன*
*ஐவகை பாராட்டி னாய்; மற்று எம் கூந்தல்*
*செய்வினை பாராட் டினையோ ஐய" (கலி.22:12-14)*

மற்றொரு பாலைக்கலிப் பாடலில் பெண்களின் பின்னிய கூந்தல் ஒப்பனை கூறப்பெற்றுள்ளது.

*"நீலிதழ் உண்கணாய்! நெறி கூந்தல் பிணிவிடை" (கலி.33:28)*

ஓதலாந்தையார் பாடிய ஐங்குறுநூற்றுப் பாலைப் பாடலில் மெல்லிய இயல்புடைய மேகம் போன்ற கரிய கூந்தலைக் கொண்ட தலைவியின் பண்புகள் கூறப்பெற்றுள்ளன.

*". . . . . . . . . . . . . . . . . மெல்லியல்*
*புயனெடுங் கூந்தல் புலம்பும்" (ஐங்.304:3-4)*

மற்றொரு ஐங்குறுநூற்றின் பாலைப்பாடலில் விழாக் காலத்தில் போன்று நறுமணம் கமழும் தழைத்த கூந்தலைக் கொண்ட தலைவியின் மாமை நிறம் சுட்டப்பெற்றுள்ளது.

*"குழலினு மினைகுவள் பெரிதே*
*வழவொலி கூந்தல் மாஅ யோளே" (ஐங்.306:3-4)*

மற்றொரு ஐங்குறுநூற்றின் பாலைத்திணைப் பாடலில் தலைவியின் அடர்த்தியான கரிய கூந்தல் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*“பல்லிருங் கூந்தல் மெல்லிய லோள்வயிற்*
*பிரியா யாயினும் நன்றே விரியிணர்க்”* *(ஐங்.308:1–2)*

இன்னொரு ஐங்குறுநூற்றின் பாலைப் பாடலில் அறல் போன்ற (கருமணல்) தலைவியின் கருங்கூந்தலுக்கு மலர் சூட்டி அழகுபடுத்தும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*“புதுப்பூ அதிரல் தாஅய்க்*
*கதுப்பற லணியுங் காமர் பொழுதே”* *(ஐங்.345:2–3)*

இப்பாடலடிகளில் ‘கதுப்பு’ என்பது பெண்களின் கூந்தலையும், ‘காமர் பொழுது’ என்பது விரும்பத்தக்க இளவேனிற் காலத்தையும் குறிக்கும்.

தலைவனது பொருட்பிரிவில் ஆற்றாளாகிய தலைவியைத் தோழி ஆற்றுவிப்பதாகப் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைப் பாடலில் தலைவியின் கூந்தல் ஒப்பனை பற்றித் தோழியின் கூற்றில் விவரித்துப் பேசப்பெற்றுள்ளது.

முதுகுப்புறத்தே தாழ்ந்து அழகிய மூங்கில் போன்ற தோளில் படிந்து கிடக்கும் கருநிறம் கொண்ட தும்பியாகிய வண்டின் கூட்டம் போல சுருள் கொண்ட கூந்தலை முழுவதுமாக வாரி எடுத்து காட்டுமல்லிகையின் அரும்பொடு கூடிய மலரொடு குளிர்ச்சி மிக்க குவளை மலரைச் சேர்த்துக்கட்டிய மணங்கமழும் மாலையைச் சூட்டிய நீராடிய தலைவியின் கூந்தலின் கண் தலைவன் படுத்துறங்கி இன்பம் காண்பான்.

*“. . . . . . . . . . . . . காதலர் நம்வயின்*
*மறந்து கண்படுதல் யாவது, புறந்தாழ்வு*
*அம்பணை நெடுந்தோள் தங்கித் தும்பி*
*அரியினங் கடுக்குஞ் சுரிவணர் ஐம்பால்*
*நுண்கே ழடங்கவாரி பையுங்கெட*
*நன்முகை அதிரற் போதொடு குவளைத்*
*தண்நறுங் கமழ்தொடை வேய்ந்தநின்*
*மண்ஆர் கூந்தல் மரீஇய துயிலே”* *(அகம்.223:9–16)*

காவன் முல்லைப்பூதனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப்பாடலில் அழகுபடப் பின்னப்பட்டுத் தாழ்ந்து தொங்கும் தலைவியின் மென்மையான கூந்தல் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*“அவ்வயிற் றகன்ற அல்குல் தைஇத்*
*தாழ்மென் கூந்தல் தடமென் பணைத்தோள்” (அகம்.21:3–4)*

மதுரை ஈழத்துப் பூதன்தேவனார் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் பசும்பூண் பாண்டியனின் போர் வெற்றிகளால் சிறப்படைந்த மதுரை மாநகரம் போல தலைவியின் வண்டொலிக்கும் கொண்டைமுடியாகிய பூப்பெய்த கூந்தலில் தலைவன் துயில் கொண்டு பெற்ற இன்பம் உவமையாகக் கூறப்பெற்றுள்ளது.

*“விசும்பிவர் வெண்குடை பசும்பூண் பாண்டியன்*
*பாடுபெறு சிறப்பின் கூடல் அன்னநின்*
*ஆடுவண் டரற்றும் உச்சித்*
*தோடர் கூந்தன் மரீஇ யோரே” (அகம்.231:12–15)*

மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்னும் ஐந்து வகையான பகுப்புக்களைக் கொண்ட தலைவியின் கூந்தல் கூறப்பெற்றுள்ளது.

*“. . . . . . . . . . . . . . . . . . . . . . . நின்*
*இருளைங் கூந்தல் இன்துயின் மறந்தே” (அகம்.233:14–15)*

உறையூர் மருத்துவன் தாமோதரனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் உடன்போக்குச் செல்லும் தலைவன் தலைவியிடம்,

*“பொம்மல் ஓதி பொதுள வாரி*
*அரும்பற மலர்ந்த ஆய்பூ மராஅத்துச்*
*சுரும்புசூழ் அலரி தைஇ வேய்ந்தநின்*
*தேம்பாய் கூந்தல் குறும்பல மொசிக்கும்*
*வண்டு கடிந்து ஓம்பல் தேற்றாய் அணிகொள” (அகம்.257:5–9)*

எனக் கூறுகின்றான். ‘ஓதி’ என்பது கூந்தலைக் குறிக்கும். பாதிரியின் தேன் பொதிந்த வாடற் பூக்கள் மணக்கும் வேனிற் காலத்தின் பகல் பொழுதில் பரற்கற்கள் ஒலி செய்யும் சிலம்பணிந்த சிற்றடிகள் சிவக்குமாறு எம்முடன் இணைந்து நடந்து வருகின்றாய். தழைத்து வளர்ந்த பொலிவு பெற்ற நின் கூந்தலை நெருக்கமாக வாரிக்கொண்டாய்; இலையே இல்லாமல் பூத்துக் குலுங்கும் வெண்கடம்பின் வண்டுகள் மொய்க்கும் மலர்களைத் தொடுத்துக் கூந்தலில் சூடிக்கொண்டாய். அவ்வாறு மொய்க்கும் வண்டுகளைக் கடிந்து விரட்டி நின்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் அறியாய் எனத் தலைவன் தலைவியிடம் கூறுகின்றான்.

மதுரைச் செங்கண்ணனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாடலில் தலைவியின் வண்டுகள் படியும் கூந்தல் கூறப்பெற்றுள்ளன.

*“கட்படர் ஓதி! நிற்படர்ந் துள்ளி*
*அருஞ்செல வாற்றா ஆர்இடை ஞெரேரெனப்” (அகம்.39:14–15)*

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்னும் ஐந்து பகுப்புக்களைக் கொண்ட தலைவியின் கூந்தல் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*“சில்லைங் கூந்தல் அழுத்தி மெல்லிணர்த்*
*தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல்” (அகம்.261:3–4)*

மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத் திணைப்பாடலில் ஒளிவிடும் கருமணல் போன்ற தலைவியின் நெறித்த கூந்தல்,

*“. . . . . . . . . . . . . வயங்கொளி*
*நிழற்பால் அறலின் நெறித்த கூந்தல்” (அகம்.265:8–9)*

எனக் கூறப்பெற்றுள்ளது. மாமூலனாரின் அகநானூற்றுப் பாலைத் திணைப் பாடலில் தலைவியின் ஐந்து வகையான கூந்தல் ஒப்பனை கூறப்பெற்றுள்ளது.

*“நாறைங் கூந்தல் கொம்மை வரிமுலை*
*நிரையிதழ் உண்கண் மகளிர்க்கு*
*அரிய வாலென அழுங்கிய செலவே” (அகம்.65:18–20)*

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலிலும் தலைவியின் ஐந்து வகையான கூந்தல் ஒப்பனை பேசப்பெற்றுள்ளது.

*“புலம்கமழ் நாற்றத்து இரும்பல் கூந்தல்*
*நல்லெழில் மழைக்கண் நம் காதலி” (அகம்.291:23)*

எருமை வெளியனாரின் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப்பாடலில் தலைவியின் ‘முச்சி’ என்னும் கொண்டை முடி ஒப்பனை கூறப்பெற்றுள்ளது.

*“பின்னொடு முடித்த மண்ணா முச்சி*
*நெய்கனி வீழ்குழல் அகப்படத் தைஇ” (அகம்.73:1–2)*

மதுரைப் பேராலவாயார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில்,

*“தாழிருங் கூந்தல்நம் காதலி*
*நீளமை வனப்பின் தோளுமா ரணைந்தே” (அகம்.87:15–16)*

எனத் தலைவியின் தாழிருங் கூந்தல் கூறப்பெற்றுள்ளது. பிறநாட்டுப் பெருங்கொற்றனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் தலைவியின் கூந்தலைப் போன்றது மேகம் எனக் கூந்தல் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது.

*"ஆலி யழிதுளி தலைஇக்*
*கால்வீழ்த் தன்றுநின் கதுப்புஉறழ் புயலே" (அகம்.323:12–13)*

கணக்காயனார் மகனார் நக்கீரனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் தலைவியின் நீண்ட கருங்கூந்தல்,

*"நாளங் காடி நாறும் நறுநுதல்*
*நீளிருங் கூந்தல் மாஅ யோளோடு" (அகம்.93:10–11)*

எனச் சிறப்பிக்கப்பெற்றுள்ளது. மற்றொரு அகநானூற்றின் பாலைத் திணைப்பாடலில் தலைவி கூந்தலை ஒப்பனை செய்து மயிர்ச் சந்தனம் பூசிக்கொள்வது கூறப்பெற்றுள்ளது.

*"சாந்துஊர் வணர்குரல் வாரி வகை வகுத்து*
*யான்போது துணைப்பத் தகரம் மண்ணாள்" (அகம்.117:10–11)*

'தகரம்' என்பது பெண்கள் கூந்தலின் பூசிக்கொள்ளும் ஒருவகை சந்தனத்தைக் குறிக்கும்.

செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனாரின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் நெறிப்பட ஒப்பனை செய்யப்பட்ட தலைவியின் 'ஐம்பால்' கூந்தல் பேசப்பெற்றுள்ளது.

*"இரும்பிடித் தடக்கை மான நெய்அருந்து*
*ஒருங்குபிணித் தியன்ற வெறிகொள் ஐம்பால்*
*தேங்கமழ் வெறிமலர் பெய்ம்மார் காண்பின்" (அகம்.177:4–6)*

மோதாசனாரின் குறுந்தொகைப் பாடலில் பெண்களின் 'ஐம்பால்' கூந்தல் ஒப்பனையும், ஆடவரின் தலைமுடியாகிய 'ஓரி'யும் பற்றிக் கூறப்பெற்றுள்ளது:

*"இவன்இவள் ஐம்பால் பற்றவும் இவள்இவன்*
*புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்" (குறுந்.229:1–2)*

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் பொருளீட்டி மீண்ட தலைவன் தலைவியின் மையிருங் கூந்தலில் தான் கொண்டுவந்த வெட்சி மலரைச் சூடுகின்றமை கூறப்பட்டுள்ளது.

*". . . . . . . . . . . . . நெறிமுதல்*
*கடற்றில் கலித்த முடச்சினை வெட்சி*
*தளையவிழ் பல்போது கமழும்*
*மையிருங் கூந்தல் மடந்தை நட்பே"* *(குறுந்.209:4–7)*

காவன்முல்லைப் பூதனார் இயற்றியுள்ள குறுந்தொகையின் பாலைத்திணைப் பாடலில் தலைவியின் 'ஓதி' என்னும் கூந்தலின் சிறப்புக் கூறப்பெற்றுள்ளது.

*"அஞ்சில் ஓதி ஆய்வளை நெகிழ"* *(குறுந்.211:1)*

பார்காப்பான் என்பார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் தலைவன் தலைவியின் கதுப்பின் ஆகிய கூந்தலைத் தலையணையாகக் கொண்டு துயிலும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*"துயில்இன் கங்குல் துயில்அவர் மறந்தனர்*
*பயில்நறுங் கதுப்பின் பாயலும் உள்ளார்" (குறுந்.254:4–5)*

அள்ளூர் நன்முல்லையார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாடலில் செம்மையூட்டப் பெற்ற பெண்களின் நகம் கிளியின் அழகு போன்று வண்ணதாலும் வடிவத்தாலும் காணப்பெறும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*". . . . . . . . . . . . . கிள்ளை*
*வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழம்*
*புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வாள்ளுகிர்ப்*
*பொலங்கல ஒருகா சேய்க்கும்"* *(குறுந்.67:1–4)*

அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடல்களில் 'சில்ஐங் கூந்தல்' (அகம்.123:6), 'தாழிருங் கூந்தல்' (அகம்.131:3), 'இரும்பல் கூந்தல்' (அகம்.373:10), 'கூழைக்கூந்தல்' (அகம்.141:16) ஆகிய மகளிரின் கூந்தல் வகைகளும் ஒப்பனைகளும் கூறப்பெற்றுள்ளன.

**தொய்யில் எழுதுதல்**

சங்க காலத்தில் பெண்கள் தம் முலை மீதும் தோள் மீதும் வண்ணக் குழம்பினால் தொய்யிலும் கரும்பும் எழுதினர். இவற்றைத் தம் காதலியர்க்குக் காதலர்களே எழுதினர். இதனைக் கோழிக்கொற்றன் என்னும் புலவர்,

*"உருத்துஎழு வனமுலை ஒளிபெற எழுதிய*
*தொய்யில் காப்போர் அறிதலும் அறியார்"* *(குறுந்.276:3–4)*

எனவும்,

நல்லந்துவனார் என்னும் புலவர்,

***“நெய்தல் நெறிக்கவும் வல்லன்; நெடுமென்தோள்***
***பெய்கரும்பு ஈர்க்கவும் வல்லன்; இளமுலைமேல்***
***தொய்யில் எழுதவும் வல்லன்; தன்கையில் சிலை***
***வல்லான் போலும் செறிவினான் நல்ல” (கலி.143:31–34)***

எனவும் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம். பாலை பாடிய பெருங்கடுங்கோ தலைவன் தலைவியின் தோளில் விரும்பி எழுதிய தொய்யில் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

***“. . . . . . . . . . . . . . . . . விரும்பி நீ***
***என்தோள் எழுதிய தொய்யிலும்” (கலி.18:2–3)***

மற்றொரு பாலைக்கலிப் பாடலில் தலைவன் பொருட்பிரிவில் வருந்தும் தலைவி “தொய்யில் துறந்தார் அவர்” (கலி.24:15) என்கின்றாள். எயினந்தை மகன் இளங்கீரனார் தலைவியின் “புள்ளித்தொய்யில்” (அகம்.239:8) வடிவழகைக் குறிப்பிட்டுள்ளார். நக்கீரனாரின் பாடலில் தலைவியின் “பெருந்தோள் தொய்யில்” (அகம்.389:6) சிறப்பிக்கப்பெற்றுள்ளது. செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனாரின் அகநானூற்றுப் பாலைப்பாடலில்,

***“அணங்குடை வனமுலைத் தாஅயநின்***
***சுணங்கிடை வரித்தல் தொய்யிலை நினைந்தே” (அகம்.177:19–20)***

எனத் தொய்யில் எழுதுதல் கூறப்பெற்றுள்ளது.

**பாலைநில மகளிர் அணிகலன்கள்**

அணிகலன் அணிதல் தமிழ்ப் பண்பாட்டில் சங்ககாலம் முதல் இக்காலம் வரையில் காணப்பெறும் பொதுவான பண்பாடாகும். குழந்தைகள் முதல் பெரியோர் வரை பலவகை அணிகலன்களை அணிந்து தம்மை ஒப்பனை செய்தனர். குழந்தைகளுக்குப் பரல் பெய்த கிண்கிணி, ஐம்படைத்தாலி, இமப்பூண் ஆகிய அணிகலன்களை அணிவித்தனர். ஆடவர் காலில் கழல் அணிந்தனர்; தோளில் வீரவளை பூண்டனர். பெண்கள் காலில் சிலம்பும், இடையில் பொற்காசு கட்டிய மேகலையும், கையில் வளையும் அணிந்தனர். அத்துடன் மார்பில் பொன்னறி மாலையும் தலையில் பொற்றாமரைச் சுட்டியும் அணிந்தனர். இடையில் அணியப்பெற்ற மேகலை ‘பகுமம்’ எனப்பட்டது. அது எண்கோவை வடிவமாக இருந்தது.

**சிலம்பணி**

பெரும்பதுமனார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில்,

*“வில்லோன் காலன கழலே; தொடியோள்*
*மெல்லடி மேலவும் சிலம்பே நல்லோர்” (குறுந்.7:1–2)*

எனத் தலைவனின் கால்களில் வீரக்கழல்களும், தலைவியின் மெல்லிய பாதங்களின் மேல் சிலம்பணியும் அணிந்திருப்பது சுட்டப்பெற்றுள்ளது. கயமனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் மகட்போக்கிய தாய் தன் மகளுக்குத் தான் காணாதவாறு சிலம்பு கழிக்கும் விழா தலைவனின் இல்லத்தில் நிகழ்வதற்கு வருந்துகின்றாள்.

*“. . . . . . . . . . . . . . ததரல்வாய்ச்*
*சிலம்பு கழீஇய செல்வம்*
*பிறருணக் கழிந்தஎன் ஆயிழை அடியே?” (நற்.279:9–11)*

தலைவிக்குத் திருமணம் நடைபெறும்போது சிலம்புகழி நோன்பு நடைபெறுவதை மற்றொரு நற்றிணைப் பாடல் “சிலம்பு கழீஇய செல்வம்” (நற்.289:10) எனக் குறிப்பிடுகின்றது. குடவாயிற் கீரத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில்,

*“அருங்கடி வியனகர்ச் சிலம்புங் கழியாள்*
*சேணுறச் சென்று வறுஞ்சுனைக் கொல்கிப்*
*புறவுக்குயின் றுஉண்ட புன்காய் நெல்லிக்*
*கோடை யுதிர்த்த குவிகட் பசுங்காய்*
*அறநூற் பளிங்கின் துளைக்காசு கடுப்ப*
*வறுநிலத் துதிரும் அத்தம் கதுமெனக்*
*கூர்வேல் விடலை பொய்ப்பப் போகிச்” (அகம்.315:8–14)*

எனச் சிலம்புகழி நோன்பாகிய நிகழ்வு விரிவாகப் பேசப்பெற்றுள்ளது. இப்பாடலடிகளில் மகட்போக்கிய தாய் தன் மகளுக்குச் சிலம்புகழி நோன்பும் செய்யப்பெறவில்லை. தொலைதூரம் சென்று வற்றிய சுனையில் நீர் பெறாமல் தளர்ச்சியுற்று, புறாக்கள் கொத்தித் தின்றமையால் புல்லிய நெல்லிக்காய்கள் வீழ்ந்து கிடக்கும் காட்டுவழியில் கூர்வேல் விடலையாகிய தலைவன் பொய்கூறி அழைக்கத் தன் மகளும் அவனுடன் சென்றுவிட்டதாகக் கூறி வருந்துகின்றாள்.

ஓதலாந்தையார் இயற்றியுள்ள பாலைப் பாடலில் உடன்போக்குச் செல்கின்ற தலைவியைத் தேடிச் சென்ற செவிலித்தாய் கண்டாரிடம்,

சிலம்பணிந்த தன் மகளின் மெல்லடி நிலத்தில் பொருந்தினவோ? என வினவுகின்றமை கூறப்பட்டுள்ளது.

*“செய்வினைப் பொலிந்த செறிகழ னோன்றாள்*
*மையணற் காளையொடு பைய வியலிப்*
*பாவை யன்னஎன் னாய்தொடி மடந்தை*
*சென்றன ளன்றி ரைய*
*வொன்றிய வேரவவ ளஞ்சிலம் படியே?” (ஐங்.389)*

உறையூர் மருத்துவன் தாமோதரனார் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் தன்னுடன் உடன்போக்கில் வரும் தலைவியின் நடையாற்றலைக் கண்ட தலைவன், ‘வேனில் காலத்தில் பகற்பொழுதில் ஒலி செய்யும் சிலம்பணிந்த நின் சிற்றடிகள் சிவக்குமாறு என்னுடன் இணைந்து வருகின்றாய்’ எனத் தலைவியைப் பாராட்டுகின்றான்.

*“வேனிற் பாதிரிக் கூனி மாமலர்*
*நறைவாய் வாடல் நாறும் நாள்சுரம்*
*அரியார் சிலம்பின் சீறடி சிவப்ப*
*எம்மொ டொராறு படீஇயர் யாழின்” (அகம்.257:1–4)*

கயமனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் மகட்போக்கிய செவிலித்தாய், அன்னை அறிந்து கொள்வாள் எனப் பயந்து ஆராய்ந்து தேர்ந்தெடுத்து அணிந்துகொண்ட பரல்கள் இட்டு மூடிய சிலம்பினைக் காலிலிருந்து கழற்றி வைத்துக்கொண்டு மூங்கில் உயர்ந்து வளர்ந்த பக்கமலையைக் கொண்ட பெருமலையைக் கடந்து தன் மகள் அவள் காதலனாகிய தலைவனுடன் சென்றுவிட்டாள் என்கின்றாள்.

*“அரிபெய்து பொதிந்த தெரிசிலம்பு கழீஇ*
*யாயறி வுறுதல் அஞ்சி*
*வேயுயர் பிறங்கல் மலையிறந் தோளே” (அகம்.321:15–17)*

மகட்போக்கிய மற்றொரு அகநானூற்றுச் செவிலித்தாய் தன் மகள் பாழ்பட்ட பாலைவழியில் பொற்றொடி ஒலிக்கக் கையினை வீசியும், சிவந்த காலடிச் சிலம்புகள் விளங்க உலாவவும் தலைவனுடன் உடன்போக்குச் சென்றுவிட்டாள் என்கின்றாள்.

*“பொலந்தொடி தெளிர்ப்ப வீசி சேவடிச்*
*சிலம்புநக இயலிச் சென்றஎன் மகட்கே” (அகம்.117:8–9)*

நக்கீரரின் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் மகட்போக்கிய செவிலித்தாய் தன் மகளுக்குத் தலைவன் வீட்டில் சிலம்புகழி நோன்பு நடைபெறுவதற்காக வருந்திப் பின்வருமாறு கூறுகின்றாள்.

***“அறியாத் தேஎத்து அருஞ்சுரம் மடுத்த***
***சிறியோற் கொத்தவென் பெருமடத் தகுவி***
***சிறப்பும் சீரும் இன்றிச் சீறூர்***
***நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை***
***ஓரா யாத்த ஒருதூண் முன்றில்***
***ஏதில் வறுமனைச் சிலம்புஉடன் கழீஇ***
***மேயினள் கொல்லென நோவல் யானே” (அகம்.369:20–26)***

தன் மகள் சென்ற வழியே கவர்த்த அடிப்பகுதியை உடைய ஓமை மரங்கள் ஓங்கி வளர்ந்த அரியவழிகளைக் கொண்ட அடர்ந்த காடாகும். அவள் விரும்பிச் சென்ற தலைவன் அரிய மணிகள் பதித்த கேடயத்தையும் நீண்ட உயரிய வேலினையும் உறுதி கொண்ட நெஞ்சுடன் எதற்கும் தளராத ஆண்மையையும் உடையவன். தன் மகளோடு அருஞ்சரம் கடந்து அறியாத நாட்டிற்கு அழைத்துச் சென்ற தலைவனுக்கு மிகவும் பொருத்தமும் தகுதியும் உடையவளே. ஆயினும் சீரும் சிறப்பும் இல்லாத சிற்றூரில் வறுமையால் வாழும் பெண்களின் ஒற்றைப்பசு கட்டப்பட்ட தூணுடைய புல் வேய்ந்த குடிசையான இல்லத்தில் சிலம்பினைக் கழித்து அவனை மணம் செய்து கொண்டாள் என இப்பாடலில் மகட்போக்கிய செவிலித்தாய் வருந்துகின்றாள்.

குடவாயிற் கீரத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் மகட்போக்கிய செவிலித்தாய், மயில் போலும் சாயலைக் கொண்ட தன் மகள் உயர்ந்த கற்பாறைகளையும், மூங்கிலுடன் நெல்லி மரங்களையும் கொண்ட பக்க மலையின் வழியிலுள்ள ஆலமரத்தின் அசைகின்ற நெடிய விழுதானது அவளது தேமல் படர்ந்த துடையில் உரச, மயிலின் தோகை போன்ற கூந்தல் காற்றில் ஆட தன்னால் விரும்பப்பெற்ற தலைவன் வளையல் அணிந்த முன்கையைப் பற்றினான். வடங்களைக் கொண்ட மேகலை அணிந்த அல்குலை அணைத்துக் கொண்டான். இவ்வாறு தலைவன் ஊக்கம் தந்தமையால் வருத்தம் பாராது அவனுடன் சென்ற முள் போன்ற கூர்மையான பற்களையும் பவளம் போன்ற சிவந்த வாயினையும் இளையவளாகிய தன் மகள் சிறிதும் அச்சமின்றித் தான் முன்பின் அறியாத நாடு பல கடந்து சிலம்பு கழித்து அவனை மணம் செய்து கொண்டது கொடுமையிலும் கொடுமை எனக் கூறி வருந்துகின்றாள்:

*“வளையுடை முன்கை அளைஇக் கிளைய*
*பயிலிருங் யிணையற் பசுங்காழ்க் கோவை*
*அகலமை யல்குல் பற்றிக் கூந்தல்*
*ஆடுமயிற் பீலியிற் பொங்க நன்றும்*
*தானமர் துணைவன் ஊக்க ஊங்கி*
*உள்ளாது கழிந்த முள்ளெயிற்றுத் துவர்வாய்ச்*
*சிறுவன் கண்ணி சிலம்புகழீஇ*
*அறியாத் தேஎத்தள் ஆகுதல் கொடிதே” (அகம்.385:11–18)*

குடவாயிற் கீரத்தனாரின் குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் தோழி தலைவிக்குப் பின்வருமாறு உடன்போக்கினை உணர்த்துகின்றாள்.

*“அத்த வாகை அமலை வால்நெற்று*
*அரிஆர் சிலம்பின் அரிசி ஆர்ப்பக்*
*கோடை தூக்கும் கானம்*
*செல்வாம் தோழி நல்கினர் நமரே” (குறுந்.369)*

தலைவன் தலைவியை உடன்போக்கில் கொண்டுசெல்ல ஒத்துக் கொண்டதைத் தோழி தலைவிக்குக் கூறுகின்றாள். பாலை நிலத்தில் வாகை மரங்கள் உள்ளன. வாகை வெண்ணெற்று ஒலிக்கும் வேனில் பருவம் உடன்போக்கிற்கு ஏற்ற காலமாகக் கூறப்பெற்றுள்ளது. தலைவன் உடன் வருவதால் கோடைக் காலத்துக் கானமும் தலைவிக்கு இன்னாவாகாமையைத் தோழி கூறுகின்றாள். வாகை நெற்றுக்களின் ஒலியால் பாலை நிலத்தில் செல்லும் தலைவியின் சிலம்பு ஓசையும் அவளைத் தேடி வரும் தந்தை தமையன்மார் ஆகியோரால் கேட்கப்படாமை உணர்த்தப்பட்டுள்ளன.

சிலம்புகழி நோன்பு உடன்போக்கின் பின்னர் தலைவன் இல்லத்தில் நிகழ்வது. ஆதலின் தலைவி காலில் சிலம்பணிந்து செல்லுதல் நீக்கப்படவில்லை. தோழியையும் உடன்போக்கில் அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை.

இனிசந்தநாகனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் மகளிரின் குறிய வளையலும், காஞ்சி அணிந்த அல்குலின் மேல் தொங்கும் காசுகளின் வரிசையும் பற்றிக் கூறப்பெற்றுள்ளன.

*“கோதை மயங்கினுங் குறுந்தொடி நெகிழினுங்*
*கால்பெயல் அல்குற் காசுமுறை திரியினும்” (நற்.66:8–9)*

‘சுரிதகம்’ என்பது திருகுப்பூ போன்றதோர் அணியாகும். இது மகளிர் நெற்றியில் அணியும் அணியாகும். நக்கீரர் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப்

பாடலில் கைவினை வல்ல கம்மியன் பல்வண்ணக் கற்களை இட்டிழைத்துச் செய்த பொன்னாலாகிய 'சுரிதகம்' என்னும் மகளிர் அணி கூறப்பெற்றுள்ளது.

***"கைவல் வினைவன் தையுபு சொரிந்த***
***சுரிதக உருவின வாகிப் பெரிய***
***கோங்கம் குவிமுகை அவிழ ஈங்கை" (நற்.86:5–7)***

எயினந்தை மகன் இளங்கீரனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாடலில் பைம்பூட் புதல்வனுக்கு அணிவிக்கப்படும் 'கிண்கிணி' என்னும் அணிகலன் கூறப்பெற்றுள்ளன.

***"குரும்பை மணிப்பூண் பெருஞ்செங் கிண்கிணிப்***
***பால்ஆர் துவர்வாய்ப் பைம்பூட் புதல்வன்" (நற்.269:1–2)***

பேயனார் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றின் முல்லைத்திணைப் பாடலில்,

***"அருந்ததி அனைய கற்பிற்***
***குரும்பை மணிப்பூண் புதல்வன் தாயே" (ஐங்.442:4–5)***

எனவரும் பாடலடிகளின் வாயிலாக 'கிண்கிணி' என்பது தளர்நடை பயிலும் சிறுவன் காலில் அணியப்படும் அணிகலன் என்பதை அறியலாம்.

மதுரை ஈழத்துப் பூதன்தேவனாரின் நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் 'மேகலை' என்னும் மகளிரின் அல்குல் அணிகள் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

***"அரவுக்கிளர்ந் தன்ன விரவுறு பல்காழ்***
***வீடுறு நுண்துகில் ஊடுவந்து இமைக்கும்***
***திருந்திழை அல்குல் பெருந்தோட் குறுமகள்" (நற்.366:1–3)***

'பாண்டில்' என்பது வட்ட வடிவமாகச் செய்யப்பட்ட காசு ஆகும். இது சங்க காலத்தில் மகளிரின் அல்குல் அணிகலனாகும். இதனை ஓதலாந்தையார் தாம் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றின் பாலைத்திணைப் பாடலில்,

***"பொலம்பசும் பாண்டிற் காசுநிரை அல்கு***
***லிலங்குவளை மென்றோ ளிழைநிலை நெகிழப்" (ஐங்.310:1–2)***

என்றும்,

***"பொன்செய் பாண்டிற் பொலங்கலம் நந்தத்***
***தேரகல் அல்கு லவ்வரி வாட" (ஐங்.316:1–2)***

என்றும் குறிப்பிட்டுள்ளார். ஓதலாந்தையார் பலவகை அணிகலன்களை அணிந்த பெண்களைத் "தெரிஇழை அரிவை" (ஐங்.354:4) என்கின்றார். திருத்தமுறச்

*செய்யப்பெற்ற அணிகலன்களை அணிந்த சங்ககாலப் பெண்களைத் "திருந்திழை அரிவை" (ஐங்.355:1) என்றும் ஐங்குறுநூற்றின் பாலைத்திணைப் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.*

*ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாலைத் திணையில் பாடலில் காலில் வீரக்கழல் அணிந்த ஆடவன் "திருந்து கழற் காளை" (ஐங்.382:2) எனவும், எயினந்தை மகனார் இளங்கீரனாரின் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் பெண்களின் காதணி 'மகரக்குழை', 'கொடுங்குழை' (அகம்.3:17) எனவும் கூறப்பெற்றுள்ளன. கயமனாரின் அகநானூற்றுப் பாடலில் சங்ககால மகளிரின் 'புலிப்பல்தாலி' என்னும் கழுத்தணி கூறப்பெற்றுள்ளது. இது திருமணத்தில் அணிவிக்கப்படும் தாலியன்று.*

***". . . . . . . . . . . . . . . பொன்னொடு***
***புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி***
***ஒலிக்கழைச் செயலை உடைமாண் அல்குல்" (அகம்.7:17–19)***

*பாலைத்திணைப் பாடல்களில் சங்ககால மகளிரின் வளையல்கள் பலவாறு சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளன. மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் அரத்தால் அறுத்துச் செய்யப்பட்ட மகளிரின் முன்கை வளையல்கள் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.*

***"அரம்போழ் அவ்வளை செறிந்த முன்கை***
***வரைந்துதாம் பிணித்த தொல்கவின் தொலைய" (அகம்.349:1–2)***

*மாமூலனாரின் அகநானூற்றுப் பாடலில் ஒளிவிடும் மகளிரின் 'இலங்குவளை' கூறப்பெற்றுள்ளது.*

***"இலங்குவளை நெகிழச் சாஅய் அல்கலும்" (அகம்.127:1)***

*மாமூலனாரின் குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் சங்கினால் செய்யப்பெற்ற மகளிரின் வளையல்கள் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.*

***"கோடீர் இலங்குவளை நெகிழ நாடொறும்" (குறுந்.11:1)***

*கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் அகநானூற்றுப் பாடலில் மகளிரின் மேகலை அணிந்த அல்குல் கூறப்பெற்றுள்ளன.*

***"வயங்குமணி பொருத வகையமை வனப்பின்***
***பசுங்காழ் அல்குல் மாஅ யோளொடு" (அகம்.167:1–2)***

*எயினந்தை மகனார் இளங்கீரனாரின் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் கச்சு அணிந்த மகளிரின் முலை கூறப்பெற்றுள்ளன.*

*“. . . . . . . . . . . . . ஆயிதழ் மடந்தை*
*வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினும்” (அகம்.361:4–5)*

**பாலை நில மக்களின் கலைகள்**

சங்க காலத்தில் யாழ், தண்ணுமை, ‘வயிர்’ என்னும் ஊதுகொம்பு முதலான இசைக்கருவிகள் பயன்பாட்டில் இருந்தன. இவ் இசைக்கருவிகளைப் பயன்படுத்தியோர் ‘இசைகாரர்’ என அழைக்கப்பெற்றனர். இவர்கள் இயவர், பயிரியர், வினையர் என்னும் பெயர்களில் கூறப்பெற்றனர். இசைக்கருவிகளை இயக்கும இவர்களைத்தவிரப் பாடுவோர், ஆடுவோர் ஆகிய கலை வல்லுநர்களும் அக்காலத்தில் இருந்தனர். ஆடல், பாடல்களைத் தொழிலாகக் கொண்ட ஆண், பெண் கலைஞர்கள் அக்காலத்தில் தம் கலையால் மக்களையும் மன்னர்களையும் மகிழ்வித்தனர். பாணன், பாடினி ஆகியோர் பாடல் வல்லோர் ஆவர். ஆடற்கலையில் வல்ல பொருநர், கூத்தர் மற்றும் பெண்மணிகளும் இருந்தனர். இக்கலைஞர்கள் ஊர் மன்றங்களில் கூடித் தம் ஆடல், பாடல் கலையாற்றலைக் காட்டிப் பரிசில் பெற்று வாழ்ந்தனர். விழா நாட்களில் இவர்களின் கூத்துக்கள் சிறப்பாக நடைபெற்றன.

குடவாயிற் கீரத்தனார் இயற்றியுள்ள நற்றிணையின் பாலைப்பாடலில் ‘கோடு’ என்னும் ஊதுகொம்பினைக் கொண்ட ‘கோடியர்’ என்னும் கூத்தரின் யாழிசை பற்றிக் கூறப்பெற்றுள்ளது. கணந்துள் என்னும் பறவை தனித்துக் குரலெழுப்பும் தெளிந்த ஓசை, பாலை வழிச் செல்லும் கூத்தர் தம் வருத்தம் புலப்படாதவாறு திடீரென இசைக்கும் யாழிசையுடன் ஒத்து ஒலித்ததாகக் கூறப்பட்டுள்ளது.

***“சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்***
***நரம்பொடி கொள்ளும் அத்தத்து ஆங்கண்” (நற்.212:3–4)***

விற்றூற்று வண்ணக்கன் தத்தனார் இயற்றியுள்ள நற்றிணையின் பாலைப் பாடலில் பாலைவழிச் செல்வோரைக் கொள்ளை இடுவதற்காகச் செவ்விய அம்புகளைத் தொடுத்துச் சினத்துடன் காத்திருக்கும் ஆறலைக்கள்வர் தோலை மடித்துப் போர்த்திய வாயையுடைய தண்ணுமை என்னும் இசைக்கருவியை முழக்குவர்.

***“வம்ப மாக்கள் வருதிறம் நோக்கிச்***
***செங்கணை தொடுத்த செயிர்நோக்கு ஆடவர்***
***மடிவாய்த் தண்ணுமைத் தழங்கு குரல் கேட்ட” (நற்.298:1–3)***

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பாலைக்கலிப் பாடலில் ஏழ் நரம்புகளினால் கட்டப்பட்டு கையினால் மீட்டும் 'யாழ்' என்னும் இசைக்கருவியும் யாழிசையும் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*"வீழுநர்க்கு இறைச்சியாய் விரல்கவர்பு இசைக்கும்கோல்*
*ஏழுதம் பயன்கெட இடைநின்ற நரம்புஅறூஉம்" (கலி.8:9–10)*

ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாலைப் பாடலில் வேங்கை மலரைக் கொய்யும் இளம்பெண்கள் 'பஞ்சுரம்' என்னும் பாலைப் பண்ணினைப் பாடுவர்; வேங்கை மலரைப் பறித்துத் தம் கூந்தலில் சூடிக்கொள்வர். பாலைப் பண்ணாகிய பஞ்சுரத்தைக் கேட்கும் ஆறலைக் கள்வர்கள் தாம் கைக்கொண்ட வில் முதலிய படைக்கருவிகளை கை நழுவ விடுத்துத் தம் மறப்பண்புகளையும் கைவிட்டு மெய்மறந்து அருள் உள்ளம் கொள்வர் என இப்பாடலில் கூறப்படுவதால் 'பஞ்சுரம்' என்னும் பாலைப் பண்ணின் இனிமையை அறியலாம்.

*"வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும்*
*ஆர்இடைச் செல்வோ ராறுநனி வெரூஉங்" (ஐங்.311:1–2)*

மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப்பாடலில் 'இளி' என்னும் பண்ணின் இனிமைச் சிறப்புக் கூறப்பெற்றுள்ளது. பாலைச் சுரவழியில் ஓங்கி உயர்ந்த யா மரத்தின் கிளையில் அமர்ந்து தன் பேடையைத் தன்பால் வருமாறு குறியிட்டு அழைக்கும் பருந்தின் சேவல் ஒலிப்பது 'இளி' என்னும் பண்ணின் இசை போன்று பாலைச்சுரத்தில் ஒலித்துக் கொண்டிருக்கும்.

*"விளைப் பருந்தின் கோள்வல் சேவல்*
*வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரும்*
*இளிதேர் தீங்குரல் இசைக்கும் அத்தம்" (அகம்.3:5–7)*

'இளி' என்னும் பண் கேட்டாரை விசாரிக்கும் குரலுடையதாகும். அது ஏழுவகை இசைச் சுரங்களுள் ஒன்றாகும். 'குரல்' என்பது இசையின் மத்திமம் ஆகும்.

மதுரை மருதன் இளநாகனாரின் அகநானூற்றுப் பாலைப்பாடலில் 'சேக்கோள் தண்ணுமை' என்னும் 'ஏறுகோட்பறை' கூறப்பெற்றுள்ளது. இப்பறையினைக் கேட்கும் பருந்துச் சேவல் அதனைப் போர்ப் பறையொலி என நினைத்து அங்குச் சென்றால் ஊன் கிடைக்கும் எனப் பறந்து செல்லும் எனக் கூறப்பட்டுள்ளது.

*“மதிசூழ் மீனின் தாய்வழிப் படூஉம்*
*சிறுகுடி மறவர் சேக்கோள் தண்ணுமைக்கு*
*எருவைச் சேவல் இருஞ்சிறை பெயர்க்கும்” (அகம்.297:14–16)*

வெள்ளிவீதியாரின் அகநானூற்றுப் பாலைப்பாடலில் வயிரியராகிய கூத்தரின் இன்னிசைப் பறையொலி பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*“. . . . . . . . . . . . . . . அலரே*
*அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்*
*தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணி*
*புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்*
*இன்னிசை ஆர்ப்பினும் பெரிதே யானே” (அகம்.45:8–12)*

தலைவியைக் குறித்து ஊரில் எழுகின்ற அலரானது அன்னி என்பானது குறுக்கையிலுள்ள போர்க்களத்தில் திதியன் என்பானது புன்னை மரத்தின் (காவல்மரம்) அடியை வெட்டி வீழ்த்தித் துண்டுகளாகத் துணித்தபோது அவனது புகழைப் பாடிப் பரவிய கூத்தரின் இன்னிசை முழக்கத்தைவிடப் பெரிதாக இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் வில்லுடை வேடர்கள் தம் சிற்றூர்களில் கள்ளினை உண்டு களித்த நிலையில் அவர் ஒலிக்கும் **துடியின் பேரொலி** கூறப்பெற்றுள்ளது.

*“. . . . . . . . . . . . . . . களிபட்டு*
*வில்லோர் குறும்பில் ததும்பும்*
*வல்வாய்க் கடுந்துடிப் பாணியுங் கேட்டே” (அகம்.261:12–15)*

நக்கீரனார் இயற்றியுள்ள பாலைப்பாடலில் ‘தடாரிப்பறை’ என்று கூறப்படும் ‘தெண்கிணை’ என்னும் இசைக்கருவியின் இசையொலி கூறப்பெற்றுள்ளது. இதனை “உடுக்கை” என்றும் கூறுவர். முசுண்டை என்னும் வள்ளல் வளைந்த பூணையும் வேற்படையையும் கொண்டவன். அவன் வலிமையான வாரினால் இழுத்துக் கட்டிய அரித்தெழும் ஓசையைச் செய்யும் கோலை உடைய கிணைப்பறையின் ஒலியுடன் தம் மிடற்றுக் குரலை எழுப்பிப் பாடும் பாணர் தம் புரவலன் ஆவான் எனப் பாடலில் கூறப்பட்டுள்ளது.

*“. . . . . . . . . . . . . . . . . . . . . . வள்வார்*
*விசிபிணித் தியாத்த அரிகோல் தெண்கிணை*
*இன்குரல் அகவுநர் இரப்பின் நாடொறும்*
*பொன்கோட்டுச் செறித்து பொலந்தார் பூட்டி” (அகம்.249:2–5)*

ஓரோடோகத்துக் கந்தத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் மேகம் இடியொலியுடன் மழை பெய்வதற்குப் பறையொலி உவமையாகக் கூறப்பெற்றுள்ளது.

***“மண்கண் குளிர்ப்ப வீசித் தண்பெயல்***
***பாடுஉலர்ந் தன்றே பறைக்குரல் எழினி” (அகம்.23:1–2)***

உறையூர் முதுகொற்றனின் குறுந்தொகைப் பாலைப் பாடலில் “மிளைவந்து பெயரும் தண்ணுமைக் குரலே” (குறுந்.390:5) என்று தண்ணுமை என்னும் இசைக்கருவியின் இன்னிசை கூறப்பெற்றுள்ளது. மதுரைப் பேராலவாயாரின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் வன்கண்மையுடைய மறவரின் பழைமை வாய்ந்த கற்கள் கொண்ட காட்டு அரண்களில் உண்டான தண்ணுமைப் பறையின் அகன்ற துளையிலிருந்து எழுந்த ஓசை பாலைவழிச் செல்வோரின் நெஞ்சத்தை நடுங்கச் செய்தது எனக் கூறப்பெற்றுள்ளது.

***“கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பின்***
***எழுந்த தண்ணுமை இடங்கட் பாணி***
***அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சம் துண்ணென” (அகம்.87:7–9)***

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் நீருக்காக அலைந்து வருந்தி மயக்கம் கொண்ட களிறுகள் குன்றத்தின்கண் உள்ள ‘ஞெமை’ மரத்தின் பின்னப்பட்ட சிலந்திக் கூட்டினை மேகம் எனக் கருதி அதனைப் பற்றுவதற்குத் தனது துதிக்கையை உயர்த்திப் புரவலரது புகழினைத் தொகுத்துப் பாடும் கூத்தரது தூம்பினைப் போல ஒலித்தமை கூறப்பட்டுள்ளது.

***“அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி***
***ஓடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர***
***மழையென மருண்ட மம்மர் பலவுடன்***
***ஓய்களிறு எடுத்த நோயுடை நெடுங்கை***
***தொகுசொற் கோடியற் தூம்பின் உய்க்கும்” (அகம்.111:5–9)***

பாலைபாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் வயிரியராகிய கூத்தர் பயன்படுத்தும் மத்தளம் என்னும் இசைக்கருவி கூறப்பெற்றுள்ளது.

***“செயிர்தீர் நாவின் வயிரியர் பின்றை***
***மண்ஆர் முழவின் கண்ணகத்து அசைத்த***
***விரலூன்று வடுவில் தோன்றும்” (அகம்.155:13–15)***

யானையின் அடிச்சுவட்டில் பதிந்த புலியின் காற்சுவடு குற்றமற்ற நாவினையுடைய கூத்தர், தம் தோளின் பின்புறத்தே கட்டிய மார்ச்சனை பூசிய மத்தளத்தின் கண்ணிடத்தே விரல்பதித்த வடுக்களைப் போலக் காணப்படுவதாகக் கூறப்பெற்றுள்ளது.

மோசிக்கீரனார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் 'பதலை' என்னும் ஒருகண் மாக்கிணைப் பறை பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

*"பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்" (குறுந்.59:1)*

சங்க காலத்தில் பதலை என்னும் ஒருகண் மாக்கிணைப் பறையைப் பாணர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

தங்கால் பொற்கொல்லனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் பூஞ்சோலையின் மரங்களின் கிளைகளில் மலர்ந்த மலர்களில் வீழ்ந்துகிடக்கும் வண்டுகள் யாழில் வல்லவன் இசைக்கும் பாலைப் பண்ணின் இசையைப் போன்று ஒலித்தன.

*"வல்லோன் தைவரும் வள்ளுகிர்ப் பாலை*
*நரம்பார்த் தன்ன வண்டினம் முரலுந்" (அகம்.355:4–5)*

**கூத்தரும் கலையும்**

அதியன் விண்ணத்தனார் தாம் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் கூத்தரின் வறுமை நிறைந்த வாழ்க்கையினையும் அவர்தம் தொழிலையும் விளக்கவாக எடுத்துக்கூறியுள்ளார்.

கூத்தர்கள் கொடையுள்ளம் கொண்ட வள்ளல்கள் கொடுத்த பரிசிலாகிய சிறிய உணவினை பாதுகாத்து வைக்கும் இயல்பு இல்லாமல் இடைவிடாது உண்ணும் இயல்பினர். அவர்கள் நீரில் வாழும் முதலையின் அங்காந்த வாயினைப் போன்ற பாயால் வேயப்பெற்ற ஒலிக்கின்ற வாயினையுடைய வண்டிகளில் அமர்ந்து பயணிப்பர்; இஃது எம் ஊர் என்று கூறும்படியாகத் தமக்கென்று சொந்த ஊர் இல்லாதவர். இருப்பினும் அவர்கள் துன்பமிலா இன்ப வாழ்க்கையினர். அவர்கள் பாலைநில வெப்பத்தின் வருத்தத்தை மரத்தடி நிழலில் தங்கி நீக்குவர். இனிய ஓசையுடைய கிணைப்பறை ஒலித்துக் காண்பார்க்குக் காட்சி இன்பம் உண்டாகுமாறு குவிந்த கொத்துக்களையுடைய எருக்கினது கண்ணி கூத்தருள் ஆடவர் தலையினை அழகு செய்யும். ஆவிரைச் செடியின் மலர்களால் ஆகிய மாலை கூத்தர் பெண்களின் முலைகளில் கிடந்தசையும். அவர்கள் சிறுவங்கியம், பெருவங்கியம், முழவு ஆகிய

இசைக்கருவிகளை ஒலிப்பர். கூத்தர்கள், கரியமேகம் முழங்கும்போது நீரின்கண் ஒலிக்கும் தேரையின் ஒலியினைப் போல தாளம் அமைத்து அரித்தெழும் ஓசையை உடைய பல வாத்தியங்களோடு பல ஊர்களிலும் சென்று கூத்தாடுவர். கூத்தாட்டம் முடிந்தவுடன் விரைவாகப் பையினுள் தம் பல வாத்தியங்களையும் உள்ளிட்டு அதன் தலையினைச் சேர்த்துக் கட்டுவர். பின்னர் தம் சுற்றத்தோடு கூத்தாடிய இடத்திலிருந்து பெயர்ந்து செல்வர்.

*“நல்குநர் ஒழித்த கூலிச் சில்பதம்*
*ஒடிவை இன்றி ஓம்பா துண்டு*
*நீர்வாழ் முதலை ஆவித் தன்ன*
*ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடத்து*
*ஊர்ஃ தென்னா வூறில் வாழ்க்கை*
*சுரமுதல் வருத்தம் மரமுதல் வீட்டி*
*பாடின் றெண்கிணை கறங்கக் காண்வரக்*
*குவியிண ரெருக்கின் ததர்பூங் கண்ணி*
*ஆடுஉச் சென்னித் தகைப்ப மகடூஉ*
*முளரித் தீயின் முழங்கழல் விளக்கத்துக்*
*களரி யாவிரைக் கிளர்பூங் கோதை*
*வண்ண மார்பின் வனமுலைத் துயல்வரச்*
*செறிநடைப் பிடியோடு களிறுபுணர்ந் தென்னக்*
*குறுநெடுந் தூம்பொடு முழவுப்புணர்ந் திசைப்பக்*
*கார்வான் முழக்கின் நீர்மிசைத் தெவுட்டும்*
*தேரை யொலியின் மான சீர்அமைத்துச்*
*சில்லரி கறங்குங் சிறுபல் லியத்தொடு*
*பல்லூர் பெயர்வன ராடி ஒல்லெனத்*
*தலைப்புணர்த் தசைத்த பஃறொகைக் கலப்பையர்*
*இரும்பேர் ஒக்கல் கோடியரிறந்த”* *(அகம்.301:4–23)*

‘குறுநெடுந் தூம்பு’ என்பது குறுந்தூம்பு, நெடுந்தூம்பு ஆகிய இசைக்கருவிகள் ஆகும். ‘தூம்பு’ என்பது மூங்கிலால் செய்யப்பட்ட ‘பெருவங்கியம்’ என்னும் இசைக்கருவியாகும். இது யானையின் துதிக்கை போன்ற வடிவமுடையது. தேரை தட்டைப் பறையினைப் போல ஒலிக்கும் (குறுந்.193:1–2). ஐங்குறுநூற்றின் முல்லைத் திணைப் பாடல்களில் “அவல்தோறும் தேரை தெவிட்ட” *(ஐங்.453:1)*, “வரிநுணல் கறங்க தேரை தெவிட்ட” *(ஐங்.468:1)*, “வண்டுதா தூதத் தேரை தெவிட்ட” *(ஐங்.494:1)* எனக் கூறப்பட்டிருப்பதும் ஒப்புநோக்கத்தக்கதாகும்.

**கூத்தியர்**

*சங்க காலத்தில் கூத்தியர் பறையின் இசையொலிக்கும் தாளத்திற்கும் ஏற்றவாறு ஆடும் கலைத்தொழிலைச் செய்துள்ளனர். காவன்முல்லைப் பூதரத்தனார் அகநானூற்றில் இயற்றியுள்ள பாலைப் பாடலில் இச்செய்தி உவமை வாயிலாகக் கூறப்பெற்றுள்ளது.*

***“. . . . . . . . . . . . . . . . . குறுங்கால் உழுஞ்சில்***
***தாறுசினை விளைந்த நெற்றம் ஆடுமகள்***
***அரிக்கோற் பறையின் ஐயென ஒலிக்கும்” (அகம்.151:8–10)***

*குறிய காலினை உடைய வாகை மரத்தின் கிளையில் விளைந்த நெற்றினது குலை, ஆடும் கூத்தியர் அடிக்க ஒலியுண்டாக்கும் பறையைப் போல கேட்போர் வியக்குமாறு ஒலியை உண்டாக்கும்.*

**குரவைக் கூத்து**

*மதுரை மருதன் இளநாகனாரின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் குரவைக் கூத்தாடல் பற்றிய செய்தி கூறப்பெற்றுள்ளது. மழை பெய்து ஓய்ந்துபோன தைத்திங்களின் இறுதி நாட்களில் அழகிய நெற்றியை உடைய பெண்கள், பொன்னால் செய்யப்பட்ட காசுகளைத் தொடுத்து அணிந்த பக்கம் உயர்ந்த அல்குலிடத்தே நல்லநிறம் கொண்ட பூங்கொத்துக்கள் தழையுடன் அசைந்தாட, ஓசை பரந்து எழும் பெரிய வாயாகிய வட்டத்தையுடைய ஊது கொம்பில் தோன்றிய தெளிந்த இசை முழங்க வண்டல் விளையாட்டுக்கு உரிய பாவையை நீர் உண்ணும் துறையில் கொண்டுவந்து வைத்துக் குரவைக் கூத்தாடுவர்.*

***“தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்***
***பொலங்காசு நிரைத்த கோடுஏந்து அல்குல்***
***நலம்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வரப்***
***பாடூர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து***
***வயிரிடைப் பட்ட தெள்விளி இயம்ப***
***வண்டற் பாவை உண்துறைத் தரீஇ***
***திருநுதன் மகளிர் குரவை அயரும்” (அகம்.269:14–20)***

*குறிஞ்சித் திணைப் பாடல்களில் குரவைக் கூத்து முருகனை வழிபடும் இறைவழிபாட்டுக் கூத்தாகக் கூறப்பெற்றுள்ளது. பாலைத்திணையின் இப்பாடலில் வண்டற் பாவைக்குக் குரவைக் கூத்தாடுகின்றனர்.*

**கழைக்கூத்து**

*ஆரிய நாட்டிலிருந்து வந்த ஒருவகைக் கூத்தர் கழையை நட்டு அதில் கயிறுகட்டி அக்கயிற்றின் மேல் ஆடுவர். அப்பொழுது பறையும் கொட்டப்படும். இதன் ஒலி வாகையின் நெற்றொலி போலக் கேட்கும். 'ஆரியக் கூத்தாடினாலும் காரியத்திலே கண்' என்னும் ஒரு பழமொழியும் வளங்குகிறது [26] ஆரியக்கலைக் கூத்தரின் இந்தக் கழைக்கூத்துச் செய்தியைப் பெரும்பதுமனார் தம் குறுந்தொகைப் பாலைப் பாடலில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.*

***" . . . . . . . . . . . . . . . . ஆரியர்***
***கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி***
***வாகை வெண்ணெற் றொலிக்கும்" (குறுந்.7:3–5)***

**வள்ளிக்கூத்து**

*சங்க காலத்தில் சிற்றூர்களில் வள்ளிக்கூத்தும் நடைபெற்றுள்ளது. வள்ளிக்கூத்து என்பது நாடக வகையைச் சேர்ந்த ஒரு கூத்தாகும். கச்சிப்போட்டு காஞ்சிக் கொற்றன் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாடலில் வள்ளிக்கூத்துப் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது.*

***"அவரே, கேடுஇல் விழுப்பொருள் தருமார் பாசிலை***
***வாடா வள்ளிஅம் காடுஇறந் தோரே" (குறுந்.216:1–2)***

*வாடாவள்ளி என்பது வள்ளிக் கூத்தைக் குறிக்கும். பாசிலை வாடாவள்ளி என்பது வள்ளிக் கொடியைக் குறிக்கும்.*

**ஓவியக்கலை**

*ஓவியக்கலையும் சங்க காலத்தில் செழித்திருந்தது. எவ்வகைப்பட்ட செய்திகளையும் காட்சிகளையும் ஒப்புக்காட்டி வரைந்து தரும் ஓவியர்கள் சங்க காலத்தில் இருந்தனர். அவர்கள் துகிலியைக் கொண்டு (தூரிகை) அரக்கு முதலிய வண்ணங்களைத் தோய்த்துச் சித்திரம் (ஓவியம்) வரைந்தனர். பார்ப்பவர் கண்களிடம் தன் தொழிலை நிறுத்துதல் பற்றி ஓவியக் கலைஞர்கள் "கண்ணுள் வினைஞர்" [27] என அழைக்கப்பெற்றனர். அழகிய காட்சிகளுக்கு ஓவியங்களை ஒப்புக்காட்டிய மரபும் உண்டு என்பதற்கு "ஓவத்தன்ன கோவச் செந்நிலம்" (அகம்.93:12.) என்னும் அகநானூற்றுப் பாடலடி சான்றளிக்கின்றது.*

*ஓவியங்களை எழுதிய மண்டபங்கள் திருக்கோயில்களில் இருந்தன. இதனைப் பரிபாடல் "எழுத்துநிலை மண்டபம்"[28] எனக் குறிப்பிடுகின்றது.*

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய நற்றிணைப் பாலைப் பாடலில் உவமை வாயிலாக ஓவியர் பற்றிக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

***"ஓவ மாக்கள் ஒள்ளரக்கு ஊட்டிய***
***துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி" (நற்.118:7–8)***

தம் தொழிலில் திறமைமிக்க ஓவியர், ஒளிபொருந்திய அரக்கினில் தோய்த்த எழுதுகோல் போன்றுள்ள தலையில் நுண்ணிய பஞ்சினையுடைய பாதிரியின் பூக்கள் மலர்ந்தன.

அம்மெய்யன்நாகனார் என்னும் சங்கப்புலவர் நற்றிணையில் இயற்றிள்ள பாலைப்பாடலில் தலைவி சுவற்றில் புனைந்து எழுதப்பட்ட படிமத்தைப் போல குற்றமற்ற அழகிய தோற்றமுடையவள் எனக் கூறப்பெற்றுள்ளன.

***". . . . . . . . . . . . . புனைசுவர்ப்***
***பாவை அன்ன பழிதீர் காட்சி" (நற்.252:7–8)***

மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் தலைவன் தலைவியை கொல்லிமலையில் செய்த இயந்திரப் பாவைபோலப் பேரழகு உடையவள் எனப் பாராட்டிக் கூறுகின்றான்.

***"வினையமை பாவையின் இயலி நுந்தை" (நற்.362:1)***

ஓதலாந்தையார் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றுப் பாலைப் பாடலில் தோழி தலைவியைப் கொல்லிப்பாவை போன்ற பேரழகினள் எனக் கூறுகின்றாள்.

***"பாவை யன்ன நின்றுணைப்பிரிந்து வருமே" (ஐங்.307:4)***

மேற்குறித்த பாடல்களில் 'பாவை' என்பது ஓவியத்தையே குறிக்கின்றது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் பொருட்பிரிவை விரும்பிய தலைவன் தன் நெஞ்சிடம் ஓவியத்தின் முகத்தில் அதன் உள்ளக் குறிப்புத் தோன்றுவதைப் போல, தன் முகக்குறிப்பினால் பிரிவாகிய கருத்தினைத் தான் அறியாதவாறு தலைவி அறிந்துகொண்டாள் எனக் கூறுகின்றான்.

***". . . . . . . . . . . . . முகத்தின் உரையா***
***ஓவச் செய்தியின் ஒன்றுநினைந் தேற்றிப்" (அகம்.5:19–21)***

இப்பாடலடிகளில் 'ஓவம்' என்பது ஓவியத்தைக் குறிக்கும். இப்பாடலில் வரும் "ஓவச்செய்தி" என்பதைக் கொண்டு அறிஞர் மு.வரதராசன் 'ஓவச்செய்தி' என்னும் தலைப்பில் ஆய்வுநூல் ஒன்றினை எழுதியுள்ளார்.

மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் பொருட்பிரிவை விரும்பிய தன் நெஞ்சிற்குத் தலைவன் தெய்வம் உறையும் ஓமை மரங்களைக் கொண்ட காட்டில் பற்றி இருக்கின்ற முள்வேலியினை உடைய புலால் நாறும் முற்றத்தில் ஓவியத்தில் வரைந்துவைத்தாற் போன்ற நெடிய உடலை உடைய பூனையின் பூளைப் பூவினைப் போன்ற மயிரினைக் கொண்ட குட்டிகள் திங்களைச் சுற்றியுள்ள விண்மீன்களைப் போலத் தம் தாயைச் சுற்றித் திரியும் எனக் கூறுகின்றான்.

*"சூர்முத லிருந்த ஓமையம் புறவின்*
*ஈர்முள் வேலிப் புலவுநாறு முன்றில்*
*எழுதி யன்ன கொடிபடு வெருகின்*
*பூளை யன்ன பொங்குமயிர்ப் பிள்ளை*
*மதிசூழ் மீனின் தாய்வழிப் படூஉஞ்"* *(அகம்.297:11–15)*

இப்பாடலடிகளில் பூனையின் ஓவியம் கூறப்பெற்றுள்ளது. கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் அகநானூற்றுப் பாலைப் பாடலில் "மரம்சோர் மாடத்து எழுதணி கடவுள்" (அகம்.167:14–15) எனச் சுவரில் வரையப்பட்ட கடவுள் ஓவியம் கூறப்பெற்றுள்ளது.

**விளையாட்டுக்கள்**

சங்க இலக்கியத்தில் பாலைத்திணைப் பாடல்களில் மகளிரின் கழங்கு விளையாட்டு, பந்து விளையாட்டு, பாவை விளையாட்டு, ஓரை விளையாட்டு, கிளிக்கு மழலை பயிற்றுவிக்கும் விளையாட்டு, பூக்கொய்தல் விளையாட்டு, புணரியாடல், புனல் விளையாட்டு முதலான விளையாட்டுக்களும், சிறுமணல் வீடு கட்டி விளையாடல், சிறுவர்களின் வட்டாடுதல் ஆகிய விளையாட்டுக்களும் கூறப்பெற்றுள்ளன. ஏனைய திணைப் பாடல்களோடு ஒப்பிடும்போது பாலைத்திணைப் பாடல்களில் விளையாட்டுக்கள் குறித்த செய்திகள் குறைவாகவே காணப்படுகின்றன.

**கழங்காடல்**

'கழங்கு' என்பது கழற்சிக்காயைக் கொண்டு மகளிர் ஆடும் ஒரு விளையாட்டாகும். கயமனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் மகளிரின் பந்து விளையாட்டும், கழங்கு விளையாட்டும் கூறப்பெற்றுள்ளன.

*“வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்*
*இளந்துணை யாயமொடு கழங்குட னாடினும்*
*உயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ”* *(அகம்.17:3)*

வளமையும் செல்வமும் மிகுந்த குடும்பத்தில் பிறந்து வளர்ந்த தலைவி சிறிதுநேரம் பந்து எறிந்து விளையாடினாலும், தன்னைப் போன்ற தோழியருடன் சேர்ந்து கழங்கு விளையாடினாலும் தன் அன்னையிடம் உடல் வருந்துகின்றது எனக் கூறித் தளர்ச்சியடைவாள்.

கண்ணகனாரின் நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் உவமை வாயிலாக மகளிரின் கழங்கு விளையாட்டு கூறப்பெற்றுள்ளது.

*“.... .... .... குறுந்தொடி மகளிர்*
*மணலாடு கழங்கின் அறைமிசைத் தாஅம்*
*ஏர்தரல் உற்ற இயக்கருங் கவலைப்”* *(நற்.79:2–4)*

ஈங்கையின் இதழ்களால் மூடப்பட்டதும் தேன்துளி மிக்குத் திரண்டு விளங்குவதுமான மலர்கள் கற்பாறைகளில் உதிர்ந்து பரவிக் காணப்படுவது, கூரையையுடைய நல்ல மனையின்கண் அமைந்த முற்றத்தில் குறிய தொடியணிந்த மகளிர் பரப்பிய மணற்பரப்பில் இட்ட விளையாடுவதற்குரிய கழங்கு போலத் தோன்றுகின்றது.

**பந்து விளையாட்டு**

சேரமான் இளங்குட்டுவன் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் மகட்போக்கிய செவிலித்தாய் இனிய சொற்களைக் கூறும் தன் மகள் தோழியருடன் சேர்ந்து பந்தாடுமிடத்துச் சிறிது தூரம் சென்றுவந்தாள் ஆயினும் மிகவும் நொந்து வருந்துவாள் என்கின்றான்.

*“அம்தீங் கிளவி ஆயமொடு கெழீஇப்*
*பந்துவழிப் படர்குவள் ஆயினும் நொந்துநனி*
*வெம்புமன் அளியள் தானே இனிய”* *(அகம்.153:2–4)*

என்பன இது குறித்த பாடலடிகளாகும்.

வண்ணப்புறக் கந்தரத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் உடன்போக்குச் சென்ற மகளை நினைத்துச் செவிலித்தாய் தன் மனையின்கண் வருந்திக் கூறுகின்றாள். இப்பாடலில் மகளிரின் கிளிக்கு மழலை பயிற்றுவித்தல், பந்தாடுதல், கழங்காடுதல் முதலான விளையாட்டுக்கள் கூறப்பெற்றுள்ளன.

*“கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்*
*அளியும் அன்பும் சாயலும் இயல்பும்*
*முன்நாள் போலாள் இறீஇயரென் உயிரென”* *(அகம்.49:1–3)*

**‘பாவை’ விளையாட்டு**

பாலைத்திணைப் பாடல்களில் பாவை விளையாட்டு குறித்த செய்திகள் சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளன. சங்க காலத்தில் பெண்கள் பாவை விளையாட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர். ‘பாவை’ என்பது பெண்கள் விளையாட்டில் பயன்படுத்தும் பொம்மையைக் குறிக்கும். உடன்போக்குச் சென்ற தன் மகளை நற்றாய் ஏவலரை அனுப்பி நாற்றிசையிலும் தேடச் செய்தாள். அவர்கள் நாற்றிசையிலும் தலைவியைத் தேடியும் அவளைக் காணவில்லை என நற்றாயிடம் கூறினர். அதனைக் கேட்ட தாய் நொந்து கூறுவதாக ஓதலாந்தையார் இயற்றியுள்ள ஐங்குறுநூற்றுப் பாடல் வருமாறு:

*“இதுவென் பாவை பாவைகு யிதுவென்*
*னலமரு நோக்கிய னலம்வரு சுடர்நுதற்*
*பைங்கிளி யெடுத்த பைங்கிளி யென்றிவை*
*காண்டொறுங் காண்டொறுங் கலங்க*
*நீங்கின ளோவென் பூங்க ணோளே”* *(ஐங்.375)*

ஒரு பொருளைக் காணும்போது அப்பொருளுக்கு உரியவரை உடன் நினைத்துப் பார்த்தல் ஓர் உலகியல் மனநிலையாகும். இவ்வாறுதான் இப்பாடலின் நற்றாய் தன் மகள் விரும்பி வளர்த்த கிளியும் பூவையும் வைத்து விளையாடிய பந்தும், பாவையும், கழங்கும், அவன் விளையாடிய திண்ணையும் நொச்சிமரத்தடியும் அவள் உடன்போக்குச் சென்றபோது அவளை நினைக்கத் தூண்டுகின்றன. நற்றாய் தன் மகள் விளையாடிய பந்து, பாவை, கழங்கு ஆகிய விளையாட்டுப் பொருட்களைக் காணும் போது கலங்குகின்றாள்.

உடன்போக்குச் சென்ற தலைவி, தலைவன் வளைத்த கொம்பின் பூக்கொண்டு தனக்கும் பாவைக்கும் பொருத்தமான பூக்களைத் தேர்ந்தெடுப்பதைக் கண்டு கண்டார் கூறுவதாகப் பின்வரும் பாடற்செய்தி அமைந்துள்ளது.

*“கோட்சுரும் பரற்றும் நாட்சுரத் தமன்ற*
*நெடுங்கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி*
*வலம்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற*
*மள்ளன் உள்ளம் மகிழ்கூர்ந் தன்றே*

*பஞ்சாய்ப் பாவைக்குந் தனக்கும்*
*மஞ்சாய் கூந்த லாய்வது கண்டே”* *(ஐங்.383)*

வெள்ளிய பூக்களை உடைய வெண்கடம்பு மரத்தினைத் தலைவன் மலர் கொய்வதற்கு ஏதுவாக அதன் கொம்பினை வளைத்து நின்றான். அப்போது தலைவி அதில் பறித்தற்குரிய மலர்களை ஆராய்ந்தாள். இன்னும் குழந்தைத்தனம் மாறாத அவள் தன் கையில் தண்டான் கோரைப்புல்லால் செய்த பைஞ்சாய்ப் பாவையை வைத்திருந்தாள். அத்தலைவி தான் சூட்டிக்கொள்வதற்கும் தன் பைஞ்சாய்ப் பாவைக்குச் சூட்டவும் தனித்தனியே மலர்களை ஆராய்ந்து பறித்தாள் எனக் கண்டார் கூறுகின்றனர். இதிலிருந்து சங்ககால மகளிரின் ‘பைஞ்சாய்ப் பாவை’ விளையாட்டினை அறியலாம்.

தலைவன் பொருட்பிரிவில் ஆற்றியிருந்த தலைவி அவன் திரும்பி வரக் காலம் நீட்டித்தபோது ஆற்றாமல் தோழிக்குக் கூறுவதாக அமைந்த ஐங்குறுநூற்றுப் பாலைத்திணைப் பாடலிலும் சங்ககாலப் பெண்களின் பாவை விளையாட்டு கூறப்பெற்றுள்ளது.

*“அவரோ வாரார் தான்வந் தன்றே*
*நறும்பூங் குரவம் பயந்த*
*செய்யாப் பாவை கொய்யும் பொழுதே”* *(ஐங்.344)*

கோங்க மலர் பாவை போன்ற வடிவம் உடையதாதலின் அதனை அப்பெயரால் சுட்டுவது மரபாகும். இது பாயா வேங்கை, பறவாக் கொக்கு, ஊராக் குதிரை என்பது போன்ற வழக்காகும். இந்த அடிப்படையில் ஓதலாந்தையார் பாவை போன்ற வடிவமுடைய கோங்கமலரைச் ‘செய்யாப் பாவை’ எனச் சிறப்பித்துள்ளார். இளம்பெண்களில் சிலர் மணலிலும் மண்ணிலும் செய்து மலர்களை இட்டு அழகுபடுத்திய பாவை ‘செய்யும் பாவை’ ஆகும். இத்தகைய செய்யும் பாவையை தேரதரன் என்னும் புலவர் தலைவன் பிரிவில் பருவ வரவு கண்டு தலைவி வருந்திக் கூறுவதாக இயற்றியுள்ள குறுந்தொகை நெய்தல் திணைப் பாடலில் பின்வருமாறு சுட்டிக்காட்டியுள்ளார்.

*“செய்வுறு பாவை அன்னஎன்*
*மெய்பிறி தாகுதல் அறியா தோரே”* *(குறுந்.195:6–7)*

இதிலிருந்து சங்ககாலப் பெண்களின் செய்யாப்பாவை, செய்யுறு பாவை ஆகிய பாவை விளையாட்டுக்களை அறியலாம்.

சங்க காலத்தில் பொன்னால் செய்யப்பட்ட 'பொன்செய் பாவை'யும் பயன்பாட்டில் இருந்தன. இதனை மாமூலனார் இயற்றியுள்ள என்னும் சங்கப்புலவர் அகநானூற்றுப் பாலைப் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

***"பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்***
***பொன்செய் பாவை வயிரமொடு ஆம்பல்***
***ஒன்றுவாய் நிறையக் குவைஇ அன்றவண்" (அகம்.127:7-9)***

கடலிடையே உள்ள குறை நிலத்தில் தம்முடன் போரிட்ட பகைவரைப் புறங்காட்டி ஓடச்செய்து அவருடைய காவல் மரமாகிய கடம்பினை வெட்டிச் சாய்த்து அதனால் பெற்ற வெற்றியின் காரணமாக முரசினை உடைய சேரலாதன் என்னும் சேர மன்னன் தம் முன்னோரைப் போல இமயத்தில் விற்கொடியைப் பொறித்தான். மீண்டு வந்து 'ஆம்பல்' என்னும் பேரெண் அளவிற்குத் தம் பகைவர் பணிந்து கொடுத்த நல்ல அணிகலன்களோடு பொன்னால் செய்த பாவையினையும் வயிரங்களையும் மரந்தை என்னும் ஊரிலுள்ள தம் மனையில் முற்றம் எல்லாம் கொண்டுவந்து நிறையுமாறு குவித்தான். இத்தகைய பொன்செய் பாவை அரண்மனைப் பெண்களின் விளையாட்டுப் பொருளாகச் சங்ககாலத்தில் இருந்துள்ளது.

பரணர் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் பேதைப் பெண்களின் விளையாட்டுப் பாவையும், பாவை விளையாட்டும் பற்றிக் கூறப்பெற்றுள்ளது.

***"ஆல முற்றம் கவின்பெறத் தைஇய***
***பொய்கை சூழ்ந்த பொழில்மனை மகளிர்***
***கைசெய் பாவை துறைக்கண் இறுக்கும்" (அகம்.181:17-19)***

'ஆலமுற்றம்' என்னும் நாட்டுப் பகுதி புதுவருவாயை உடைய பல ஊர்களைக் கொண்டது. சோழ மன்னர்களால் பாதுகாக்கப்பட்ட சிறப்பினை உடையது. பூக்கள் விரிந்தகன்ற துறையினை உடைய காவிரி ஆற்றின் அதிவேகத்துடன் ஆழ்ந்து ஓடும் நீரானது நுண்மணலைக் கொண்டுவந்து குவித்து மேடாக்கிய மணல் குவியல்களைக் கொண்டது. அவ்விடத்தில் அழகாகச் செய்யப்பெற்ற பொய்கை சூழ்ந்த சோலையில் அமைந்த வீட்டிலுள்ள பேதைப் பெண்களால் அழகுபடப் புனையப்பெற்ற விளையாட்டுப் பாவைகளைக் கொண்ட துறையின்கண் பறவைகளின் பாதுகாவலனான ஆய் எயினனைப் பறவைகள் வட்டமிட்டன. இதிலிருந்து சங்க காலத்தில் பேதைப்பெண்கள் கைசெய்

பாவையாகிய விளையாட்டுப் பாவைகளைக் காவிரியாற்றின் துறைகளில் வைத்து விளையாடியதை அறியலாம்.

பகற்குறியில் தலைவனைக் காணும் பொழுதைவிடக் காணாப்பொழுதே பெரிது. இதனால் ஆற்றாமை கொண்ட தலைவிக்குத் தோழி கூறுவதாக பூங்கணுத்திரையார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் பூந்தாதினால் செய்யப்பட்ட பாவையைக் கொண்டு பெண்கள் விளையாடும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

***"தாதிற் செய்த தண்பனிப் பாவை***
***காலை வருந்துங் கையாறு ஓம்பென***
***ஓரை ஆயம் கூறக் கேட்டும்"                    (குறுந்.48:1–3)***

'தாதின் செய்த தண்பனிப் பாவை' என்பது பூந்தாதுக்களால் செய்யப்பட்ட விளையாட்டுப் பொம்மையைக் குறிக்கும்.

பேரிசாத்தன் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் தலைவன் தலைவிக்குத் தண்டான் கோரையாகிய பைஞ்சாய்க் கோரைப் புல்லால் பாவை செய்து விளையாடக் கொடுக்கும் செய்தி கூறப்பெற்றுள்ளன.

***"உறுவளி உளரிய அம்தளிர் மாஅத்து***
***முறிகண் டன்ன மெல்லென் சீறடிச்***
***சிறுபசும் பாவையும் எம்மும் உள்ளார்***
***கொடியர் வாழி – தோழி! – சடுவன்"                (குறுந்.278:1–4)***

நற்றிணையின் பாலைத்திணைப் பாடலிலும் தலைவியின் பாவை விளையாட்டு நற்றாய் கூற்றில் கூறப்பெற்றுள்ளது.

***"இல்லெழு வயலை ஈற்றுஆ தின்றெனப்***
***பந்துநிலத் தெறிந்து பாவை நீக்கி***
***அவ்வயிறு அலைத்தவென் செய்வினைக் குறுமகள்" (நற்.179:1–3)***

இல்லத்தில் முளைத்துப் படர்ந்த வயலைக் கொடியைக் கன்றினை ஈன்ற பசு தின்றது. அதனைக் கண்ட தலைவி தான் விளையாடிக் கொண்டிருந்த பந்தை நிலத்தில் எறிந்துவிட்டு, ஓரை ஆடும் பாவையையும் நீக்கிவிட்டுத் தன் அழகிய வயிற்றில் அடித்துக்கொண்டு வருந்தி அழுதாள். இவ்வாறு பாலைத்திணைப் பாடல்களில் பரவலாகப் பெண்களின் பாவை விளையாட்டும் பந்துவிளையாட்டும் கூறப்பெற்றுள்ளன.

**ஓரை விளையாட்டு**

*'ஓரை' என்பது பஞ்சாய்க் கோரைப் புல்லால் செய்த பாவையைக் கொண்டு பெண்கள் விளையாடும் விளையாட்டாகும். தலைவியின் உடன்போக்கில் நற்றாய் வருந்திக் கூறுவதாகக் கண்ணகாரன் கொற்றனார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலின் சிறுமியர்கள் விளையாடும் ஓரை விளையாட்டு பற்றிக் கூறப்பெற்றுள்ளது.*

***"…. …. …. …. ஒய்யெனத்***
***தருமணல் ஞெமரிய திருநகர் முற்றத்து***
***ஓரைஆயமும் நொச்சியுங் காண்தொறும்" (நற்.143:1–3)***

*உழையர் கொணர்ந்த மணலால் நிரம்பப்பெற்ற முற்றத்தினைக் கொண்டது தலைவியின் மாளிகை. அம்முற்றத்தில் ஓரை விளையாடும் சிறுமியர் கூட்டத்தையும் நொச்சி வேலியினையும் காணும் போதெல்லாம் உடன்போக்குச் சென்ற தலைவியை நினைத்து நற்றாயின் கண்கள் நீரைச் சொரிந்து அழுகின்றன. இதிலிருந்து சங்ககாலத்தில் சிறுமியர் ஓரை விளையாடியதை அறியலாம்.*

*உடன்போக்குச் சென்ற தலைவியை நினைத்துச் செவிலித்தாய் புலம்புவதாக வண்ணப்புறக் கந்தரத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாடலிலும் பெண்கள் தோழியர் கூட்டத்தோடு ஓரை விளையாடிய செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:*

***"கோதை ஆயமொடு ஓரை தழீஇ***
***தோடமை அரிச்சிலம் பொலிப்ப அவள்***
***ஆடுவழி ஆடுவழி அகலேன் மன்னே" (அகம்.49:16–18)***

**பூக்கொய்தலும் புணரியாடலும்**

*மகட்போக்கிய செவிலித்தாய் புலம்பிக் கூறுவதாக மதுரை ஆசிரியன் கோடங்கொற்றன் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் சங்க காலப் பெண்களின் பூக்கொய்தல் விளையாட்டும், புணரியாடல் விளையாட்டும் கூறப்பெற்றுள்ளன.*

***"கழிய காவி குற்றும் கடல்***
***வெண்தலைப் புணரி ஆடியும் நன்றே***
***பிரிவுஇல் ஆயம் உரியது ஒன்று அயர***
***இல்வழிப் படுதலும் ஒல்லாள் அவ்வழிப்***
***பரல்பாற் படுப்பர் சென்றனள் மாதோ***

*செல்மழை தவழும் சென்னி*
*விண்உயர் பிறங்கல் விலங்குமலை நாடே"        (குறுந்.144)*

'புணரி ஆடுதல்' விளையாட்டினால் தலைவி நெய்தல் நிலத்தவள் என அறியலாம். அவள் குறிஞ்சி நிலத் தலைவனுடன் மலைநாட்டிற்கு உடன்போக்குச் செல்கின்றாள்.

**புனல் விளையாட்டு**

பொருள் விரும்பும் உள்ளத்திற்குத் தலைவன் கூறுவதாகச் சிறைக்குடி ஆந்தையார் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைப் பாடலில் உவமை வாயிலாகப் பெண்கள் புனல் விளையாட்டில் தெப்பத்தைப் பயன்படுத்திய செய்தி கூறப்பெற்றுள்ளது.

*"பெரும்பெயல் விடியல் விரித்து விட்டன்ன*
*நறுந்தண் ணியளே நல்மா மேனி*
*புனற்புணை யன்ன சாய்இறைப் பணைத்தோள்" (குறுந்.168:3–5)*

தலைவன் தலைவியின் நலத்தை பெருமழை பெய்யும் விடியற்காலத்தில் குடியை விரித்துவிட்டாற் போன்ற நறுமையும் குளிர்ச்சியும் உடையவள்; புனல் விளையாட்டிற்கு இட்ட தெப்பத்தைப் போல நுண்ணிய இறையினை உடைய மூங்கிலின் மென்மையைப் போன்ற தோள்களை உடையவள் எனத் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

**மணல் வீடுகட்டி விளையாடல்**

தலைவியை உடன்போக்கில் அழைத்துச் செல்லும் தலைவன் தாம் செல்லும் வழியெங்கும் பொழில்களும் ஊர்களும் உள்ளன; எனவே நீ விளையாடிக்கொண்டு வருந்தாமல் வருக எனத் தலைவியிடம் கூறுவதாகப் பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் தலைவி மணல்வீடு கட்டி விளையாடும் செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*"நிழல்காண் தோறும் நெடிய வைஇ*
*மணல்காண் தோறும் வண்டல் தைஇ*
*வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே"        (நற்.9:7–9)*

நிழலைக் கண்டபோது நெடும்பொழுது தங்கியும், மணல் பரப்பைக் காணும் இடங்களில் மணல்வீடு கட்டிச் சமைத்து விளையாடியும் வருத்தத்தைப் போக்கி உடன்வருமாறு தலைவியிடம் தலைவன் கூறுகின்றான்.

**வட்டாடுதல் விளையாட்டு**

*இளங்கீரனார் இயற்றியுள்ள நற்றிணையில் பாலைத்திணைப் பாடலில் சிறுவர்களின் 'வட்டாடுதல்' என்னும் விளையாட்டுப் பற்றிக் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:*

***"ஈன்பருந்து உயவும் வான்பொரு நெடுஞ்சினைப்***
***பொரியரை வேம்பின் புள்ளிநீழல்***
***கட்டளை அன்ன வட்டரங் கமைத்து***
***கல்லாச் சிறார் நெல்லிவட் டாடும்***
***வில்லேர் உழவர் வெம்முனைச் சீறூர்"*** ***(நற்.3:1–5)***

வேப்பமர நிழலில் வேறு தொழில் ஏதும் கற்றியாத சிறுவர்கள் பொன்னை உரைத்து மாற்றுப் பார்க்கும் கல்லைப் போன்ற ஆடுகளத்தைக் கீறிக்கொண்டு நெல்லிக்காய்களை வட்டாகக் கொண்டு வட்டு விளையாடுவர் என இப்பாடலடிகள் கூறுவதால் சங்க காலத்தில் சிறுவர்கள் 'வட்டாடுதல்' என்னும் விளையாட்டினை விளையாடினர் என அறியலாம்.

**தம்பலப்பூச்சிகளைப் பிடித்து விளையாடுதல்**

*உடன்போக்குச் சென்ற தலைவன் இடைச்சுரத்தில் தலைவியிடம் கூறுவதாக மதுரை மருதன் இளநாகனார் இயற்றிய நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் தலைவி தம்பலப் பூச்சிகளைப் பிடித்து விளையாடும் செய்தி கூறப்பெற்றுள்ளது.*

***"வினையமை பாவையின் இயலி நுந்தை***
***மனைவரை இறந்து வந்தனை; யாயின்***
***தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி***
***அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த***
***கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டும்***
***நீவிளை யாடுச் சிறிதே யானே"*** ***(நற்.362:1–6)***

*இயந்திரப் பாவையை இயக்குவான் இயக்க இயங்குதல் போலத் தலைவி தலைவன் சொல்லை நம்பி உடன்போக்கில் வந்தாள். கார்காலத்தின் முதற்பெயலில் கானகமெங்கும் தம்பலப் பூச்சிகள் பறந்தன. தலைவி நனிபேதையள் ஆதலின் நடந்த வருத்தம் நீங்கத் தலைவன் அவளிடம் தம்பலப் பூச்சிகளைப் பிடித்து விளையாடுமாறு கூறுகின்றான்.*

*தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்ற நிலையில் அவளை நினைத்து நற்றாய் புலம்புவதாக நற்றிணையில் அமைந்துள்ள பாலைத்திணைப்*

பாடலில் தலைவி விளையாடிய நீலமணி போன்ற பூவைக் கொண்ட நொச்சி மரத்தடியும், வீட்டுத் திண்ணையும் கூறப்பெற்றுள்ளன. அப்பாடலடிகள் வருமாறு:

*"மணிவாழ் பாவை நடைகற் றன்னஎன்*
*அணியியற் குறுமகள் ஆடிய*
*மணிஏர் நொச்சியும் நெற்றியும் கண்டே" (நற்.184:7–9)*

**புதல்வனின் விளையாட்டு**

தலைவனின் பொருட்பிரிவைக் குறிப்பாக அறிந்து ஆற்றாமை கொண்ட தலைவிக்குத் தலைவன் கூறுவதாக நற்றிணையில் அமைந்துள்ள பாலைத்திணைப் பாடலில் புதல்வன் விளையாட்டுக் கற்கும் செய்தி கூறப்பெற்றுள்ளது.

*"அறநிலை பெற்றோர் அனையேன்; அதன்தலைப்*
*பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல் கற்றனன்*
*வினையும் வேறுபுலத்து இலனே; நினையின்*
*யாதனின் பிரிவாம் மடந்தை*
*காதல் தானுங் கடலினும் பெரிதே" (நற்.166:6–10)*

தலைவன் தான் நிலைபெற்றோர் நிலையில் இருப்பதாகவும், பொன்னாலாகிய தொடியணிந்த புதல்வன் விளையாட்டயர்தல் கற்றறிவதாலும், அதனைக் கண்டு மகிழும் தனக்கு பிறிதோர் இடம் சென்று செய்யும் செயல் இல்லை; தன்னுடைய காதல் கடலினும் பெரிது எனத் தலைவியிடம் கூறுகின்றான்.

'பொய்தல்' என்னும் சொல்லாட்சி விளையாட்டைக் குறிக்கும்.

**ஆவணமாக்கள்**

சங்க காலத்தில் மக்கள் ஊராண்மை, நாட்டாண்மைக் கழகங்களுக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கத் தகுதியுடையோர் பெயர்களை ஓலையில் எழுதி அவற்றைக் குடத்தில் இடுவர். பின்னர் அக்குடத்தின் வாயைத் துணியால் போர்த்திக் கயிற்றால் கட்டி அதன்மீது அரசின் இலச்சினையைப் பொறிப்பர். பின்னர் ஆவணமாக்கள் பலர் முன்னர் குடத்தின் மேலிட்ட இலச்சினையைச் சரிபார்த்து நீக்கி, குடத்தின் உள்ளிருக்கும் ஓலைகளை எடுத்துத் தேர்ந்தெடுக்கப்பட்டோர் இவரென முடிவு செய்வர். அக்காலத்துத் தேர்தல் முறையை மருதன் இளநாகனார் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் பின்வருமாறு சுட்டிக்காட்டியுள்ளார்.

*"இடிஉமிழ் வானம் நீங்கி யாங்கணும்*
*குடிபதிப் பெயர்ந்த கட்டுடை முதுபாழ்*
*கயிறுபிணிக் குழீசி ஓலை கொண்மார்*
*பொறிகண்டு அழிக்கும் ஆவண மாக்களின்*
*உயர்திறம் பெயர"* (அகம்.77:5–9)

தலைவன் கடந்து செல்லும் பாலை நிலைமானது வெப்பமுற்று இடிகளை உமிழ்கின்ற வானம் மழை பெய்யாது நீங்குவதால் எவ்விடத்தும் பாலையில் குடிகள் தத்தம் ஊர்களை விட்டுப் பெயர்ந்து வேற்றிடங்களுக்குச் செல்வதற்குக் காரணமாகப் பலரும் சுட்டிக்கூறும் பழமையான பாழிடங்களைக் கொண்டது. கயிற்றால் கட்டப்பட்டுள்ள குடத்திலுள்ள ஓலைகளை ஆவணமாக்கள் அக்குடத்தின் மேலிட்ட இலச்சினையை ஆராய்ந்து சரிபார்த்துப் பின்னர் அக்குடத்தினின்றும் வெளியே எடுப்பது போலப் பாலை நிலத்தில் கொல்லப்பட்டோரின் வயிற்றிலிருந்து பருந்து குடலை வெளியே எடுத்துப்போடும் எனக் கூறப்பட்டுள்ளது. இக்குடவோலை முறைத் தேர்தலே தமிழ்நாட்டில் சோழ மன்னர்கள் ஆட்சியிலும் பின்பற்றப்பெற்றது.

**அரசாட்சி**

எயினந்தையாரின் இயற்றியுள்ள நற்றிணைப் பாடலில் மன்னனின் செங்கோலாட்சி மக்களைப் பாதுகாப்பதாக இருக்க வேண்டும் என்னும் செய்தி உவமை வாயிலாகக் கூறப்பெற்றுள்ளது. இப்பாடல் தோழி கூற்றில் அமைந்துள்ளது.

*".... .... .... .... தொலைச்சி*
*ஆர்ந்தன ஒழிந்த மிச்சில் சேய்நாட்டு*
*அருஞ்சுரம் செல்வோர்க்கு வல்சி ஆகும்*
*வெம்மை ஆர்இடை இறத்தல் நுமக்கே*
*மெய்ம்மலி உவகை ஆகின்று, இவட்கே*
*அஞ்ச லென்ற இறைகை விட்டென*
*பைங்கண் யானை வேந்துபுறத்து இறுத்தலின்*
*களையுநர்க் காணாது கலங்கிய உடைமதில்*
*ஓரெயில் மன்னன் போல*
*அழிவு வந்தன்றால் ஒழிதல் கேட்டே"* (நற்.43:3–12)

பாலையின் அருஞ்சுரம் செல்வதற்கு அரியது. அவ்வழிச் செல்வோர் விலங்குகள் கொன்று தின்ற மிச்சிலை உணவாக உட்கொண்டு துன்பப்படுவர். இவ்வழியில் தலைவன் செல்ல வேண்டும் என்பதைக் கேட்ட தலைவி

*துன்பமடைந்தாள். மக்களைக் காப்பாற்றும் கடமையையுடைய வேந்தனும் 'கைவிடேன்' என்றவன் கைவிட்டுவிட்டான். பகையரசனும் யானைப்படையோடு வந்து நாட்டினை முற்றுகையிட்டான். மதிலும் பாதுகாப்பை இழந்து சிதைந்தது. இந்நிலையில் தலைவி இருக்கின்றாள். மக்களைப் பாதுகாக்க வேண்டிய மன்னன் கைவிட்டதைப் போல தலைவன் தலைவியைக் கைவிட்டான். பகைவேந்தன் யானைப் படையோடு வந்ததைப் போல மாலைக்காலத்தே தலைவிக்குப் பிரிவு வந்தது. ஒரே மதில் உடைந்து நின்றதைப் போல தலைவியின் பாதுகாப்பு அரணாகிய நாணமும் உடைந்து நின்றது. இவ்வாறு இப்பாடலடிகளில் அரசனின் அரசாட்சி மக்களைப் பாதுகாப்பதாக இருக்க வேண்டும் என்னும் சிந்தனை உவமை வாயிலாகக் கூறப்பெற்றிருப்பதை அறியலாம்.*

**மன்னன் குடிகளைத் துன்புறுத்தாமை**

*தலைவனது பொருட்பிரிவில் ஆற்றாளாகிய தலைவி வன்பொறை எதிரழிந்து கூறுவதாகக் கணிபுன் குன்றனாரின் நற்றிணைப் பாலைத்திணைப் பாடலில் நாட்டை ஆளும் மன்னவன் குடிமக்களைத் துன்புறுத்தி வரி கொள்ளக்கூடாது என்னும் செய்தி கூறப்பெற்றுள்ளது.*

***"மரஞ்சாம் மருந்துங் கொள்ளார் மாந்தர்***
***உரம்சாச் செய்யார் உயர்தவம்; வளம்கெடப்***
***பொன்னுங் கொள்ளார் மன்னர் நன்னுதல்" (நற்.226:1–3)***

*மாந்தர் மருந்து தந்துதவும் மரத்திலிருந்து மருந்து எடுக்கும்போது அம்மரம் பட்டுப்போகுமாறு முழுவதும் கொள்ளமாட்டார்கள். ஏனெனில் அம்மரம் பின்னரும் பயன்பட வேண்டும். தவம் செய்யும் மாந்தர்களும் தன் வலிமை முற்றும் அழியும் அளவிற்குத் தவத்தைச் செய்யமாட்டார்கள். ஏனெனில் அவர்கள் தவத்தின் பயனை நுகர்தல் வேண்டும். நாட்டை ஆளும் மன்னர்களும் தன்கீழ் வாழும் குடிமக்களின் வளமையெல்லாம் நீங்குமாறு அவர்களிடம் வரி வாங்கமாட்டார்கள். ஏனெனில் மக்களின் நலனுக்காகவே மன்னராட்சியாகும்.*

**முறை பிறழ்ந்த மன்னவன்**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் உவமை வாயிலாக முறைபிறழ்ந்த மன்னவனின் ஆட்சியில் வாழும் குடிமக்கள் துன்புறுவர் என்னும் செய்தி கூறப்பெற்றுள்ளது.*

*"பொறைதளர் கொம்பின்மேல் சிதரினம் இறைகொள*
*நிறைதளரா தவர்தீமை மறைப்பென்மன்; மறைப்பவும்*
*முறைதளர்ந்த மன்னவன் கீழ்க்குடிபோலக் கலங்குபு*
*பொறைதளர்பு பனிவாரும் கண்ஆயின் எவன்செய்கோ?"*
*(கலி.34:12–15)*

இப்பாடலடிகளில் உவமை வாயிலாக முறை தளர்ந்த மன்னவன் ஆட்சியின் கீழ் வாழும் குடிமக்கள் துன்புறும் செய்தி கூறப்பெற்றுள்ளது. தலைவன் முறை தவறிய மன்னவனாகவும், தலைவி அம்மன்னனின் ஆட்சியின்கீழ் குடிமகளாகவும் உவமைவழிக் கூறப்பெற்றுள்ளது.

**அரசியலறம்**

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் உவமைவாயிலாக அரசியலறம் கூறப்பெற்றுள்ளது.

*"வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்*
*அலவுற்றுக் குடிகூவ ஆறின்றிப் பொருள்வெஃகிக்*
*கொலைஅஞ்சா வினைவரால் கோல்கோடி யவன்நிழல்*
*உலகுபோல் உலறிய உயர்மர வெஞ்சுரம்" (கலி.10:4–7)*

கொடுங்கோல் மன்னவனின் ஆட்சியில் குடிகள் பெரிதும் வருந்துவர். அரசு வினைஞர்களாகிய அரசுப் பணியாளர்கள் நல்லவர்களாகவும் நல்ல மனம் படைத்தவர்களாகவும் இருக்க வேண்டும். அவர்கள் மக்களைத் துன்புறுத்தி பொருள் பெற்றால் மன்னவன் கோலாகிய செங்கோலாட்சி அழிதல் உறுதி என இப்பாடலடிகளில் அரசியலறம் பேசப்பெற்றுள்ளது.

**நறவுமகிழ் இருக்கை**

தலைவனின் பொருட்பிரிவில் ஆற்றாமையால் வருந்திய தலைவியை ஆற்றுவிக்கும் தோழியிடம் தலைவி கூறுவதாக மாமூலனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணையில் பாடலில் 'நறவுமகிழ் இருக்கை' குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*"நுணங்குகண் சிறுகோல் வணங்குஇறை மகளிரொ*
*டகவுநர்ப் புரந்த அன்பின் கழல்கொடி*
*நறவுமகிழ் இருக்கை நன்னன் வேண்மான்*
*வயலை வேலி வியலூர் அன்னநின்" (அகம்.97:10–13)*

விறலியர் வளைந்த முன்கையினையும், பெரிய மூங்கில்களைக் கொண்ட குறுங்காட்டில் ஆராய்ந்து அறுத்தெடுத்த சிறிய கணுக்களைக் கொண்ட நுண்ணிய கோலினையும் உடையவர்கள். அவ்விறலியரோடு பாணர்களைப் பாதுகாக்கும் அன்பினையும் வீரக்கழலினையும் தோள் வளையினையும் கள்ளுண்டு களித்திருக்கும் இருக்கைகளையும் கொண்டவன் நன்னன் வேண்மான் ஆவான் எனக் கூறபபட்டுள்ளது. 'அகவுநர்' என்பது பாணரைக் குறிக்கும். 'நறவுமகிழ் இருக்கை' என்பது மன்னன் பாணர்களோடு கூடி மகிழ்ந்திருக்கும் இருக்கையாகும். அது அத்தாணி மண்டபத்தில் அமைந்திருந்தது.

**அந்தணர் வாழ்க்கை**

பாலைத்திணைப் பாடல்களில் அந்தணர் வாழ்க்கை சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது. பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பாலைக்கலிப் பாடலில் அந்தணர்கள் கமண்டலம், குடை, முக்கோல் ஆகியனவற்றைக் கொண்டிருக்கும் செய்தி கூறப்பெற்றுள்ளது. இப்பாடலில் முக்கோல் பகவராகிய அந்தணர் தலைவனும் தலைவியும் பாலை வழியில் உடன்போக்குச் செல்லுதல் அறமெனச் செவிலித்தாயிடம் இடைச்சுரத்தில் தெளிவுபடுத்துகின்றனர்.

***"எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்***
***உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்***
***நெறிப்படச் சுவல்அசைஇ வேறுஓரா நெஞ்சத்துக்***
***குறிப்பேவல் செயல்மாலைக் கொளைநடை அந்தணீர்***
***வெவ்விடைச் செலல்மாலை ஒழுகத்தீர் இவ்இடை" (கலி.9:1–5)***

எறித்தலைச் செய்கின்ற ஞாயிற்றின் கதிர்களைத் தாங்குவதற்காக ஏந்திய குடையின் நிழலில் உறியில் வைத்த கமண்டலத்தையும் பெருமை சான்ற மூக்கோலையும் முறைப்படத் தோளிலே சுமந்து மெய்ப்பொருளை அன்றிப் பிறவற்றைச் சிந்திக்காதவர்; ஐம்புலன்களையும் அடக்கி ஏவல் செய்யும் கொள்கையினர்; வெவ்விய காட்டிடத்தே செல்லும் ஒழுக்கத்தை உடையவர் என இப்பாடலடிகளில் அந்தணர் தோற்றமும் வாழ்க்கையும் கூறப்பெற்றுள்ளன. தொல்காப்பியர் பொருளதிகாரம் மரபியலில்,

***"நூலே கரகம் முக்கோல் மணையே***
***ஆயும் காலை அந்தணர்க்கு உரிய"*** [29]

என அந்தணர் மரபினைக் குறித்துள்ளார். முப்புரிநூலும், கரகமாகிய கமண்டலமும், முக்கோல் தண்டும், மனை இருக்கையும் அந்தணர்க்கு உரியன

எனத் தொல்காப்பியம் கூறுவதை மேலே காட்டிய பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பாலைக்கலிப் பாடலும் சுட்டிக்காட்டுவது நோக்கத்தக்கது.

ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாலைப் பாடலிலும் அந்தணர் வாழ்க்கை மரபு சுட்டிக்காட்டப் பெற்றுள்ளது.

*"அறம்புரி யருமறை நவின்ற நாவின்*
*றிறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்*
*றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே" (ஐங்.387:1–3)*

இப்பாடலடிகளில் அறத்தைக் கூறும் அரிய மறைநூல்களைப் பலமுறை ஓதிப்பயின்ற நாவினையும், அது கற்பித்த வாழ்வியல் ஒழுக்கங்களைப் பின்பற்றி மேற்கொள்ளத்தக்க விரத வாழ்க்கையினையும் கொண்ட அந்தணச் சான்றோர் என அந்தணர் வாழ்க்கை சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது. 'அருமறை' என்பது வேதங்களையும் 'திறம்புரி கொள்கை' என்பது விரத ஒழுக்கங்களுடன் கூடிய அந்தணர் வாழ்க்கை முறையையும் குறிக்கும்.

சங்க காலத்தில் தமிழ்நாட்டில் நான்மறை வல்ல அந்தணர் குடையும் கரகமும் முக்கோலும் தாங்கி ஊர்விட்டு ஊர் செல்லுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இத்தகைய அந்தணர் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டனர் என்பதற்குச் சங்கப் பாடல்களில் சான்றுகள் உள்ளன. பாலைவழியில் எதிர்ப்பட்ட அந்தணர்களை, உடன்போன தன்மகளைப் பற்றி வினவும் செவிலித்தாயைக் கலித்தொகையில் உள்ள 'எறித்தகு கதிர்தாங்கி' எனத் தொடங்கும் பாடல் அறிமுகப்படுத்துகின்றது. அத்தகைய அந்தணர்களை எதிர்கொண்ட உடன்போக்குச் செல்லும் தலைவி அந்தணர்களிடம் பேசுவதாக ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாடல் அமைந்துள்ளது.

*"சேட்புல முன்னிய அசைநடை யந்தணிர்*
*நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்*
*யாய்நயந் தெடுத்த ஆய்நலங் கவின*
*வாரிடை இறந்தன ளென்மின்*
*நேரிறை முன்கையென் னாயத் தோர்க்கே" (ஐங்.384)*

இப்பாடலின் தலைவி தன் பேரழகினை நுகரும் முழு உரிமையும் தன் காதலனுக்கே உரியது என்கின்றாள். உடன்போக்கிற்குப் பின்னர் திருமணம் நிகழுமாதலின் அத்திருமணத்தால் தன் அழகு மேலும் மாட்சிமைப்படும் என்கின்றாள். தலைவி அந்தணர்களிடம் நற்றாய்க்கும் செவிலிக்கும் கூறாமல், தோழியர்களிடம் கூறுமாறு சொன்னதற்குக் காரணம் நற்றாயும் செவிலித்தாயும்

*தன்னை இற்செறிப்புச் செய்து துன்புறுத்தி இடையூறு செய்தமையாகும். ஆதலால் தலைவி முதுமகளிராகிய அவர்களை வெறுத்துத் தம் தோழியரிடம் கூறுமாறு அந்தணர்களிடம் வேண்டுகின்றாள்.*

**அந்தணர் இல்லம்**

*ஓரில்பிச்சையாரின் குறுந்தொகைப் பாலைப் பாடலில் அந்தணர் இல்லத்தின் தூய்மையும் தனித்தன்மையும் கூறப்பெற்றுள்ளன.*

***"ஆசுஇல் தெருவின் நாயில் வியன்கடைச்***
***செந்நெல் அமலை வெண்மை வெள்இழுது***
***ஓர்இல் பிச்சை ஆர மாந்தி***
***அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்***
***சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே"*** ***(குறுந்.277:1–5)***

*இப்பாடல் தோழி கூற்றில் அமைந்துள்ளது. தோழி அறிவராகிய அந்தணரிடம் பொய், கொலை, களவு, கள், காமமாகிய குற்றங்கள் கடிந்தார் வாழும் தெருவில் நாயில்லாத அகன்ற வாயிலில் செந்நெல் சோற்றுத்திரளை நரைஎருமையின் வெண்ணெயுடன் எட்டு இல்லங்களில் சென்று எண்கவளத்தைப் பிச்சையாகப் பெறாமல் எம்முடைய ஒரு வீட்டில் அப்பிச்சை முழுவதும், உயிர் உடலோடு பொருந்தி இருப்பதாக உண்டு பனிக்காலத்திற்கேற்ற விரும்பத்தக்க வெப்பத்தோடு கூடிய மெல்லிய நீரை மூடியுடன் கூடிய காப்பினை உடைய கமண்டலத்தில் பெற்று வாழ்வாயாக என்கின்றாள்.*

*'அறிவர்' என்பவர் துறவுள்ளம் கொண்ட அந்தணர் ஆவர். வெயில், பனி, மழை ஆகிய முக்காலத்தின் இயல்புகளை அறிந்து கூறுபவர். தலைமக்கட்கு நல்லவை கூறி அல்லவை கடிதல் அவர்களது நோக்கமாகும். கணவனும் மனைவியும் அறிவரது ஏவல்வழி நிற்பதால் அவர்கள் இடித்துரைத்து அவர்களை நல்வழிப்படுத்துவர். அறிவர் தலைவனுக்கு உசாத்துணையாக நிற்பர். எனவே தோழி அறிவரிடம் தலைவன் குறித்த பருவமும் அவன் வருகையும் பற்றி வினவி அறிந்தாள். பருவ வருகையை விடத் தலைவன் வருகையையே அவள் பெரிதும் எதிர்நோக்குகின்றாள். தலைவன் வந்தவுடன் அவனுடன் சேர்ந்து துறவோர்க்கு எதிர்தலாகிய விருந்தோம்பலைச் செய்வதாகத் தோழி கூறுகின்றாள். பருவத்தையும் தலைவன் வருகையையும் கூறிய அறிவர் வாய்க்குச் சோறும் நீரும் தந்து விருந்தோம்பி நன்றியைப் புலப்படுத்துவதாகக் கூறுகின்றாள்.*

*'ஆசில் தெரு' என்பது அகம் தூய்மையுடையார் வாழும் தெரு ஆகும். 'நாயில் வியன் கடை' என்பதால் புறத்தூய்மையான இல்லம் என அறியலாம்.*

*அந்தணர் இல்லங்களில் நாய் குரைக்கும் ஒலி கேட்காது; மறையொலியே கேட்கும். பிச்சை பெறுபவர் கடைத்தலையில் உள்ள பெண் வழங்கக் கையில் உணவு ஏந்தி உண்பர். சோறும் நீருமன்றிப் பிறிது வேண்டாததே துறவு வாழ்க்கையாகும்.*

*எட்டு இல்லங்களில் அறிவர் பெறும் பிச்சை உணவைத் தன் ஓரில்லில் முழுமையாகத் தருவதாக இப்பாடலின் தோழி கூறுகின்றாள். இவ்வாறு பாடிய சிறப்பால் இப்பாடலாசிரியர் ஓரில் பிச்சையார் என்னும் சிறப்பைப் பெற்றுள்ளார்.*

**பயன்படு பொருட்கள்**

*பயன்படு பொருட்கள், புழங்கு பொருட்கள், பழகுபொருட்கள் குறித்த செய்திகளும் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களில் ஆங்காங்கே சுட்டிக்காட்டப் பெற்றுள்ளன.*

**நெற்கூடு**

*சாத்தந்தையார் இயற்றிய நற்றிணைப் பாடலில் தலைவியினது தாய் வீட்டில் இருக்கும் 'நெற்கூடு' என்னும் 'நெற்குதிர்' சுட்டிக்காட்டப்பெற்றுள்ளது. நெற்குதிர் நிறைய நெல்லைக் கொட்டி வைத்துள்ளனர். நெல்லைச் சேமித்துப் பாதுகாக்கும் பொருளாகச் சாத்தந்தையார் 'நெற்கூடு' என்னும் நெற்குதிரைச் சுட்டிக்காட்டி யுள்ளார்:*

***"விண்டுப் புரையும் புணர்நிலை நெற்கூட்டுப்***
***பிண்ட நெல்லின் தாய்மனை யொழியச்" (நற்.26:3–4)***

**சுடுமண் தசும்பு**

*நற்றிணையின் பாலைத்திணைப் பாடலில் மண்ணால் செய்து சுடப்பட்ட 'தசும்பு' என்னும் 'தயிர்த்தாழி' சங்ககால மக்களின் புழங்கு பொருளாக இருந்த செய்தி கூறப்பெற்றுள்ளது.*

***"சுடுமண் தசும்பின் மத்தந்தின்ற***
***பிறவா வெண்ணெய் உருப்பிடந் தன்ன" (நற்.84:6–7)***

*மண்ணால் செய்து சுடப்பட்ட தயிர்த்தாழியில் மத்தால் கலக்கிட வெப்பம் வெண்ணெயைச் சிதைத்தது போல உப்புப்பூத்த களர்நிலத்தின் வழியே தலைவியைப் பிரிந்து பொருவயிற் பிரிவில் தலைவன் சென்றான் என்னும் செய்தி உவமையாகக் கூறப்பெற்றுள்ளது.*

**நாரால் செய்யப்பட்ட ஊசல்**

*நற்றிணையில் அமைந்த பாலைத்திணைப் பாடலில் நாரால் செய்யப்பட்ட ஊசலின் பயன்பாடு கூறப்பெற்றுள்ளது. வேனில் காலத்தில் இத்தி மரத்தின் நெடிய விழுது நிலத்தில் தோயாமல் தொங்குவதற்கு அதன்மீது நாரினால் பிணித்த ஊசலைப் போல மேல்காற்று வீசும்போதெல்லாம் அவ்விழுது ஆடும். அவ்விழுது காற்று வீசும்போதெல்லாம் அம்மரத்தின் கீழே தங்கும் பெண்யானை மீது புரளும். இத்தகைய பாலைநிலத்தின் வழியே தலைவன் பொருள்வயிற் பிரிவில் சென்றான் எனக் கூறப்பட்டுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:*

***"வேலின் இற்றித் தோயா நெடுவீழ்***
***வழிநாள் ஊசலில் கோடை தூக்குதொறும்***
***துஞ்சுபிடி வருடும் அத்தம்***
***வல்லை யாகுதல் ஒல்லுமோ நினக்கே?" (நற்.162:9–12)***

*இதிலிருந்து நாரால் செய்யப்பட்ட ஊசல் சங்ககால மக்களின் வாழ்க்கையின் பயன்பாட்டிலிருந்ததை அறியலாம்.*

**பனையோலையால் செய்யப்பட்ட குடை**

*பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றிய பாலைக்கலிப் பாடலில் பனையோலையால் செய்யப்பட்ட பனங்குடைகளின் பயன்பாடு குறித்த செய்தி கூறப்பெற்றுள்ளது. இது குறித்த பாடலடிகள் வருமாறு:*

***"உண்ணலும் உண்ணேன்; வாழலும் வாழேன்***
***தோள்நலம் உண்டு துறக்கப் பட்டோர்***
***வேள்நீ ருண்ட குடைஓ ரன்னர்" (கலி.23:7–9)***

*பிரிவுணர்த்திய தலைவனிடம் தன்னையும் உடனழைத்துச் செல்லுமாறு தலைவி வேண்டினாள். அதற்கு உடன்பட மறுத்த தலைவனிடம் தலைவி, 'நீ பிரிந்து சென்றால் உண்ணவும் மாட்டேன்; உயிர் வாழவும் செய்யேன். கணவனால் தோள் நலத்தை நுகர்ந்து அவனால் கைவிடப்பெற்ற பெண்கள், நீர் வேட்கையாலே தண்ணீரைக் கோலி, நீரைக் குடித்த பின்னர் தூக்கியெறிப்பட்ட எச்சிலால் பயன்படாத பனங்குடைகளை ஒத்தவராவர் மனைவியராகிய பெண்கள்' எனக் கூறுகின்றாள். இதிலிருந்து பனையோலையால் முடையப்பெற்ற பனங்குடைகள் சங்ககால மக்களின் பயன்பாட்டில் இருந்தமையை அறியலாம்.*

மகட்போக்கிய தாய் கூறுவதாகக் கயமனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் சங்ககால மக்களின் வாழ்க்கையின் பயன்பாட்டில் புழங்கு பொருட்களாக இருந்த சாடி, பானை, பனங்குடை ஆகியன குறிக்கப்பெற்றுள்ளன.

***"ஓங்குநிலைத் தாழி மல்கச் சார்த்தி***
***குடையடை நீரின் மடையினள் எடுத்த" (அகம்.275:1–2)***

என்ற இப்பாடலடிகளில் குறித்த ஓங்குநிலைத் தாழி என்பது சாடி, பானை ஆகியனவற்றைக் குறிக்கும். இவை பெரும்பாலும் மண்ணால் செய்து சுடப்பெற்றவையாகும். 'குடை அடை' என்பது பனையோலையால் செய்யப்பட்ட குடையாகும். இக்காலத்தில் நீர் மொள்ளும் செம்பு போல சங்க காலத்தில் மக்கள் பனங்குடையைப் பயன்படுத்தினர் என்பதை அறியலாம்.

**சோறுபொதி வெண்குடை**

சங்க காலத்தில் வணிகர் கூட்டத்தார், தொலைதூரப் பயணங்களுக்கு வெண்மையான பனையோலையால் முடையப்பட்ட ஓலைப் பெட்டியில் சோறு கட்டிக்கொண்டு சென்றுள்ளனர். இதனை அகநானூற்றில் மதுரை மருதன் இளநாகனார் இயற்றியுள்ள பாடலால் அறியலாம். அப்பாடலடிகள் வருமாறு:

***"உறுகண் மழவர் உருள்கீண் டிட்ட***
***ஆறுசெல் மாக்கள் சோறுபொதி வெண்குடைக்***
***கணைவிசைக் கடுவளி யெடுத்தலின் துணைசெத்து" (அகம்.121:12–13)***

வழிப்போவார்க்குத் துன்பத்தைக் கொடுக்கும் மழவரது வண்டிச்சக்கரம் கிழித்து ஏற்படுத்திய கவடான பாதையில் வணிகர் கூட்டத்தார் செல்வர். அவர்கள் தாம் சோறு கட்டிக்கொண்டு வந்து உண்டு எறிந்த வெண்மையான பனையோலையால் முடையப்பட்ட ஓலைப்பெட்டியினை அம்பு போன்ற வேகத்தையுடைய சூறாவளிக்காற்று வீசித் தூக்கி எறிந்தது எனக் கூறப்பட்டுள்ளது.

**தயிர் கடையும் மத்து**

சங்க காலத்தில் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பதற்கு மத்தினைப் பயன்படுத்தியுள்ளனர். இந்தத் தயிர்கடையும் மத்தின் பயன்பாடு குறித்த செய்தி மாமூலனார் இயற்றிய அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*"…. …. …. …. மழவர்*
*வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறல்*
*தீப்படு சிறுகோல் வில்லொடு பற்றி*
*நுரைதெரி மத்தம் கொளீஇ நிரைப்புறத்*
*தடிபுதை தெரிதோல் பறைய வேகிக்" (அகம்.101:5–9)*

மழவர்கள் ஆட்டுக்கிடாயின் கொம்பினைப் போன்று சுற்றிச் சுருண்ட பிடரியை மறைக்கும் தலைமயிரினையும் சிவந்த கண்களையும் உடையவர்கள்; அவர்கள் தம் வாயினின்று எழும் இருமலாகிய பகையைத் தீர்க்கும் மருந்தாகிய புற்றுமண்ணை வாயில் அடக்கிக்கொள்வர். மிக்க வலிமையுடைய நெருப்பினை உமிழும் சிறிய அம்பினை வில்லோடு கையில் பிடித்துக்கொள்வர். வெண்ணெய்யை வெளிக்கொணரும் தயிர் கடையும் மத்தினைக் கவர்ந்து கொண்டு, ஆனிரைகள் உள்ள இடத்திற்குத் தம் காலடிகளை மறைக்கும் செருப்புக்கள் தேயச் செல்வர். இவற்றிலிருந்து இருமல் நோய்க்குப் புற்றுமண் மருந்தாகப் பயன்பட்டதையும், தயிர்கடையும் மத்தினையும் குறித்து அறிய முடிகின்றன.

**அடுப்பு**

காட்டுவழியில் செல்லும் உமணர்கள் கல் அடுப்பினைக் கூட்டிச் சமைத்து உண்ட செய்தி குடவாயிற்கீரத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில் கூறப்பெற்றுள்ளது.

*"…. …. …. …. வெறிகொள*
*உமண்சாத் திறந்த ஒழிகல் அடுப்பில்*
*நோன்சிலை மழவர் ஊன்புழுக் கயரும்" (அகம்.119:7–9)*

பாலை நிலத்தின் வழியே செல்லும் உப்புவணிகர் கூட்டம் சமைத்து உண்டு கைவிட்டுச் சென்ற கல் அடுப்பில் வலிமையான வில்லையுடைய மழவர்கள் மணம் உண்டாக நன்கு புழுக்கிய இறைச்சியை விருப்பத்துடன் சமைத்து உண்பர் என்பதிலிருது சங்ககால மக்களாகிய உப்பு வணிகர்களும் மழவர்களும் சமைப்பதற்குக் கல்அடுப்பினைப் பயன்படுத்தினர் என்பதை அறியலாம்.

**மண்நீர்ச் சிறுகுளம்**

மதுரை மருதன் இளநாகனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைப் பாடலில் சங்ககால மக்கள் நீராடுவதற்குக் குடிப்பதற்குப் பயன்படாத மண் கலந்த கலங்கிய நீரைப் பயன்படுத்திய செய்தி கூறப்பெற்றுள்ளது. குளிக்கும் சிறிய குளத்தில் தோண்டப்பட்ட சிறிய குழியில் மண் கலந்த கலங்கிய நீர் இருந்தது. பாலை வழியில் கோடை காலத்தில் சுட்டெரிக்கும் வெப்பத்தின் காரணமாகச்

சிறு குளங்களில் நீர் வறண்டது. எனவே மக்கள் அக்குளங்களில் சிறிய குழிகளைத் தோண்டி அதில் ஏறிய மண் கலந்த கலங்கிய நீரைக் குளிப்பதற்குப் பயன்படுத்தியுள்ளனர். இது குறித்த பாடலடிகள் வருமாறு:

*“.... .... .... .... கடுந்தெறல்*
*வேனில் நீடிய வானுயர் வழிநாள்*
*வறுமை கூரிய மண்ணீர்ச் சிறுகுளத்*
*தொடுகுழி மருங்கில் துவ்வாக் கலங்கல்”* *(அகம்.121:1–4)*

**ஏணிமரம்**

உறையூர் மருத்துவன் தாமோதரனார் இயற்றிய அகநானூற்றுப் பாலைத்திணைப் இயற்றிய பாடலில் சங்ககால மக்களின் வாழ்க்கைப் பயன்பாட்டில் ஏணிமரம் இருந்த செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*“.... .... .... .... கள்வர்*
*பகைமிகு கவலைச் செல்நெறி காண்மார்*
*மிசைமரம் சேர்த்திய கவைமுறி யாஅத்து”* *(அகம்.257:12–14)*

ஆறலைக் கள்வராகிய பகைவர் மிகுந்த கவர்ந்த வழிகளில் செல்வோராகிய வழிப்போக்கர், பின்வரும் வழிப்போக்கர் தாம் செல்வதற்கு உரியவழி இதுவெனக் காண்பதற்கு அடையாளமாக முன் செல்வோர் யாமரத்தின் மேலே ஏணிமரத்தைச் சார்த்திவிட்டுச் செல்வர். இப்பாடலடிகளில் ‘ஏணிமரம்’, ‘மிசைமரம்’ எனக் கூறப்பெற்றுள்ளது. மேலே ஏறுவதற்குப் பயன்படும் மரமாதலின் ஏணிமரம் ‘மிசைமரம்’ எனக் கூறப்பெற்றுள்ளது.

**கிணறு**

காவன் முல்லைப்பூதனாரின் அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் பாடலில் கோவலர்கள் ‘கணிச்சி’ என்னும் குந்தாலியால் கிணறுகள் தோண்டிய செய்தி கூறப்பெற்றுள்ளது. அப்பாடலடிகள் வருமாறு:

*“பரல்மண் கவல முரண்நிலம் உடைத்த*
*வல்வாய்க் கணிச்சி கூழார் கோவலர்*
*ஊறா திட்ட உவலைக் கூவல்”* *(அகம்.21:21–23)*

இப்பாடலடிகளில் ‘முரண்நிலம்’ என்பது வன்நிலமாகிய பாலை நிலத்தைக் குறிக்கும். ‘கணிச்சி’ என்பது கிணறு தோண்டுவதற்குப் பயன்படும்

கூந்தாலியாகும். 'உவலைக்கூவல்' என்பது சிறுகிணறு ஆகும். பாலை நிலத்தில் கோவலர்கள் தோண்டிய உவலைக் கூவலில் நீர் ஊறவில்லை.

**கண்ஏணி**

சிறைக்குடி ஆந்தையார் இயற்றிய குறுந்தொகைப் பாலைப் பாடலில் சங்ககால மக்கள் மலைத்தேனாகிய பெருந்தேனினை எடுப்பதற்குப் பயன்படுத்திய 'மால்பு' என்னும் கண்ஏணியின் பயன்பாடு கூறப்பெற்றுள்ளது.

***"பெருந்தேன் கண்படு வரையில் முதுமால்பு***
***அறியாது ஏறிய மடவோன் போல***
***ஏமாந் தன்று இவ்உலகம்***
***நாம்உளேம் ஆகப் பிரியலன் தெளிமே"*** ***(குறுந்.273:5–9)***

தேன் கொள்ளும் வேட்கையினால் கண்ஏணியில் அதன் தாங்கும் வலிமையை அறியாமல் ஏறிய மடவோன் அதற்கு மேலும் ஏறினால் தன் உயிர்க்கு இறுதியாகும் என அஞ்சி அந்த ஏணியிலிருந்து கீழ் இறங்க முற்படுவதைப் போலத் தலைவனும் பொருள் வேட்கையால் தலைவியைப் பிரிந்துசெல்ல முற்பட்டபோதும் அதன் நிலையாமையை நினைத்துப் பொருட்பரிவைத் தவிர்ப்பான் எனத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள்.

'மால்பு' என்பது மூங்கிலின் கணுக்களை நறுக்கிச் செய்யப்படும் ஏணியாகும். இப்பாடலடிகளில் தலைவனின் பொருளீட்டல் முயற்சி கண்ஏணியாகவும், தலைவன் அவ் ஏணியில் ஏறும் மடவோனாகவும், 'பெருந்தேன்' தலைவன் ஈட்ட விரும்பிய பொருளாகவும் உவமம் கொள்ளப்பட்டுள்ளன. இதிலிருந்து சங்ககால மக்கள் 'மால்பு' என்னும் கண்ஏணியைப் பயன்படுத்தியமையை அறியலாம்.

**'குறுநீர்க்கன்னல்' என்னும் 'நாழிகை வட்டில்'**

மதுரையாசிரியர் நல்லந்துவனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப் பாடலில் சங்ககால மக்கள் பொழுதினை அறிந்துகொள்வதற்குப் பயன்படுத்திய குறுநீர்க்கன்னல்' என்னும் கருவியின் பயன்பாடு கூறப்பெற்றுள்ளது. 'குறுநீர்க்கன்னல்' என்பது 'நாழிகை வட்டில்' என்னும் கருவியைக் குறிக்கும்.

***"நிலனும் விசும்பும் நீரியைந் தொன்றிக்***
***குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது***
***கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்த்"*** ***(அகம்.43:5–7)***

சிறிய கலத்தின் அடிப்பகுதியில் நுண்ணிய துளையை ஏற்படுத்தி அக்கலத்தில் நீரைப் பரப்பி, அந்நீர் துளை வழியாக ஒழுகும்போது நாழிகைக்கு ஒன்றாக வரையப்பட்ட கோடுகளை எண்ணிப்பார்த்து நாழிகையை அறிந்துகொள்வது சங்க காலத்தில் பழக்கத்தில் இருந்தது.

மேகம் கவிந்த இரவு நேரங்களிலும் கதிரவனைக் காணாதவாறு அடைத்து இருண்டு மழை பெய்யும் காலங்களிலும் மக்கள் நேரத்தைத் தெரிந்து கொள்வதற்காக அரண்மனை போன்ற இடங்களில் 'நாழிகைக் கணக்கர்' என்னும் பெயரில் அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் இக் 'குறுநீர்க்கன்னல்' என்னும் கருவியைக் கொண்டு அவ்வப்போது நாழிகையினைத் தெரிவித்தனர். இதுபோன்ற சூழ்நிலையில் காடு, மலைகளில் வாழ்ந்த மக்கள் மலர்கள் மலர்ந்து மணம் வீசுவதைக் கொண்டு பொழுதினை அறிந்தனர்.

**படுக்கைக்கல்லின் முழைஞ்சு**

பூங்கண்ணன் இயற்றியுள்ள குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் தலைவனைப் பிரிந்த தலைவி மணம் நாறும் சேக்கையில் படுத்துத் தலைவனை நினைத்துப் பார்க்கின்றாள். தலைவியைப் பிரிந்த தலைவன் புலவு நாறும் கல் அறையில் தங்கித் தலைவியின் துயரை நினைத்து வருந்துகின்றான். 'கல்அணை' என்பது கல்லின்கண் உள்ள முழைஞ்சு ஆகும். அது கரடுமுரடானது. இருவரும் முரண்பட்ட படுக்கையாகிய அணையைப் பயன்படுத்துகின்றனர். அப்பாடலடிகள் வருமாறு:

***"பூச்சேர் அணையின் பெருங்கவின் தொலைந்தநின்***
***நாள்துயர் கெடப்பின் நீடலர் மாதோ***
***ஒலிகழை நிவந்த ஓங்குமலைச் சாரல்***
***புலிபுகா உறுத்த புலவுநாறு கல்அணை***
***ஆறுசெல் மாக்கள் சேக்கும்"*** ***(குறுந்.253:3–7)***

இங்கே குறித்த பூச்சேர் படுக்கை தலைவியுடையது; புலவுநாறு கல்அணை தலைவனுடையது.

**ஞெலிகோல்**

தொண்டியாமூர்ச் சாத்தனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் தீ மூட்டுவதற்குப் பயன்படும் 'ஞெலிகோல்' என்னும் தீக்கடைகோலின் பயன்பாடு கூறப்பெற்றுள்ளது.

புலியானது கொன்று தின்று கைவிட்டுப்போன பெரிய யானையினது இறைச்சியை ஆறலைக் கள்வர்கள் தம் கோலில் கோத்துக்கொண்டு செல்வர். எஞ்சிய இறைச்சியைக் கடலில் இருந்து உப்பினைக் கொண்டுவரும் உமணர் கூட்டம் தீக்கடைகோலால் உண்டாக்கிய சிறுதீயில் வாட்டி, சுனையிலிருந்து கொண்டுவந்த நீர் கொண்டு ஏற்றிய உலையில் இட்டு ஒன்றுகூடி ஊன்சோறு சமைப்பர். இது குறித்த பாடலடிகள் வருமாறு:

*"புலிதொலைத் துண்ட பெருங்களிற்று ஒழிஊன்*
*கலிகெழு மறவர் காழ்க்கோத் தொழிந்ததை;*
*ஞெலிகோலி சிறுதீ மாட்டி ஒலிதிரைக்*
*கடல்விளை அமிழ்தின் கணம்சால் உமணர்*
*சுனைகொள் தீம்நீர்ச் சோற்றுஉலைக் கூட்டுஞ்" (அகம்.169:3-7)*

சங்ககால மக்களின் வாழ்க்கையில் 'ஞெலிகோல்' என்னும் 'தீக்கடை கோல்', இக்காலத்திய தீப்பெட்டியைப் போல நெருப்பை உண்டாக்குவதற்குப் பயன்பட்டதை அறியலாம்.

**உலக்கை**

நக்கீரர் இயற்றிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் அடுப்பு, உரல், உலக்கை ஆகியன சங்ககால மக்களின் வாழ்க்கையில் பயன்பாட்டில் இருந்த செய்தி கூறப்பெற்றுள்ளது.

மயிர்ச்சாந்து மணக்கும் குளிர்ச்சி பொருந்திய நறுமணம் கமழும் கூந்தலையுடைய புது மணப்பெண், உணவு மிகுந்த திருமண வீட்டில் பல கொண்டைகளையுடைய அடுப்பில் பாலினை உலையாக வார்ப்பாள். கூழையாகிய கூந்தலையும் சிறிய வளையல்களையும் அணிந்த இளம்பெண்களுடன் பெரிய வயல்களில் விளைந்த நெல்லின் வளைந்த கதிர்களை முறித்து உரலில் இட்டுக் கரிய நிறமுடைய வயிரம் பாய்ந்த உலக்கையால் பச்சை அவலை இடிப்பாள் எனக் கூறப்பட்டுள்ளது:

*"தகரம் நாறும் தண்நறுங் கதுப்பின்*
*புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்*
*பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇ*
*கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்*
*பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்*
*பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கைக்" (அகம்.141:13-18)*

*இதிலிருந்து சங்ககால மக்களின் வாழ்க்கையில் அடுப்பு, உரல், உலக்கை ஆகிய பொருட்கள் பயன்படுத்தப்பட்ட விதத்தினையும், அப்பொருட்களின் முக்கியத்துவத்தையும் அறியமுடிகின்றது.*

**வெண்பொன் தகடு பதித்த தேர்**

*சங்க காலத்தில் தலைவன் விரைந்து செல்வதற்கு ஏற்றவாறு வெண்பொன் தகடு பதித்துச் செய்யப்பட்ட தேரினைப் பயன்படுத்தினான். இதனை, மதுரை ஈழத்துப் பூதன் தேவன் இயற்றிய குறுந்தொகைப் பாலைத்திணைப் பாடலில் சுட்டிக்காட்டியுள்ளான். அப்பாடலடிகள் வருமாறு:*

***"இன்றே சென்று வருதும் நாளைக்***
***குன்றுஇழி அருவியின் வெண்தேர் மூடுக"     (குறுந்.189:1-2)***

*'வெண்தேர்' என்பதற்கு யானைத் தந்தத்தினால் வெள்ளியதாகச் செய்யப்படட தேர் எனக் கொள்ளலாம்.*

**பொன் தகட்டால் செய்யப்பட்ட 'அகல்விளக்கு'**

*சங்க காலத்தில் பொன் தகட்டால் செய்யப்பட்ட அகல்விளக்கும் பயன்பாட்டில் இருந்துள்ளது. இதனைப் பொருந்தில் இளங்கீரனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலடிகளால் அறியலாம்.*

***"பூவீ கொடியிற் புல்லெனப் போகி***
***அடர்செய் ஆய்அகல் சுடர்துணை யாக***
***இயங்காது வதிந்தநங் காதலி***
***உயங்குசாய் சிறுபுறம் முயங்கிய பின்னே"     (அகம்.19:16-19)***

**மண்பானை**

*சங்ககால மக்களின் வாழ்க்கையில் மண்பானை பெரிதும் புழக்கத்தில் இருந்துள்ளது. இதனை ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப் பாடல் வழி அறியலாம்.*

***"புதுக்கலத் தன்ன கனிய வாலம்***
***போகிறனைத் தடுக்கும் வேனி லருஞ்சுரம்"     (ஐங்.303:1-2)***

*புதிய மட்கலமாகிய 'மண்பானை' ஆலம்பலத்தைத் தன் உருண்டை வடிவத்தாலும் வண்ணத்தாலும் ஒத்திருக்கின்றது என்பது இவ் உவமை ஆகும்.*

**தொடிமாண் உலக்கை**

*கல்லாடனார் இயற்றியுள்ள அகநானூற்றின் பாலைத்திணைப் பாடலில்*

*பாலைநிலச் சிற்றூர்களில் வாழும் பெண்கள் பாடும் வள்ளைப்பாட்டாகிய உலக்கைப்பாட்டு கூறப்பெற்றுள்ளது.*

***"கொடுநுண் ஓதி மகளிர் ஒக்கிய***
***தொடிமாண் உலக்கைத் தூண்டுஉரற் பாணி***
***நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டும்" (அகம்.9:11–13)***

*பாலைநில வழியிலுள்ள சிற்றூர்களில் வாழும் வளைந்த நுண்ணிய கூந்தலையுடைய பெண்கள் பூண் பொருந்திய உலக்கையால் உயர்த்திக் குற்றும் உரலிலிருந்து எழும் ஒலியானது நீண்ட பெரிய பக்க மலையிலுள்ள ஆந்தை ஒலியோடு மாறி மாறிக் குன்றுகளில் ஒலிக்கும் எனக் கூறப்பட்டுள்ளது. 'உரல்பாணி' என்பது பெண்கள் உலக்கையால் குற்றும்போது பாடும் வள்ளைப்பாட்டு ஆகும்.*

**'பாண்டில்' என்னும் கண்ணாடி**

*கழார்க்கீரன் எயிற்றியார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடலில் சங்ககால மக்கள் பாண்டில் என்னும் கண்ணாடியைப் பயன்படுத்திய செய்தி உவமை வாயிலாகக் கூறப்பெற்றுள்ளது.*

***"பாசிலைப் பொதுளிய புதல்தொறும் பகன்றை***
***நீலுண் பச்சை நிறமறைத்து அடைச்சிய***
***தோலெறி பாண்டிலின் வாலிய மலரக்" (அகம்.217:6–8)***

*பசுமைநிற இலைகள் அடர்ந்த புதல்கள் தோறும் பகன்றையானது நீலம் ஊட்டப்பெற்ற தோற்கிடுகின் நிறம் மறையுமாறு அதன்மேல் பதித்த வட்டக் கண்ணாடி போல வெண்மை நிறம் உடையவனாக மலர்ந்தது என்பது அவ் உவமையாகும். இதிலிருந்து சங்ககால மக்கள் பாண்டில் என்னும் வட்டக் கண்ணாடியைப் பயன்படுத்தினர் என்பதை அறியலாம்.*

**அறச்சிந்தனைகள்**

*பாலைப் பாடல்களில் வாழ்க்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை முதலான நிலையாமைச் சிந்தனைகள் ஆங்காங்கே சிறுசிறு குறிப்புக்களாகக் கூறப்பெற்றுள்ளன. பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் வாழ்க்கையின் நிலையாமைத் தத்துவங்கள் மிகமிக எளிமையாகக் கூறப்பெற்றுள்ளன.*

***"இளமையும் காமமும் நின்பாணி நில்லா***
***இடைமுலைக் கோதை குழைய முயங்கும்***

*முறைநாள் கழிதல் உறாஅமைக் காண்டை*
*கடைநாள் இதுவென்று அறிந்தாரும் இல்லை*
*போற்றாய் பெருமநீ காமம் புகர்பட*
*வேற்றுமைக் கொண்டு பொருள்வயிற் போகுவாய்*
*கூற்றமும் மூப்பும் மறந்தாரோடு ஓராஅங்கு*
*மாற்றுமைக் கொண்ட வழி”* *(கலி.12:12–19)*

இளமையும் காமமும் நிலையற்றவை; தம் வாழ்க்கையின் இறுதிநாள் இதுவென அறிந்தார் இல்லை; இளமையில் இல்லறத்தைத் துய்க்க வேண்டும்; பொருள் விருப்பில் இளமையைத் துறத்தல் கூடாது என இப்பாடலடிகளில் வலியுறுத்தப் பெற்றுள்ளன.

பாலை பாடிய பெருங்கடுங்கோ இயற்றியுள்ள மற்றொரு பாலைக் கலிப்பாடலில் இளமை நிலையாமை பின்வருமாறு கூறப்பெற்றுள்ளது.

*“வளமையோ வைகலும் செயலாகும்; மற்றுஇவள்*
*முளைநிரை முறுவலார் ஆயத்துள் எடுத்தாய்ந்த*
*இளமையும் தருவதோ இறந்தபின்னே”* *(கலி.15:24–26)*

தோழி கூற்றில் அமைந்துள்ள இப்பாடலில் தோழி தலைவனுக்கு இளமை நிலையாது; செல்வம் நிலையாது; யாக்கை நிலையாது எனப் பக்குவமாக இடித்துரைத்து அறிவுறுத்தி தலைவனது பொருட்பிரிவைத் தடுக்க முயற்சிக்கின்றாள்.

மற்றொரு பாலைக்கலிப் பாடலில் தலைவி சுரம் தன் அடிக்கு எளியதன்றாயினும், சுரவழியிடையில் உண்ணுநீர் இல்லையென்றாலும், தங்குவதற்கு நிழலைத் தரும் மரம் இல்லையென்றாலும் நின்னைப் பிரிந்து இரேன் என்று தலைவனிடம் உறுதிப்பட கூறுகின்றாள்; தலைவன் தன்னைப் பிரிந்தால் இறந்துபடுவேன் என்கின்றாள். கலைமானைத் தொடர்ந்து செல்லும் பிணைமானைக் காட்டித் தன்னையும் உடன் அழைத்துச்செல்ல வேண்டுகின்றாள். அவள் வாழும் நாட்கள் மிகவும் குறைவு என்பதை “வளியினும் வரைநில்லா வாழும் நாள்” (கலி.20:9) எனச் சுட்டிக்காட்டி தானும் தலைவனுடன் வருவேன் என்கின்றாள்.

முப்பேர் நாகனார் இயற்றியுள்ள நற்றிணையின் பாலைப்பாடலில், ஒரு காலத்தே முதுமையை அடைந்தவர் மறுபடியும் அழிந்த இளமையைப் பெறுவதில்லை; அதேபோல் தம் வாழ்நாள் இவ்வளவு காலம்தான் என்று அறிந்தவரும் இல்லை என வாழ்க்கை நிலையாமை கூறப்பெற்றுள்ளது.

*"முதிர்ந்தோர் இளமை ஒழிக்கும் எய்தார்*
*வாழ்நாள் வகைஅளவு அறிஞரும் இல்லை"        (நற்.314:1–2)*

சிறைக்குடி ஆந்தையார் இயற்றியுள்ள நற்றிணைப் பாலைப் பாடலில் பொருட்கடைக்கூடிய தன் நெஞ்சிற்குச் செல்வத்தின் நிலையாமையைத் தலைவன் கூறுகின்றான்.

*"…. …. …. …. பொருளே*
*வாடாப் பூவின் பொய்கை நாப்பண்*
*ஓடுமீன் வழியிற் கெடுவ, யானே*
*விழுநீர் வியலகம் தூணி ஆக*
*எழுமா ணளக்கும் விழுநெறி பெறினுங்*
*கனங்குழைக் கமர்த்த சேயரி மழைக்கண்*
*அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனென்"        (நற்.16:4–10)*

பொருளானது பொய்கையிடத்தில் ஓடுகின்ற மீனின் வழியைப் போலத் தாம் இருந்த இடம் தெரியாமல் கெட்டழியும் இயல்புடையது. யானோ பெரிய கடல் சூழ்ந்த அகன்ற நிலத்தையே மரக்காலாகக் கொண்டு ஏழு மரக்கால் அளவு பெரும் நிதியைப் பெறுவதாக இருந்தாலும் அந்த நிதியை விரும்பேன். கனமான காதணிகளை அணிந்த தலைவியின் குளிர்ச்சி பொருந்திய கண்களின் இனிய நோக்கு என்னை அச்செயலைச் செய்யவிடாது அழித்தது. அப்பொருள் அதனைப் போற்றுவாரிடமே பொருந்துக எனச் செல்வத்தின் நிலையாமையைத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் இயற்றியுள்ள அகநானூற்றுப் பாலைப்பாடலில் பொருட்பிரிவை விரும்பிய தன் நெஞ்சிற்குத் தலைவன்,

*"…. …. …. …. நாளும்*
*கனவுக் கழித்தனைய வாகி நனவின்*
*நாளது செலவும் மூப்பினது வரவும்*
*அரிதுபெறு சிறப்பின் காமத் தியற்கையும்*
*இந்நிலை அறியா யாயினுஞ் செந்நிலை"        (அகம்.353:2–6)*

எனக் கூறுகின்றான். நாள்தோறும் உறக்கத்தில் காணும் கனவின்போது தோன்றும் பொருள்கள் யாவும் அக்கனவு கலைந்தவுடன் மறையும் தன்மையன. அதேபோல் நனவிலும் இளமையது செலவும் முதுமையது வரவும் இயல்பாக வருவன; காம இன்பமும் தோன்றி விரைந்து மறையும் எனத் தலைவன் செல்வம், இளமை ஆகியனவற்றின் நிலையாமைகளைத் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

இவ்வாறே பாலைபாடிய பெருங்கடுங்கோவின் அகநானூற்றுப் பாலைப் பாடலில்,

*“விரிதிரை முந்நீர் மண்திணி கிடக்கைப்*
*பரிதியஞ் செல்வம் பொதுமை யின்றி*
*நனவின் இயன்ற தாயினுங் கங்குற்*
*கனவி னற்றதன் கழிவே அதனான்” (அகம்.379:6–9)*

எனக் கூறப்பெற்றுள்ளது.

**தொகுப்புரை**

- ‘பண்பாடு’ என்பது மரபு வழியில் மனிதனால் புரிந்துகொண்டுள்ளவை பற்றியதாகும். இது கற்றலின் வாயிலாகப் பெறப்படுவது. கற்றல் நடத்தை முறைகளினால் உருவாக்கப்படுவது, சுருக்கமாகக் கூறினால் ‘பண்பாடு’ என்பது அனைவராலும் பகிர்ந்துகொள்ளப்பட்ட கருத்துக்களும், சமுதாய மரபுரிமையாகப் பெறப்பெற்ற நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் அடங்கிய தொகுப்பாகும். இதில் மனிதனின் அறிவு, நம்பிக்கை, பழக்கவழக்கம், கலை, ஒழுக்கநெறிகள், சட்டம், வழிபாடு, உணவு, உடை, புழங்குபொருள்கள் முதலான பலவும் அடங்கும்.
- மறவரும் எயினருமே பாலை நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஆவர். இவர்கள் வாழும் ஊர் ‘குறும்பு’ என்று அழைக்கப்பெற்றன. மறவரின் குடியிருப்பு புல்வேய் குரம்பையாகும்.
- பாலைத்திணைப் பாடல்களில் தலைவனுடன் உடன்போக்குச் செல்லும் உயர்ந்த கற்புடைய தலைவி இல்லற வாழ்க்கையை ஏற்கும் தகுதியைப் பெறுகின்றாள். இல்லற வாழ்க்கைக்குக் கணவன் மனைவியரின் ஒன்றிய உள்ளமே அடிப்படை. கணவனும் மனைவியுமாக இல்லிருந்து செய்யும் அறிவோர்க்கு அளித்தல், விருந்தோம்பல் ஆகிய இல்லறக் கடமைகளைக் கணவனைப் பிரிந்த மனைவியால் செய்ய இயலாது. ஆயினும் இதுவே ‘மனைமுதல் வினை’ ஆகும்.
- ‘விருந்தோம்பல்’ குறித்த செய்திகள் பாலைத்திணைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன. சங்க காலத்தில் நிலந்தோறும் விருந்தோம்பல் பண்பாடு இருந்தமையால்தான் பாலை நிலத்தில் உடன்போக்கு மேற்கொண்ட தலைமக்களும், பொருள்வயிற் பிரிந்து சென்றோரும், வெகுதூரப்

பயணிகளும் விருந்தினர்களாகி ஆங்காங்கே விருந்தோம்பப்பட்டுக் கவலையின்றிப் பயணித்துள்ளனர்.

- ❖ புகுந்த வீட்டில் தலைவியின் அறிவும் ஒழுக்கமும் குறித்த பண்பட்ட பண்பாட்டுச் சிந்தனை போதனாரின் நற்றிணைப் பாடலில் “அறிவும் ஒழுக்கமும் யாண்டு உணர்ந்தனள் கொல்?” எனக் கூறப்பெற்றுள்ளது.
- ❖ தலைவியின் உடன்போக்கினை நற்றாய் அறநெறி எனத் தன் நெஞ்சிற்கு மகிழ்ந்து கூறுகின்றாள். காவல் செய்தும் தலைவனுக்கு வரைந்து கொடுக்க மறுத்தும் தலைவியை இற்செறித்த தாய், அறமற்றவள் ஆவாள். குடும்பத்தின் நற்பெயரைக் காப்பதாக நினைத்துத் தன் மகளின் களவுக் காதலையும் நல்வாழ்க்கையையும் கெடுத்தவள் நற்றாய். சங்க அகப்பாடலில் கண்டாரிடம் தலைவி கூறுவதாக இப்பாடல் ஒன்றே அமைந்துள்ளது. உடன்போக்கில் தலைவனும் தலைவியும் தேரூர்ந்து சொல்வதாகக் கூறும் பாடலும் இஃது ஒன்றே ஆகும்.
- ❖ கார்த்திகை தீபம் ஏற்றல், இல்லங்களில் விளக்கேற்றல், கலங்கரை விளக்கு, பாலைநில மக்கள் பயன்படுத்திய கட்டில், மெத்தை, படுக்கை, நடுகல் வழிபாடு, உடன்போக்கும் தமர் அறியச்செய்யும் திருமணம், சிலம்புகழி நோன்பு, திருநுதல் திலகம் அணிதல் ஆகிய பற்றிய பாலைத்திணைப் பாடல்களில் சிறப்பாகக் கூறப்பெற்றுள்ளன.
- ❖ சமூகத்தேவை, புகழ், ஈகை, பொருள் வழிப்பட்ட வாழ்க்கை, ஆடவர் ஆள்வினை, இல்வாழ்க்கையில் பொருட்பயன், இன்மையது இழிவு, செல்வத்தின் பயன் என்னும் நிலைகளில் பொருளீட்டல் குறித்த செய்திகள் சங்கப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன.
- ❖ எயினர்கள் ‘செம்மண் படிந்த செந்துவர் ஆடைகளை அணிந்தனர். பெண்கள் தழையாடையை உடுத்தினர். பாலைநில மக்கள் புல்லரிசி உள்ளிட்ட பலவகையான உணவினைச் சமைத்து உண்டனர். புலால் உணவு பாலைநில மக்களின் சிறப்பு உணவாகும். பாலைத்திணைப் பாடல்களில் பலவகையான விலங்குகளின் இறைச்சி அந்நில மக்களின் உணவுப் பொருளாகக் கூறப்பெற்றுள்ளது. பாலைப் பாடல்களில் துவராடைகளும் தழையாடைகளும் பற்றிப் பரவலாகக் கூறப்பெற்றுள்ளன. நூலாடையும் பட்டாடையும் மிக மெல்லியனவாகவும் தொழில்திறம் மிக்கனவாகவும் அக்காலத்தில் செய்யப்பட்டமை கூறப்பெற்றுள்ளன.

- ❖ பாலைத் திணைப்பாடல்களில் பங்குனி உத்தரவிழா, திருப்பரன்குன்றத்து முருகன்விழா, கார்த்திகைத் தீபப் பெருவிழா, மழவர்களின் பூந்தொடை விழா, காமன்விழா, விழாக்கொண்ட மூதூர்கள், விழவுடை விழுச்சீர் வேங்கடம் முதலான விழாக்கள் குறித்த செய்திகள் காணப்படுகின்றன.
- ❖ பாலைநிலத் தெய்வமாகிய கொற்றவை வழிபாடு எட்டுத்தொகையின் புறப் பாடல்களிலும் பத்துப்பாட்டு நூல்களிலும் கூறப்பெற்ற அளவிற்கு எட்டுத் தொகையின் அகப்பாடல்களில் விரிவாகவும் விளக்கமாகவும் கூறப்படவில்லை. கொற்றவையே பாலைநில மறவர்களின் வழிபடு தெய்வமாகும்.
- ❖ பாலைப் பாடல்களில் தலைவியின் கற்பின் பெருமை, நாணொடு மிடைந்த கற்பு, மனைமாண் கற்பு, ஆதிமந்தியின் கற்பு, வணங்குறு கற்பு, கற்பு மேம்படுவி, அடங்கிய கற்பு என்னும் நிலைகளில் பெண்களின் கற்புநெறி பேசப்பெற்றுள்ளன.
- ❖ பாலைநில மகளிரின் கூந்தல் ஒப்பனை பாலைப் பாடல்களில் பரவலாகப் பேசப்பெற்றுள்ளது. மகளிரின் தொய்யில் எழுதுதல் ஓரிரு பாடல்களில் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளது. பாலைநிலப் பெண்களின் சிலம்பணி உள்ளிட்ட பல்வகையான அணிகலன்கள் பற்றியும் கூறப்பெற்றுள்ளன.
- ❖ கூத்தரின் கலைகள், கூத்தியர் ஆடற்கலை, குரவைக் கூத்து, கழைக்கூத்து, வள்ளிக் கூத்து முதலான கூத்துக் கலைகள் குறித்த செய்திகளும், ஓவியக்கலை குறித்த செய்திகளும் பாலைத்திணைப் பாடல்களில் காணப்படுகின்றன.
- ❖ பாலைத்திணைப் பாடல்களில் மகளிரின் கழங்கு, பந்து, பாவை முதலான பல்வேறு விளையாட்டுக்களும், சிறுவர்களின் வட்டாடுதல் முதலான விளையாட்டுக்களும் குறிக்கப்பட்டுள்ளன.
- ❖ ஆவணமாக்கள், குடவோலைத் தேர்தல்முறை, அரசாட்சி, அரசியலறம் குறித்த செய்திகளும் பாலைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன.
- ❖ பாலைத்திணைப் பாடல்களில் அந்தணர் வாழ்க்கை பற்றி மதிப்புடன் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது.
- ❖ பாலைத்திணைப் பாடல்களில் நெற்கூடு, சுடுமண் தசும்பு, நாரால் செய்யப்பட்ட ஊசல், பனையோலையால் செய்யப்பட்ட குடை,

சோறுபொதி வெண்குடை, தயிர் கடையும் மத்து, கல்லடுப்பு, மண்நீர்ச் சிறுகுளம், ஏணிமரம், கிணறு, கண்ஏணி, குறுநீர்க்கன்னல் என்னும் நாழிகைவட்டில், படுக்கைக் கல்லின் முழைஞ்சு, ஞெலிகோல், உலக்கை, வெண்பொன் தகடு பதித்த தேர், பொன் தகட்டால் செய்யப்பட்ட அகல்விளக்கு, மண்பானை, தொடிமாண் உலக்கை, திருகை, பாண்டில் என்னும் கண்ணாடி முதலான புழங்குபொருட்கள் குறித்த செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

❖ பாலைத்திணைப் பாடல்களில் வாழ்க்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை முதலான அறச்சிந்தனைகளும் அறிவுறுத்தப்பெற்றுள்ளன.

## குறிப்புகள்

1. Merwyn S.Garbarino, Socio Cultural theory in Anthropology, p.49
2. A.L.Krober and Kluckhohn (edrs.), Culture : A Critical Review of Concepts and Definitions, P.28
3. E.B.Tylor, primitive culture, 2 vols, P.1
4. Merwyn S.Garbarino, Socio - cultural theory in Anthropology, Pp.49-50
5. Ibid, p.49
6. பக்தவச்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.153
7. Adamson E.Hoebal, Man in primitine world, p.499
8. Malinowski, Crime and custom in savage society, Pp.79-84
9. Ibid, p.81
10. Clark Wisslar, Man and Culture, P.p.123-125
11. தொல்.பொருள்.இளம் (உரை.ஆ), அகத்.நூற்.41.
12. தொல்.பொருள்.இளம் (உரை.ஆ), அகத்.நூற்.44.
13. தொல்.பொருள்.கற்பு.இளம்.(உரை.ஆ.), நூற்.2.
14. மலைபடு.561–562.
15. குறிஞ்சி.102.
16. திருமுருகு.258–259.
17. பரி.11:93–100.
18. திருமுருகு. 256–257.
19. பதிற்.66:15.
20. பட்டினப்.57–59.
21. பதிற்.19:14–18.
22. பதிற்.79:16, 19:88, 11:12, 90:19.
23. பதிற்.88:24–25.
24. பதிற்.90:19–21.

25. பதிற்.88:2.

26. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப.123.

27. மதுரைக்.516–518.

28. பரி.19:53.

29. தொல்.பொருள்.இளம்(உரைஆ.), மர.நூற்.1570.

# ஆய்வு நிறைவுரை

*“சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்” என்னும் பொருண்மையிலான இவ்ஆய்வுரையில் இயல்தோறும் கண்டறியப்பட்ட ஆய்வு முடிபுகள் அவ்வவ் இயல்களின் இறுதியில் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. ‘ஆய்வு நிறைவுரை’ என்னும் இப்பகுதியில் குறிப்பிடத்தக்க சில ஆய்வு முடிபுகள் மட்டும் கூறப்படுகின்றன.*

- *காலத்தை முதற்பொருளாகக் கொண்ட பாலைத்திணைக்குத் தனித்ததான நிலம் இல்லை. பாலை என்பது ஒரு சார் வழி நிலமாகும். அது நிலையான வாழ்நிலம் அன்று. இருப்பிடமாகவும் வாழ்விடமாகவும் இருந்த குறிஞ்சியையும் முல்லையையும் அடுத்த வளம் குன்றிய வறண்ட நிலப்பகுதியை பாலை. நண்பகல், வேனில், பின்பனி ஆகிய பொழுதுகள் பாலைத்திணைக்கு உரியன. காதல் காட்சிக்குப் பாலைப் பின்புலம் ஏற்றதல்ல; பாலைப் பாடல்களின் மாந்தர்கள் ஆறலைக் கள்வர்களும் சூறை கொள்வோருளும் அல்லர். குறிஞ்சி முதலான நானில மக்களின் பொருட்பிரிவுச் சூழல்களும் அதற்கான காரணங்களுமே பாலைப் பாடல்களின் வருணனைகளில் புனையப்பெற்றுள்ளன.*
- *சங்க இலக்கியத்தின் 1862 அகப்பாடல்களுள் 530 பாடல்கள் பாலைத் திணைப் பாடல்களாகும். பாலைத்திணைப் பாடல்களின் பாடுபொருள் கட்டமைப்பில் தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடும் பிரிவு 422 பாடல்களிலும், தலைவி தலைவனுடன் தன் பெற்றோரையும் தமரையும் பிரிந்து செல்லும் உடன்போக்கு 108 பாடல்களிலும் அடிக்கருத்துக்களாக அமைந்துள்ளன.*
- *பாலைப் பாடல்களில் தலைவனது பொருட்பிரிவே முதன்மையானது. ஆயினும் இரண்டு பாடல்களில் தலைவனின் ‘போர்வயிற் பிரிதல்’ (கலி.26,31) கூறப்பெற்றுள்ளன.*
- *பிரிவு வகைகளில் பாலைத்திணையின் பொருட்பிரிவு நீண்ட காலத்திற்கும் நெடுந்தொலைவிற்கும் உரியது. அகநானூற்றுப் பாடல் ஒன்றில் (அகம்.314)*

பாலைக்குரிய பொருட்பிரிவுக்குரியதாக ஓராண்டுக் காலம் எனத் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன.

- சங்கப் புலவர்கள் பிரிவினாலாகும் ஆழ்ந்த இரங்கல் பொருண்மையினதான பாலைப் பாடல்களை மிகுதியாக இயற்றியுள்ளனர். இதனை உரிப்பொருள் பின்புலமாக மட்டும் கொள்ள இயலாது. பிற திணைப் பாடல்களிலும் பிரிவின் அவலம் நுணுக்கமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. பாலைப் பாடல்களில் குறித்த தலைவி, தலைவன் தன்னிடம் கொண்டுள்ள காதலை விடப் பொருளின் மேல் கூடுதல் பற்றுக் கொண்டுள்ளதாகக் கருதி ஆற்றாமையால் வருந்துகின்றாள்.

- நிலமுடைய நான்கு திணைப்பாடல்கள் அந்நிலங்கள் சார்ந்து வாழ்ந்த மக்களின் வாழ்க்கையை விளக்குகின்றன. பாலைப்பாடல்கள் தலைவன் பொருள்தேடிச் சென்ற பாலையின் சுரவழி குறித்த வாழ்க்கையை விளக்குகின்றன. பாலைப் பாடல்கள் களவுக்கும் கற்புக்கும் பொதுவானவையாகும்.

- தலைவனின் பொருள்வயிற் பிரிவு, உடன்போக்கு தலைவனது பொருட்பிரிவில் தோழி தலைவனைச் செலவழுங்குவித்தல், தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்குதல், தலைவன் தலைவியை விட்டுப் பிரிதல், தலைவனது பிரிவில் தலைவியின் நிலை, வினை முடித்த தலைவன் வரவு குறித்த தோழி கூற்றுக்கள், உடன்போக்கு மாந்தர்களும் அவர்தம் செயல்களும் ஆகியன பாலைப்பாடல்களின் பாடுபொருள்களாக உள்ளன.

- இளவேனிலும் முதுவேனிலும் உடன்போக்காகிய பாலைத்திணையின் ஒரே நிகழ்வுக்குப் பொருந்தும் பின்னணிகளாகப் பாலை பாடிய புலவர்களால் அமைக்கப்பெற்றுள்ளன.

- எட்டுத்தொகை நூல்களில் பாலை பாடிய பெருங்கடுங்கோ அறுபத்தேழு அகப்பாடல்களை இயற்றியுள்ளார். அவர் பாலைக்கலியில் களவுத்துறைக்கு இடமளிக்கவில்லை. அவர் உடன்போக்குத்துறையில் தாயின் கூற்றாக அமையும் பாடல்களை இயற்றவில்லை. முக்கோற்பகவர் அறங்கூறும் களவுத்துறையில் மட்டுமே தாய் இடம்பெறுகின்றாள். மருதன் இளநாகனார், ஓதலாந்தையார், பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆகிய மூன்று புலவர்களும் உடன்போக்கில் தலைவியைத் தலைவன் மகிழ்ச்சிப்படுத்துவதாகப் பாடல்களை இயற்றியுள்ளனர்.

- பாலை பாடிய பெருங்கடுங்கோவின் அனைத்துப் பாடல்களிலும் இளமையின் வளமை சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது. அவரது பாடல்களில் புணர்ச்சி மயக்கம் உரைக்கப்பட்டுள்ளது. வெள்ளிவீதியார் பதின்மூன்று அகப்பாடல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் ஐந்து பாடல்கள் களவிற்கும் எட்டுப் பாடல்கள் கற்பிற்கும் உரியன. களவு, கற்புப் பாடல்களில் இடம்பெறும் வெள்ளிவீதியாரின் அகமாந்தர்கள் காம உணர்வு மிக்கவர்கள்.
- ஓதலாந்தையார் இயற்றிய நூற்றிமூன்று அகப் பாடல்களில் முப்பத்தெட்டுப் பாடல்கள் களவிற்கும் அறுபத்தைந்து பாடல்கள் கற்பிற்கும் உரியன. இவர் களவுப் பாலையையும் கற்புப் பாலையையும் அறமும் திறமும் சிறக்கப் பாடியுள்ளார்.
- மகள் இல்லத் தலைவியாகிய நிலையில் கற்பியலில் நற்றாயின் பேச்சுக்கு வாய்ப்பே இல்லை. ஆயினும் ஓரோடகத்துச் சுந்தரத்தனார், கல்லாடனார், நக்கீரர் ஆகிய மூன்று புலவர்களும் தாயை அகப்படுத்தியே தம் அகப்பாடல்களை இயற்றியுள்ளனர்.
- புறநானூற்றுப் பாடலில் (புறம்.254) கற்பில் கணவனும் மனைவியும் உடன்போக்குச் செல்கின்றனர். கணவன் இடைச்சுரத்தில் இயல்பாக இறந்து விடுகின்றான். அகத்திலும் புறத்திலும் உடன்போக்கைப் பாடிய கயமனார் உடன்போக்குப் பாடிய புலவர் என்று அழைக்கத்தக்கவர்.
- கல்லாடனார் வரலாற்றுக் குறிப்புக்களை மிகுதியாக உள்ளடக்கி பாலைத்திணையில் கற்பியல் சார்ந்த எட்டு அகப்பாடல்களை இயற்றியுள்ளார். கழார்க்கீரன் எயிற்றியார் என்னும் பெண்பாற்புலவர் பாலைப் புனைவிற்கு மருதத்தையும் வாடைக் காலத்தையும் பின்புலமாகக் கொண்டுள்ளார். இவரது பாடல்கள் உரிப்பொருளால் மட்டுமே பாலையாகும்.
- குடவாயில் கீரத்தனார் களவில் ஐந்து பாடல்களையும் கற்பில் பன்னிரண்டு பாடல்களையும் இயற்றியுள்ளார். இவரது பாடல்களின் தாய் தன் மகளை இற்செறிப்பவளாகக் காட்டப்படுகிறாள். இவரது பல பாடல்களில் தலைவியர் களவிலும் கற்பிலும் உடன்போக்குச் செல்கின்றனர். ஆயினும் இல்லறத்தார் உடன்போக்கு குறிஞ்சியாகும். இதனால்தான் கற்புத்தலைவி உடன்போக்குச் சென்றதாகப் பிற புலவர்கள் பாடல்களை இயற்றவில்லை.

- நக்கீரரின் பதினேழு அகநானூற்றுப் பாடல்களில் பதினைந்து பாடல்கள் மூவேந்தர்களையும் குறுநில மன்னர்களையும் பற்றிய குறிப்புக்களைக் கொண்டுள்ளன.

- சுட்டியொருவர் பெயர் சுட்டாத அகப்பாடல்களுக்கு இயற்கை உவமைகளும் இயற்கைச் சூழல்களும் சிறப்பளிக்கின்றன. இதற்கு நேர்மாறாக வரலாற்றுக் குறிப்புக்கள் மிகுந்த பரணரின் அகப்பாடல்கள் அமைந்துள்ளன. காமம் ஒத்த களவுக் காதலர்களைப் படைத்த பரணர், கற்பு வாழ்க்கையில் அவர்களை முரண்பட்டவர்களாகக் காட்டியுள்ளார். கற்பில் தலைவன் தண்டாப் பரத்தனாக அலைகின்றான். பரணரின் அகப்பாடல்களில் தலைவனின் பரத்தமைக்குத் தலைவியே காரணமாகின்றாள். மனைவிக்குக் காம அறிவு வேண்டும் எனப் பரணரின் பாடல்கள் அறிவுறுத்துகின்றன.

- வளம் இழந்து வறண்டு கிடக்கும் பாலைநிலத்தைப் 'புண்நிலம்' என்று சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இத்தகைய பாலைநிலத்தில் வாழும் மக்கள் 'மறவர்' என்றும், 'எயினர்' என்றும் அழைக்கப்படுகின்றனர்.

- கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழில் மறவர்தம் தொழில் பாலை நிலத்தின் வழிச் செல்வோரைத் துன்புறுத்தி அவர்தம் பொருட்களை வழிப்பறி செய்தலாகும். கொள்ளையடிப்பதும் இவர்தம் முக்கியத் தொழிலாகும். இதனால்தான் பாலைப் பாடல்கள் மறவர்களை 'ஆறலைக் கள்வர்' எனக் குறிப்பிடுகின்றன. இம்மறவர்கள் பன்றி, முயல் வேட்டையாடுவதையும் தம் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

- பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் சங்கப்புலவர் இயற்றியுள்ள பாலைக்கலிப் பாடலில் (கலி.5) உவமை வாயிலாகச் சங்க காலத்தில் கடல் வாணிகம் நடைபெற்ற செய்தி கூறப்பெற்றுள்ளது. வாணிகத்திற்காகப் பாலை வழியில் இடம்பெயர்ந்து செல்லும் வாணிகர்களுடன் ஆறலைக் கள்வர் போரிட்டு அவர்தம் பொருட்களைக் கொள்ளையடித்தனர். சங்க காலத்தில் வாணிகச்சாத்தர் பாலை வழியில் வாணிகத்திற்காகப் பயணம் மேற்கொண்டனர்.

- கடலில் விளைந்த உப்பினைப் பிற நிலங்களில் வாழும் மக்களுக்கு விலைகூறி விற்பனை செய்வதற்காக உமணர்கள் பாலை நிலத்தின் வழியே

சென்றனர். உப்பு வாணிகர் தம் வாணிகத் தொழிலுக்குக் கழுதைகளைப் பயன்படுத்தினர். சங்க காலத்தில் பண்டமாற்று வாணிகமே நடைபெற்றுள்ளது. கள்ளிற்கு விலையாகக் களிற்றின் கன்றுகள் கொடுக்கப்பட்டன.

- ❖ சங்க காலத்தில் யவனர் என்னும் சோனவர் இனத்தவர் எகிப்து, கிரேக்கம் முதலிய நாடுகளிலிருந்து வாணிகத்திற்காக வந்து சேரநாட்டின் முசிறியில் பொன்னைக் கொண்டுவந்து விலையாகக் கொடுத்துவிட்டு மிளகை ஏற்றிச் சென்றுள்ளனர்.
- ❖ பாலைத்திணைப் பாடல்களில் ஓடாமறவரின் வழிப்பறிக் கொள்ளை, அவர்களது கொடுந்தொழிலாகிய கொலைத்தொழில், கொடுவில் எயினரின் கொலைத்தொழில், வில்லேர் உழவராகிய ஆறலைக் கள்வரின் வழிப்பறி மற்றும் கொலைத்தொழில், எயினர்கள் வாணிகர் கூட்டத்தைக் கொள்ளையடித்தல், மறவர்களின் வேட்டைத் தொழில், உழவுத்தொழில், முத்தெடுக்கும் தொழில், சாணைக்கல் செய்யும் தொழில், கிணறு தோண்டும் தொழில், ஆடைவெளுக்கும் தொழில், பூவிற்கும் தொழில், கள் விற்கும் பெண்கள் தொழில், ஓவியத்தொழில், செம்பினால் பானை செய்யும் தொழில், தூதுத்தொழல், ஓரேர் உழவன் தொழில், மருத்துவத் தொழில் முதலான பாலைநிலம் மற்றும் பிறநில மக்களின் தொழில்கள் சுட்டிக் காட்டப்பெற்றுள்ளன.
- ❖ மரபு வழியில் தலைமுறை தலைமுறையாக மக்களிடம் பரப்பப்படும் நம்பிக்கைகள் முன்னோர்களின் வாழ்வியல் நெறிகளை நினைவு படுத்துகின்றன. மக்கள் பிறப்பு முதல் இறப்பு வரையில் பலவிதமான நம்பிக்கைகளைக் கொண்டிருக்கின்றனர். இந்நம்பிக்கைகளே மக்கள் வாழ்க்கையை இயக்குகின்றன.
- ❖ பாலைநில மக்களிடம் காணப்பட்ட வழிபடு தெய்வம், தெய்வ வழிபாடு, கடவுளுக்குப் பலியுணவு படைத்தல், இறைவனுக்கு நாட்பலி, வேப்ப மரத்தில் வாழும் தெய்வத்திற்குப் பலியிடல், பலி வழிபாடு, கொற்றவைக்குப் பலிக்கடன், கானமர் செல்வி, அறக்கடவுள், கடல்நீரின் மேற்பரப்பில் தெய்வம் வாழ்தல், ஓமை மரத்தில் தெய்வம் வாழ்தல், 'சிவன்' ஆலமுற்றத்தில் வாழ்தல், பேய் உணவு ஏற்றல், கழுது என்னும் பேய், அயங்கு, உருஇல்பேய், பேய்களின் கனவு, பழூஉப்பல் பேய் என்பன குறித்த

சங்ககால மக்களின் நம்பிக்கைகளைப் பாலைப் பாடல்களின்வழி அறியமுடிகின்றது.

- ❖ நல்வினைப்பயன், பழவினையாகிய ஊழ்வினை, ஊழ் நம்பிக்கை, தொல்வினையாகிய தீவினைப் பயன், கூற்றம், நரகம், இம்மை மறுமை, பழியஞ்சல், தவம் தவசியர், நிரையப்பெண்டிர், பொய்ச்சாட்சி கூறல், முன்னோர்க்குத் தென்புலக்கடன் செய்தல், நற்சொல் கேட்டல், வேள்விக் குண்டம், கனவு, காக்கை கரைதல் ஆகியன குறித்த சங்ககால மக்களின் நம்பிக்கைகள் பற்றியும் பாலைப் பாடல்களின்வழித் தெரியமுடிகின்றது.
- ❖ கண் துடித்தல், பல்லி, புள், ஓந்தி, கன்றினை ஈன்ற பசு ஆகியனவற்றின் நிமித்தங்கள் குறித்த செய்திகள் பாலைப் பாடல்களின் குறிக்கப் பெற்றுள்ளன.
- ❖ அந்தணர் வேள்வி, உமணர் 'யா'மரப் பட்டைகளைக் கொண்டு தீமூட்டல், உப்பு மூட்டைகளைக் கழுதைகளின் மீது ஏற்றிச் செல்லல், பெண்கள் நெற்றியில் பொட்டு வைத்தல், மகளிர் பாதங்களுக்குச் செம்பஞ்சிக் குழம்பு தடவுதல், மழவரும் உமணரும் கால்களில் செருப்பணிதல், வடுகர் கள்ளுண்டு மகிழ்தல், கொள்ளிக்கட்டையை வீசி யானைகளை விரட்டல், குந்தாலியால் கிணறு தோண்டல், உப்பு வணிகர் எருது பூட்டிய வண்டிகளைப் பயன்படுத்துதல், ஆடவர் கால்களில் வீரக்கழல் அணிதல் முதலான சங்ககால மக்களின் பழக்கவழக்கங்களைப் பாலைத்திணைப் பாடல்களின் வழி அறியமுடிகின்றது.
- ❖ மாலையில் வீடுகளில் விளக்கேற்றல், தயிர்ப்பானையில் விளாம்பழத்தை இட்டு வைத்தல், பகைவர்களின் பற்களைக் கோட்டை வாசல் கதவுகளில் பதித்தல், தெய்வத்தின் சினம் தணிக்க யாழிசைத்தல், பாணர்தம் வருத்தம் நீங்க யாழிசைத்தல், சூதாடல், காக்கைக்குப் பலிச்சோறு வைத்தல், பகைவேந்தன் ஊரைத் தீயிட்டு எரித்தல், வடக்கிருந்து உயிர் நீத்தல், கன்னிப் பெண்கள் பிறைதொழல், சுவரில் கோடிட்டு எண்ணல், சுவரில் வட்டம் அழித்தல், பாலைவழிச் செல்வோர் பிரண்டைக் கொடியை அறுத்துப் போட்டுச் செல்லல், பகழியைச் செப்பம் செய்தல், பாலைவழிச் செல்வோர் மன்னர்களின் அடையாளப் பூக்களை மாலைகளாகச் சூடுதல் முதலான சங்ககால மக்களின் பழக்கவழக்கங்களையும் பாலைப் பாடல்களின்வழி தெரியமுடிகின்றது.

- ‘பண்பாடு’ என்பது மரபு வழியில் மனிதனால் புரிந்துகொண்டுள்ளவை பற்றிய ஓர் அமைப்பாகும். இது கற்றலின் வாயிலாகப் பெறப்படுவது. கற்றல் நடத்தை முறைகளினால் உருவாக்கப்படுவது. ‘பண்பாடு’ என்பது அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்பட்ட கருத்துக்களும், சமுதாய மரபுரிமையாகப் பெறப்பெற்ற நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் அடங்கிய தொகுப்பாகும். இதில் மனிதனின் அறிவு, நம்பிக்கை, பழக்கவழக்கம், கலை, ஒழுக்கநெறிகள், சட்டம், வழிபாடு, உணவு, உடை, புழங்குபொருள் ஆகிய அனைத்தும் அடங்கும்.
- மறவரும் எயினரும் பாலை நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஆவர். இவர்கள் வாழும் ஊர் ‘குறும்பு’ என்று அழைக்கப்பெற்றது. மறவரின் குடியிருப்பு புல்வேய் குரம்பையாகும்.
- பாலைத்திணைப் பாடல்களில் தலைவனுடன் உடன்போக்குச் செல்லும் உயர்ந்த கற்புடைய தலைவி இல்லற வாழ்க்கையை ஏற்கும் தகுதியைப் பெறுகின்றாள். இல்லற வாழ்க்கைக்குக் கணவன் மனைவியரின் ஒன்றிய உள்ளமே அடிப்படை என்பதைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ “ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை” என்கின்றார். கணவனும் மனைவியுமாக இல்லிருந்து செய்யும் அறிவோர்க்கு அளித்தல், விருந்தோம்பல் ஆகிய இல்லறக் கடமைகளைக் கணவனைப் பிரிந்த மனைவியால் செய்ய இயலாது. ஆயினும் இதுவே ‘மனைமுதல் வினை’ ஆகும்.
- ‘விருந்தோம்பல்’ பண்பாடு குறித்த செய்திகள் பாலைத்திணைப் பாடல்களில் பரவலாகக் கூறப்பெற்றுள்ளன. சங்க காலத்தில் நிலந்தோறும் விருந்தோம்பல் பண்பாடு இருந்தமையால்தான் பாலைநிலத்தில் உடன்போக்கு மேற்கொண்ட தலைமக்களும், பொருள்வயிற் பிரிந்து சென்றோரும், வெகுதூரப் பயணிகளும் விருந்தினர்களாகி ஆங்காங்கே விருந்தோம்பப்பட்டுப் பயணித்துள்ளனர்.
- கார்த்திகை தீபம் ஏற்றல் இல்லங்களில் விளக்கேற்றல் கலங்கரை விளக்கு, பாலைநில மக்கள் பயன்படுத்திய கட்டில், மெத்தை, படுக்கை, நடுகல் வழிபாடு, உடன்போக்கும் தமர் அறியச் செய்யும் திருமணமும், சிலம்புகழி நோன்பு, திருநுதல் திலகம் ஆகியன குறித்த செய்திகள் பாலைத்திணைப் பாடல்களில் சிறப்பாகக் கூறப்பெற்றுள்ளன.

❖ எயினர்கள் செம்மண் படிந்த செந்துவர் ஆடைகளை அணிந்தனர். பெண்கள் தழையாடையை உடுத்தினர். பாலைநில மக்கள் புல்லரிசி உள்ளிட்ட பலவகையான உணவினைச் சமைத்து உண்டனர். புலால் உணவு பாலைநில மக்களின் சிறப்பு உணவாகும். பாலைத்திணைப் பாடல்களில் பலவகையான விலங்குகளின் இறைச்சி அந்நில மக்களின் உணவுப் பொருளாகக் கூறப்பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தின் பத்துப்பாட்டு நூல்களில் நூலாடையும் பட்டாடையும் மிக மெல்லியனவாகவும் தொழில்திறம் மிக்கனவாகவும் அக்காலத்தில் செய்யப்பட்டன.

❖ பாலைத் திணைப்பாடல்களில் பங்குனி உத்தரவிழா, திருப்பரன்குன்றத்து முருகன்விழா, கார்த்திகைத் தீபப் பெருவிழா, மழவர்களின் பூந்தொடை விழா, காமன்விழா, விழாக்கொண்ட மூதூர்கள், விழவுடை விழுச்சீர் வேங்கடம் முதலான விழாக்கள் குறித்த செய்திகள் அறியப்படுகின்றன.

❖ பாலைப் பாடல்களில் தலைவியின் நாணொடு மிடைந்த கற்பு, மனைமாண் கற்பு, வணங்குறு கற்பு, அடங்கிய கற்பு என்னும் நிலைகளில் கற்புநெறி பேசப்பெற்றுள்ளது.

❖ பாலைநில மகளிரின் கூந்தல் ஒப்பனை பாலைப் பாடல்களில் பரவலாகப் பேசப்பெற்றுள்ளன. மகளிரின் தொய்யில் எழுதுதல் ஓரிரு பாடல்களில் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளன. பாலைப் பாடல்களில் பெண்களின் சிலம்பணி உள்ளிட்ட பல்வகையான அணிகலன்கள் குறித்தும் கூறப்பெற்றுள்ளன.

❖ பாலைத்திணைப் பாடல்களில் மகளிரின் கழங்கு, பந்து, பாவை முதலான பல்வேறு விளையாட்டுக்களும், சிறுவர்களின் வட்டாடுதல் முதலான விளையாட்டுக்கள் பற்றி அறியமுடிகின்றது.

❖ குடவோலைத் தேர்தல்முறை, அரசாட்சி, அரசியலறம் குறித்த செய்திகள் பற்றியும் பாலைப் பாடல்களில் தெரியமுடிகின்றது.

❖ பாலைத்திணைப் பாடல்களில் அந்தணர் வாழ்க்கை மரபுகள் மதிப்புடன் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளன.

❖ பாலைத்திணைப் பாடல்களில் நெற்கூடு, சுடுமண் தசும்பு, நாரால் செய்யப்பட்ட ஊசல், பனையோலையால் செய்யப்பட்ட குடை,

சோறுபொதி வெண்குடை, தயிர் கடையும் மத்து, கல்லடுப்பு, மண்நீர்ச் சிறுகுளம், ஏணிமரம், கிணறு, கண்ஏணி, குறுநீர்க்கன்னல் என்னும் நாழிகைவட்டில், படுக்கைக் கல்லின் முழைஞ்சு, ஞெலிகோல், உலக்கை, வெண்பொன் தகடு பதித்த தேர், பொன் தகட்டால் செய்யப்பட்ட அகல்விளக்கு, மண்பானை, தொடிமாண் உலக்கை, திருகை, பாண்டில் என்னும் கண்ணாடி முதலான புழங்கு பொருட்கள் பற்றியும் கூறப்பெற்றுள்ளன.

## மேலாய்வுக் களன்கள்

*"சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்" என்னும் தலைப்பிலான இவ்ஆய்வுரை இனிவரும் ஆய்வாளர்களுக்குப் பின்வரும் தலைப்புக்களில் மேலாய்வு செய்வதற்கு துணையாக அமையும்.*

*1. பாலைத்திணைப் பாடல்களில் மக்களின் வாழ்வியல் சடங்குகள்*

*2. பாலைநில மக்களின் சமூகக் கட்டமைப்பு*

*3. பாலைத்திணைப் பாடல்களின் உரிப்பொருள் கட்டமைப்பு*

*4. பாலைத்திணைப் பாடல்களில் திணைமயக்கம்*

*5. பாலைப் பாடல்களில் இலக்கியவளம்*

*6. இனவரைவியல் பார்வையில் பாலைப் பாடல்கள்*

*7. பாலைப் பாடல்களின் வடிவமும் உத்திகளும்*

# துணைநூற் பட்டியல்

I. **முதன்மை ஆதாரங்கள்**


| | | |
|---|---|---|
| *1.* | *சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.),* | **குறுந்தொகை**<br>*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம், சென்னை, 2007.* |
| *2.* | *___________________,* | **ஐங்குறுநூறு**<br>*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம், சென்னை, முதற்பதிப்பு, 1961.* |
| *3.* | *நச்சினார்க்கினியர், (உ.ஆ.),* | **கலித்தொகை மூலமும் உரையும்**<br>*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம், சென்னை, முதற்பதிப்பு, 1943.* |
| *4.* | *நாராயணசாமி ஐயர், அ. பின்னத்தூர் (உ.ஆ.),* | **நற்றிணை நானூறு மூலமும் உரையும்**<br>*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம், சென்னை, முதற்பதிப்பு, 1952.* |
| *5.* | *வேங்கடசாமிநாட்டார், ந.மு., வேங்கடாசலம் பிள்ளை, ரா., (உ.ஆ.),* | **அகநானூறு – களிற்றுயானைநிறை**<br>*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம், சென்னை, முதற்பதிப்பு, 1944.* |
| *6.* | *___________________,* | **அகநானூறு – மணிமிடை பவளம்**<br>*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம், சென்னை, முதற்பதிப்பு, 1944.* |
| *7.* | *___________________,* | **அகநானூறு – நித்திலக்கோவை**<br>*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம், சென்னை, முதற்பதிப்பு, 1944.* |

## II. துணைமை ஆதாரங்கள்

### (அ) தமிழ் நூல்கள்


1. *அகத்தியலிங்கம், ச.,* **சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே,** *மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.*

2. *அகத்தியலிங்கம், ச.,* **தொல்காப்பியக் கவிதையியல்** *மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.*

3. *அப்பாத்துரை, கா.,* **சங்ககாலப் புலவர்** *நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, சென்னை, 1945.*

4. *அறவாணன், க.ப.,* **அற்றை நாள் காதலும் வீரமும்** *தமிழ்க் கோட்டம், சென்னை, 1975.*

5. *ஆதிநாராயணன், எஸ்.பி., இராசமாணிக்கம், மு. & மூர்த்தி, ஆர்.எஸ்., (மொ.பெ.ஆ.),* **மனித உள்ளம்** *பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1973.*

6. *ஆறுமுகம், நா.,* **கலித்தொகை ஓர் அகழாய்வு** *கன்னி நிலையம், ஈரோடு, 1985.*

7. *இளங்கோவடிகள்* **சிலப்பதிகார மூலமும் அடியார்க்கு நல்லாருரையும்** *உ.வே.சா. பதிப்பு, சென்னை, 1968.*

8. *இராகவன், அ.,* **தமிழ்நாட்டு அணிகலன்கள்** *கலைஞர் பதிப்பகம், திருநெல்வேலி, 1970.*

9. இராமர், சு. (தொ.ஆ.), **திணைக் கோட்பாடுகளும் தமிழ் ஆய்வுச் சூழல்களும்**
பிறழ் வெளியீடு,
மதுரை, 2018.

10. இராமகிருஷ்ணன், எஸ்., **இந்தியப் பண்பாடும் தமிழரும்**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை, 1971.

11. இராமநாதன் செட்டியார், லெ.ப.கரு., **சங்ககாலத் தமிழர் வாழ்வு**
முத்தையா நிலையம்,
சென்னை, 1977.

12. கந்தையாபிள்ளை, ந.சி., **தமிழ் இந்தியா**
கழக வெளியீடு,
சென்னை, 1959.

13. கனகசபை, வி. (ஆ.), அப்பாத்துரை, கா., (மொ.பெ.ஆ.), **ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்**
கழக வெளியீடு,
சென்னை, 1972.

14. கழனியூரன், **மண்ணின் மரபுகளும் மக்களின் நம்பிக்கைகளும்**
அன்னம்,
தஞ்சாவூர், 2008.

15. காந்தி, க., **தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1980.

16. கிருட்டிணன், அ., **தமிழர் பண்பாட்டியல், தொகுதி – I,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை – 1992.

17. குருசாமி, ம.ரா.பொ., **சங்க காலம்**
மெர்க்குரி புத்தகப் பண்ணை,
கோயம்புத்தூர், 1967.

18. குணா, **தமிழர் மெய்யியல்**
பொதுமை வெளியீடு,
சென்னை, 1980.

19. கைலாசபதி, க. (ஆ.), குரு.வெ.பாலசுப்பிரமணியன், (மொ.பெ.ஆ.), **தமிழில் வீரநிலைக் கவிதை**
குமரன் பதிப்பகம்,
சென்னை, 2006.

20. கைலாசபதி, க., **பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்**
பாரி நிலையம்,
சென்னை, 1966

21. சண்முகம்பிள்ளை, மு., **சங்கத்தமிழர் வாழ்வியல்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1997.

22. சாமி, பி.எல்., **சங்க இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 1976.

23. சாமிநாதையர், உ.வே.(உ.ஆ.), **புறநானூறு மூலமும் உரையும்**
ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு,
சென்னை, 1963.

24. சாரங்கபாணி, இரா., **சங்கத்தமிழ் வளம்**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2003.

25. சிதம்பரனார், சாமி., **எட்டுத் தொகையும் தமிழர் பண்பாடும்**
அறிவுப் பதிப்பகம்,
சென்னை, 2008.

26. *சிதம்பரனார், சாமி.,* **பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும்**
*அறிவுப் பதிப்பகம்,*
*சென்னை, 2009.*

27. ________________., **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்**
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சென்னை, 2000.*

28. *சிவத்தம்பி, கா.,* **சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும்**
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை, 2009.*

29. ________________., **பண்டைத் தமிழச் சமூகம் – வரலாற்றுப் புரிதலை நோக்கி**
*மக்கள் வெளியீடு,*
*சென்னை, 2003.*

30. *சிவராஜ், து.,* **சங்க இலக்கியத்தில் உளவியல்**
*சிவம் பதிப்பகம்,*
*வேலூர், 1994.*

31. *சிவகாமசுந்தரி, சு.,* **சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம்**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை, 1995.*

32. *சுப்பிரமணியன், கா.,* **சங்ககாலச் சமுதாயம்**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை, 1995.*

33. *சுப்பிரமணியன், ந.,* **சங்ககால வாழ்வியல் – சங்கத் தமிழரின் அரசுமுறையும் சமூக வாழ்வும்**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை, 2010.*

34. *சுசீலா கோபாலகிருஷ்ணன்,* **சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள்**
*பாலாஜி பதிப்பகம்,*
*மதுரை, 1987.*

35. *செங்கைப் பொதுவன்,* **பழங்கால விளையாட்டுக்கள்**
*செங்கைச் செல்வி பதிப்பகம்,*
*சென்னை, 2002.*

36. *செயராமன், நா.,* **சங்க இலக்கியத்தில் பாடாண்திணை**
*மீனாட்சி புத்தக நிலையம்,*
*மதுரை, 1975.*

37. *செல்வராசன், பு.,* **சங்கநூற் செய்திகள்**
*லோட்டடஸ் பப்ளிஷர்ஸ்,*
*சென்னை, 1975.*

38. *சோமசுந்தரனார், பொ.வே. (உ.ஆ.),* **பட்டினப்பாலை மூலமும் உரையும்**
*கழக வெளியீடு,*
*சென்னை, 1969.*

39. ____________________., **பெரும்பாணாற்றுப்படை மூலமும் உரையும்**
*கழக வெளியீடு,*
*சென்னை, 1962.*

40. *தமிழரசி, நா.,* **நாட்டுப்புற விளையாட்டுக்கள்**
*தமிழ்மதி பதிப்பகம்,*
*தஞ்சாவூர், 2006.*

41. *தட்சிணாமூர்த்தி, அ.,* **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**
*வெற்றிச் செல்வி வெளியீட்டகம்,*
*தஞ்சாவூர், 1980.*

42. *தேவநேயப்பாவாணர், ஞா.,* **தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்**
*கழக வெளியீடு,*
*சென்னை, 2001.*

43. தேவநேயப்பாவாணர், ஞா., **பாவாணர் தமிழ்க் களஞ்சியம் – 29**
தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்
தமிழ்மண் அறக்கட்டளை,
சென்னை, 2009.

44. 'நஜன்' நடராஜன், எஸ்., **தமிழர் பண்டிகைகளும் பண்பாடும்**
வானதி பதிப்பகம்,
சென்னை, 1972.

45. நெடுஞ்செழியன், க., **தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்**
பாரி நிலையம்,
சென்னை, 1990.

46. பக்தவத்சலபாரதி **பண்பாட்டு மானிடவியல்**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 1999.

47. பரிமேலழகர் (உ.ஆ.), **திருக்குறள் மூலமும் பரிமேலழகருரையும்**
பி.இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்,
பதிப்பு ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

48. பாலசுந்தரன், ஆதி., **சங்க இலக்கியத்தில் சமயக் கருத்துக்கள்**
சக்தி பதிப்பகம்,
சென்னை, 1981.

49. பாலசுப்பிரமணியன், இரா., **தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1980.

50. பாலசுப்பிரமணியன், கு.வெ., **சங்க இலக்கியத்தில் புறப்பொருள்**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2007.

51. பாஸ்கல், கில்பர்ட்,
நாராயணன், ஜெ.(மொ.பெ.ஆ.), **சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்**
தமிழ் வெளியீட்டுக்கழகம்,
சென்னை, 1964.

52. பிச்சை, அ., **தமிழர் பண்பாட்டில் விளையாட்டுக்கள்**
கபிலன் பதிப்பகம்,
சென்னை, 1983.

53. பிள்ளை, கே.கே., **தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்**
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை, 1972.

54. பெரியகருப்பன், இராம. (தமிழண்ணல்), (ஆ.), பாலசுப்பிரமணியன், கு.வெ. (மொ.பெ.ஆ.), **சங்க மரபு**
சிந்தாமணிப் பதிப்பகம்,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை, 2009.

55. மணிவேல், மு., **தமிழர் இலக்கிய அகப்பொருள் மரபுகள்**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை – 20.

56. மலையரசி, த., **தமிழ் இலக்கியங்களில் விளையாட்டுக் கூறுகள்**
பாவை பதிப்பகம்,
மதுரை, 2013.

57. மறைமலையடிகள், **பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை**
கழக வெளியீடு,
சென்னை, 1957.

58. மாதையன், பெ., **அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை, 2009.

59. ________________., **தமிழ்ச் செவ்வியல் படைப்புகள் கவிதையியல், சமுதாயவியல் நோக்கு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2011.

60. மாணிக்கம், வ.சுப., **தமிழ்க்காதல்**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2009.

61. மீனாட்சிசுந்தரம், தெ.பொ., **தமிழும் பிறபண்பாடும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 1981.

62. ராஜ்கௌதமன் **பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்**
தமிழினி,
சென்னை, 2006.

63. வரதராசன், மு., **ஓவச் செய்தி**
பாரி நிலையம்,
சென்னை, 1946.

64. ____________________., **சங்க இலக்கியத்தில் இயற்கை**
பாரி நிலையம்,
சென்னை, 1979.

65. வானமாமலை, நா., **தமிழர் பண்பாடும் தத்துவமும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 1973.

66. வித்தியானந்தன், சு., **தமிழர் சால்பு (சங்ககாலம்)**
பாரி புத்தகப் பண்ணை,
சென்னை, 1971.

67. வெள்ளைவாரணனார், க., **சங்ககாலத் தமிழ்மக்கள்**
நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி,
சென்னை, 1950.

68. வேங்கடசாமி, சீனி, மயிலை., **பழங்காலத் தமிழர் வாணிகம் (சங்க காலம்)**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2011.

ஆ. ஆங்கில நூல்கள்


69. Adamson Hoebel, E., **Man in Primitive World**
Mcgraw Hill,
Newyork, 1949.

70. Battacharyya, N.N., **Ancient Indian Rituals and their Social Contents**
Manohar Book Service,
Madras, 1975.

71. Clark Wisslar, J., **Man and Culture**
Crowell,
Newyork, 1923.

72. Coleman, James, C., **Psychology and Effective Behaviour**
Tavistock Publications,
London, 1908.

73. Hudson, W.H., **An Introduction to the Study of Literature**
Kalyani Publishers,
Ludiana, 1971.

74. Hart, G.L., **The Poems of Ancient Tamil**
University of California Press,
London, 1975.

75. James Bisnett Pratt, **The Psychology of Religious Belief**
The Macmillan Company,
London, 1908.

76. Kroeber, A.L., **Culture: A Critical Review of Concepts and Definitions**
Random House,
Newyork, 1952.

77. Malinowski, B., **A Scientific Theory of Culture**
University of North Carlina Press,
Chapelhill, 1944.

78. Malinowski, B., **Crime and Custom in Savage Society**
Routledge and Kegan Paul,
London, 1926.

79. Meenakshisandaram, T.P., **History of Tamil Literature**
Annamalai University,
Chidambaram, 1965.

80. Merwyn Barbarino. S., **Sociocultural Theory in Anthropology**
Rinehart and Winston,
Newyork, 1977.

81. Ramachandra Dikshitar, V.R., **Studies in Tamil Literature and History**
Uzac and Company,
London, 1930.

82. Ramachandran, C.E., **Agananooru in its Historical setting**
University of Madras,
Chennai, 1974.

83. Srinivasa Iyengar, P.T. **History of the Tamils**
Kumaraswami Naidu & Sons,
Madras, 1929.

84. Subramaniyan, N., **Sangam Polity**
Ennes Publications,
Madurai, 1980.

85. Tylor, E.B., **Primitive Culture - 2 Vols.,**
Harper and Row,
Newyork, 1958.

86. Thaninayaka, Xr.S., **Landscape and Tamil Poetry**
International Institute of Tamil Studies,
Chennai, 1977.

87. Varadharajan, M., **The Treatment of Nature in Sangam Literature** (Ancient Tamil Literature), The South Indian Saiva Siddhanta works Publishing Society, Madras, 1969.

88. Vaiyapuri Pillai, S., **History of Tamil Language and Literature** New Century Book House, Madras, 1956.

89. Zvelabil, K., "Tamil poetry 2000 years Ago" Tamil Culture, Vol.10, Chennai, 1963.


**இ) ஆய்வேடுகள்**

*90.* *கோமதி, மா.,* **தமிழ்ச்செவ்வியல் இலக்கியங்களில் பேராண்மை** *முனைவர் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 2016.*

*91.* *சங்கீதா, வெ.,* **சங்க அகப்பாடல்களில் கருப்பொருள் கட்டமைப்பு** *முனைவர் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 2013*

*92.* *சண்முகநாதன்,* **சங்க இலக்கியத்தில் குடியும் குடிமக்களும்** *முனைவர் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 2010.*

93. செல்லத்தாய், கே., **சங்க அகப்பாடல்களில் காலநிகழ்வும் காதல் பொருண்மையும்**
முனைவர் பட்ட ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை, 2009.

94. செளந்தரராஜ், இரா., **நெய்தல்திணைப் பாடல்களில் குறியியல்**
முனைவர் பட்ட ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை, 2010.

95. தட்சிணாமூர்த்தி, ஆ., **அகநானூற்றில் உரிப்பொருள் கட்டமைப்பு**
முனைவர் பட்ட ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை, 2017.

96. பூங்கோதை, பூ., **சங்க இலக்கியம் காட்டும் மருதநில மக்களின் வாழ்வியலும் பண்பாடும்**
முனைவர்பட்ட ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை, 2012.

97. மாயாண்டி, ஆர்., **அகநானூறு காட்டும் பழந்தமிழர் வாழ்க்கை**
எம்.லிட்., பட்ட ஆய்வேடு,
சென்னை பல்கலைக்கழகம், 1972.

98. முத்துக்கிருஷ்ணன், க., **குறுந்தொகையில் உரிப்பொருள் கட்டமைப்பு**
முனைவர் பட்ட ஆய்வேடு,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை, 2002.

99. வெங்கட்ராமன், கி., **பழந்தமிழர் இலக்கியங்களில் குறிஞ்சிநில மக்களின் வாழ்வியல்** முனைவர்பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 2016.

100. Shanmugam, R., **The Social Life of the Tamil in the Sangam Age** Thesis Submitted for M.Litt., Degree, Madras University, 1962.

# சங்க இலக்கியத்தில் பாலைநில மக்களின் வாழ்வியலும் சமூகப் பண்பாடும்

மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (Ph.D.,) பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**ச.க. விக்னேஸ்வரன்**

**பதிவு எண் : P4303**

**நெறியாளர்**

**முனைவர் உ.கருப்பத்தேவன்**






ஒப்பிலக்கியத்துறை

தமிழியற்புலம்

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை – 625 021


ஜனவரி, 2020